# சைவ சித்தாந்தமும் சித்தர் நெறியும்
# — ஓர் ஆய்வு

முனைவர் பட்டத்திற்காக
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


ஆய்வாளர்

**இல. கோமதி**

நெறியாளர்

**முனைவர் .பெ. கிருஷ்ணன்**

பேராசிரியர், துறைத்தலைவர்






**சைவ சித்தாந்தத்துறை**

**சென்னைப்பல்கலைக்கழகம்**

**சென்னை - 600 005.**


செப்டம்பர் - 2008

**முனைவர் பெ. கிருஷ்ணன்**
பேராசிரியர், தலைவர்
சைவ சித்தாந்தத்துறை
சென்னைப்பல்கலைக்கழகம்
சென்னை - 600 005.

## நெறியாளர் சான்றிதழ்

**" சைவ சித்தாந்தமும் சித்தர் நெறியும் - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் **இல.கோமதி** அவர்கள், சென்னைப்பல்கலைக்கழகச் சைவ சித்தாந்தத்துறையில் எனது மேற்பார்வையின் கீழ், முழு நேர ஆய்வாளராக இருந்து எழுதிய இவ்வாய்வேடு, அவருடைய தனிப்பட்ட முயற்சியால் உருவானது என்றும், இந்த ஆய்வுக்காக வேறு எந்தப்பட்டமோ, பட்டயமோ, ஆய்வாளருக்கு வழங்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கப்பெறுகிறது.

இடம் : சென்னை - 5
நாள் : 18/09/08

**பெ.கிருஷ்ணன்**
நெறியாளர்

# ஆய்வாளர் உறுதிமொழி

**இல. கோமதி**
முனைவர் பட்ட ஆய்வாளர் (முழு நேரம்)
சைவ சித்தாந்தத்துறை
சென்னைப்பல்கலைக்கழகம்
சென்னை - 600 005.

**“சைவ சித்தாந்தமும் சித்தர் நெறியும் - ஓர் ஆய்வு”** என்னும் தலைப்பில், சென்னைப் பல்கலைக்கழகத்தில், சைவ சித்தாந்தத்துறையில் முனைவர் பட்டத்திற்காக ஆய்வு நிகழ்த்தி எழுதப்பட்ட இந்த ஆய்வேடு, என்னுடைய தனிப்பட்ட முயற்சியால் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும், இந்தஆய்வேடு அளிக்கப்படவில்லை என்று உறுதி அளிக்கிறேன்.

Ugomathy 18/9/08
**இல.கோமதி**
ஆய்வாளர்

இடம் : சென்னை - 5
நாள் : 18-9-08

# நன்றியுரை

சைவ சித்தாந்த மெய்யியல் கோட்பாடுகளும், சித்தர்களின் மெய்யியல் கோட்பாடுகளும், மெய்யியலறிஞர்களின், மெய்யுணர்வாளர்களின் மெய்யியல் கோட்பாடுகளாகும். இவ்விரு நெறிகளையும் இணைத்துப்பார்க்கும் முயற்சியின் விளைவே இவ்வாய்வு.

சைவ சித்தாந்தத்துறையில், இந்த ஆய்வினை மேற்கொள்ள எனக்கு இசைவு தந்து, ஊக்கம் அளித்து, ஐயப்பாடுகளை அகற்றி, என் மேல் தான் கொண்டிருந்த நம்பிக்கையால், என் மேல் நான் கொண்டிருந்த நம்பிக்கையை மேம்படுத்திய நெறியாளர், சைவ சித்தாந்தத் துறைத்தலைவர், **முனைவர் பெ. கிருஷ்ணன்** அவர்களுக்கு என் நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

சித்தர் நெறியினை எனக்குப் பயிற்றுவித்து என்னை அதில் ஈடுபடுத்தி, ஆய்வு நிகழ்த்தத் தூண்டிய பச்சையப்பன் கல்லூரி, தமிழ்த்துறையின் முன்னாள் பேராசிரியர். **முனைவர் இரா.மாணிக்கவாசகம்** அவர்களுக்கு நன்றியுரைக்கும் கடப்பாடுடையேன்.

அரிய பல ஆலோசனைகளைத் தாமாகவே முன் வந்து எனக்கு அளித்த சைவ சித்தாந்தத் துறையின் விரிவுரையாளர், **முனைவர். கரு. ஆறுமுகம்** அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்வேடு சிறப்புற அமையப் பல நிலைகளில் எனக்கு உதவிய அனைவரையும் நன்றியுடன் நினைத்துக்கொள்கிறேன்.

## உள்ளுறை

# முன்னுரை

## ஆய்வின் நோக்கம்

சைவ சித்தாந்த மெய்யியலும், சித்தர் நெறியும், மானுட மேன்மைக்கும், மனிதனை பிறவாப் பெருநிலை என்னும் இலக்கு நோக்கி செலுத்தவும், வழி காட்டுகின்றன. ஒரே நோக்கத்துடன் எழுந்த இவ்விரு நெறிகளும் தமக்குள் மாறுபடுகின்றனவா என்பதை ஆய்வு செய்து வெளியிடுவதே இவ்வாய்வேட்டின் நோக்கம்.

## ஆய்வு முறை

இவ்வாய்வு வெளிக்கொணரும் முறையைப் பெரிதும் பின்பற்றுகிறது. ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட மூல நூல்களின் கருத்துக்களைப் பகுத்துத் தேடுவதால், பகுப்பாய்வு முறையும், பகுத்தவற்றைத் தொகுத்து வழங்குவதால் தொகுப்பாய்வு முறையும், இங்கே இடம் பெற்றுள்ளன. சைவ சித்தாந்த மெய்யியலை, சித்தர் நெறியுடன் ஒப்பிட்டு நோக்குவதால் ஒப்பாய்வு முறை பெருமளவில் பயன்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

## ஆதார நூல்கள்

சித்தர்கள் சிவஞானப் பெருநிலையில் நின்ற சீவன் முத்தர்கள். சித்தர் நெறியினை வெளிப்படுத்த உறுதியான அடித்தளம் அமைத்துத் தருவது சித்தர் பாடல்களாகும். சென்னை, பிரேமா பிரசுரத்தாரால் வெளியிடப்பட்ட ''ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள்' (ஏழாம் பதிப்பு.1991) என்னும் தொகுப்பு நூலும், சென்னை வர்த்தமானன் பதிப்பகத்தாரால் 2007 ம் ஆண்டு வெளியிடப்பட்ட சித்தர் பாடல்கள் - மூலமும் உரையும் என்னும் தொகுப்பு நூலும் சித்தர் நெறிக்கான முதல் நிலைச் சான்றுகளாக எடுத்தாளப்பட்டுள்ளன.

சைவ இலக்கியங்கள், தோத்திரம், சாத்திரம் என இரு வகையாகப் பகுக்கப்படுகின்றன. தோத்திர நூல்கள் பன்னிரு திருமுறைகள் என இறைவனைப்போற்றும் பாடல்களின் தொகுப்புகளாகும். சாத்திர நூல்கள் பதினான்கு. அவை மெய்கண்ட சாத்திரங்கள் என வழங்கப்பெறுகின்றன. பதினான்கு சாத்திர நூல்களும், பன்னிரு திருமுறைகளும் சைவ சித்தாந்த மெய்யியலுக்குரிய முதல் நிலைச் சான்றுகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சித்தர் நெறி குறித்து, அண்மைக்காலம் வரை வெளிவந்த உரைகளும், விளக்க நூல்களும், சைவச் சாத்திர தோத்திர நூல்களுக்கான உரை விளக்க நூல்களும் சைவ சித்தாந்த மெய்யியல், சைவ சமயம், சிவ வழிபாடு குறித்த விளக்க நூல்களும் துணை நிலைச் சான்றுகளாக எடுத்தாளப்பட்டுள்ளன.

**இயல்பகுப்பு**

இவ்வாய்வேடு ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. முதலாவது இயல் இவ்வாய்விற்குரிய இரு நெறிகளின் விளக்கத்தைக் கொண்டு அமைகிறது. சமயம் என்னும் அமைப்பின் உருவாக்கத்தையும், சைவ சமய வரலாற்றினையும் ''சிவன்'' என்னும் பெயருக்குரிய பொருளையும் சிறப்பையும், சிவ வழிபாட்டு தொடக்க நிலைகளையும் இவ்வியல் விவரிக்கின்றது. சைவ சமய இலக்கியக் கருவூலங்களை அறிமுகப்படுத்தி, சைவ சித்தாந்த மெய்யியலின் அடிப்படைக் கருத்துக்களான அளவை, சற்காரிய வாதம், பதி, பசு, பாசம், வழிபடுநெறிகள், முத்திப்பேறு குறித்தவற்றை இவ்வியல் விளக்குகின்றது. சித்தர்நெறியினை சித்தர் பாடல்களின் வாயிலாக விளக்கி, இறைமை, இறைவழிபாடு, உயிர்கள், தளைகள், வீடுபேறு, சமுதாய மேன்மை, தனி மனித நல் வாழ்வு உள்ளிட்ட அவர்களது மெய்யியல் கோட்பாடுகளை, இவ்வியல் தெளிவுபட உரைக்கிறது.

இரண்டாவது இயல், இறைமை குறித்த இவ்விரு நெறிகளின் விளக்கமாக அமைகிறது. சித்தர் நெறியில் சிவமென்பது கருத்துப்படிவ நிலை. சித்தாந்த நெறியின் சிவ வடிவ நிலைகள் இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

மூன்றாவது இயலான உயிரியலில், உயிர், உடல், குறித்த மெய்யியல் சிந்தனைகள் இவ்விரு நெறிகளிலும், இடம் பெற்றுள்ளமை குறித்து பகுப்பாய்வும், ஒப்பாய்வும் செய்யப்பட்டுள்ளன. உயிர் வகைகள், அவை உடல் பெறும் விதம், உயிர் இயக்கம் குறித்த கருத்துக்கள் இவ்விரு நெறிகளிலும் இடம் பெற்றுள்ளமை குறித்து ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

நான்காவது இயலில் தளைகள் குறித்த விளக்கமும், ஆணவம், கன்மம், மாயை ஆகிய தளைகள் உயிரைப் பற்றும் விதமும், அவற்றின் செயற்பாடுகளும், இவ்விரு நெறிகளில் காணப்படும் விதம் இடம் பெறுகிறது. தளைகளின் பிடியினின்று உயிர் விலக

வேண்டிய அவசியத்தை இவ்விரு நெறிகளும் உரைத்தமை இவ்வியலில் விளக்கப்படுகிறது.

முத்திப்பேறு என்னும் இலக்கு குறித்து, மனிதனைச் செலுத்தக்கூடிய பாதையின் முதற்படி, முறையான நல்லொழுக்க நெறியுடன் கூடிய நல்வாழ்வாகும், தனி மனித நல்வாழ்விற்கும், அதன் வழி சமுதாய அமைதிக்கும் ஒழுங்கிற்கும் அடிப்படையான, அவசியமான அன்பு,அருள், ஈகை , நல்லொழுக்கம் வெகுளாமை, உள்ளிட்ட வாழ்வியற் பண்புகள் இவ்விரு நெறிகளிலும் வலியுறுத்தப்பட்டுள்ளமை ஐந்தாவது இயலில் விளக்கப்படுகிறது. முறையான நல்வாழ்வின் வழி முகிழ்க்கும் இறையுணர்வு, இறையுணர்வின் அடுத்த நிலையான இறைவழிபாடு, சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய வழிபடு நெறிகள், சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய முத்தி நிலைகள் ஆகியன குறித்த இவ்விரு நெறிகளின் கோட்பாடுகள் இவ்வியலின் கருப்பொருளாகின்றன.

இவ்வாய்வேட்டின் இறுதியில் முடிவுரை அமைகிறது. இதில் மேற்குறிப்பிட்ட இயல்களின் முடிவுகளை மனதிற்கொண்டு, ஆய்வேட்டினைத் தொகுத்து முடித்த முடிவு முன் வைக்கப்படுகிறது.

# சைவ சித்தாந்தம் – ஓர் அறிமுகம்

**சமயம் – தோற்றுவாய்**

உலகம், நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி ஆகிய ஐம்பெரும் முதற்பொருட்களால் ஆனது. இவ்வுண்மையைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த நம் தமிழ் ஆசான்,

**'நிலந் தீ நீர் வளி விசும்பொடு ஐந்துங்**
**கலந்த மயக்கம் உலகமாதலின்'**[1]

எனக் குறிக்கிறார். ஐம்பெரும் முதற் பொருட்களால் உருவான உலகத்தில் உள்ள பொருட்கள் அனைத்துமே ஐம்பூதங்களின் கலப்பால் உருப்பெற்றவை. மனிதனும் ஐம்பூதங்களின் கலப்பே. மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளைப் பெற்றுள்ள மனிதன், அவற்றின் உதவியுடன் உலகத்துப் பொருட்களை அறிந்துணர்ந்தும் பயன்படுத்தியும் கொள்கின்றான். எனவே மனிதன் உடலைப் பாதுகாக்கத் தலைப்பட்டான். உடலைப் பாதுகாக்கும் பொருட்டும், தேவையான சத்தியைப் பெறும் பொருட்டும், உண்ணத் தொடங்கினான். இயற்கையில் கிடைத்தவற்றை உண்ணத் தொடங்கிய மனிதன், உணவுப் பொருட்களை உருவாக்கத் தலைப்பட்டான். உழவுத்தொழில் துவங்கியது. தாவர இனங்கள் வளர, நிலமும், நீரும் அவசியமென்ற நிலை ஏற்பட்டது. இவற்றுள் நீரே முதலிடம் பெற்றது. எனவே நீர் நிலை பெறும் இடங்களையும், அதைச் சார்ந்த நிலப்பகுதிகளையும் மனிதன் நாடிச் சென்று அங்கேயே வாழத் தொடங்கினான். மனித இனம் பெருகிப் பெரும்பாலும் ஆற்றங்கரைகளிலேயே நிலை பெற்றது.

மக்கள் பலர் ஒன்று கூடி ஒரே இடத்தில், நிலையாக வாழும் நிலையில், சமுதாயம் உருவானது. நதிக்கரைகளில் கூட்டங் கூட்டமாக வாழ்ந்த மக்கள், தமக்குள் ஒரு மொழி பேசி, சில பழக்க வழக்கங்களை மேற்கொண்டு, குறிப்பிட்ட வாழ்வியல் முறைகளைப் பின்பற்றி வாழ்ந்து வந்தனர். இவ்வாழ்க்கை முறை, அம்மக்கள் வாழ்ந்த நிலப்பரப்பையும், சுற்றுச் சூழலையும் ஒட்டியே அமைந்திருந்தது. நம் நாட்டின் வடபகுதியில், சிந்து நதிக்கரைகளில் வாழ்ந்த மக்கள் இனம் அந்நதிப் பெயர் கொண்டு 'ஹிந்து' என்று பாரசீகர்களால் இனங்காணப்பட்டது. கிரேக்க வரலாற்று ஆசிரியர்களும் 'இந்து' என்னும் சொல்லைக் குறித்தனர். 'இந்து' என்னும் சொல் 'சிந்து' என்னும் சொல்லிலிருந்து

தோன்றியது'[2] என்பது திரு.க. கணேசலிங்கம் அவர்களின் கருத்து. இக்கருத்து திரு. இராமச்சந்திர யோகியாராலும் உறுதிப்படுத்தப்படுகிறது.[3] சிந்து சமவெளியில் வாழ்ந்த மக்கள் 'இந்துக்கள்' எனவும், இந்துக்கள் வாழ்ந்த நிலப்பகுதி 'இந்தியா' என்றும் மேலை நாட்டோரால் வழங்கப்படலாயிற்று.

இந்துக்களின் உணவிலும், உடையிலும், பழக்க வழக்கங்களிலும், சில கொள்கைகளிலும் ஒரு வகையான ஒற்றுமையுடைமை காணப்பட்டது. இஃது அவர்களது நாகரிகம் என்று கொள்ளப்பட்டது. ''ஐரோப்பியம், அமெரிக்கம், ஆங்கிலம் என்ற சொற்கள் வாயிலாக அன்னோரது நாகரிகமும், மொழியும் குறிக்கப்படுவன போல, இந்து என்ற சொல்லும், இமய முதல் குமரி வரையுள்ள பரத கண்டத்தாரது நாகரிகத்தைக் குறிப்பது'[4] என்கிறார். திரு. கா.சு.பிள்ளையவர்கள்.

நாகரிகம் என்னும் சொல், ஒரு மக்கட் தொகுப்பின் வாழ்க்கைக்குரிய பொதுவான, முறையான வழிமுறைகளைக் குறிப்பதாகும். இவ்வழிமுறைகளே, ஒரு வழிபடு கடவுளை முன்னிறுத்தி, வழிபாட்டு முறைகளையும், பற்பல விளக்கங்களையும் பெற்று, பின்னாளில் சமயம் என உருப் பெற்றது. ''மக்கள் அன்றாட வாழ்க்கையை ஒழுங்குடன் நடத்துவதற்கு அமைத்துக் கொண்ட நன்னெறிகளின் தொகுதியே சமயம் என வழங்கப் பெறுவதாகக் கொள்ளலாம்''[5] என்னும் திரு. ந.சுப்புரெட்டியார் அவர்களின் கூற்று இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

''ஒரு சமயத்திற்குப் பெயர், அதன் கடவுளை வைத்தாதல், தலைமையாசிரியரை வைத்தாதல், அருள் நூலை வைத்தாதல் எழுவது முறை. சைவம், வைணவம் என்னும் சமயப் பெயர்கள் அவ்வச் சமயக் கடவுட் பெயரான் வந்தனவாம். கிறித்து மதமும், மகம்மதிய மதமும், அவ்வச் சமயத்தலைவரது பெயரால் வந்துள்ளன. புத்தமும், ஆருகதமுங் கூட அவ்வாறேயாம். வேதநெறி, வேதாந்தம், சுமார்த்தம், என்பன முறையே வேதம், வேதாந்த சாத்திரம்,ஸ்மிருதி என்னுஞ் சொல் வழி வந்தன. ஆனால் 'இந்து' என்று சொல்லோ மேற்குறித்த எவ்வாற்றானும் வந்ததாகத் தோன்றவில்லை'' ஆகவே அஃது ஒரு மதத்தின் பேராகக் கொள்ளற் பாற்றன்று''[6] என்னும் திரு. கா.சு.பிள்ளையவர்களின் கருத்துரை கொள்ளத் தக்கதேயன்றித் தள்ளத் தக்கது அல்ல.

கால மாற்றத்தாலும், வேற்று நாட்டவரின் குடியேற்றத்தாலும், இந்துக்களின் நாகரிகமும், பண்பாடும் பல மாற்றங்களுக்குள்ளாயின. இத்தகைய பல வேறுபாடுகளினால் பல பிரிவுகள் தோன்றலாயின. இப்பிரிவுகள். தமக்கென, ஒரு

வழிபடுதெய்வத்தையும், வழிபாட்டு முறைகளையும் கொண்டு இயங்கின. சமுதாயத்தில், மக்களுக்கு நன்னெறிகளை அறிவிப்பதற்காகவே உருவாகியது சமயம் என்னும் அமைப்பாகும். பின்னர், அடிப்படை உண்மைகள் ஒன்றாகவே இருக்க, சில பழக்க வழக்கங்களும், குறியீடுகளும் வேறுபட்ட நிலையில் மதம் என்னும் ஒரு நிலையும் உருவானது. மதம் என்னுஞ் சொல்லுக்கு போதனை, சமயம், வெறி, வலிமை, கொள்கை, களிப்பு, பெருமை, கருத்து, மிகுதி, மயக்கம் ஆகிய விளக்கங்கள் பெறப்படுகின்றன.[7]

திருவாசகத்தில் சமயம், மதம் ஆகிய இவ்விரு சொற்களுமே எடுத்தாளப்பட்டுள்ளன.

**'தெய்வமென்பதோர் சித்தமுண்டாகி**
**முனிவிலாததோர் பொருளது கருதலும் ....**
**.... சமயவாதிகள் தத்தம் மதங்களே**
**அமைவதாக அரற்றி மலைந்தனர்.**
**.... அதிற் பெருமாயை எனப் பல சூழவும்'**[8]

என்னும் பகுதியில் மதம் என்னுஞ்சொல் 'கொள்கை' – கோட்பாடு' என்ற பொருளில் ஆளப்படுகிறது. கொள்கைகள் அளவிலான வேறுபாடுகள் பெருகப் பெருக சமுதாயத்தில் பிரிவினைகளும், பிளவுகளும் தலையெடுத்தன. மக்களின் ஒற்றுமைக்கும், முறையான வாழ்வியல் நடைமுறைகளுக்கும் வழிகாட்டியாய் விளங்குவதற்காக முகிழ்த்த சமயம் பல மதப் பிரிவுகளாகி, அதனுள் விளங்கிய ஒன்றுக்கொன்று ஒவ்வாக் கொள்கைகளினால் முரண்பட்டு மக்களிடையே பகைமை உணர்வு தோன்றுதற்கு இடமளித்து நின்றது.

**'பூமியிலே கண்டம் ஐந்து, மதங்கள் கோடி**
**புத்த மதம் சமண மதம், பார்ஸி மார்க்கம்...**
**... நல்ல 'கண்பூசி' மதம் முதலாப் பார் மேல்**
**யாமறிந்த மதங்கள் பல உளவாம் அன்றே**
**யாவினுக்கும் உட்புதைந்த கருத்திங்கொன்றே'**[9]

என்னும் பாட்டுக்கொரு புலவனின் பாடல் இங்கு நினைவு கூரத் தக்கதாகும்.

சமயம் என்னும் சொல்லுக்கு பல்வேறு விளக்கங்கள் அளிக்கப்படுகின்றன. 'சமயம் என்பது ஒரு நெறி (System) என்னும் பொருளைத் தருவது'[10] என்பது ஒரு விளக்கம். 'சமயமாவது மனிதர்கள் அறிவு விளக்கம் பெற்று, உறுதியெய்தி இன்ப வாழ்வு அடைதற்குச் சாதகமாயுள்ள ஞானாலயமாகும்''[11] என்பது பிறிதோர் விளக்கம். 'சமயமென்பது நாட்டினும் மொழியினும் வகுப்பினும் வழக்க ஒழுக்கங்களினும் இன்னோரன்ன பிறவற்றினும் மக்கட்கு விழுப்பந் தருவது. நாடும், மொழியும் பிறவும்

மக்களைப் பிரிக்குந் தகையன. சமயமோ அப்பிரிவினைப் போக்குந் தகையது. இன்பப் பொருளாம். இறைவனை அடைதற்கு உயிர்கள் கடைப்பிடித்தொழுகும் ஓர் அற வழியே சமயம்''[12] என்பது மற்றுமோர் விரிவாக்கம். இவற்றினின்று, மனித வாழ்வியல் குறித்தும், சமுதாயத்தின் அனைத்துத் தரப்பினருக்கும் பொதுவான அடிப்படை நன்னெறிகள் குறித்தும் உணர்த்தி, மனிதனை நல்வழிப்படுத்துவதே சமயம் என்னும் பொருள் தெளிவாகிறது.

**சைவ சமயம்**

'சைவம்' என்பது 'சிவம்', என்னும் சொல்லிலிருந்து, அதன் அடியாகப் பிறந்தது. 'சைவம்' என்னும் சொல் 'சிவசமயம்' என்றே பொருள் கொள்ளப்படுகிறது. சிவ பெருமானை வழிபாட்டுக் கடவுளாகக் கொண்டு விளங்கும் சமயநெறியே சைவ சமயம் ஆகும். **'சைவஞ் சிவனுடன் சம்பந்தமாகுதல்'**[13] என்பது திருமந்திரமொழி. சிவபெருமானை,சைவா எனப் போற்றுகின்றனர். மாணிக்கவாசகரும், அப்பர் அடிகளும்.

**'சைவா போற்றி!'**
**'ஐயாறதனில் சைவன் ஆகியும்'**
**'மழுவொன்றேந்தும் சைவனே'....**[14]

ஆகிய பாடல் அடிகள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கவையாகும்.

வரலாற்று காலத்திற்கும் முற்பட்ட தொன்மையுடையதாய் விளங்குவது சைவசமயமாகும். 'சைவம், தென்னிந்தியாவின் மிகப்பழைய, வரலாற்றுக்கு முற்பட்ட சமயம் ஆகும். அது ஆரியருக்கு முற்பட்ட காலத்திலிருந்தே வழக்கில் இருந்து வருகிறது' என்று ஜி.யு.போப் அவர்கள் குறிக்கிறார்[15]. 'ஆரியர் மற்றும் ஆரியர்க்கு முற்பட்டவர் என்னும் இருவேறு நெறிகளின் இணைப்பே, வரலாற்றுக் காலத்திற்கு உட்பட்ட சைவம்' என்பது வரலாற்றாசிரியர்களின் கருத்தாகும்[16]. மொகஞ்சதாரோ–ஹாரப்பா ஆகிய அகழ்வாராய்ச்சிகள் வெளிப்படுத்தும் கருத்து, சைவ சமயம் உலகின் மிகப்பழைய சமயமாக விளங்குகிறது என்பதே[17] என்று மற்றுமோர் குறிப்பு தெரிவிக்கிறது. 'வேத காலத்தில் வாழ்ந்து வந்த மக்களிடையே சிவ வழிபாடு காணப்படுகிறது. அவ்வாறெனில் வேதகாலத்திற்கு முற்பட்டது சைவ சமயமெனத் தெளிவாகிறது. சிவன் என்னும் பெயர் திராவிட மொழிச் சொல். இது பிற்காலத்தில் வடமொழியில் ஏற்றுக்கொள்ளப்பட்டது' என்று மறைமலையடிகள் விளக்குகிறார்.[18] சிவ வழிபாட்டின் தொடக்க நிலையைக்

கண்ணுறும் போது சைவ சமயத்தின் தொடக்கமும், தொன்மையும் ஒருங்கே நிலை நிறுத்தப்பெறுகிறது.

**சிவ வழிபாடு – துவக்கம்**

நாகரிகம் வளர்ச்சியுறாத காலத்தில் வாழ்ந்த மனிதன், இயற்கைச் சீற்றங்களைக் கண்டு அஞ்சினான். தான் வாழும் நிலத்தின் மேலே நின்று இயங்கி, ஒளி வழங்கும் ஆற்றல் கொண்ட கதிர்களையுடைய ஒளியின் முதற்பொருளான ஞாயிறைச் சரணடைந்தான். வணங்கத் தொடங்கினான். ஞாயிறு வழிபாடு துவங்கியது.

உலக முழுவதிலும் பரவலாக வாழ்ந்திருந்த மக்கள், மொழியாலும் வாழ்க்கை முறைகளாலும், வேறுபட்டிருந்தனர். எனினும் ஞாயிறு வழிபாடு என்பது அனைவருக்கும் பொதுவான இயற்கை வழிபாடாகியது. பொதுவான வழிபாடாக இருந்தமையால் தொடர்ந்து படிப்படியாக வளர்ச்சி பெற்றது. ‘அயர்லாந்து முதல் சப்பான் தீவுகள் வரையில் இவ்வழிபாடு பரவியிருந்தமையை வரலாற்று அறிஞர்கள் குறிக்கின்றனர்’[19] நாகரிகமும், பண்பாடும் சிறிது சிறிதாக மேம்படத் துவங்கியிருந்த காலத்தில், இயற்கையின் சீரான முறையான மாறுதல்களையும் நிகழ்வுகளையும் கண்ணுற்ற மனிதன், தன்னால் ‘இயற்கையைக் கட்டுப்படுத்த முடியாத நிலையில், இயற்கையை இயக்கும் ஒரு மாபெரும் ஆற்றல் இருக்க வேண்டும் என எண்ணினான். அவ்வாற்றலை ஞாயிற்றின் உருவத்திலேயே இருத்தி வழிபட்டு வரலானான்’[20]

இயற்கைப் பிரிவுகளால் நிலங்கள் வேறுபட்டமையால் ஆங்காங்கே வாழ்ந்திருந்த மக்களின் மொழிகளும் பலவாயின. ஆதலால் ஞாயிற்றுக்குப் பல பெயர்கள் வழக்கில் இருந்தன. ‘எகிப்திய மக்கள் அமன். ஒசிறிஸ், ரா ஆகிய பெயர்களாலும், பாபிலோனியர் பால், பேல் என்றும், சுமேரியர் ஆண், எல் முதலிய பெயர்களாலும், அசீரியர், அசுர் என்னும் பெயராலும், பினீசியர் பால் என்னும் பெயராலும், சின்ன ஆசிய மக்கள் சூரியா, அதாத் என்னும் பெயர்களாலும் இந்திய மக்கள் ஆண், சிவன், எல் முதலிய பெயர்களாலும் ஞாயிற்றை வழிபட்டனர்’[21] ஞாயிறு வழிபாடு வழக்கில் இருந்தமையைத் தொல்காப்பியம்.

**‘கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
**வடு நீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே’**

எனத் தெளிவு படுத்துகிறது. இந்நூற்பாவிற்கு உரை இயற்றிய நச்சினார்க்கினியர், கொடி நிலையை வெஞ்சுடர் மண்டிலம் எனக் குறிக்கிறார்.[22] ஆதலால் ஞாயிறு பொதுவான தெய்வமாகப் பண்டைத் தமிழகத்திலும் வழிபடப்பட்டு வந்துள்ளது என்பது தெளிவாகின்றது.

ஞாயிறு வழிபாடு சங்க இலக்கியங்களிலும் காணக் கிடைக்கிறது. பத்துப் பாட்டுத் தொகுப்பினுள், திருமுருகாற்றுப் படையில் **'பலர் புகழ் ஞாயிறு'** என்ற தொடரும், பெரும்பாணாற்றுப்படையில், **'எழுதரு பல்கதிர்ப் பருதி'** என்னும் தொடரும் அந்நூல்களின் தொடக்க அடிகளிலேயே இடம் பெறுகின்றன. சிலப்பதிகாரத்தின் மங்கல வாழ்த்துப் பாடலில் **'ஞாயிறு போற்றுதும்'**[23] என்னும் தொடர் இடம் பெற்றுள்ளமையும் இங்கு நினைவு கூரத் தக்கது.

அருணன், ஆதவன், கதிரவன், பகலவன், சூரியன், செங்கதிரோன், ஏழ்பரியோன் ஆகியன ஞாயிற்றின் வேறு பெயர்களாகும். இவை அனைத்துமே உயர்திணை ஆண்பால் ஒருமைப் பெயர்கள் என்பது கருத்திற் கொள்ள வேண்டிய கருத்தாகும். செங்கதிரோன் என்னும் சொல்லுக்கு சிவந்த நிறமுடையவன் என்பது பொருள். ஞாயிறு உதயம் ஆகுங்காலை சிவந்த நிறம் கொண்டு எழுதல் கண்கூடு. அவ்வாறே அந்திப் பொழுதில் சிவந்த நிறத்துடன் மறைவதும் இயற்கை. ஞாயிறு சிவந்த நிறங் கொண்ட ஆண் கடவுள் என்னும் கருத்து பெறப்படுகிறது.

'சிவம்' என்னுஞ் சொல்லில் 'சிவ என்பது சிவப்பு நிறத்தைக் குறிக்கும், உரிச்சொல்லாகும். ஆகவே 'சிவன்' – சிவந்த நிறமுடையவன்'[24] என்றும் பொருள்படும்' என்பது டி.பி.சித்தலிங்கம் அவர்களின் கூற்று. ''உருத்திரன், சிவன், என்னும் இரு சொற்களின் மூலப் பொருளும் 'நிறமுடைமை' என்பதிலிருந்து பெறப்பட்டது. இச்சொற்களைச் சிதைக்காமலே ஒன்றை 'உரு' என்னும் வேர்ச்சொல்லிலிருந்தும் மற்றொன்றைச் 'சிவன்' என்பதிலிருந்தும் பெறலாம். இரண்டுமே நிறமுடைமையைக் குறிக்கும்'[25] என்பது மறைமலையடிகளின் விளக்கமாகும். இக்கருத்து வரலாற்று ஆய்வாளர்களாலும் உறுதி செய்யப்படுகிறது[26]. 'பிலிப்பைன் தீவுகள் சிலவற்றில் இன்றும் மக்கள் சிவனைச் சிவப்பன் என வழங்குவர்'[27] என்ற செய்தியும் நினைவு கூரத் தக்கதாகும். சைவ சமயக் குரவர்களும் சிவபெருமானின் சிவந்த வண்ணத்தைத் தம் பாடல்களில் குறிக்கின்றனர்.

**'சிவன் என்னும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி எம்மான்'**

என்றும்

**'முழுத் தழல் மேனித் தவளப் பொடியன்'**

என்றும், திருநாவுக்கரசு சுவாமிகளும்,

**அரனார் அழலுருவாய்'**

என்றும்

**'தீமேனியானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ'** [28]

என்றும் மாணிக்க வாசகப் பெருமானும் செந்நிற மேனியானைப் போற்றுகின்றனர்.

'சிந்து சமவெளிப் பகுதியில் அகழ்வாராய்ச்சியின் போது தோண்டியெடுக்கப்பட்ட நகரங்களின் சிதைந்து போன பகுதிகளில் ஆண் தலைமைத் தெய்வம் குறித்த முத்திரைகளும்,திரிசூலம், இடபம், இலிங்கம் ஆகிய வடிவங்களும் கண்டெடுக்கப்பட்டன. சிந்து வெளியில் காணப்படும் சிவ வழிபாடு வேத காலத்திற்கு முற்பட்ட இந்தியாவின் பலவிடங்களில் பரவியிருந்தவொன்றே'[29] என திரு.ப.அருணாசலம் அவர்கள் குறிக்கிறார். சிந்து சமவெளி நாகரிகமே உலகின் மிகப் பழமையான, முதன்மையான நாகரிகம் என உறுதி செய்யப்படுகிறது. மக்கட் சமுதாயம் உருப்பெற்ற காலத்தில் துவங்கிய இயற்கை வழிபாடென்னும் ஞாயிறு வழிபாடே, வேத காலத்திற்கு முற்பட்ட சிவ வழிபாட்டின் தொடக்க நிலையாக அமைந்தது என்றே கருத வேண்டியுள்ளது. கோள்களின் தலைவனான அருணனே, அரன் எனக் கொள்ளப்படுகிறான். 'சிவபெருமான் திருவுரு வழிபாட்டின் உண்மை' என்னும் பகுதியில் மறைமலையடிகள் தரும் விளக்கமாவது: 'காலையிலெழுந்து நடுப்பகலில் இயங்கி மாலையில் மேல் பால் வயங்கும் ஞாயிற்றில் நிற்பானான முதல்வனே சிவபெருமானென வைத்துப் பண்டைச் சான்றோரால் வழிபடப்பட்டனன். மாலை ஞாயிற்றின் ஒளி செக்கச் செவேலெனச் சிவந்து நிற்றலின், அதில் வைகும் இறைவன் சிவந்த நிறத்தையுடைய சிவனெனப் பட்டான. அஞ்ஞாயிற்றினொளி தோய்ந்து நெருப்பெனச் சுடர்ந்து விளங்கும் மேல் பால் வானிற் பரந்த முகிற்குழாங்களே அப்பெருமானுக்குச் செக்கச் சிவந்த சடைக்கற்றைகளாக வைத்து மொழியப்பட்டன. அம்முகிற் குழாங்களினிடையே மிளிரும் பிறைத் திங்களே அப்பெருமான் சடைக்கற்றை மேல் உறையும் வெண் பிறையாக வைத்து விளம்பப்பட்டது. அம்முகிற்குழாங்களில் தோய்ந்த நீராவியே அப்பெருமான் சடைமேலுறையும் கங்கை நீராக வைத்துக் கூறப்பட்டது. இங்ஙனமெல்லாம் மாலைக் காலத்தில் தோன்றும் செஞ்ஞாயிறும், அஞ்ஞாயிற்றின் ஒளிவிராய் விளங்கும் வானின் தோற்றமுமே சிவபெருமானாக வைத்து வழிபாடு ஆற்றப்பட்டமை அறிய வல்லார்க்கு

இஃது எல்லாச் சமயத்தார்க்கும், எல்லாத் தேயத்தார்க்கும் உரிய இயற்கைத் தெய்வ வழிபாடேயன்றி இதன் கட் கடவுளிலக்கணத்துக்கு மாறாவது ஏதும் இல்லாமையும் வெள்ளிடை மலை போல் விளங்கா நிற்கும்'[30] என்பது. இவ்விரிவாக்கம், ஞாயிறு வழிபாடே சிவ வழிபாட்டின் துவக்க நிலை என்னும் கருத்தை தெள்ளத் தெளிய விளக்கி நிற்கிறது. அது மட்டுமின்றி உலகின் முதற் கடவுள் சிவபெருமானே என்பதும், உலகின் முதற் சமயம். சிவபெருமானை வழிபடு கடவுளாகக் கொண்ட சைவ சமயமே என்பதும் மேற்கண்ட விளக்கங்களிலிருந்து தெளிவுற பெறப்படுகிறது. **'எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி'**[31] என்னும் மணிவாசகப் பெருமானின் மணிமொழியில் பொதிந்துள்ள உண்மை உணர்ந்து போற்றுதற்குரியதாகும்.

**தமிழ் இலக்கியங்களில் 'சிவன்' – பொருள் விளக்கம்**

தொல்காப்பியக் காலத்திற்கு முன்பே சைவ சமயமும், சிவ வழிபாடும் வழக்கில் இருந்தமையால், தொல்காப்பியத்தில் சிவபெருமானைக் குறித்தத் தொடர்கள் காணப்படுகின்றன.

**'வினையின் நீங்கி விளங்கிய அறிவின்**
**முனைவன் கண்டது முதல் நூலாகும்'**[32]

என்னும் நூற்பாவில், பிறவிகள் தோறும் தொடரும் வினைகளிலிருந்து விடுபட்டு, அறிவின் மூலாதாரமாக விளங்குபன் என்னும் பொருள் பெறப்படுகிறது. இத்தொடர்,சிவபெருமானையே சுட்டுகிறது. தொல்காப்பியத்தை அடுத்தும், சங்க இலக்கியங்களுக்கு முற்பட்டும் எழுந்த புறப்பாட்டு என்னும் நூலில்,

**'பணியியரத்தை நின்குடை யே முனிவர்**
**முக்கட் செல்வர் நகர் வலஞ் செயற்கே'**[33]

என்னும் அடிகள் காணக்கிடைக்கின்றன. சிவபெருமான் முக்கண் செல்வராக நகர்வலம் வந்த செய்தியும், சிவ வழிபாடு இருந்து வந்துள்ள கருத்தும் ஒருங்கே அறியப்படுகிறது.

பத்துப்பாட்டுத் தொகுப்பினுள், மதுரைக் காஞ்சி என்னும் நூலில்,

**'நீரும் நிலனும் தீயும் வளியும்**
**மாக விசும்பொடு ஐந்து உடன் இயற்றிய**
**மழுவாள் நெடியோன் தலைவன் ஆக'**[34]

என மாங்குடி மருதனார் உரைக்கிறார். இவ்வரிகள் சிவபெருமானையே குறித்து நிற்கின்றன என்பதில் சிறிதும் ஐயமில்லை.

எட்டுத் தொகைத் தொகுப்பினுள் ஐங்குறுநூறு என்னும் நூலின் கடவுள் வாழ்த்துப் பகுதியில் வரும்,

**'நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன்'**

என்னும் தொடரும், கலித்தொகையின் கடவுள் வாழ்த்துப் பகுதியில் காணக்கிடைக்கும்,

**'..... அருமறை பல பகர்ந்து**
**தேறு நீர் சடைக்கரந்து திரிபுரம் தீ மடுத்து'**

என்னும் தொடரும் சிவபெருமானின் இயல்புகளை இயம்புகின்றன. பதிற்றுப்பத்து என்னும் புறப்பொருள் நூலின் கடவுள் வாழ்த்துப் பாடல் முழுமையும் சிவபெருமானைப் போற்றுவதாகவே அமைந்துள்ளது.[34] அக நானூற்றின் கடவுள் வாழ்த்துப் பகுதியில் உள்ள,

**'செவ்வான் அன்ன மேனி....**
**முதிராத் திங்களொடு சுடரும் சென்னி...**[35]

ஆகிய தொடர்களும் சிவபெருமானையே சுட்டி நிற்கின்றன. எட்டுத்தொகை நூல்களில் ஐந்து நூல்களின் கடவுள் வாழ்த்துப் பகுதியில் சிவபெருமானே கடவுளெனப் போற்றப்படுகிறாரெனில் சிவ வழிபாடும் சைவ சமயமும் சங்க காலத்தில் சிறந்திருந்தன என்னும் கருத்திற்கு வேறு சான்றுகளே வேண்டுவதில்லை.

புறநானூற்றில் காரிகிழார், மதுரைஇளநாகனார், நக்கீரனார், ஆவூர்முலங்கிழார் ஆகிய புலவர்கள் பாடிய பாடல்களில்,

**'முக்கட் செல்வர்'**
**'கறை மிடற்று அண்ணல்'**
**'காமர் சென்னிப் பிறைநுதல் விளங்கும் ஒரு கண் போல்'**
**'எரி மருள் அவிர் சடை .....**
**மணி மிடற்றோன் .............**
**'நன்றாய்ந்த நீள் நிமிர் சடை முது முதல்வன்'**[36]

என சிவபெருமானைக் குறிக்கும் தொடர்கள் பரவலாகக் காணக் கிடைக்கின்றன. அரியதாகப் பெற்ற நெல்லிக் கனியைத் தான் உண்ணாது ஔவைக்கு அளித்த அதியமானை வாழ்த்துங்கால்,

**'...... பிறை நுதல் பொலிந்த சென்னி**
**நீலமணி மிடற்று ஒருவன் போல**
**மன்னுக பெரும' ....**[37]

என்ற தொடரை ஔவையார் குறிக்கிறார். சிவபெருமானைப் போல நிலை பெற்று வாழ்வாயாக என்னும் பொருள் பெறப்படுவதால் முடிவற்ற பரம்பொருள் என்னும் உண்மை புலப்படுகிறது.

சங்க காலத்திற்குப் பின்னர், களப்பிரர் என்னும் வேற்று நாட்டவரின் வருகையால், இலக்கியங்கள், அகம், புறம் என்னும் பாடுபொருள் விட்டகன்று, அறம் நோக்கிச் சென்றன. இக்கால கட்டத்தை அடுத்து கதையோடு இயைந்த காப்பியங்கள் எழுந்தன. சிலப்பதிகாரத்தில்,

**'செஞ்சடை வானவன்'**
**'தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்'**
**'ஆலமர் செல்வன்'**

ஆகிய தொடர்கள் சிவ பெருமானைச் சுட்டி நிற்கின்றன.

**''கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியில் வெள்ளியம்பலம்'**
**'பிறவா யாக்கைப் பெரியோன் கோவில்'**[38]

என்னும் தொடர்கள் சிவ ஆலயங்கள் இருந்தமையை விளக்குகின்றன. சிலப்பதிகாரத்தை அடுத்து எழுந்த மணிமேகலையில், **'நுதன் விழி நாட்டத்து இறையோன்'**[39] என்ற தொடர் சிவனைக் குறிப்பதாக அமைந்துள்ளது.

கி.பி. 300 முதல் கி.பி. 600 வரையுள்ள முன்னூறு ஆண்டுகளில் தமிழகத்தில் சமணம் வேரூன்றியதால் சைவ சமயத்திற்குத் தொய்வு ஏற்பட்டது. பின்னர் ஆறாம் நூற்றாண்டு முதல் பன்னிரெண்டாம் நூற்றாண்டு வரை உள்ள காலம் சைவ சமயத்தின் பொற்காலம் எனப்போற்றப்படுகிறது. சைவ சமயக் குரவர்களான நால்வர் தோன்றி சிவபெருமானையும், சைவ சமயக் கொள்கைகளையும் கொண்டு பதிகங்களைப் பாடி

சிவாலயங்கள் தோறும் சென்று பத்தி இயக்கத்தைத் தோற்றுவித்தனர். சைவ சமயம் மறுமலர்ச்சியடைந்தது.

**சைவ சித்தாந்தம் : சொற்பொருள் விளக்கம்**

இச்சொல் சைவம் + சித்தம் + அந்தம் எனப் பகுத்து ஆராயக்கூடிய சொல்லாகும். சைவம் என்னுஞ்சொல் சிவநெறியைக் குறித்தும், சைவ சமயத்தைச் சுட்டியும் நிற்கும் சொல்லாகும். சித்தம் என்பது மனம், எண்ணம், கொள்கை,நிச்சயம், முடிவான மனக்கொள்கை ஆகிய விளக்கங்களைக் கொண்ட சொல்லாகும். எனவே சித்தம் என்னும் சொல் உறுதியான கொள்கைகளின் முடிவு என்னும் பொருளைத் தரும். அந்தம் என்னும் சொல்லும் முடிந்த முடிவு என்றே பொருள் கொள்ளப்படுகிறது. திருவெம்பாவையில் தோற்ற ஒடுக்கமற்ற இறைவனை , மணிவாசகர். **''ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி'** [40] எனக் குறிப்பது ஈண்டு. நினைவு கூரத் தக்கது. ஆகவே, சைவ சமயக் கொள்கைகளை ஆராய்ந்து, உறுதியாக, முடிந்த முடிவுகளாக உரைப்பது சைவ சித்தாந்தத் தத்துவமாகும்.

தத்துவம் என்பது ஒன்றின் மெய்ந்நிலையை, உண்மை இயல்புகளை வெளிக்கொணர்வது ஆகும். தத்துவம் என்னும் சொல்லைத் தமிழில் மெய்ப்பொருளியல் என்று வழங்குவர். 'பொருள் தன்மையினை ஆராய்ந்து மெய்ம்மையினை நிலை நாட்டும் அறிவுக் கலைக்குத் தத்துவம் என்ற குறியீடு வழங்கியது'[41] என்கிறார். சோ. ந. கந்தசாமி அவர்கள். கூறப்படும் பொருள் காட்சிப் பொருளாயினும், கருத்தாயினும், அளவுகளில் மாறுபட்டு கண்ணால் காணக்கூடிய பருப்பொருளாயினும் , நுண்பொருளாயினும், அதனுடைய தன்மைகள் மற்றும் உண்மை நிலையை ஆராய்ந்து நிறுவி முடிவாக உரைப்பதே தத்துவம் என்ற சொல்லுக்கான விளக்கமாகும். வரையறை செய்யப்பட்ட முடிவான எந்த ஒரு தத்துவக் கொள்கைக்கும் சித்தாந்தம் என்று பெயர். சித்தாந்தமாவது ஒரு கொள்கையை அணுகி, அதனை நன்கு விளக்கி, அதன் உண்மை இயல்புகளை வெளிக்கொணர்ந்து ,மாற்றங்களுக்குட்படாது. முடிந்த முடிவை உறுதிப்படுத்துவதாகும். உலகில் எத்தனையோ சித்தாந்தங்கள் இருக்கின்றன. அவற்றை இன்ன சித்தாந்தமென்று குறிப்பிட்டால் தான் அதன் பெயரும், மெய்யியல்பும், விளங்கும். பெயரைக் குறிப்பிடாமல் சித்தாந்தம், சித்தாந்த சாத்திரங்கள் என்னும் சொற்கள் முறையே சைவ சித்தாந்தத்தையும் சைவச் சாத்திரங்களையுமே உணர்த்தி நிற்பனவாகும். இதற்குக் காரணம் உலகின் மிகத் தொன்மையான முதல் சமயம் சைவசமயமாகும். சைவ சமயச் சித்தாந்தமே , உலகிலுள்ள அனைத்துச் சித்தாந்தங்களில் கலந்தும், தனித்தும் நின்று

விளங்குகிறது. ‘‘சித்தாந்தம் ஒரு சமரச ஞானக்கடல். அதில் எல்லாச் சமயங்களும் வந்து கலக்கின்றன. அது சமயாதீதப்பொருளை எட்டும் சமயத்திற்கெல்லாம் தாயகமாகவும் அப்பாலும் பரந்து அகண்டமாக விளங்கும். [42] என்னும் கருத்தும். ‘"Siddanta represents the fulfilment of religious quest. No system of thought is negated, but assimilated and transcended by Siddanta'[43] என்னும் விளக்கமும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கவை

‘‘சித்தாந்தம் என்பதற்குச் ‘‘சித்தர் கண்ட முடிவு, என்பது பொருள். சித்தமார்க்கம்,சித்தாந்தம், சித்தர் சிவசம்பந்தமுடையவராதலால் அவர் கொண்ட மார்க்கமாகிய சித்தாந்தம் சைவ சித்தாந்தம் என்றும் வழங்கலாயிற்று’’[44] என்பது திரு.வி.க அவர்களின் கூற்றாகும். ‘‘சித்த மார்க்கம் முதன் முதல் கால் கொண்ட இடம் நாவலந்தீவு. நமது நாடு பரத கண்டம் என்னும் பெயர் பெறுவதற்கு முன் நாவலந்தீவு என்னும் பெயர் நம் நாட்டிற்குரிய பெயர்களுள் ஒன்றாக விளங்கியது. சித்த மார்க்கம் நாவலந்தீவினின்றும் நானா பக்கங்களிலும் பரவிப் பரவி ஆங்காங்குள்ள மொழியில் ஒவ்வொரு வித பெயர் பெறலாயிற்று. நாளடைவில் ஒவ்வொரு பெயர் ஒவ்வொரு சமயமாகக் கொள்ளப்பட்டது. இப்பொழுது பல்வேறு பெயர்களால் பல வேறு இடங்களில் நிலவி வரும் சமயங்கள் யாவும் சித்த மார்க்கம் என்னும் ஒன்றினின்றும் பிறந்தனவேயாகும். சித்தர் சமயம்,தொடக்கத்தில் சித்தாந்தம் என்னும் பெயர் பெற்றிருந்தது. தென்னாட்டில் சித்த மார்க்கம் நன்கு வளர்ந்து வந்தது. இடையில் அதற்குச் சிதைவு நேர்ந்தது. அப்போது சமயக் குரவர் நால்வர் தோன்றி அம்மார்க்கத்தை ஓம்பினார். அந்நால்வரும் சித்தரே. அவர் அறிவுறுத்தியதும் சித்தமார்க்கமே. தம்மை ஆட்கொண்ட மூர்த்தியைச் சித்தனே என அப்பெருமக்கள் போற்றி இருத்தல் காண்க’’[45] என சைவ சித்தாந்தத்தின் சொற்பொருண்மையைக் குறித்தும்,தொன்மையினைக் குறித்தும் திரு.வி.க. அவர்கள் விளக்கியுரைக்கிறார்.

சைவ சித்தாந்தம் என்னும் சொல்லாட்சியைத் தமிழில் முதன் முதலில் திருமூலர் கையாளுகிறார். **‘‘தற்பரங் கண்டுளோர் சைவ சித்தாந்தரே’**[46] என்பது திருமந்திரமொழி. ‘கற்கத்தக்கனவற்றைக் கற்று, பதினாறு கலைகளைப் பொருந்திய உண்மையான சிவயோகம் முதலான பத ஞானங்களை முறையாக அடைந்து, தொம்பத நிலையை அடைந்து, மலவாதனை அற்று, மேலான பரம்பொருளைக் கண்டு நித்தியராக விளங்குபவர்களே சைவ சித்தாந்தர் ஆவார். சாத்திரம் படித்தால் மட்டும் அமையாது அனுபவமும் முறை முறையே பெற்று ஆண்டவனுடைமை நாம் என்ற புத்தி பதிந்து, அதனால் ஆன்ம போத மழிந்து, பதிபோகம் மேவப் பெற்று, பதியைத் தரிசித்தவர்களே

சைவ சித்தாந்திகளாவர்'[47] என்னும் ஆழ்ந்த கருத்தைத் திருமந்திரம் விளக்கி நிற்கிறது. இந் நிலையைக் கூட்டுவிப்பதே சைவ சித்தாந்தம் என்பது தெளிவாகிறது.

**சைவ சித்தாந்தம் : உட்கிடை**

முழு முதற்கடவுளாம் சிவமே பொருளெனக்கொண்டு, அப்பரம் பொருளைச் சார்ந்து நிற்பது சிவநெறியாகும். இச்சிவ நெறியே சித்தாந்த நெறியுமாகும். சைவ சித்தாந்தத்திற்கு முதல் நூல்களாகக் கருதப்படுபவை வேதங்களும், ஆகமங்களுமாகும். வேதம் சிவபெருமானால் அருளப்பட்டது. இக்கருத்து,

**'நன்றாய்ந்த நீள் நிமிர்சடை**
**முது முதல்வன் வாய் போகாது**
**ஒன்று புரிந்த ஈரிரண்டின்**
**ஆறுணர்ந்த ஒரு முது நூல்'**[48]

என்று புறநானூற்றில் ஆவூர் மூலங்கிழார் வாயிலாக வெளிப்படுகிறது. இக்கருத்தைத் திருமுறை ஆசிரியர்கள் வழிமொழிகின்றனர்.

**'மொழியானை முன்னொரு நான்மறை ஆறங்கம்'**[49]

என்று ஞானசம்பந்தப்பெருமானும்,

**....'நம்பனை நால்வேதங் கரை கண்டானை....**
**....நல்லான் காணான் மறைகளாயினான்'**[50]

எனத் திருநாவுக்கரசு சுவாமிகளும்

**''சித்தத்தின் உள்ளே சிறக்கின்ற நூல்களில்**
**உத்தமமாகவே ஓதிய வேதத்தின் .....**
**....அத்தன் எனக்கிங்கருளால் அளித்ததே''**[51]

எனத் திருமூலரும் உரைத்த மொழிகள் நினைவு கூரத்தக்கவை.

'வேதங்கள் எல்லாம் ஒரே காலத்தனவே என்றும் எல்லாம் ஒரு வேதமே என்றும், ஞானப்பொருள் கருதியும், இசைக்கும் இனிமை கருதியும்,மந்திர தந்திர மருத்துவத் தன்மை கருதியும் வாய்மொழியாகவே வைத்திருப்பதற்கு நான்கு பகுதியாகப் பிரிவது எளிது என்று கருதியும் பிரித்ததாகக் கூறுவார் உளர்'.[52] என்பது. திரு. அ. அறிவொளி

அவர்களின் கருத்தாகும். வடமொழியில் இருக்கு , யசுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்கள் உள்ளன. தமிழில் இவை அறம்,பொருள் , இன்பம், வீடு என்று வழங்கப்படுகின்றன. தமிழ் நான்கு மறைகளையும் சிவபெருமானே அருளினார் என

**....''அறம், பொருள், இன்பம் வீடு**
**மொழிந்த வாயான் முக்கண் ஆதி''[53] ....**

எனத் திருஞான சம்பந்தரும்...

**''.... ஆலதன் கீழிருந்து நால்வர்க்**
**கறம் பொருள் வீடின்ப மாறங்கம் வேதம் தெரிவித்தானை[54]**

என அப்பர் சுவாமிகளும்

**''அருந்தவருக்காலின் கீழ் அற முதலா**
**நான்கனையும் இருந்தவருக்கு அருளும்''[55]**

என மாணிக்கவாசகரும் இயம்புகின்றனர். "Vedas are accepted by not only our countrymen, but even by foreign indologists as the most ancient literature known to the literary world. ......................whatever may be the date of the vedic hymns whether 1500 or 15000 B.C. they have their own unique place and stand by themselves in the literature of the world ..........the vedas are the revelations of the supreme God. at the beginning of creation. Those revelations were heard by competent sages and passed on orally to posterity". ............[56] என்னும் திரு. அ. சண்முக முதலியார் அவர்களின் விளக்கம் இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

வேதங்கள் அறப்பொருள் பற்றிப் பொதுவாக விளக்குகின்றன. இவை முதல் நூல் என வழங்கப்பெறுகின்றன. 'பொருள் உணர்ந்து ஓதுவோர்க்கு வீடு பேற்றினை நல்கக் கூடியது வேதம்'[57] என்பது திருமூலர் வாக்கு.

வேதங்களையடுத்து, வேதங்களிலிருந்து தோன்றியவை ஆகமங்களாகும். ஆகமம் என்னும் சொல்லின் திரண்ட பொருள், 'அணுகுதல்' என்பதாகும்.[58] வேதங்களில் சொல்லப்பட்ட பொது அறங்கள் ஆகமங்களில் சிறப்பாக விரித்துரைக்கப்பட்டன. ஆகமம், முழு முதற் பரம்பொருளையும் இம்மை மறுமைக்குரிய உறுதிப்பொருள்களையும் ஆராய்ந்து விளக்கும் அறிவு நூலாகும். சிவபெருமானிடமிருந்தே ஆகமங்களும் தோற்றம் பெற்றன.

**''வேத மோடாகமம் மெய்யாம் இறைவன் நூல்**
**ஓதும் சிறப்பும் பொதுவுமென்றுள்ளன**
**நாதன் உரை அவை''**[59]

என்பது திருமந்திர மொழியாகும். 'சிவபெருமான் இருபத்தெட்டு சிவாகமங்களையும், சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடன்,ஈசானம் ஆகிய தமது ஒப்பற்ற திருமுகங்கள் ஐந்தினுள், உச்சி நோக்கிய ஈசான முகத்தால் அறுபத்தியாறு பேருக்கும் உரைத்தனன். அறுபத்தியாறு பேர்: பிரணவர் முதல் மாகாகளர் உள்ளிட்ட அறுபத்தறுவர்'[60] என்பதும் திருமூலர் தரும் செய்தியாகும். இச்செய்தி.

**....'அண்டர் தமக்கு ஆகம நூல் மொழியும் ஆதியை'**[61].....

என சுந்தரர் தேவாரத்தில் வெளிப்படுகிறது. திருவாசகத்தில் உள்ள,

**'மன்னு மாமலை மகேந்திரமதனிற்**
**சொன்ன ஆகமம் தோற்றுவித்து அருளியும்'**[62]

என்னும் அடிகள் ஆகமத்தைத் தோற்றுவித்து, அதனை அருளியும் செய்தவன் சிவபெருமான் என்னும் உண்மையைத் தெளிவாக்குகின்றன. மேலும் மணி வாசகப் பெருமான்,

**'ஆகமமாகி நின் றண்ணிப்பான் தாள் வாழ்க'**[63]

எனக் குறிக்கிறார். அண்ணுதல் என்னும் சொல் நெருங்குதல் என்று பொருள்படும். இறைவனிடமிருந்து, உயிர்களை நெருங்கும் இறையருள் உயிர்களை, இறையோடு இணையச் செய்யும். இறையருளே ஆகமமாகி, உயிர்களை நெருங்கி, அவற்றைத் தன்னருளால் உய்வித்துத் தன்னுடன் இணைத்துக்கொள்கிறது என்னும் உயரிய கருத்து பெறப்படுகிறது.

வேதம், உலகத்தில் அனைவருக்கும் பொதுவானது. வேதம் என்பது சூத்திரம் போன்றது. ஆகமம் அந்த சூத்திரத்தின் விருத்தியுரை போன்றது. வேதத்தின் பொருளை சிறப்பித்துக்கூறும் சிவாகமங்களின் கருத்துப் பிழிவே சித்தாந்தம் ஆகும். சைவ சித்தாந்தம் என்னும் சொல் ஆகமங்களில் காணப்படுகிறது. காமிக ஆகமம் 1:1:113 மற்றும் 119 சுப்ரபீத ஆகமம் 1:56, 16, 2:1, 12.[64] **'சிவாகமங்கள் சித்தாந்தம் ஆகும்'**[65] என்னும் சிவஞான சித்தியார்த் தொடர் ஈண்டு நினைவு கூரத்தக்கது.

**சைவசித்தாந்தம் : கருவூலங்கள்**

சிவாகமங்களை அடிப்படையாகக் கொண்டு, சைவ சமயக் கொள்கைகளை விளக்கி எழுந்தவை, சைவத் தோத்திர நூல்கள் எனப் போற்றப்படும் திருமுறைகளும், மெய்கண்ட சாத்திரங்கள் என வழங்கப்பெறும் சைவச் சாத்திர நூல்களுமாகும். இவை சைவ சித்தாந்த அடிப்படைக் கருவூலங்களாகும்.

**திருமுறைகள்**

தமிழ் இலக்கிய வரலாற்றில், ஆறாம் நூற்றாண்டு தொடங்கி பன்னிரெண்டாம் நூற்றாண்டு வரையில் உள்ள காலகட்டத்தைப், பத்தி இயக்கக் காலம் என்று வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பர். சைவ சமயம் மீண்டும் புத்துயிர் பெற்ற கால கட்டமும் இதுவே. திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தர மூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் சைவ சமயம் செழிக்க ஆணிவேராக விளங்கினர். சிவபெருமானின் சிறப்பியல்புகளையும் வழிபாட்டு நெறிகளையும், சைவ சமயக் கருத்துக்களையும் முத்திப் பேறு குறித்த விளக்கங்களையும் தம் பாடல்களில் தெளிவுபடுத்தினர். இவர்களுடைய பாடல்களால் தமிழும், சைவமும், இசையும் ஒருங்கே வளர்ந்தன.

'திருமுறை' இச்சொல்லில் 'திரு' என்னும் சொல், செல்வம், செம்மை, சிறப்பு உள்ளிட்ட பல்வேறுபட்ட விரிந்த பொருள்களைக் கொண்டது. ''திரு' என்னும் சொல் சிவபெருமானையும், திருவருளையும், அவ்வருளால் அடையப்பெறும் பேரின்ப நிலையையும் குறிக்கும். இவை மூன்றும் வெவ்வேறு நிலையினவாகத் தோன்றினும், ஆன்மா அவற்றைப் பெறும் போது ஒன்றேயாகத் திகழ்கின்றன'[66] முறை என்னும் சொல், உறவு, ஒழுக்கம், இடைச்சொல், கிரமம், குணம், தரம், நியமம், அடைவு, ஊழ் முறைமை, வரிசை நூல் எனப் பல பொருள்களை உணர்த்துகிறது'[67] வேதங்களாகிய மறைகளும் முறைகள் என்று வழங்கப்படுகின்றன. இறைவன் கல்லாலின் புடை அமர்ந்து அருளிய வேதங்கள் எழுதாக்கிளவியாகும். அவற்றின் நுண்பொருளை அருளாளர்களே முழுமையாக அறிவர். அவற்றின் பொருளை அனைவரும் அறியும் பொருட்டு, சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் உள்ளிட்ட அருளாளர்களின் வாயிலாக இறைவனே எழுது மறைகளாகத் திருமுறைகளாக அருளிச் செய்தனன் என்னும் உண்மையை,

**'வண்டமிழால் எழுது மறை மொழிந்த பிரான்'**[68]

என்னும் பெரிய புராணத் தொடர் வெளிப்படுத்துகிறது.

திருமுறைப் பாடல்கள் அனைத்தும் சிவபெருமானின் திருவாக்கே ஆகும். இக்கருத்தினை, **'எனதுரை தனதுரையாக'**[69] என்னும் சம்பந்தர் வாக்கு மெய்ப்பிக்கிறது. திருமுறைகள் மந்திரங்களே என்பதை

**'மந்திரங்கள் எழுகோடி ஆதலினால் மன்னுமவர்**
**இந்த வகை திருமுறைகள் ஏழாக எடுத்தமைத்து**
**பந்தமுறும் மந்திரங்கள் பதினொன்றும் ஆதலினால்**
**அந்த முறை நான்கினொடு முறை பதினொன்று ஆக்கினார்''**[70]

என்னும் உமாபதி சிவனாரின் கூற்று உறுதிப்படுத்துகின்றது.

'திருமுறை' என்னும் பெயர் மூவர் அருளிய திருப்பதிகங்களுக்கு மட்டுமே முன்பு வழங்கி வந்ததாக 'திரு. க.வெள்ளைவாரணர் அவர்கள் கூறுகிறார்.[71] 'நம்பியாண்டார் நம்பி முதலில் இம்மூவரின் பாடல்களையே ஏழு திருமுறைகளாகத் தொகுத்தார். பின்பு அவரே உத்தம சோழன் காலத்தில் (கி.பி.970–985) மேலும் மூன்று திருமுறைகளை இணைத்து, பத்துத் திருமுறைகள் என்னும் தொகுப்பினை உருவாக்கினார். பத்துத் திருமுறைகள் அடங்கன் முறை எனப்பட்டன. பின்னர் நம்பியாண்டார் நம்பி, சில பாடல்களைத் தொகுக்க அவை பதினோராம் திருமுறையாயின. பின்னர், சேக்கிழாருடைய திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டாவதாகச் சேர்க்கப்பட்டது'[72] என்பது அ.சிதரம்பரனார் அவர்களின் கூற்றாகும்.

திருஞான சம்பந்தருடைய பாடல்கள், முதல் மூன்று திருமுறைகளாக இடம் பெற்றன. திருநாவுக்கரசரின் பாடல்கள், நான்கு, ஐந்து, ஆறு திருமுறைகளாகத் தொகுக்கப் பட்டன. சுந்தர மூர்த்தி நாயனாரின் பாடல்கள், ஏழாந்திருமுறையாக வைக்கப்பட்டன. எட்டாந் திருமுறை, மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமும், திருக்கோவையாரும் ஆகும். ஒன்பதாந் திருமுறை ஒரு தொகுப்பு நூலாகும். ஒன்பது அருளாளர்கள் இயற்றிய பாடல்களின் தொகுப்பு இது. திருமூலர் இயற்றிய திருமந்திரம் பத்தாந் திருமுறையாகும். பதினோராந் திருமுறையும் ஒரு தொகுப்பு நூலாகும். சேக்கிழாருடைய திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டாந் திருமுறையாகும்.

**சாத்திர நூல்கள்**

பத்தி இலக்கியக் கால கட்டத்திற்குப் பின்னர், திருமுறைகளை அடிப்படை நூல்களாகக் கொண்டு, சைவ சமயக் கொள்கைகளை விளக்கும் சாத்திர நூல்கள் இயற்றப்

பெற்றன. பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், மெய்கண்ட தேவர் என்னும் சைவச் சான்றோர் சிவஞான போதம் என்னும் சாத்திர நூலினை அருளிச் செய்தார். இந்நூல் பன்னிரண்டு நூற்பாக்களைக்கொண்டது. சைவ சித்தாந்தக் கருத்துக்களை மிக நுட்பமாக விளக்கி நிற்பது இந்நூல் ஆகும். முதற்கண் சிறப்புப்பாயிரமாக அமைந்த மங்கல வாழ்த்து, அவையடக்கம் ஆகிய இரு செய்யுட்களுமே செறிந்த பொருள் கொண்டவை. இந்த அரிய நூலுக்கு மாதவச் சிவஞான முனிவர் சிற்றுரை ஒன்றும், பேருரை ஒன்றும் அருளிச் செய்துள்ளார். பேருரை, மாபாடியம் என வழங்கப்பெறுகிறது. சிவஞான போதத்தின் கருத்துக்களைச் செம்மையாகப் புலப்படச் செய்த அருளாளர் இவரே.

சிவஞான போதத்தை மிக விரித்து இயற்றப்பட்ட நூல் சிவஞான சித்தியார் ஆகும். சிவஞான போதத்தின் வழி நூலாம் இதனை அருணந்தி தேவ நாயனார் அருளிச் செய்தார். இது பரபக்கம், சுபக்கம் என்னும் இரு பிரிவுகளைக் கொண்டது. பரபக்கம் 301 திருவிருத்தங்களையும், சுபக்கம் 328 திருவிருத்தங்களையும் கொண்டவை. சாத்திர நூல்கள் பதினான்கினுள் இதுவே மிகப்பெரிய நூலாகும். சைவ சித்தாந்தப் பொருளை எளிமையாகவும், விரிவாகவும் எடுத்துரைக்கும் நூல் இதுவே. அருணந்தி தேவ நாயனார் இருபது பாடல்களைக் கொண்ட இருபாஇருபஃது என்னும் சாத்திர நூலையும் இயற்றினார். மெய்கண்ட தேவர் காலத்திற்கு முன்பே திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் என்னும் இரு சாத்திர நூல்கள் எழுந்தன. இவற்றை முறையே திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனாரும், திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனாரும் அருளிச் செய்தனர்.

திருவதிகை மனவாசகங் கடந்தார் இயற்றிய உண்மை விளக்கம் என்னும் நூல். ஐம்பத்தைந்து வெண்பாக்களால் ஆனது. இதனையடுத்து உமாபதி சிவாசாரியார் என்னும் சைவச் சான்றோர் எட்டு சாத்திர நூல்களை இயற்றியருளினார். சிவப்பிரகாசம் என்னும் நூல் சிவஞான போதத்தின் சார்பு நூலாகும். பொது, உண்மை என்னும் இரு பிரிவுகளைக் கொண்டது. இந்நூல் நூறு விருத்தப்பாக்களால் ஆனது. திருவருட்பயன் என்னும் நூல் குறள் வெண்பாக்களால் ஆனது. சித்தாந்தக் கருத்துக்களைப் பத்துக் குறள்கள் வீதம் பத்து இயல்களில் நூறு குறள் வெண்பாக்களில் இயம்புவது. வினா வெண்பா என்னும் நூல் வினா வடிவிலேயே பதின்மூன்று வெண்பாக்களால் ஆனது. போற்றிப் பஃறொடை வெண்பா என்னும் சாத்திர நூல், தொண்ணூற்று ஐந்து கண்ணிகளையுடைய கலி வெண்பாக்களால் அமைந்தது. கொடிக்கவி என்னும் நூல் ஐந்து திருப்பாடல்களால்

ஆனது. இந்நூலில் திருவைந்தெழுத்தின் மறைபொருள்கள் சிறப்பாக உரைக்கப்பட்டுள்ளன. நெஞ்சுவிடுதூது என்னும் சாத்திர நூல் 'தூது' என்னும் சிற்றிலக்கிய அடிப்படையில் எழுந்தது. தத்துவ வினாக்கள், உபதேசங்கள், புறச் சமய மறுப்புரைகள் ஆகியவை அமைந்துள்ள இந்நூல் நூற்று இருபத்து ஒன்பது கண்ணிகளால் ஆனது. உண்மை நெறி விளக்கம் என்னும் சாத்திர நூல் ஆறு திருவிருத்தங்களால் ஆனது. இறுதி சாத்திர நூலான சங்கற்ப நிராகரணம் பதினான்கு செய்யுட்களைக் கொண்டது. சிவப்பிரகாசம் முதல் சங்கற்ப நிராகரணம் வரையிலான நூல்கள் உமாபதி சிவாசாரியாரின் 'சித்தாந்த அட்டகம்' என்று வழங்கப்பெறுகிறது. மேற்கண்ட இவை பதினான்கு நூல்களும், சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் ஆகும். மெய்யாம் இறைவனை முழுமையாக உணர்த்தி பிறவிப் பயனாம் வீடு பேற்றினை அடைய உதவும் நூல்களின் தொகுப்பானதால் மெய் கண்ட சாத்திரங்கள் என பொருத்தமான பெயருடன் வழங்கப் பெறுகின்றன. சைவ சித்தாந்தக் கருத்துக்களை மிக நுட்பமாக விளக்கும் முதல் மூல நூலாம் சிவஞான போதத்தின் ஞானாசிரியரான மெய்கண்ட தேவரின் திருப்பெயரைக் கொண்டு மெய் கண்ட சாத்திரங்கள் என்றும் பெயர் பெற்றிருக்கக் கூடும்.

பதினான்கு சாத்திர நூல்களைப் போலவே வாகீச முனிவர் இயற்றிய ஞானாமிர்தம் என்னும் நூலும், சிற்றம்பல நாடிகள் இயற்றிய துகளறு போதம் என்னும் நூலும் சித்தாந்த நுட்பங்களைக் கொண்டவை. சைவ சமயக் கருத்துக்களையும், விளக்கங்களையும் விரிவாக எடுத்துரைப்பன. பன்னிரு திருமுறைகள் சைவ-சித்தாந்த இலக்கியக் கருவூலங்கள், பதினான்கு சாத்திர நூல்கள் சைவ-சித்தாந்த இலக்கணக் கருவூலங்களாகவேத் திகழ்கின்றன. திருமுறைகளில் உள்ள கருத்துக்களுக்கு சித்தாந்த சாத்திரக் கண் கொண்டு பார்க்கையில் மட்டுமே முழுமையான விளக்கம் பெற இயலும்.

**சைவ சித்தாந்தம் : அடிப்படை உண்மைகள்**

சைவ சித்தாந்தம், முடிந்த முடிவாக, பதி, பசு, பாசம் என்னும் மூன்று பொருள்களை உண்மைப் பொருள்கள் என இயம்புகின்றது. பதி என்பது கடவுள்; இறைவன். பசு என்பது சீவன், ஆன்மா, உயிர். பாசம் என்பது உயிரைப் பிணித்துள்ள கட்டு என்று பொருள்படும். இவற்றைத் தமிழில் முறையே இறை, உயிர், தளை எனக் குறிப்பர். சைவ சித்தாந்தப்படி இம்மூன்றும் தனித்தனிப் பொருட்களாகும். இம்மூன்று பொருட்களுக்கும் எந்நாளும் தோற்றமும் முடிவுமில்லை. இவை தொடக்கமில்

காலந்தொட்டு தொடர்ந்து வருவன; என்றும் உள்ளவை; ஆதியும் அந்தமுமில்லா அநாதிப் பொருட்களாகும். இக்கருத்தினைத் திருமூலர்,

**'பதி பசு, பாசம் எனப் பகர் மூன்றின்**
**பதியினைப் போற் பசு பாசம் அநாதி. . .**[73]

எனத் தெளிவுபடுத்துகிறார். பதியாகிய இறைவன் என்று உள்ளதோ அன்றே பசுவாகிய உயிரும் உண்டு, அன்றே அவ்வுயிரைப் பிணைத்துள்ள பாசமும் உண்டு, என்பது சைவ சித்தாந்தத்தின் முடிந்த முடிவாகும். இவற்றுள் பதி எனப்படும் இறை ஒன்றே. பசு எனப்படும் உயிர் எண்ணில. பாசமாகிய தளை, ஆணவம் கன்மம், மாயை என மூவகையினவாகும். இதனை முப்பொருள் உண்மை எனக் கூறுவர்.

**அளவை**

உலகில் உள்ள அனைத்துப் பொருட்களையும் மதிப்பிட்டு, அவற்றின் இயல்புகளை அறிய வேண்டுமாயின் அவற்றை அளத்தற்குரிய அளவுக் கருவிகள் தேவைப்படுகின்றன. பொருட்களை அளப்பதற்கு, நீட்டல் அளவை, நிறுத்தல் அளவை, எண்ணல் அளவை ஆகிய அளவு முறைகள் வழக்கிலுள்ளன. சைவ சித்தாந்த முப்பொருள்களான பதி, பசு, பாசம் ஆகியவற்றை அளந்து அறிவதற்கும் பல அளவைகள் உள்ளன.

காட்சி அளவை, கருதல் அளவை, உரை அளவை மற்றும் இன்மை, பொருட்பேறு, உவமை என அளவைகள் ஆறுவகைப்படும். ஒழிபு, உண்மை, ஐதிகம், இயல்பு ஆகிய நான்கு அளவைகளுடன் மொத்தம் பத்து வகையிலான அளவைகள் உள்ளன. இவற்றிற்கு மேலும் அளவைகள் உண்டு. அவையனைத்தும் காட்சி, கருதல், உரை ஆகிய மூன்று பெரும் பிரிவுகளில் அடங்கும். இவற்றுள் இன்மையும், இயல்பும் காட்சி அளவையுள்ளும், பொருட்பேறு, ஒப்பு, ஒழிவு, உண்மை என்னும் நான்கும் கருதல் அளவையிலும், ஐதிகம், உரை வகை அளவையிலும் அடங்கும்.

**'அளவை காண்டல் கருதல் உரை, அபாவம் பொருள் ஒப்பு ஆறு என்பர்**
**அளவை மேலும் ஒழிபு உண்மை ஐதிகத்தோடு இயல்பு என்பர் என நான்கு**
**அளவை காண்பர். அவையிற்றின் மேலும் அறைவர் அவை எல்லாம்**
**அளவை காண்டல் கருதல் உரை என்ற இம்மூன்றில் அடங்கிடுமே...**[74]

என்னும் சிவஞான சித்தியார்ப் பாடல் அளவைகளின் வகைகளைத் தொகுத்துரைக்கிறது.

முதன்மையான அளவைகளான காட்சி, கருதல், உரை, இவை மூன்றும் மேலும் பாகுபடுத்தப்படுகிறது. காட்சி அளவை, இந்திரியக்காட்சி, மானதக்காட்சி, தன்வேதனைக் காட்சி, யோகக் காட்சி என நான்கு வகைப்படும். கருதல் அளவையானது தன் பொருட்டு, பிறர் பொருட்டு என இருவகைப்படும். உரையளவை, தந்திரம், மந்திரம், உபதேசம் என்று மூவகைப்படும், என மூன்று அளவைகளின் பகுப்புகளையும் சிவஞான சித்தியார் விளக்கியுரைக்கிறது..[75]

**'...... ஒளி உரு ஆதி பற்றிச்**
**செவிர் உரு விகற்பம் இன்றித் தெரிவது இந்திரியக் காட்சி**
**....... ஐம்புலன் சார்ந்து உயிர்க்கண்**
**மயர்வு அறவந்த ஞானம் மானதக் காண்டல்**
**..... இன்பத் துன்பம் உள்ளத்து அறிவினுக்கு.....**
**.... தரும் தன் வேதனையாம் காட்சி**
**....... தேசகால இயல்பு அகல் பொருள்கள் எல்லாம்**
**இருந்து உணர்கின்ற ஞானம் யோக நல் காண்டல்.....**
**..... ஏது உடைய பொருளைப் பார்த்து உணரத்**
**தக்க ஞானம் தன்பொருட்டாம் பிறர் தம் பொருட்டாம் அனுமானம்**
**தொக்க இவற்றால் பிறர் தெளியச் சொல்லல்.....**
**...... அறிவன் நூல் ஆகமம் தான்**
**பின் ஆதி மாறு இன்றிப் பேணல் தந்திரம்; மந்திரங்கள்**
**மனாதிகள் அடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மை.....**
**..... ஆதி ஈறு இலாதான் தன்மை உணர்த்துதல் உபதேசம்**[76]

என்னும் அருள் நந்தி சிவாசாரியாரின் உரை மொழிகள், அளவைகளின் தன்மைகளையும். அவை உணர்த்தும் பொருள் விளக்கங்களையும் விரிவாக இயம்புகின்றன.

**சத்காரிய வாதம்**

இத்தொடர் சத் + காரியம் + வாதம் என்று பகுக்கப்படும். சத் என்பதற்கு என்றும் உள்ளது என்றும், காரியம் என்பதற்கு செயப்படு பொருளாய்த் தோன்றுதல் என்றும், வாதம் என்பது கொள்கை என்றும் பொருள்படும். ஆகவே சத்காரியவாதம் என்னும் சொல்லுக்கு உள்ளதே செயப்படு பொருளாய்த் தோன்றும். என்னும் கொள்கை என்ற பொருள் பெறப்படுகிறது. ஒவ்வொரு காரியத்திற்கும் ஒரு காரணம் இருந்தே ஆகவேண்டும். காரியங்கள் பலவும், தோற்றத்திற்கு முன்னும் தத்தம் காரணங்களில் உள்ளனவே என்பது சத்காரியவாதமாகும்.

நுட்பமாய், சூக்குமமாய் நம் கண்களுக்குப் புலப்படாத வகையில், இருந்த ஒரு பொருள், பருப்பொருளாய் நம் கண்களுக்குப் புலப்படுகின்ற நிலைக்கு வரும் போது நாம்

அதனைத் தோற்றம் என்கிறோம். இந்நிலையில் புதிதமாக எதுவும் தோன்றுவதில்லை. எள்ளினுள் எண்ணெய் என்றும் உள்ளது. நம் கண்களுக்கு எள் தான் தெரிகிறது. எண்ணெய் தெரிவதில்லை. அதனால் எள்ளினுள் எண்ணெய் இல்லை என்று கூறி விட முடியாது. எள்ளினைப் பிழியும் போது, அதுவரை நம் கண்களுக்குப் புலப்படாத எண்ணெய் வெளிப்பட்டு, நம் கண்களுக்குப் புலனாகிறது. ஏற்கனெவே சூக்கும நிலையில் இருக்கும் பொருளே பருநிலைக்கு வருமே தவிர, புதியதாக ஒன்றும் தோன்றுவதில்லை. காரண நிலையில் உள்ள பொருட்கள், காரிய நிலைக்கு வருமேயன்றி காரணமின்றிக் காரியமில்லை. உள்ளதே தோன்றும்; இல்லது தோன்றாது என்பதே சத்காரியவாதமாகும்.

உலகமும், அதிலுள்ள பொருட்களும் என்றும் உள்ளவையே. செயல்படும் நிலைக்கு வருவதற்கு முன்னர் சூக்கும நிலையில் கண்களுக்குப் புலப்படா வண்ணம் இருந்தது. செயல்பாட்டிற்கு வரும்போது பரு நிலைக்கு காணக்கூடியதாய் செயல்படுகின்றது. உயிர்களும் ஒடுங்கி, மீண்டும் தோன்றும் இயல்புடையன. உயிர்கள் தம் வினைகளுக்கேற்ப பருவுடலைப் பெற்று இவ்வுலகில் காணக்கூடிய நிலையிலும், பருவுடலின் முடிவில் நுண்ணுடலுடன் காண முடியாத சூக்கும நிலையிலும் என்றும் உள்ளன. அழிவு என்பது ஒன்றில்லை. ‘தோற்றம் என்பது காணப்படாத நுண்ணிலையின் நீங்கிக் காணப்படும் பருநிலையை அடைவது. நிலை என்பது காணப்படும் நிலையில் இருத்தல் ஆகும். அழிவு என்பது காணப்பட்ட பருநிலையின் நீங்கி முன் போல காணப்படாத நுண்ணிலையை அடைதல் ஆகும்’.[77] என்பது திரு.ந.சுப்புரெட்டியார் அவர்களின் விளக்கமாகும்.

பொருட்கள் தோன்றி அழியும் நிலை காரிய நிலை என்றும், தோற்றத்திற்கு முன்பும்,அழிவிற்குப் பின்பும் உள்ள நிலை காரண நிலை என்றும் பொருள்படும். தோற்றம் என்பது ஏற்கனவே உள்ள ஒரு பொருள், நமக்கு விளங்கக் கூடிய வகையில் காட்சி தருவதாகும். அழிவு என்பது அப்பொருள் நம்மால் காண முடியாத நிலைக்குச் செல்வதாகும். ஆகவே தோற்றம் என்பதும், அழிவு என்பதும் அவற்றையுடைய பொருட்களின் நிலைகளில் ஏற்படும் மாற்றங்களே என்னும் உண்மை தெளிவாகப் பெறப்படுகிறது. இவ்வுண்மை சைவ சித்தாந்தம் கொள்ளும் முப் பொருட்களுக்கும் பொருந்தும்.

சத்காரியவாதக் கொள்கைப்படி, பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள்களும் அநாதி, நித்தியப்பொருட்கள். தத்தமக்கெனத் தனித்தனித் தன்மைகளுடன் என்றும் உள்ளவை என்பதே சைவ சித்தாந்தத்தின் முடிந்த முடிபாகும்.

சைவ சித்தாந்தம் கொள்ளும் முப்பொருள்களுக்கும் இருவகை இயல்புகள் உண்டு. அவை பொது இயல்பு சிறப்பு இயல்பு என்பன ஆகும். ஒரு பொருள் மற்றொரு பொருளோடு சம்பந்தப்பட்டு, மற்றொரு பொருளைச் சார்ந்து கொள்ளும் இயல்புகள் பொது இயல்பு ஆகும். இந்நிலையைப் பொருளின் தூல நிலை அல்லது தடத்த இலக்கணம் என்பர். ஒரு பொருள் மற்றொரு பொருளுடன் தொடர்பில்லாமல், சம்பந்தமில்லாமல் தனித்திருந்து கொள்ளும் தன்மைகள் சிறப்பு இயல்பாகும். இந்நிலையைச் சூக்கும நிலை அல்லது சொரூப இலக்கணம் என்பர்.

**பதி : இறைவன்**

சைவ சித்தாந்தம் கொள்ளும் அடிப்படை முப்பொருள்களில் முதன்மையானது பதியாகிய இறைவன். பதி உண்மையைச் சைவ சித்தாந்தம் சத்காரிய வாதக் கொள்கையின் அடிப்படையிலேயே நிறுவுகிறது. காரிய நிலையில் உள்ள ஒவ்வொரு பொருளுக்கும் காரண நிலை ஒன்றுண்டு. இன்று இயங்கி வரும் உலகம் பருநிலையில் காரிய நிலையில் உள்ளது. இதற்கு முன் காணப்படாத நுண்ணிய நிலையில் இருந்தது. நுண்ணிய காரண நிலையில் இருந்த உலகம், காரிய நிலையில் இய்ங்கும்போது தான் பயன்பாடு உண்டு. எனவே சூக்கும நுட்ப நிலையினின்று, பருநிலைக்கு உலகம் வருவது இன்றியமையாதது. இங்ஙனம் நுண்ணிலையில் இருந்த உலகத்தைப் பரு நிலைக்குக் கொண்டு வர ஒரு ஆற்றல் தேவை.

தோற்றமும் ஒடுக்கமுமற்ற நிலைபேறுடைய அநாதிப் பொருள் ஒன்று இருந்தால்தான், தோற்றமும், நிலைப்பாடும். ஒடுக்கமும் கொண்ட உலக இயக்கம் நடைபெறும். எனவே தோற்ற ஒடுக்கமற்று என்றும் நிலைபேறுடைய அநாதிப் பொருளே இறைவன் என்ற உண்மை பெறப்படுகிறது. இவ்வுண்மை.

**'நிலம், புனல், அனல், கால் காண நிறுத்திடும் அழிக்கும் ஆக்கும்**
**பலம் தரும் ஒருவன் இங்குப் பண்ணிட வேண்டா என்னின்**
**இலங்கிய தோற்றம் நிற்றல் ஈறு இவை இசைதலாலே**
**நலம் கிளர் தோற்றம் நாசம் தனக்கு இலாநாதன் வேண்டும்.'**[78]

என சிவஞான சித்தியாரில் உறுதிப்படுத்தப்படுகிறது.

**அத்துவித நிலை**

இறைவன் உலகத்துப்பொருட்களிடத்தும் உயிர்களிடத்தும் ஒன்றாக நிற்கின்றான். உடலோடு இணைந்துள்ள உயிர், உடலுடன் ஒன்றாய் நின்றாலும், உயிர் வேறு, உடல் வேறாதல் போன்று இறைவன் உயிர்களுடன் ஒன்றாய் நின்றாலும் உயிர் இறையாகாது. இறையும் உயிர் ஆகாது. இரண்டும் வேறு வேறு தன்மைகள் உடைத்து. ஆயினும் ஒன்றாகவே இருக்கும். இறைவனது கலப்பு இன்றி எவ்வகைப் பொருளுக்கும் இருப்பும், இயக்கமும் இயலாது. அனைத்துப்பொருட்களும், நிலைபெறுவதற்கு, இறைவன் அவற்றுடன் ஒன்றாய்க் கலந்து நிற்றல் இன்றியமையாதது.

உடனாதல் என்பது உயிர் ஒன்றை அறியும்போது இறைவனும் உடனாக நின்று அறிதலாகும். உடல் உறுப்புகளில் ஒன்றான கண்ணின் தன்மை காணுதல், என்றாலும் உயிரறிவு கண்ணுடன் இயைந்து நின்று அதனைச் செலுத்தினால் தான் கண்ணால் காண முடியும். அவ்வாறே இறைவன் உயிர்களுடன் உடனாயிருந்து இயங்கினால் தான், உயிர்கள் பொருட்களை அறிந்து அனுபவிக்க இயலும். உலகத்தின் ஏனைய சடப்பொருட்களின் தொழிற்பாட்டிற்கும் இறைவன் அவற்றுடன் உடனாக இயைந்து நிற்றல் வேண்டும்.

வேறாதல் என்பது உயிர்களுடன் ஒன்றாயும், உடனாயும் இறைவன் இணைந்திருக்கும் நிலையிலும் உயிர்களினின்று வேறாகித் தானேயாக நிற்கும் இயல்பாகும். கண்ணானது பொருட்களைக் காணும் இயல்புடைத்து; எனினும் இருளில் கண்ணினால் ஒன்றையும் காண இயலாது. சூரிய ஒளியோ, விளக்கொளியோ, பொருளைக் கண்ணிற்குக் காண்பித்தால் தான் கண்ணால் அப்பொருளைக் காண இயலும். காட்சியின் போது விளக்கொளியும், கண்ணொளியும் இயைந்து செயல்பட்டால் தான் கண் பொருட்களைக் காணும். இத்தன்மையால் கண்ணொளியினின்று விளக்கொளி வேறாகவும் விளங்கும். அது போல உயிர் ஒரு பொருளை அறியுமிடத்து, இறைவனும், உயிரும் பிரித்தறிய முடியாது, இயைந்தே நிற்கும் நிலையிலும் இறைவன் வேறாய் நின்று அறிவிப்பவனாய் விளங்குகின்றான். ஏனைய சடப்பொருள்களிடத்தும் வேறாய் நின்று, இயக்குபவனாகி, அவை இயக்கப்படுவனவாக இயங்குகின்றன.

இறைவன் உலகத்தோடும், உயிர்களோடும் கொண்டுள்ள ஒன்றாய், உடனாய், வேறாகி நிற்கும் தொடர்பினைச் சைவ சித்தாந்தம் அத்துவித நிலை என உரைக்கின்றது. இந்நிலை சுத்தாத்வைதம் என்று வழங்கப்படுகிறது. ‘இரண்டு பொருட்கள் இரண்டு

என்னும் தன்மை தோன்றாமல் ஒன்று என்று சொல்லும்படி ஒற்றுமைப்பட்டு நிற்பதே அத்துவித சம்பந்தமாகும்.[79] அத்துவித நிலையை,

**'ஈறாய் முதல் ஒன்றாய் இரு பெண் ஆண்குணம் மூன்றாய்**
**மாறா மறை நான்காய் வரு பூதம் அவை ஐந்தாய்**
**ஆறார் சுவை ஏழோசையொடு எட்டுத் திசை தானாய்**
**வேறாய் உடனானான் இடம் வீழிம் மிழலையே'**[80]

என்று இறைவன் அனைத்துப் பொருள்களிடத்தும் ஒன்றாய் வேறாய், உடனான தன்மையினைத் திருஞான சம்பந்தப் பெருமான் விவரிக்கிறார். அத்துவிதக் கலப்பு நிலை,

**'.....ஈசன் உயிர்களின் மருவி வாழ்வன்**
**தரும் உயிர் அவனை ஆகா உயிரவை தானும் ஆகான்**
**வருபவன் இவை தானாயும், வேறாய் மன்னி நின்றே'**[81]

என சிவஞான சித்தியாரிலும் தெளிவுபடுத்தப்படுகிறது.

பதி : பொதுவியல்பு

பதியாகிய இறைக்கு பொதுவியல்பு என்பது, உயிர்களின் மீது கொண்ட பெருங்கருணையினால், ஐந்தொழில் ஆற்றுவதும், உயிர்கள் வழிபட்டு உய்யும் பொருட்டு உருவம் கொள்வதும் ஆகும்.

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகியன இறைவன் ஆற்றும் ஐந்தொழில்களாகும். உயிர்களின் துன்பத்திற்குக் காரணமான பிறவித் தொடரினின்று அவற்றை மீளும்படி செய்து, நிலைபேறு உடைய முத்திப் பேற்றினை வழங்கும் பொருட்டே ஐந்தொழில்களை இறைவன் இயற்றுகின்றான். இக்கருத்து,

**'...அணுக்கள் இடர்க்கடல் நின்றும் எடுத்தே, ஊற்றம் மிக**
**அருள் புரிதல் ஏதுவாக உரை செய்வர் ஒடுக்கம் இளைப்பு ஒழித்தல்**
**மற்றைத் தோற்றம் மல பாகம் வரக்காத்தல் போகம்**
**துய்ப்பித்தல் திரோதாயி நிறுத்தலாகும் போற்றலரும் அருள் அருளே...**[82]

என சிவப்பிரகாசத்தில் காணக்கிடைக்கிறது

அநாதி நிலையில், தளைகளால் கட்டுண்டு கிடக்கும்உயிர்களுக்கு, தனு, கரண, புவன, போகங்களைத் தருதலே படைத்தல் ஆகும். தனு என்பது உடலையும், கரணம்

என்பது மனம், சித்தம், புத்தி, அகங்காரம் ஆகிய உட்கருவிகளையும், புவனம் என்பது உயிர்கள் வாழும் உலகத்தையும், போகம் என்பது உயிர்கள் அனுபவிக்கும் இன்ப நுகர்ச்சிகளையும் குறிக்கும். இவ்வாறு உயிர்களுக்கு அளிக்கப்பட்ட தனு, கரண, புவன போகங்களை ஒரு கால எல்லை வரை நிறுத்தி, நிலை பெறச் செய்து, உயிர்களுக்குப் பயன்படும்படி செய்தல் காத்தல் ஆகும். பிறவிகள் தோறும், பிறந்து இறந்து உழன்று கொண்டிருக்கும் உயிர்களைச் செயலற்று இருக்குமாறு செய்து, தனு, கரண, புவன போகத்தினின்று, பிரித்து ஒடுக்குவது அழித்தல் ஆகும். தொடர்ந்து வரும் பிறவிகளால் ஏற்படும் இளைப்பு நீங்குதற் பொருட்டே அழித்தல் தொழில் நடைபெறுகிறது. ஆணவம், கன்மம், மாயை ஆகிய தளைகள் உயிரறிவை மறைத்து நிற்பன. தளைகளால் உயிர்களுக்கு உலக இன்பத்தைக் காட்டித் தன்னைக் காட்டாமல், உலகத்தையே உயிர்கள் நோக்கியிருக்குமாறு இறைவன் செய்தலே மறைத்தலாகும். பிறவித் தொடரில், பல்வேறு பிறப்புகளில் பிறந்து, இறந்து வந்தமையால், தளைகளின் ஆற்றல் சிறிது சிறிதாக நலிவடைகிறது. உயிர்கள் தன் உண்மை இயல்பினை உணருகின்றன. உயிர்களுக்கு உலகப்பற்று அகன்று இறைப்பற்று மிகுகிறது. உயிர்கள் முத்திப் பேற்றினை விழைகின்றன. உயிர்களின் விருப்பம், அறிவு செயல்களைக் கொண்டே அவற்றின் இயக்கம் அமைவதால், இறைவன் உயிர்களுக்குத் தன்னைக் காட்டித் தளைகளின் பிடியிலிருந்து விடுவித்துத் தன் திருவருளால் உயிர்கள் தம்மை அணையும்படி செய்கின்றான். இஃது அருளல் தொழிலாகும். இவ்வைந்து தொழில்களுமே, உயிர்கள் இறைமைப் பேறு பெற வேண்டும் என்னும் நோக்கத்திற்காகவே இறைவனால் மேற்கொள்ளப்படுகின்றன. எனவே இவை ஐந்தும் அருள்தொழில்கள் எனப்படுகின்றன.

உயிர்கள் உய்யும் பொருட்டு, இறைவன் தம் பெருங்கருணையினால், தாமே தமது விருப்பத்தால், தனது ஆற்றலைப் பல்வேறு நிலைகளில் பல உருவங்களும் பல பெயர்களும் கொண்டு விளங்குவது, பதியின் பொதுவியல்பாகும். பிறிதொரு பொருளின் சார்பினால், பதிக்குத் தன் தன்மையில் எவ்வித மாறுபாடும் உண்டாவதில்லை. பதி என்றும் ஒரே தன்மையதாகவே விளங்கும். எனவே பதிக்குப் பொது இயல்பு என்று சுட்டப் பெறுவது, உலகத்தை நோக்கி நிற்கும் நிலையில், உயிர்களின் பொருட்டு உருவ நிலைகளைக் கொள்ளுதலும், ஐந்தொழில்களை மேற்கொள்ளுதலுமே ஆகும்.

**சிறப்பு இயல்பு**

பதியின் சிறப்பு இயல்பாவது, யாதொரு பொருளின் சார்புமின்றித் தன்னிலையில் என்றும் நிலைத்திருத்தலாகும். சச்சிதானந்தமாய் நிற்கும் இந்நிலையில், எண்

குணங்களைக் கொண்டு பதி நிலைபெறுகிறது. சத் என்பது என்றும் உள்ளதாகும். சித் என்பது பேரறிவுடையதாகும். இவற்றுடன் ஆனந்தத்தையும் இணைத்து இறைமைக் குணங்களை மூன்றாகக் கொள்ளுதல் உபநிடதங்களிற் காணப்படும் வழக்காகும். எண்குணங்களும் சத்து, சித்து, ஆனந்தம் ஆகிய மூவகைகளில் அடங்கும்.

தன் வயம் உடைமை, தூய உடம்பு உடைமை, இயற்கை உணர்வு உடைமை, முற்றுணர்வு உடைமை, இயல்பாகவே பாசம் இன்மை, பேரருள் உடைமை, எல்லையற்ற ஆற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை ஆகிய இவை இறைவனின் எண் குணங்களாகக் கூறப்படுவன.இவற்றுள், தன் வயம் உடைமை, தூய உடம்பு உடைமை, பேராற்றல் உடைமை, இயல்பாகவே பாசமின்மை ஆகிய இந்நான்கு இயல்புகளும் 'சத்து – என்றும் உள்ளது' என்னும் நிலையில் அடங்குவனவாகும். இயற்கை உணர்வுடைமை, முற்றுணர்வு உடைமை. பேரருள் உடைமை ஆகிய இம்மூன்று தன்மைகளும், 'சித்து – பேரறிவு' என்னும் நிலையில் அடங்குவனவாகும். வரம்பில் இன்பம் உடைமையே 'ஆனந்தம்' எனக் குறிக்கப் பெறுகிறது. பதியின் எண்குணச் சிறப்பினை, உமாபதி சிவாசாரியார்,

**...'யார்க்கும் எழுதா இயல்குணங்கள் எட்டானை'[83] ...**

எனக் குறிக்கிறார். மணிவாசகப் பெருமானும்,

**'எல்லையிலாதன எண்குணமானவை'**

என்றும்,

**'எண் குணம் செய்த ஈசனே'**[84]

என்றும் இறைவனைப் போற்றுகிறார். பொய்யில் புலவரும், சைவ சித்தாந்தக் கருத்தினை **'எண் குணத்தான்'** என்ற தொடரால் உறுதிப்படுத்துகிறார்.[85]

தன் வயம் உடைமை என்பது, தான் விரும்பியவற்றைத் தான் விரும்புமாறு, கட்டுப்பாடுகளற்று, தனித்து இயங்கி, முழு சுதந்திரத்துடன் செயல்படுத்துதலாகும். தூய உடம்பு உடைமை என்பது, உயிர்களுக்குஅறிவிக்கும் பொருட்டு இறைவனுக்கு உருவம் தேவைப்படுவதால், கட்டுக்களற்ற மாசற்ற, தளைகளால் பிணிக்கப்படாத உடம்பு உடைமை ஆகும். இயற்கை உணர்வுடைமையாவது, பொறி புலன்களின் உதவியின்றி, பிறரால் அறிவுறுத்தப்படாமல் தாமே எல்லாவற்றையும் இயற்கையிலேயே அறியும் அறிவு கொண்டிருத்தலாகும். முற்றுணர்வுடைமை என்பது, எல்லாவற்றையும், எப்பொழுதும், காலங்களின் இடையீடு இன்றி, ஒரே சமயத்தில் உணரும் தன்மையுடைமை ஆகும்.

இயல்பாகவே பாசமின்மை என்பது, ஆணவம், கன்மம், மாயை ஆகியவற்றின் சார்பு இயல்பாகவே, இல்லாதிருத்தலாகும். பேரருள் உடைமை என்பது எல்லா உயிர்களிடத்தும் என்றும் குறையாத கைம்மாறு கருதாத பெருங்கருணை உடைமை ஆகும். முடிவில் ஆற்றல் உடைமை என்பது காலக்கணக்கற்று எஞ்ஞான்றும், எல்லையற்ற ஆற்றலை இயற்கையாகக் கொண்டு செயல்படுதலாகும். வரம்பில் இன்பம் உடைமை என்பது, விருப்பு வெறுப்பின்றி, எல்லையற்ற நிலைபேறுடைய இன்பம் கொண்டு விளங்குதலாகும். பதியின் சொரூப இலக்கணத்தைத் தாயுமானவர்,

**'குலம் இலான் குணம் குறி இலான்**
**குறைவு இலான் கொடிது ஆம்**
**புலன் இலான், தனக்கு என்ன ஓர்**
**பற்று இலான்... அவன் சஞ்**
**சலம் இலான், முத்தி தரும் பரசிவன்'**[86]

எனத் தம் பாடலில் விளக்குகிறார்.

**பசு, பொது இயல்பு**

பசுவாகிய உயிர் தனித்து இயங்கும் இயல்புடையதன்று. ஏதேனும் ஒரு பொருளைச் சார்ந்து நின்றே இயங்கும். ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களைச் சார்ந்து, பிறப்பு இறப்புக்களிற் பட்டு விழிப்பு, உறக்கம், நினைப்பு, மறப்பு உள்ளிட்ட பல நிலைகளை அடைந்து, இன்ப துன்பங்களை நுகர்ந்து ஒரு நிலையில் நில்லாது, உழன்று நிற்கும் நிலை உயிரின் பொது இயல்பாகும். இதனைக் கருவி கரணங்களுடன் நிற்றல் என்பர். இஃது மட்டுமின்றி அறிவித்தாலன்றி அறியமாட்டாததும் உயிரின் பொது இயல்பாகும்.

உயிர் தானே எதனையும் அறியும் ஆற்றல் அற்றது. உலகத்தில் 'ஐம்பொறி முதலிய கருவிகளாலும், சுவை, ஒளி முதலிய புலன்களாலும், கதிரவன், மதி முதலிய விளக்கும் கருவிகளாலும், முக்காலங்களாலும், அறம் பாவங்களாலும், உடம்புகளாலும், காண்டல், கருதல், உரை முதலிய அளவைகளாலும், அறிவிக்கப்பட்டு அறிதலாலும், யாதொரு கருவிகளின்றியும் நிற்கும் தனி நிலையில் அருவாய் ஒன்றையும் அறியாது நிற்றலாலும், இவ்விரு நிலைகளையும் அறியவல்ல ஒப்பற்ற இறைவனே, உயிர்கள் மாட்டுக் கொண்ட பெருங்கருணையால் மேற்கூறிய ஏதுக்களாலும், எடுத்த மொழியானும் உயிர்கட்கு அறிவித்து நிற்பன்'[87] இவ்வாறு உயிர்களுக்கு அறிவு நிகழ்கிறது.

உயிர்கள் அநேகம்; அவை எண்ணிக்கையற்றவை எண்ணற்றவை என்பதற்குக் கணிதம் பயன்படுத்தும் சொல் எண்ணிலி (Infinity) எண்ணிலி என்றால் எண்ண முடியாத தொகையினை உடையது என்பது பொருளல்ல. தொகையே அற்றது என்று பொருள். உயிர் தோற்றமும் முடிவுமற்ற அநாதிப் பொருளாகும். பசு இலக்கணத்தை,

> **' எண் அரிதாய் நித்தமாய் இருள் மலத்தில் அழுந்தி**
> **இருவினையின் தன்மைகளுக்கு ஈடான யாக்கை**
> **அண்ணல் அருளால் நண்ணி அவை அவராய் அதனால்**
> **அலகு இல் நிகழ் போகங்கள் அருந்தும் ஆற்றால்**
> **புண்ணிய பாவம் புரிந்து, போக்கு வரவு உடைத்தாய்**
> **புணரும் இருள் மல பாகம் பொருந்தியக்கால் அருளால்**
> **உள் நிலவும் ஒளி அதனால் இருள் அகற்றி பாதம்**
> **உற்றிடும் நல் பசு வர்க்கம்.....**[88]

என அறுதியிட்டு சிவப்பிரகாசம் இயம்புகிறது.

தளைகளின் கட்டுக்களுக்கேற்ப சைவ சித்தாந்தம் உயிர்களை மூவகைப்படுத்துகிறது. ஆணவம், கன்மம், மாயை என்னும் மூவகைக் தளைகளால் பிணைக்கப்பட்டிருக்கும் உயிர்கள் 'சகலர்' எனப்படுவர். ஆணவம், கன்மம் ஆகிய இரு தளைகளால் பிணைக்கப்பட்டிருக்கும் உயிர்கள் 'பிரளயாகலர்' எனப்படுவர். ஆணவம் என்னும் தளையால் மட்டும் பிணைக்கப்படும் உயிர்கள் 'விஞ்ஞானகலர்' எனப்படுவர்.

உயிர்கள் மூன்று வகைப்படுதலைப் போன்று மூன்று நிலைகளுக்குட்படுகிறது. பிறப்புக்கு உட்படாத நிலையில், ஆணவத்தைச் சார்ந்து, அறிவையும், செயலையும் இழந்து நிற்கும் நிலை, கேவல நிலையாகும். பிறப்புக்கு உட்பட்டு தத்துவங்களோடு கூடி நிற்கும் நிலை சகல நிலையாகும். தளைகளிலிருந்து விடுபட்டு இறைவன் திருவடியை அடையும் முத்திநிலை சுத்த நிலையாகும்.

**பசு : சிறப்பியல்பு**

உயிர் எந்தப் பொருளைப் பற்றி நிற்கின்றதோ அந்தப் பொருளின் தன்மையே, தன் தன்மையாய்க் கொண்டு நிற்கும் இயல்பு உடையது. இதனைச் 'சார்ந்ததன் வண்ணமாதல்' என்பர். பசுவாகிய உயிருக்குப், பதியாகிய இறைவனிடத்தும், பாசமாகிய உலகத்தினிடத்தும் சம்பந்தம் உண்டு. இறைவனின் பெருங்கருணையினால், தளைகளிலிருந்து விடுபட்டு, கருவி கரணங்களினின்று நீங்கி, இறைவனுடன் ஒன்றி நிற்கும் முத்தி நிலையே உயிரின் சிறப்பியல்பாகும்.

**பாசம் : தளை**

தளையாவது, ஆவணம், கன்மம், மாயை என மூவகைப்படுத்தப்படுகிறது. இவை மூன்றும் உயிர்களைப் பற்றி நின்று அவற்றை உலகத்தின் மீது பற்றுக் கொள்ளச்செய்து, உயிர்களின் செயல்களுக்குக் காரணமாகின்றன. ‘பாசம்’ – பச் என்னும் முதனிலையிற் பிறந்து கட்டுதற்குக் கருவியாகிய கயிற்றினை உணர்த்தும். புறத்தே யாடு, மாடு முதலிய உயிர்களைக் கட்டுங் கயிறு போல, அகத்தே உயிர்களைக் கட்டி நிற்கும் அறியாமையும் பாசம் என்று சொல்லப்படும்... உயிர்களைக் கட்டுறுத்தற்கண் இருவினைகளும், மாயையும் ஒரோ வழி ஆணவமலத்தை ஒத்தலின். அது பற்றி அவையும் பாசம் என்று பொதுப்பட வழங்கப்படும்’[89] என்பது மறைமலையடிகளின் கருத்தாகும். உயிர் தன் உண்மை இயல்பினையும், இறையருளையும், உணர இயலாமல் போவதற்கு இப்பாசப் பிணைப்பே காரணமாகும்.

**தன் முனைப்பு**

ஆணவமாகிய தன்முனைப்பு என்பது உயிர்களோடு இயற்கையாய் உடன் நின்று, அவற்றின் அறிவை விளங்க வொட்டாது மறைக்கும் இயல்புடைத்து. உயிர்களை முழு அறியாமைக்குட்படுத்துவது, ஆணவ மலத்தின் சிறப்பு இயல்பாகும். **‘அறியாமை ஆணவம்’**[90] என்று ஒரே சொல்லில் ஆணவத்தின் இயல்பினை உண்மை விளக்கம் தெளிவுபடுத்துகிறது. அஞ்ஞானம், அவித்தை, ஆணவம், அறியாமை என்பன ஒரு பொருட்சொற்கள்..[91] என்பது மறைமலையடிகளின் கூற்றாகும். அநாதியே உயிர்களைப் பற்றி நிற்பதால் மூலமலம் என்றும் குறிக்கப்படுகிறது. உயிர்களின் எல்லாத் துன்பங்களுக்கும், காரணமாகி நிற்பதால் ‘மலம்’ என்னுஞ் சொல்லே ஆணவமலத்தைக் குறிக்கிறது.

உயிர் பிறவிக்கு வரு முன்னர் உயிரறிவை முழுமையாக மறைத்து நிற்கும் ஆணவமலம், பிறவிக்கு வந்த பின்னர், உயிர்களுக்கு விபரீத உணர்வுகளைத் தோற்றுவிக்கிறது. இதன் விளைவால், நிலையற்ற பொருட்களை நிலையானவை என்றும். துன்பம் தரக் கூடியனவற்றை, இன்பப் பொருட்களாகவும் தகுதி இல்லாத தன்னைத் தகுதியுடையவன் என்றும் ஆன்மா கருதுகிறது. இவ்வுணர்வால் நிகழ்த்தப்படும் செயல்களே வினைகளாகின்றன. உயிரறிவை ஆணவம் மறைத்து அறியாமையைத் தருகிறது என்னும் உண்மையையும் உயிர் அறிவதில்லை. யான், எனது என்னும் செருக்குணர்வு மேலிட, உலக இன்பங்களை, உயிர் தன் தனிப்பட்ட முயற்சியால்

பெற்றது போலவும், அனைத்தும் தன்னால் ஆகக் கூடும் என்று எண்ணுவதும், தன் அறிவுக்கு விஞ்சியவை எதுவும் இல்லை என்று செயல்படுவதும் ஆணவத்தின் விளைவுகளே. இஃது ஆணவத்தின் பொது இயல்பாகும். உயிருடன் ஆணவம் இணைந்திருக்கும் நிலைக்கு செம்பினில் களிம்பு நீங்காது உடன் இருத்தல் போல என்னும் உவமை கொண்டு அருள் நந்தி சிவாசாரியார் விளக்குகிறார். ஆணவத்தின் இலக்கணத்தைச் சிவஞான சித்தியார்,

**'ஒன்றதாய் அநேக சக்தி உடையதாய் உடனாய் ஆதி**
**அன்றதாய் ஆன்மாவின் தன் அறிவொடு தொழிலை ஆர்த்து**
**நின்று போத்திருத்துவத்தை நிகழ்த்தி செம்பினில் களிம்பு ஏய்ந்து**
**என்றும் அஞ்ஞானம் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே'....**[92]

என வரையறுக்கிறது. ஆணவம் ஒரு பொருளாயினும், அளவற்ற ஆற்றல்களைக் கொண்டு உயிர்களைப் பிணைக்கிறது. ஆணவ மலத்தின் செயல்பாடுகள், மோகம், மதம், இராகம், கவலை, தாபம், வாட்டம் ஆகியனவாகும். எனவே உலகத்தில், உயிர்களின் பெரும்பான்மையான, செயல்பாடுகளுக்கு ஆணவமே காரணமாய் அமைகிறது என்னும் உண்மை தெளிவாகிறது.

ஆணவத்தின் கட்டுக்குட்பட்டு அறியாமையில் அழுந்தி நிற்கின்ற உயிர்கள், அவ்வறியாமை உள்ளபோது அதனை அறிவதில்லை. முத்தி நிலையில் இறையருளினால் இறையறிவு உணர்த்திய பின்னரே, அறிவு வரப்பெற்றுத் தாம் இதுவரை அறியாமையில் உழன்றதை உணர்கின்றன. இந்நிலையிலும் தன்முனைப்பு அழிவதில்லை. தன் ஆற்றல்களை இழந்து, உயிர்களில் இறை ஆற்றல் மிகுவதால் கீழ்ப்பட்டு, மடங்கி நிற்கும்.

**கன்மம் :– வினை**

உயிர்கள் இயற்றுகின்ற செயல்கள் வினைகள் ஆகின்றன. வினைகள் காரிய நிலையில் நல்வினை, தீவினை என இருவகைப்படும். நல்வினையைப் புண்ணியம் என்றும், தீவினையைப் பாவம் என்றும் கூறுவர். நல்வினை யென்பது பிற உயிர்களுக்கு மனத்தாலும், மொழியாலும், உடலாலும் நன்மையைச் செய்வதாகும். தீவினை யென்பது பிற உயிர்களுக்குத் துன்பந்தரும் வகையில் எண்ணுதலும், பேசுதலும் நடத்தலுமாகும்.

**'இதம் அகிதங்கள் என்பது – இகல் மனம் வாக்குக் காயத்து**
**இதம் உயிர்க்கு உறுதி செய்தல் அகிதம் மற்றது செய்யாமை..**[93]

என அருள் நந்தி சிவாசாரியார் கன்மம் இயற்றப்படுதலையும், அதன் வகைமையையும் தெளிவுபடுத்துகின்றார்.

மனத்தின் வழி செய்யத்தகும் நன்மைகள், பிற உயிர்களிடத்தே இரக்கம் கொள்ளுதல், பொறுமையுடைமை, பிறர் பொருள் விரும்பாமை, செய்நன்றி மறவாமை, நடுவு நிலை நிற்றல், அழுக்காறு,பேராசை இன்மை. மனிதாபிமானம் ஆகியவையாகும். மொழியின் வழி செய்யத்தகும் நன்மைகள். அறம் கற்பித்தல், உண்மை நவிலல், இனியவை கூறல், ஓதல் முதலியனவாகும். மெய்வழி செய்யத்தகும் நன்மைகள் பகுத்து உண்ணல், வழிபாடு ஆற்றுதல், குளம், கிணறு தோண்டுதல், மருத்துவமனை அமைத்தல், திருக்கோவில்கள், சத்திரங்கள் ஆகியவைகளைக் கட்டுதல், துப்புரவு செய்தல் ஆகியனவாகும். இவற்றிற்கு மாறான செயல்கள் அனைத்தும் தீவினைகளாகும்.

இருவினைகளும் புண்ணிய பாவ வடிவினவாகி இன்பதுன்பங்களாகிய இருவகைப்பயன்களையும் தருகின்றன. இவ்வாறு வினைகள் உயிர்களைப் பற்றி நின்று, பிறவிகள் தோறும் தோன்றித் தொடர்ந்து வருகின்றன. உயிர்களின் ஒவ்வொரு பிறவியின் முடிவிலும், அவை இயற்றிய இருவினைகளும் சூக்கும் வடிவில் அவ்வுயிர்களைச் சார்ந்து நின்று, வரும் பிறவிகளில் இறைவனின் ஆணைப்படி வினைப்பயன்களான இன்ப துன்பங்களை அவ்வுயிர்களுக்கு அளிக்க வல்லன. இச்சைவ சித்தாந்த உண்மையை,

**‘இருவினை அநாதி ஆதி இயற்றலால் நுகர்வால் அந்தம்....**
**..... தரு செயல் முறைமையாலே தான் பல பேதம் காட்டி**
**அரு அதாய் நின்று அரன் தன் ஆணையின் அமர்ந்து செல்லும்’**[94]

என சிவஞான சித்தியார் நிலை நாட்டுகிறது.

உயிர்கள் முற்பிறவிகளில் இயற்றிய வினைகளும், இப்பிறவியில் இயற்றும் வினைகளும், வரும் பிறவிகளில் இன்ப துன்பங்களாகிய பயன்களைத் தருகின்றன. ஆதலால் பிறவிகளும், கன்மமும் சங்கிலித் தொடர்போல தொடர்ந்து வருவன என்னும் கருத்து பெறப்படுகிறது. பிறவித் தொடரிலிருந்து விடுபட வேண்டுமாயின், கன்மத் தொடர்ச்சியினின்று அகல வேண்டும். யான், எனது என்னும் தன்முனைப்பு உணர்வின்றி, இறைவனின் திருவருளையே துணையாகக் கொண்டு, இப்பிறவியில் நமக்கிடப்பட்ட பணிகளை, என்னால் ஆவது ஒன்றில்லை என்னும் கருத்து மீதுர செய்து வரும் போது, வினைகளின் தொகுப்பு குறையும். இறையருள் கூடி வரும் போது, உயிர் திருத்தம்

பெற்றுக், கன்மக் கூட்டங்களினின்று விடுபட்டு, இறையுணர்வு எய்தப் பெற்று முத்தி நிலை கைகூடப் பெறும்.

**மாயை**

மாயை என்னும் சொல் மாயா என்னும் சொல்லின் விரிவாகும். மா– மாய்தல், அடங்குதல், ஒடுங்கி நிற்றல் எனப் பொருள்படும். ஆ– ஆதல், தோற்றம் பெறுதல் ஆகும். ஒடுங்கி நிற்கும் நிலையிலும், தோற்றம் பெற்ற நிலையிலும் ஆக இரு நிலைகளிலும் உயிர்களைப் பற்றி நிற்பது மாயையாகும். பதி, பசு, ஆணவம், கன்மத்தைப் போலவே மாயையும் என்றும் உள்ளதாகும். இவ்வுண்மை,

**'ஏகன், அநேகன், இருள், கருமம், மாயை இரண்டு**
**ஆக இவை ஆறு ஆதி இல்'**[95]

என உமாபதி சிவனாரால் தெளிவுறுத்தப்பட்டுள்ளது. மாயை இரண்டு எனக் கூறியதன் பொருளாவது அஃது தூயமாயை (சுத்த மாயை), தூயதல்லாத மாயை (அசுத்த மாயை) என இருவகைகளில் கூறப்படுகிறது. 'மல கன்மங்கள் விரவாத மாயையின் பகுதி 'சுத்தமாயை' எனப்படும். மல கன்மங்கள் விரவிய அதன் பகுதி 'அசுத்தமாயை' எனப்படும்'[96] என 'மாயை இரண்டு' என்னும் சொற்றொடரை திரு.கு.வைத்தியநாதன் அவர்கள் விளக்குகிறார்.

உயிர்கள் பிறவிக்கு வருவதற்கு முன்னர், பிறப்புக்குக் காரணமான ஆணவம், கன்மத்துடன் இணைந்து மாயையானது, உயிர்களைப் பற்றி, காரணநிலையில், செயற்படாது அடங்கி நிற்கும். இந்நிலை ஒடுங்கி நிற்கும் நிலையாகும். உயிர்கள் பிறப்பிற்கு வந்த பின்னர், மாயையானது காரிய நிலையில் தன் ஒடுக்க நிலையினின்று நீங்கி, பரந்து, விரிந்து பலவாகத் தோற்றம் அளிக்கிறது. இந்நிலை தோன்றி நிற்கும் நிலையாகும். உயிர்களுக்குரிய உடலாகவும். உலகப் பொருட்களாகவும், இன்பமாகவும், தோன்றக் கூடியது மாயையாகும். மாயையின் இயல்பினைச் சிவஞான சித்தியார்,

**'நித்தமாய் அருவாய் ஏகநிலையதாய் உலகத்திற்கோர்**
**வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமலனுக்கோர்**
**சத்தியாய் புவன போகம் தனு கரணமும் உயிர்க்காய்**
**வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யும் அன்றே'**[97]

என விவரித்துரைக்கிறது.

‘உலகில் பல வகையாகக் காணப்படும் பொருள்களாய்ப் பரிமணிக்கக் கூடிய பலவகைச் சத்திகளின் தொகுதியே மாயை’[98] என்பது மாயை குறித்ததோர் வரையறையாகும். மாயை உயிர்களுக்கு, உடல்களாகவும், உலகத்துப் பொருட்களாகவும் விளங்கி, அவற்றின் அறிவு விளக்கத்திற்குத் துணை புரிகின்றன. ஆயினும் இயற்கையாகவே ஆணவ மலப் பிடியில் உள்ள உயிர்களைப் பற்றுவதால், ஆணவச் சார்பு காரணமாக உயிர்களுக்கு மயக்கத்தையும் தரக் கூடியதாக மாயை அமைகிறது. “To be in bondage to Maya is a disadvantage for the soul (Maya brings about confusion) but also an advantage (provides the soul with boga tanu etc)”[99] என்னும் தத்துவ அறிஞரின் கூற்று இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

உயிர்களுக்கு அறிவு விளக்கத்தை அளிப்பதால் மாயை என்பது இறை ஆற்றல் என்றோ, இறையருள் என்றோ கருதி விட முடியாது. இறைவன் மாயையை ஒரு கருவியாகக் கொண்டு, உயிர்களுக்கு அறிவு விளக்கம் ஏற்படுமாறு அதனைத் தொழிற்படுத்துகிறான். மாயையின் செயற்பாடுகள் அனைத்தும் இறை ஆற்றலுக்கு, அருட்சத்திக்கு அடங்கியவையே. உயிர்கள் விஞ்ஞான கலர், பிரளயாகலர், சகலர் என மூன்று வகையாக இருப்பதால் மாயையும் பயன்படும் நிலையில் சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை என மூன்று வகையாக உள்ளது. சுத்தமாயையிடமிருந்து சொல் உலகமும், பொருள் உலகமும் தோற்றம் பெறுகின்றன. சுத்த மாயையில், சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை என்னும் ஐந்து தத்துவங்கள் தோன்றுகின்றன. அசுத்த மாயையினின்று, காலம், நியதி, கலை, வித்தை அராகம், புருடன், மாயை ஆகிய ஏழு தத்துவங்கள் தோற்றம் பெறுகின்றன. பிரகிருதி மாயையினின்று இருபத்து நான்கு தத்துவங்களான ஐம்பூதங்கள் (5), ஐம்புலன்கள் (5), கன்மேந்திரியங்கள் (5), ஞானேந்திரியங்கள் (5), அந்தக் கரணங்கள் (4), ஆகியன தோற்றம் பெறுகின்றன.

தத்துவங்கள் என்பன மாயை என்னும் மூலப்பொருளிலிருந்து தோன்றும் அதன் கூறுகளே. இக்கூறுகளின் செயல்பாடுகளாக உலகமும், உலகப் பொருட்களும் தோன்றுகின்றன. தத்துவங்களைச் சைவ சித்தாந்தம் ‘கருவிகள்’ எனக் குறிக்கின்றது. இத்தத்துவங்கள் யாவும் தாமாகத் தோன்றுவதுமில்லை. தாமாகத் தொழிற்படுவதுமில்லை. இறையருளினால், ஆற்றலினால் மாயையின் கூறுகளாகி, அவ்வருள், செலுத்த, செயல்படும் தன்மையுடையன. மாயையினின்று தோன்றிய உருவ, அருவ உலகதனைத்தும் இத்தத்துவங்களின் வடிவங்களேயாகும். இவையே

பருப்பொருள், நுண்பொருள், மிகு நுண்பொருள் ஆகிய நிலைகளில் உயிர்களைப் பொருந்தி நிற்பன.

**'தத்துவ ரூபமாகும் தரும் அரு உருவம் எல்லாம்**
**தத்துவம் தூல, சூக்க பரங்களும் ஆகி நிற்கும்**
**தத்துவம் தன்னில்சாரும் அணுக்கள்.....**
**.... சகலமும் தத்துவம் காண்...**[100]

என்னும் அருணந்தி சிவாசாரியாரின் மொழிகள் இவ்வுலகமே தத்துவங்களின் வடிவு என்னும் சைவ – சித்தாந்தப் பேருண்மையை விளக்கி அமைவது உணர்ந்து போற்றுதற்குரியதாகும்.

**வழிபடு நெறிகள்**

ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களின் பிணைப்பினால், பல்வேறு பிறப்புகளை உயிர்கள் எய்துகின்றன. பிறவிகள் தோறும் இன்ப துன்பங்களை நுகருகின்றன. இன்பங்களையே வேண்டி, அதற்கு ஏதுவான செயல்களைச் செய்ய முற்படுகின்றன. அவை பலகாலும் துன்பங்களிலேயே உயிர்களை மூழ்கச் செய்கின்றன. துன்பங்களே மிகுதியாதலை உணர்ந்து இவற்றினின்று மீளும் வழியினை உயிர்கள் தேடும்போது, இறைவன் அவ்வழியினை மெய்நூல்கள் வாயிலாகவும், குரு உபதேசத்தின் மூலமாகவும் உயிர்களுக்கு உணர்த்துகிறான். இவ்வழி சமய எல்லைகளைக் கடந்தது. அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. எல்லாச் சமயங்களும் இவ்வழியின் மூலம் மக்களை இறைவனிடம் சென்று சேர்க்கவே முயல்கின்றன. இவ்வழியே இறைவழிபாடு என்னும் பொது நெறியாகும்.

தேவார ஆசிரியர்கள் பல்வேறு வகைப்பட்ட வழிபாடுகளைத் தம் பாடல்களில் குறிக்கின்றனர். 'மறையோதுதலே ஒரு வழிபாட்டு வகையாகும்; தில்லை வாழ் அந்தணர்கள் வேதமோதி அழலோம்பி இறைவனை வழிபட்டார்கள்; பூக்களைக் கொண்டும். ஆனஞ்சு கொண்டும் வழிபாடு செய்வதுண்டு. சிவலிங்கத்தின் மீது மலரிடுவார் வினையை இறைவன் ஓட்டுவர். வழிபாடு என்பது சிவ பூசை மட்டுமன்று; திருக்கோவிலைக் கூட்டி, அலகிட்டு, அழகுபடுத்துவதும், மாலை தொடுத்தலும் முதலான பிற தொண்டுகளும் கூட வழிபாடேயாகும்; சிவனடியார்களைத் தொழுதலும் வழிபாடே''[101] என்ற கருத்துக்கள் திருமுறைகளில் காணப்படுகின்றன.

சிவாகமங்களிலிருந்து பெறப்படும் வழிபடும் நெறிகளை, வாகீச முனிவர்,

**'அருமறை எவையுந் திருமிகு ஞானம்**
**இலங்கொளி யோக நலங்கிளர் கிரியை**
**சரியை யெனவுரை விரிதரு பாதம்**
**கறையறு மறை முறை நெறி'**[102]

என நான்காகக் குறிக்கிறார். இவற்றுள் சரியை என்பது தாதமார்க்கம். கிரியை யாவது சற்புத்திர மார்க்கம். யோகம் என்பது சகமார்க்கம், ஞானமாவது சன்மார்க்கமென்று,

**'சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம்**
**தாத மார்க்கம் என்றும் சங்கரனை அடையும்**
**நன்மார்க்கம் நால் அவை தாம் ஞானம் யோகம்**
**நல் கிரியா சரியை என நவிற்றுவதும் செய்வர்'**[103]

என்னும் அடிகளில் அருள் நந்தி சிவாசாரியார் தெளிவுபடுத்துகிறார்.

**சரியை: தாதமார்க்கம்**

இந்நெறியில், இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள உறவு முறை, ஆண்டான் அடிமை என்னும் நிலையாகும்.இந்நெறி, இறைப்பணிகள் பலவற்றைச் செய்து வழிபடுதல் ஆகும்.

**'தாத மார்க்கம் சாற்றில் சங்கரன் தன் கோயில்**
**தலம் அலகு இட்டு இலகு திருமெழுக்கும் சாத்தி**
**போதுகளும் கொய்து, பூந்தார் மாலை கண்ணி**
**புனிதற்குப் பல சமைத்தும் புகழ்ந்து பாடி**
**தீது இல் திரு விளக்கு இட்டு திரு நந்தவனமும்**
**செய்து, 'திரு வேடங்கண்டால் அடியேன் செய்வது**
**யாது? பணியீர் என்று பணிந்து அவர் தம் பணியும்**
**இயற்றுவது....**[104]

எனச் சரியை நெறியைச் சிவஞான சித்தியார் விளக்கியுரைக்கிறது. அப்பர் பாடல்களில் காணப்படும் கருத்துக்களும், கோவில்களில் புல்லைச் செதுக்கிச் செப்பனிட அவர் மேற்கொண்ட உழவாரத் திருப்பணியும் சரியை நெறியை விளக்குகின்றன.[105] என்பது வரலாற்றாசிரியர்களின் கருத்தாகும்.

**'..... நித்தலுமெம்பிரானுடைய கோயில் புக்குப்**
**புலர்வதன் முன்னலகிட்டு மெழுக்கு மிட்டுப்**
**பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்**
**தலையினாற் கும்பிட்டுக் கூத்துமாடி'**[106]

என்று தொடரும் அப்பர் அடிகளாரின் வாக்கு, அவர் சரியை நெறியிற்நின்று சிவபெருமானை வழிபட்டமைக்குச் சான்றாகின்றது.

**சற்புத்திர மார்க்கம் – கிரியை நெறி**

இந்நெறியில், இறைவனுக்கும், உயிர்களுக்கும் இடையே உள்ள உறவு முறை தந்தைக்கும், மகவுக்கும் இடையே உள்ள உறவு முறையாகும். இதனை மகன்மை நெறி என்று வழங்குவர். இந்நெறியில் அகத்தும், புறத்தும் சிவபெருமானை வழிபடுவர். 'புத்திர நெறி ஆகிய கிரியையின் இலக்கணம் யாது எனின், புதிய நறுமணம் உடைய மலர்கள், தூபம், தீபம், திருமஞ்சனம், (தூய நீர்) திருவமுது முதலிய பூசைக்கு வேண்டிய எல்லாவற்றையும் தேடி அமைத்துக் கொண்டு, அபபொருள்களைப் பூதசுத்தி, ஆன்மசுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி, இலிங்க சுத்தி என்று சொல்லப்பட்ட ஐவகை சுத்திகள் செய்து சிவாசன மூர்த்தி மூல மந்திரங்களினால் ஆசனம் இட்டு, அந்த ஆசனத்தில் மூர்த்தியை எழுந்தருளச் செய்து, அந்த மூர்த்தியில் மூர்த்திமான் ஆகிய சிவபெருமானைப் பாவனை செய்து வெளிப்படுத்தி நிர்மலம் ஆகிய மெய்யன்பினால் அர்ச்சனை செய்து துதித்து நமஸ்காரம் முதலிய வழிபாடு இயற்றி, நித்திய அக்கினி காரியமும் செய்து முடிப்பது ஆகும்'[107] என்பது சற்புத்திர மார்க்கத்தின் விளக்கமாகும்.

திருஞான சம்பந்தர், மகன்மை நெறியில் நின்று சிவபெருமானை வழிபட்டவர் என்பது, 'ஆளுடைய பிள்ளை' என்னும் அவரது சிறப்புப் பெயராலேயே அறியப்படுகிறது. திருஞானசம்பந்தரின் வாழ்க்கை வரலாற்றுச் செய்திகளும் அவர் சற்புத்திர மார்க்கத்தினைக் கைக் கொண்டமையை உறுதிப்படுத்துகின்றன.[108]

**'நறை மலி தருமளறொடு முகை நகு மலர் புகை மிகு வளரொளி**
**நிறைபுனல் கொடு தனை நினைவொடு நியதமும் வழிபடும்'[109]**

என்னும் ஞானசம்பந்தரின் திருமுறை அடிகள் அவர் கிரியை நெறியில் நின்றமைக்குச் சான்றாகின்றன.

**சகமார்க்கம் – யோகம்**

இந்நெறியில், இறைவனுக்கும், உயிர்களுக்கும் உள்ள உறவு முறை தோழமை நெறியாகும். யோகம் என்ற சொல்லுக்கு, ஒன்றுதல், கருத்து ஒருமிப்பு, பொருந்துதல் என்று பொருள்படும். இந்நெறி, பொறி புலன்களை அடக்கி, சுவாசத்தை நிலைப்படுத்தி

உடலின் ஆறு ஆதாரங்களை முறையாக அறிந்து, இறைவனை இடைவிடாமல் நினைத்து யோகத்தின் எட்டு படிநிலைகளையும் முழுமையாக மேற்கொள்ளுதலாகும். இந்நெறியினை சிவஞான சித்தியார் தெளிவுற விவரிக்கின்றது.[103] சுந்தரமூர்த்தி நாயனாரின் வாழ்வினை எடுத்தியம்பும் சேக்கிழார் பெருமான்,

**'பன்னாளும் பயில்யோகம் பரம்பரையின் விரும்பினார்'**[111]

என மொழிகிறார். மேலும் சுந்தரர் தனது மனைவியாக வரவிருக்கும் பெண்ணைக் கண்ட போதும் இறைவன் அருளாகவே காண்கிறார். அவர் இடையீடின்றி யோக நெறியில் இறைவனுடன் ஒன்றியிருந்ததால் சிவனருளைத் தவிர வேறு எதையும் காண முடியவில்லை என்பது பெரியபுராணம் காட்டும் உண்மையாகும்.[112] சுந்தரரின் சிறப்புப் பெயரான தம்பிரான் தோழர் என்பதே அவர் தோழமை நெறியை அறிவுறுத்தியமையை உறுதிப்படுத்துகின்றது.

**சன்மார்க்கம் : ஞானம்**

ஞான நெறியில், குருவுக்கும், சீடனுக்கும் இடையே உள்ள உறவே இறைவனுக்கும். உயிர்களுக்குமிடையே நிலவுவதாகக் கருதப்படுகிறது. இதுவே சைவம் கூறும் சன்மார்க்க நெறியாகும். முழுமையான முதிர்ந்த, பக்குவப்பட்ட அறிவே ஞானமாகும். உயிர்களின் அறியாமை அகலப் பெற்று, பேரறிவாகிய இறைவனை, இறையருள் உணர்த்த அறிவது ஞானமாகும்.

சன்மார்க்க நெறியின் பொருளை, 'ஆன்மாவைப் பாசத்தினின்றுப் பிரித்துப் பதிப்பொருளுடன் சேர்த்து கனியாத மனத்தையும் நன்றாகக் கனிவித்து, கெடாத உண்மையாகிய சொருபத்தோற்றத்துள் பொருந்தி, அசையாதபடி சமாதி கூடியிருந்தலே[113] என்று திருமந்திரம் விளக்குகிறது. 'இந்நெறி நிற்பார் இரண்டற்ற அத்துவித அனுபவம் பெறுவதாகக் கூறுவர். 'தானவனாகி, தானவனாயுறல் ஆன சன்மார்க்கம்...... குருவிடம் உபதேசம் பெற்றுத் தத்துவ விசாரத்தால் இப்பேறடைதல் என்ற நிலையில் இதனைக் குரு நெறி எனக் குறிப்பிட்டிருக்க வேண்டும்'[114] என்பது மற்றுமோர் விளக்கமாகும்.

'சன்மார்க்கமாவது, பல கலை ஞானங்கள், வேதங்கள், பல சாத்திரங்கள் புராணங்கள் உலோகாயதன் முதலாயுள்ள புறச்சமயங்களுள் உட்சமயங்கள் என்று சொல்லப்பட்ட பலவகையிற்றையும் ஆராய்ந்து அறிந்து அப்படி அறியவே பல

மார்க்கத்தில் உள்ள பொருள்கள் எல்லாம் சத்தியம் போலே தோன்றி அசத்தியமாய்ப்போம் ஆகையாலே பல சமயங்களிலும் சொல்லப்பட்ட அத்தங்களெல்லாம் கீழ்ப்படுத்தி எல்லாத்துக்கு மேலாய் இருக்கிற பரமேசுவரனுடைய இலக்கணத்தையும், பாசங்களுடைய இலக்கணத்தையும் கூறு செய்து, மேலான பரமேசுவரனைத் தரிசிப்பிக்கைக்கு நல்ல வழியான பரஞானத்தை ஆசாரியனாலே அறிந்து இவனுக்குக் காட்டுகிற ஞானமும், காணப்படுவதாயிருந்துள்ள ஞேயமும் அதனோடு காண்கிற ஞாதிருவாகிய தானும் என்கிற சங்கற்பங்களும் பொருந்தாதபடி பின்பு இந்த ஞானத்தின் வழித்தாய்த் தற்போதம் சீவியாமல் நிற்கவே. சிவனை விட்டு நீங்காமல் நிற்கிற ஞானத்தைப் பெற்று ஞானமேயாய் விடுவார்கள். அந்த ஞானத்தைப் பொருந்தினவர்கள் அந்த ஞானத்தாலே சிவனோடே கூடிச் சிவனாய் நிற்பர்கள்'[115] என்பது ஸ்ரீ நிரம்பவழகிய தேசிகர் அளித்த ஞானநெறி குறித்த கருத்துரையாகும்.

ஞான நெறியின் பெருமையை மாணிக்கவாசக சுவாமிகள் அறிவுறுத்துக்கிறார். ஞான நெறியாவது குருநெறியாகும். சிவபெருமான், தன் மீது கொண்ட எல்லையற்ற கருணையினால், திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில், ஞானகுருவாக எழுந்தருளினார். தானாக வந்து ஆட்கொண்டு, அருளுபதேசம் செய்த சிவபெருமானை, **'ஞான நாடகம் ஆடுவித்தவா'**[116] என மணிவாசகர் விளிக்கிறார். இத்தகைய ஞானத்தை, அருளனுபவத்தை நல்கிய சிவபெருமானை ஞான வடிவமாகவே காண்கிறார். பத்தி உணர்வு மேலிட வரும்,

**'மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே**
**எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே**
**அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே'**[117]

என்னும் திருவாசக அடிகள் இங்கு நினைவு கூரத் தக்கவை. எவ்வகையான அறிவும் இல்லாமல், அதுவரை சூழ்ந்திருந்த அஞ்ஞானமாகிய அறியாமையை அகற்றிய மெஞ்ஞானமே என்று சிவபெருமானைப் பணிந்து தம் மெய்யனுபவத்தின் வாயிலாக ஞான நெறியினை மணிவாசகப் பெருமான் நிறுவுகிறார்.

ஞானமே முத்திநிலைக்கான இறுதிப் படி நிலையாகும். சரியை, கிரியை, யோகம் ஆகியவற்றை முறையே செய்து முடித்தால் அவை ஞான நெறியில் உயிர்களைக் கொண்டு சேர்க்கும்.

**'....மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி'....**[118]

என்னும் செய்யுளில் ஞானம் – நன்னெறி என்று குறிக்கப்பெறுகின்றது. நன்மைகள் அனைத்திலும் மேலான நன்மை வீடுபேறாகும். அதனைத் தருவது ஞானநெறி. எனவே நன்னெறி எனப்படுகிறது.

**முத்திப்பேறு**

முத்தி நிலை என்பது, உயிர் பிறப்புக்கு மீண்டும் வராத இறுதி நிலையாகும். முத்திப் பேற்றின் இயல்பினைச் சைவசித்தாந்தம்,

**'வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது**
**வெய்யோனை ஆகாத மீன் போல – மெய்யவனிற்**
**கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியு மைம் புலனைக்**
**கண்டுடனாய் மன்னுதலைக் காண்'**[119]

என இயம்புகின்றது.

வானத்தில் விண்மீன்கள் எப்பொழுதும் உள்ளன. அவை கதிரவனின் ஒளியில் தனியாகத் தெரிவதில்லை. கதிரவனோடு இணைந்தது போலத் தோற்றமளித்தாலும் விண்மீன்கள் கதிரவனாவதில்லை. கதிரவனின் ஒளியால் ஒடுங்கிய நிலையில் காட்சிக்குப் புலப்படுவதில்லை. அது போல உயிர்கள் முக்தி நிலையில் இறைவனைப் பற்றியதால் உடனாயும், பதியை விட்டு நீங்குதலும், ஒழிதலுமின்றியும் நிலை பெற்ற போதும் இறைவனின்று வேறாகவும் விளங்குகின்றன. உலகத்தில் பதியினை உணராது, பாசத்தினைச் சார்ந்து, நிற்கும் உயிர், முத்தி நிலையில், பாசத்தைச் சாராது, பதியைச் சார்ந்து நிற்கும். உலகத்தில், பதி உயிர்களுடன் இருந்தும் உயிர்கள் அதனை உணர்வதில்லை. ஏனெனில் பாசம் பதியை உயிர்களிடமிருந்து மறைக்கிறது. எனவே உயிர்கள் பாசமே பற்றாய்க் கொண்டு இயங்குகின்றன. முத்தி நிலையில் பதியை பற்றாய்க் கொண்டு உயிர்கள் நிற்கின்றன. அந்நிலையில் பாசமும் உயிர்களுடன் இணைந்தே இருக்கின்றது. ஆனால் அதன் மறைப்பு உயிர்களிடத்து செயல்படாது ஒடுங்கும். பதியருளினால், பதி ஆற்றலினால், பாசத்தின் வலிமை நலிவடைந்து விடுகிறது. இந்நிலையே முத்தி நிலை என சைவ சித்தாந்தம் இயம்புகின்றது. எனவே முத்தி நிலையிலும், பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களும் உள்ளன என்பது சைவ சித்தாந்தக் கருத்தாகும்.

'யாதும் அறியாது இருக்கின்ற உயிர்களின் தனிநிலையையும் உலகியற் பொருட்களை எல்லாம் அறிவிக்கின்ற தளைகளின் கட்டு நிலையையும் தன் திருவருளால் நீக்கி, உயிருக்குயிராய் நிற்கும் சிவத்தைத் தன்னறிவால் அறிதலின்றித் தவிக்கும் நிலையில் இறைவனின் திருவருளால் அறிந்து, அதன் கண் அழுந்தலுற்று முன்பு விட்ட அந்தக் கரணங்களாகிய அகக் கருவிகளுடன் கூடாமலும், அவற்றின் வயப்பட்டு வாடாமலும் நிற்கும் போது, காந்தம் இரும்பைத் தன் பால் இழுத்து அதனோடு இயைந்து நிற்றல் போல, உயிரினைத் தன் பால் இழுத்து, அதனோடு இணைந்து நின்றும், தீயானது தன் கண் சேர்ந்த இரும்பை உருக்கித் தன் வண்ணம் ஆக்கி நிற்றல் போல, இறைவனும் உயிரைத் தன் வண்ணம் ஆக்கியும், நெருப்பானது விறகினுள் இருந்த எரியும் தன்மையை வெளிப்படுத்தி, விறகாம் தன்மையை அழித்துத் தானே ஆக்கி நிற்றல்போன்று, இறைவனும் உயிரினது கட்டுக்களை (தளைகளை) நீக்கித் தானே ஆக்கி நிற்றலும், தண்ணீரோடு கலந்த உப்பினைப் போல இறைவன் உயிரைத் தன்னுடன் கலப்பித்து நின்று அருள்வான். அம்முத்தி நிலையானது உயிர்களுக்குக் கரும்பு, தேன், பால் கனியமுது, கற்கண்டு, சர்க்கரை இவையனைத்தும் கலந்த கலவை போன்றதொரு பேரின்ப நிலையாகும்'[120] என முத்தி நிலையைச் சித்தாந்த நுட்பங்களுடன் அருணந்தி சிவாசாரியார் விவரித்துரைக்கிறார்.

'முதல்வனோடு குன்றிக் குறையாத, ஆனந்த நிலையை அடைந்தோர் பழத்திற் சுவையும், போது என்னும் மலரில் மணமும், அங்கி என்னும் நெருப்பிற் சூடும். வீணையில் இசையும் அவ்வப் பொருளில் பிரிப்பின்றிக் கலந்திருப்பது போல முதல்வனோடு கலந்திருப்பர் என்று நூல்கள் கூறும்'[121] என்பது முத்திநிலை குறித்து திருவதிகை மனவாசகங் கடந்தார் அளிக்கும் விளக்கமாகும்.

தளைகளால் மறைக்கப்பட்டிருந்த உயிர்களுக்குத் தளைகளின் பிணைப்பை அகற்றித் தம்மை உணர்த்துவது இறைவனின் திருவருளே. 'ஆன்மா சிவத்தைக் காணும் போது திருவருள் ஆன்மாவைச் சிவமாக்கி விடுவதால், அந்நிலையில் ஆன்மா தன்னையும்காணாது; காட்டிய அருளையும் காணாது; தானே சிவமானதால் சிவத்தை வேறாகப் பிரித்தும் காணாது..... ஆன்மா தன்னையும் தனது அறிவையும் அறியாது, சிவம் ஒன்றனையே அறிந்து நிற்றல்' சைவ சித்தாந்தம் காட்டும் முத்திநிலை[122] என்பது உமாபதி சிவாசாரியார் தரும் விளக்கமாகும். சைவ சித்தாந்தம், முத்தி நிலைகளை முறையே

**....'சன்மார்க்க முத்திகள் சாலோக்கிய**
**சாமீப்பிய சாருப்பிய சாயுச்சியம்**
**என்று சதுர் விதமாம்'...**[123]

என வகுத்துரைக்கின்றது.

சரியை, கிரியை, யோகம் ஆகிய நெறிகளில் நின்று இறைவனை வழிபடுவோர். அடைவது, சாலோக, சாமீப, சாருப முத்தி நிலைகளாகும். இம்மூன்று நிலைகளும் பத முத்தி எனப்படும். பதம் என்னும் சொல் 'பதவி' எனப் பொருள்படும். சாலோகம் என்பது சிவலோகம் எங்கும் தரடையின்றி இயங்கும் உரிமையைப் பெறுதல் ஆகும். இப்பயனைத் தருவது சரியை வழிபாடு ஆகும். கிரியை நெறியில் நின்று வழிபடுவோர், சிவலோக இன்பங்களை அனுபவிப்பதோடு சிவபெருமான் அருகிருக்கும் பேற்றினையும் பெறுவர். இஃது சாமீப நிலையாகும். யோக நெறியாளர்கள், இறைவனின் திருமேனிகளுள் ஒன்றைப் பெற்று சிவபோக அனுபவம் உடையவராய் உரிமை உடையவராய் இருப்பர். இஃது சாரூப நிலையாகும். ஞான நெறியில் நிற்பவர்கள் இறைவனின் திருவடிகளில் இரண்டறக் கலந்து, முடிவில்லாத நிலைத்த அப்பேரின்பத்தைத் துய்த்து பிறவாப் பெருநிலையை எய்துவர். இஃது உயிர்களின் இறுதிநிலை எனப்படும் சாயுச்சிய நிலையாகும். இவ்வுண்மைகளைச் சிவஞான சித்தியார்,

**... 'சரியை செய்வோர் ஈசன் உலகு இருப்பர்**
**.... கிரியையினை இயற்றுவோர்கள்**
**நின்மலன் தன் அருகிருப்பர்............**
**..... யோக முற்றும் உழந்தவர் சிவன் தன்**
**உருவத்தைப் பெறுவர்........ ஞானப்**
**பெருமை உடையோர் சிவனைப் பெறுவர் காணே'**[124]

என உறுதிபட உரைக்கிறது. சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்று நெறிகளில் நின்று பதமுத்தியடைந்தோர். மிண்டும் நிலவுலகில் பிறந்து, ஞான நெறியில் நிற்பர். அவ்வமயம் இறைவனே

**'குரு வடிவாகிக் குவலயந் தன்னில்**
**திருவடி வைத்துத் திறம் இது பொருள் என'**[125]

என்னும் விநாயகரகவல் அடிகளுக்கேற்பத் தம்திருவருளால் ஞானத் தெளிவை ஊட்டி, சாயுச்சிய நிலையை நல்குவர் என்னும் கருத்து பெறப்படுகிறது. சாலோகம், சாமீபம்

சாரூபம் ஆகிய மூன்று நிலைகளும் சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்று நெறிகளின் இடைநிலைப் பயன்களேயாகும். இவை மூன்றும் உண்மையான இறுதிப் பயனான சாயுச்சிய நிலைக்கான படிநிலைகளாகும்.

இறை, உயிர், தளை என்னும் முப்பொருள் உண்மைகளையும் அவற்றின் இயல்புகளையும் விளக்கி, உயிர்கள் தளைகளை விட்டகன்று இறைவனடி சேர்தற்குரிய வழிபாட்டு நெறிகளையும் சைவ சித்தாந்தம் அறிவுறுத்துகிறது. முத்தி நிலைகளின் விளக்கங்களையும் தெளிவாக்குகிறது.

## சித்தர் நெறி – ஒரு விளக்கம்

### சித்தர் : சொல் வழக்கு

உயிரினங்களில் மிக உயர்ந்த இடத்தை வகிக்கும் மனித இனம் காலந்தோறும் நாகரிகத்தாலும், அறிவியல் தொழில் நுட்ப முன்னேற்றத்தாலும், படிப்படியே வளர்ச்சி பெற்று வந்துள்ளது. இவை அனைத்தும் மனிதனின் புறவாழ்வை மேம்படுத்தின. மனிதனின் மன அமைதிக்கும், தன்னலமற்ற மனித நேயப் பண்பிற்கும், வாழ்வியற் பண்புகளை வளர்த்துக் கொள்வதற்கும் மேற்கூறிய வளர்ச்சி உதவி புரியவில்லை. உலக மாந்தருக்கு நன்னெறியை அறிவுறுத்தவும், மனிதப் பிறவியின் இலக்கினை உணர்த்தி, அதனை அடையும் வழியைக் காட்டவும், காலங்காலமாக ஆன்மீக அருளாளர்களும், தத்துவ அறிஞர்களும், சான்றோர்களும், கவிஞர்களும்,ஞானியரும் முனைந்து வருகின்றனர். அவர்களின் வரிசையில், ஒரு சாரார் சித்தர் எனப் போற்றப்படுகின்றனர்.

சித்தர் என்னுஞ்சொல் 'சித்' என்னும் வேர்ச்சொல்லிலிருந்து தோன்றியதாகும். சித் என்னும் சொல்லே சித்தி, சித்து, சித்தம், சித்தர் ஆகிய சொற்களுக்கு அடிச்சொல்லாக அமைகிறது. இச்சொல்லுக்கு அறிவு என்ற பொருள் பெறப்படுகிறது...[126] எனவே இதனை அடிச்சொல்லாக் கொண்டு தோன்றிய சித்தர் என்னும் சொல் அறிவர் என்று பொருள்படும்.

**'மாமுனிகள் ரிடி, சித்தர் அறிவார் காணே'** [127]

என்பது காகபுசுண்டரின் கூற்று.

'சித்தி' என்னுஞ் சொல், கைகூடுதல், அடைதல், பெறுதல் என்னும் பொருளில் ஆளப்படுகின்றது. நினைத்த காரியம் சித்தியாச்சு என்பது பேச்சு வழக்கு. நற்பேறு அல்லது விழுமிய நல்வாய்ப்பு என்ற பொருளிலும் இச்சொல் கையாளப்படுகிறது.

**'சீரிலுயரட்ட சித்தியார்க்கும்**
**சித்திக்குமே சிவன் செயலினால் பத்தி' . . . .** [128]

என்னும் கடுவெளிச் சித்தரின் பாடலில் சித்தி என்னும் சொல், கை கூடுதல், அடைதல் என்று பொருள்படுகிறது. அப்பர் அடிகளின்

**'புத்தியினால் சிலந்தியுந் தன் வாயின் நூலாற்**
**பொதுப் பந்தரது இழைத்து சருகான் மேய்ந்த**
**சித்தியினால் அரசாண்டு சிறப்புச் செய்ய . . .'** [129]

என்னும் பாடல் வரிகளில் 'சித்தி' என்னும் சொல் நற்பேறு என்ற பொருளில் எடுத்தாளப்பட்டுள்ளது.

சித்து என்னுஞ் சொல்லுக்கு, 'இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்களைச் செய்யும் ஆற்றல் பெற்ற ஆன்மீக நெறி நிற்போர் வழி என்றும், இறைவனோடு ஆன்மா இரண்டறக் கலக்கும் அனுபவ நிலை என்றும் பொருள் காணப்படுகிறது'... [130] குறுந்தொகையில், 'பூமியைத் தோண்டி உள்ளே புகுதலும், வானத்தின் கண் ஏறுதலும், குறுக்கிடும் பெரிய கடலின் மேல் காலால் நடந்து செல்லுதலுமாகிய சித்துக்கள் குறிக்கப்படுகின்றன'. . . [131] தாயுமானவர் பாடல்களில் பதினோரு வகையான செயற்கரிய செயல்கள் விளக்கப்பெற்றுள்ளன.. [132] செயற்கரிய செயல்கள் மட்டுமே சித்து நிகழ்வுகள் எனக் கொள்ளப்படமாட்டாது. சித்து என்பது இறையனுபவத்துடன் தொடர்புடைய சொல்லாகும். அவை மெய்ஞானிகள் தம் ஆன்மீக வாழ்வில் பெறும் பேறுகளாகும். 'சித்தாவது ஆத்ம சக்தியினின்றும் எழுவது. ஆத்ம சக்தியில் பல திறப் படிகளுண்டு. முழு ஆத்ம சக்தி எல்லாவிதச் சித்துக்களையும் கூட்டும். அச்சக்தியால் ஆகாததொன்றில்லை', [133] என்பது திரு.வி.க.வின் விளக்கமாகும்..

சித்தம் என்பது அந்தக் கரணங்களுன் ஒன்று. அந்தக் காரணங்களாகிய மனம், புத்தி, அகங்காரம் சித்தம் ஆகிய நான்கினுள், மனம் ஒன்றை நினைக்கும்; புத்தி அதனை நிச்சயிக்கும்; அகங்காரம் முனைப்பைத் தோற்றுவிக்கும்; மனிதர்களின் எண்ணங்களுக்கும், செயல்களுக்கும் இவையே காரணமாகின்றன. இவ்வகையான சலனங்களுக்கு, அதிர்வுகளுக்குக் காரணமாக அமைவதே சித்தமாகும். இச் சித்தத்தை வெல்லுதலே இறைமைப் பேறு பெறும் வழியாகும். இதனை மணிவாசகப் பெருமான்,

**'சித்த மலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட**
**அத்தனெனக் கருளியவா றார் பெறுவார் அச்சோவே' . . .**[134]

என்று திருவாசகத்துள் உறுதிப்படுத்துகிறார். சித்தத்தை வென்றவர்கள் சித்தர் எனப்படுவர்.

சிவபெருமானுக்குச் சித்தன் என்ற பெயருண்டு திருநறையூர்ச் சித்தீச்சுரம் என்னும் தலத்தில் கோவில் கொண்டிருக்கும் சிவபெருமானை,

**'மெய்த்து லாவு மறையோர் நறையூரில் சித்தன்'**[135]

என்று ஞானசம்பந்தப் பெருமான் போற்றுகிறார். அப்பர் அடிகளால் பாடல் பெற்ற திருவீழிமிழலை, தில்லையம்பலக்கோயில் ஆகிய சிவத்தலங்களில் உறையும் சிவபெருமான்,

**'சித்தனே திரு வீழிமிழலையுள்**
**அத்தனே '**

என்றும்,

**. . . . . . . வெண்மதி சூடியைச்**
**சித்தனை செம்பொனம்பலத் துண்ணின்ற**
**அத்தனை'...**[136]

என்றும் துதிக்கப்படுகிறார். திருப்பெருந்துறை வாழ் சிவனை இறைஞ்சுங்கால், திருவாதவூரடிகள்,

**'பரகதி கொடுத்தருள் செய்யும் சித்தனே'**[137]

எனப்பாடி அகமகிழ்கிறார்.

கிருத்துவைப் பின்பற்றுவர்கள் கிருத்துவர் என்றும் முகம்மது நபிகளைப் பின்பற்றுபவர் முகமதியர் என்றும், புத்தரைப் பின்பற்றுவோர் பௌத்தர் என்றும்,

கூறப்படுவதைப் போல சிவபெருமானாகிய சித்தனை வழிபடுவோர் சித்தர் என்று அழைக்கப்பட்டிருக்கலாம். இக்கருத்து,

**. . . . . . . .. . . . . . . அரன் கழல்**
**கருதும் சித்தனில்'**[138]

என்னும் அடிகளால் உறுதி செய்யப்படுகிறது.

சிவபெருமானை வழிபடுபவர் அனைவரையும் சித்தர் என்னும் வரையறைக்குள் ஒடுக்க இயலாது. ''கடவுளைக் காண முயல்கின்றவர்கள் பக்தர்கள் என்றால் கண்டுதெளிந்தவர்கள் சித்தர்கள்...''[139] என்று சித்தர்களைப் பக்தர்களிடமிருந்து வேறுபடுத்துகிறார். தொ.பொ.மீ அவர்கள். 'பக்தி நெறி அன்றி வேறு நெறியாளர்; கடவுளைக் கண்டு தெளிந்து இருவினை ஒப்பு நிகழுங்காறும் உடலோடு உலாவுவோர் சித்தர்.. '[140] என்பது மற்றுமொரு விளக்கம்.

''மேலை கீழை நாடுகளில் தோன்றிய எந்த ஆன்மீக நெறி நின்றவனும் சமயம், சடங்கு முதலியவற்றுக்குக் கட்டுப்படாதவனாக இருப்பானாயின், தம்முள்ளே இருக்கும் இறையை உணர்ந்தவனாக இருப்பானாயின் அன்பையும் அதன் வழி அருளையும் போற்றுபவனாக இருப்பானாயின், அவன் சித்தனாகக் கருதப்படுவான். இச்சித்து நிலை அல்லது அநுபவம் எந்த நாட்டைச் சார்ந்த சித்தனுக்கும் ஒன்றாகவே இருக்கும். இவ்வனுபவத்தில் மொழியோ, காலமோ, நாடோ குறுக்கே நிற்காது''[141] - என்று சித்தர் என்னும் சொல்லுக்கு இரா.மாணிக்கவாசகம் அவர்கள் மிகத் தெளிவான விளக்கமுரைக்கிறார்.[141]

'ஆன்மீக ஞானமும், தன்னை உணரும் மெய்யுணர்வும் சித்திக்கப் பெற்ற ஒருவரைச் சித்தர் என்று ஏற்கலாம். உலக மக்களுக்காகவும், மன்னுயிர்களுக்காகவும், உலகில் நடமாடி வரும் தெய்வக் காட்சி பெற்றவர். இறைவனால் படைக்கப்பட்ட இவ்வுலகில் இறைவனோடு ஒன்றி வாழ்பவர்கள் சித்தர்கள்...'[142] என்று விவரிக்கின்றார், த.ந. கணபதி அவர்கள். சித்தர்களுக்கு ஒரு பொதுவான முழுமையான விளக்கம் அளிக்க முடியவில்லை. ''உலகியலைத் துறந்தவர்கள்; உலகியல் நடப்புக்கு மாறானவர்கள்; சித்துக்கள் ஆடுவதில் வல்லவர்கள்; சித்தத்தை சிவன் பால் வைத்தவர்கள்; அலை பாயும் சித்தத்தை அடக்கியவர்கள்''...[143] என்பது க.நாராயணன் அவர்கள் அளிக்கும் விளக்கமாகும்.

‘‘சித்தன் என்னுஞ் சொல்லுக்கு உலகில் பல பெயர்கள் வழங்கப்படுகின்றன. அவைகளுள் சில வருமாறு. நந்தி, நாதன், அருகன், புத்தன், குமரன், தீர்த்தங்கரன், தீர்க்கதரிசி, கிறிஸ்து, நபி, குரு, ஆச்சாரியன் முதலியன. இப்பெயர் வேற்றுமையைக் கருதாது பொருள் ஒற்றுமையில் கருத்தைச் செலுத்துவது சிறப்பு’’..[144] என்பது திரு.வி.க. அவர்களின் கருத்துரையாகும். மேற்கண்ட விளக்கங்களிலிருந்து சித்தர்கள், ஆன்மீக நெறியாளர்கள் வரிசையில் தனித்தன்மை பெற்று விளங்கியமை உள்ளங்கை நெல்லிக் கனியெனப் புலப்படுகிறது.

**தமிழ் இலக்கியங்களில் ‘சித்தர்’**

தமிழ் இலக்கிய வரலாற்றில் ‘சித்தர்கள்’ பற்றிய கருத்துக்களும், செய்திகளும் காணக்கிடைக்கின்றன. மொழி என்பது காலந்தோறும் மாறுதலுக்குட்படக்கூடியது. பல நூற்றாண்டுகளில் எழுந்த இலக்கியங்களின் தொகுப்பாக விளங்கும் இலக்கிய வரலாற்றில் சித்தர்கள் பல்வேறு பெயர்களால் சுட்டப்படுகின்றனர். தமிழ் இலக்கியத் துவக்கக் காலம் முதல், இந்நூற்றாண்டு வரை சித்தர்கள் பெருமளவில் வாழ்ந்து வந்தமையை, தமிழ் இலக்கிய வரலாறு கொண்டு அறிகிறோம்.

தமிழில் நமக்குக் கிடைக்கப் பெற்றுள்ள முதல்பெரு நூலாகிய தொல்காப்பியத்திலோ அதனை அடுத்த காலகட்டத்திற்குரிய சங்க இலக்கியங்களிலோ, சித்து என்னுஞ்சொல்லோ, சித்தர் என்னுஞ் சொல்லோ குறிக்கப்படவில்லை. ஆனால்,

**மறுவில் செய்தி மூவகைக் காலமும்**
**நெறியின் ஆற்றிய அறிவன்’ ..** [145]

என்னும் தொல்காப்பிய நூற்பாவில் உள்ள ‘அறிவன்’ என்னுஞ் சொல்லிற்கு நச்சினார்க்கினியர் தரும் விளக்கம் கவனிக்கத் தக்கது. ‘‘காமம், வெகுளி , மயக்கமில்லாத ஒழுகலாற்றினன். இறப்பும் நிகழ்வும், எதிர்வும் என்னும் மூவகைக் காலத்தினும் வழங்கும் நெறியான் அமைந்த முழுதுணர்வுடையோன்.’’[146]. மேற்காணும் விளக்கம் ‘சித்தர்’ என்னுஞ் சொல்லுக்குரிய பொருளாதலை உணருங்கால் சித்தர்கள் தொல்காப்பியக்காலத்திற்கு முன்பிருந்தே வாழ்ந்துவந்துள்ளனர் என்ற செய்தி தெரிய வருகிறது. ‘சித்தர்’ என்னுஞ் சொல் வழக்கு இல்லாமல் இருந்திருக்கலாம். தொல்காப்பியக் காலத்தில் அறிவர் என்றே சித்தர்கள் அழைக்கப்பட்டிருக்கக் கூடும்.

சங்க இலக்கியத் தொகுப்பினுள், பத்துப் பாட்டு வரிசையில் உள்ள ஆற்றுப்படை நூல்களில், தலைமைச் சிறப்புடைய, திருமுருகாற்றுப்படையில், திருவாயினன் குடி என்னும் திருத்தலத்தில், வாழ்ந்து வந்த ஞானியரின் சிறப்பை நவிலும் நக்கீரனார்,

**''................. இகலொடு**
**செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும்**
**கற்றோர் அறியா அறிவினர் கற்றோர்க்குத்**
**தாம வரம்பாகிய தலைமையர் காமமொடு**
**கடுஞ்சினம் கடிந்த காட்சியர் இடும்பை**
**யாவதும் அறியா இயல்பினர்' ...**[147]

என இயம்புகின்றார். இவ்வரிகளுக்கு, ''மாற்சரியத்தையும், கோபத்தையும் விட்ட மனத்தினையுடையவர்களும், எல்லா நூல்களையும் கற்று வல்லோராலும் அறியப்படாத அறிவை உடையவர்களும், கற்றோர்க்குத் தாங்கள் எல்லையாய் இருக்கிற தலைமையானவர்களும், ஒரு பொருள் மேல் விரும்புதலும், வேறுபடுதலும் அற்ற அறிவினையுடைவர்களும்,கிலேசத்தைச் சிறிதும் அறியாத இயல்பினையுடையவர்களும், ஆகிய திருவுள்ளத்துக்குப் பொருந்த வெறுப்பற்ற அறிவினையுடைய இருடிகள்'...[148] என்று உரையாசிரியர் விளக்கமளிக்கிறார். இவ்விளக்கத்தைக் கருதுங்கால், நக்கீரனார் நவின்ற ஞானியர், சித்தர்களே எனத் தெளிவாகிறது. சங்க காலத்தில் அறிவர், ஞானியர், இருடிகள் என்னும் சொற்கள் சித்தர்களைக் குறிப்பனவாகவே வழங்கப்பட்டுள்ளமை புலனாகின்றது.

கணியன் பூங்குன்றனார் இயற்றிய புறநானூற்றுப் பாடலொன்று 'திறவோர் காட்சியின் தெளிந்தனம்'...[149] என்னும் தொடரைக் கொண்டு அமைந்துள்ளது. 'திறவோர் என்னுஞ் சொல்லுக்கு மாண்பால் மிக்கவர். திறவோர் தம் அகக் காட்சியில் உலகியல் அறிவும் உயிர் அறிவும் தெளிவுபடும். முக்கால நிகழ்வுகளையும் தம் அகத்திலே காணும் ஆற்றலுடையவர்கள் என்னும் பொருள் பெறப்படுகிறது...[150] எனவே திறவோர் என்னுஞ் சொல் சித்தர்களைக் குறித்து நிற்பது தெளிவாகிறது.

சங்கம் மருவிய காலத்தில் எழுந்த இரட்டைக் காப்பியங்களுள், சிலப்பதிகாரத்தில்,

**'அறிவன் அறவோன் அறிவு வரம்பு இகந்தோன்'**[151]
**'செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்**

என அருகக் கடவுளைப் புகழ்ந்து பாடும் வரிகளில் சித்தன் என்னுஞ் சொல் காணக்கிடைக்கிறது. ''செய்ய வேண்டுவனவற்றைச் செய்து முடித்தவன். சித்திகளையும் உண்டாக்கினவன்' என்று இச்சொல்லுக்கு அடியார்க்கு நல்லார் விளக்கமளிக்கிறார்..[152]

தமிழ் மொழிக்கு மறுமலர்ச்சிக் காலமாக பத்தி இலக்கியக் காலம் அமைந்தது. இக்கால கட்டத்தில் இயற்றப்பெற்ற சைவ சமய இலக்கியங்களான பன்னிரு திருமுறைகளில் 'சித்தர்' என்னுஞ் சொல்லாட்சி மிகுதியாகக் காணப்படுகிறது. திரு ஆலவாய் என்னும் சிவத்தலத்தில் உறையும்·சிவபெருமானை,

**'சித்தனே திருவாலவாய் மேவிய அத்தனே'...**[153]

என திருஞான சம்பந்தப் பெருமான் போற்றி வழிபடுகிறார். அப்பர் பெருமானும்,

**'சித்தராய் வந்து தன்னைத்**
**திருவடி வணங்குவார்கள்**
**முத்தனை மூர்த்தியாய முதல்வனை' . .**[154]

என்று சிவபெருமானை விளிக்கிறார். ஈண்டு சித்தத்தின் அதிர்வுகளை வென்று சிவனை சித்தத்தில் கொள்பவர்கள் சித்தர் என்னும் பொருள் பெறப்படுகிறது...[155] சித்துக்களை செய்கின்றவர்கள் சென்று சேருமிடம் சிவபெருமான் என்னும் பொருள்பட,

**'சித்தி செய்பவர் கட்கு எல்லாம்**
**சேர்விடம் . . .**[156]

என்னும் கருத்தும் நான்காம் திருமுறையில் காணக்கிடைக்கிறது. சித்தர், தேவர்கள், திருமால், நான்முகன், ஆகிய அனைவரும் தொழும் சிவபெருமான் என்னும் நாவுக்கரசரின் வாக்கில் சித்தர்கள் தேவர்களோடு ஒப்ப வைத்து போற்றப்படுவர் என்னும் விளக்கமும் தெளிவாக பெறப்படுகிறது. .[157] மணிவாசகப் பெருமான்,

**'ஆதியே யாதும் ஈறில்லாச் சித்தனே'**[158]

என்று சிவபெருமானைப் போற்றி வணங்குகின்றார். ஈண்டு 'சித்தன் என்னுஞ் சொல் 'என்றும் முடிவில்லாத ஞான வடிவினன்'' என்று பொருள் கொள்ளப்படுகிறது...[159]

பத்தாம் திருமுறையான திருமந்திரத்தில், சித்தர் என்னுஞ்சொல்லும், விளக்கமும் பல இடங்களில் தெளிவாக பெறப்படுகின்றன. 'பாசமாகிய இருளை விட்டு, சாதி மத பேதங்களற்று, யான் எனது ஆணவத்தை அகற்றி, சிவனுடன் ஒன்றாய் நிலைத்திருப்பவர். சித்தராவர்'.[160] என்று திருமூலர். முழுமையான தெளிவான விளக்கமுரைக்கிறார். தாயுமானவரின்

**'சித்தம் தெளிந்து சிவம் ஆனோர் எல்லோர்க்கும்**
**கொத்தடிமை ஆன குடி நான்''** [161]

என்னும் பராபரக் கண்ணியில், சித்தம் தெளிவு பெற்று சிவனுடன் ஒன்றியவர்கள் சித்தர்கள் என்ற கருத்து வெளிப்படுகிறது. தாயுமானவரின் கூற்று, திருமூலரின் கூற்றை வழிமொழிவதாகவே அமைந்துள்ளது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த சமரச சன்மார்க்க வழிகாட்டியான இராமலிங்க அடிகளாரும், சித்துக்கள் எல்லாம் கைவரப்பெற்று சிவ-சம்பந்தம் உடையோரே சித்தர் என்றும், அவர்களை

**'உருத்திரர் நாரணர் பிரமர் விண்ணோர் வேந்தர்**
**உறுகருடர் காந்தருவர் இயக்கர் பூதர்**
**மருத்துவர்யோகியர் சித்தர் முனிவர் மற்றை**
**வானவர்கள் முதலோர்'** . . . . . . [162]

என்று வானவர்களின் வரிசையில் வைத்து போற்றுகின்றார். வள்ளலாரின் வாய் மொழி, அப்பர் அடிகளாரின் கூற்றுக்கு அரணாக அமைகிறது. இருபதாம் நூற்றாண்டில் இணையற்ற கவிஞராய்த் திகழ்ந்த பாரதியாரும்,

**'இத்தரை மீதினிலேயிந்த நாளினில்**
**இப்பொழுதே முத்தி சேர்ந்திட நாடிச்**
**சுத்த அறிவு நிலையிற் களிப்பவர் .. .**
**பொய்யுறு மாயையைப் பொய்யெனக் கொண்டு**
**புலன்களை வெட்டிப் புறத்தில் எறிந்தே**
**ஐயுறவின்றிக் களித்திருப்பாராவர். . . .**
**மையுறு வாள்விழியாரையும் பொன்னையும்**
**மண்ணெனக் கொண்டு மயக்கற்றிருந்தாரே**
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .. . . . . .
**சித்தர்களாமென்றிங் கூதேடா சங்கம்**[163]

என்று சித்தர் என்னும் சொல்லுக்கு பொருள் விளக்கமுரைக்கிறார்.

புலன்களைக் கடந்து, உயிர்களைக் கட்டுப்படுத்தும் மாயையினை வென்று யான், எனது என்னும் ஆணவமகற்றி, தொடரும் வல்வினைகள் களைந்து, அறிவு நிலையில் நின்று, ஞான நெறியில்,யோக முறையில், இறைவனைக் கண்டுணர்ந்து தெளிந்து, முக்தியடையும் பேறு பெற்று வானோர்களின் வரிசையில் வைத்து போற்றப்படுவோரே சித்தர் என்னும் வகையினர் என்னும் விரிவான விளக்கம் தமிழ் இலக்கியங்களிலிருந்து பெறப்படுகிறது.

**சித்தர் இலக்கியம்**

மனித சமுதாயத்தின், வாழ்வியல் உண்மைகளை அடிப்படையாகக் கொண்டு அவற்றை வலியுறுத்தியும், வீடுபேறு பெறுதல் வேண்டும் என்னும் உயர்ந்த நோக்கைக் கொண்டும், செம்மையுடன் இயற்றப்பட்டு காலங்கடந்து வாழும் படைப்பே இலக்கியம் எனப்படுகிறது.

தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியம் இலக்கிய வகைகளை,

> **‘பாட்டு உரை நூலே வாய்மொழி பிசியே**
> **அங்கதம் முதுசொல்லொடு அவ்வேழ் நிலத்தும்’...**
> **...யாப்பின் வழியது....**[164]

எனக் குறிக்கிறது. இவற்றுள் நூல் என்னும் இலக்கியவகையானது ‘‘தொடக்கமும் முடிவும் பொருள் முரண் இன்றி, தொகையிலும், வகையிலும், பொருண்மை புலப்படக் காட்டி ஆழ்ந்து அகன்ற விளக்கத்தோடு பொருந்தி நுட்பமாகப் பொருளை விளக்கும்’’...[165] என்று வரையறுக்கப்படுகிறது. நூல் என்னும் இலக்கிய வடிவினுள் மொழி இலக்கணம் மட்டுமின்றி இசை இலக்கணம், நாடக இலக்கணம், தாவரவியல் இலக்கணம், மெய்ப்பொருளியல் இலக்கணம் மற்றும் அறிவியல், கலை சார்ந்த அத்தனை துறைகளுக்கான இலக்கணங்களைப் பகரும் இலக்கியங்கள் அடங்கும். சித்தர் பாடல்கள் நூல் என்னும் இலக்கியப் பிரிவைச் சார்ந்தவையே.

தமிழ் இலக்கியங்களைக் கால முறைப்படி வரிசைப்படுத்துங்கால், ஒவ்வொரு காலத்திற்கும், ஒவ்வொரு வகையான இலக்கியங்கள் இயற்றப்பட்டிருப்பது கண்கூடு. பெரும்பான்மையான இலக்கியங்கள் அவற்றிற்குரிய ஆசிரியர்களால் இயற்றப் பட்டவையாகவோ அல்லது அவரது சம காலத்தவரால் இயற்றப்பட்டதாகவோ அமைந்திருக்கும். ஆனால் சித்தர் பாடல்கள் என்று இன்று நமக்குக் கிடைக்கும் இலக்கியங்கள் அவ்வாசிரியர்களால் தான் இயற்றப்பட்டவை என்று உறுதியாகக் கூற

இயலவில்லை. ‘‘இதனைக் குரு மாணவர் வழியில் சொல்லி வந்ததே தவிர வெளிப்படுத்தும் முறை இல்லை செவி வழியாக வந்த இந்தச் சித்தர் கருத்துக்களை அண்மைக் காலத்தில் தான் உலகுக்கு உணர்த்த வேண்டும் என்ற எண்ணம் கொண்ட நல்லவர்கள் பாடல்களாகப் பாடி அச்சேற்றினர்’’. . . என்பது இரா.மாணிக்கவாசகம் அவர்களின் கருத்தாகும்.[166]

தமிழ் இலக்கிய வரலாற்றில் ஆறாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை பத்தி இலக்கியங்கள் பெருமளவில் இயற்றப்பெற்ற செய்தியைக் காண முடிகிறது. பத்தி இலக்கியம் என்பது இறையுணர்வை, இறை பத்தியை அடிப்படையான பாடுபொருளாகக் கொண்டு எழுந்தவை. சித்தர் இலக்கியம் என்பது, இறையுணர்வு, யோகம், உடற்கூறு, இரசவாதம், மந்திரம், மருத்துவம், மெய்ப்பொருளியல், அறம், வாழ்வியற் பண்புகள் ஆகியன குறித்த பாடல்களை உள்ளடக்கியது. எனினும் பெரும்பான்மையாக இறைமையைக் குறித்த பாடல்களும், வீடு பேற்றினைப் பெறுவதற்கான வழிமுறைகளும் முதலிடம் வகிக்கின்றன. இறைக்கோட்பாடு, இறைவழிபாடு, முத்திப்பேறு குறித்த சிந்தனைகள் தனித்தன்மையுடன், சமயச்சார்பற்று சித்தர் பாடல்களில் காணக்கிடைக்கின்றன. தமிழ் இலக்கிய வரலாறு இயற்றிய தமிழறிஞர்கள் அனைவரும் சித்தர் இலக்கியத்தை பத்தி இலக்கியம் என்னும் தலைப்பிலேயே இடம் பெறச் செய்தனர்.

பண்டைத் தமிழகத்தில், இலக்கண வரை முறைகளுக்குட்பட்டு, உவமை, உருவகம் ஆகிய கற்பனைகளுடன் இணைத்து, மொழியின் செய்யுள் வழக்கிலான சொற்களுடன் தமிழறிந்தவர்கள் மட்டுமே விளங்கிக் கொள்ளத் தக்க வகையில், இயற்றப்பட்ட இலக்கியங்களே பெரிதும் போற்றப்பட்டன. எளிய உவமைகளுடன் அலங்கார நடையின்றி, நாட்டுப்புறப் பாடல் வடிவில், மொழியின் பேச்சு வழக்குச் சொற்களுடன் கூடியதாக சித்தர் இலக்கியம் அமைந்தது. ஆனால் உயரிய உள்ளார்ந்த கருத்துக்கள் அவற்றுள் பொதிந்திருந்தன. தமிழ் மொழியின் பேச்சு மொழிச் சொற்கள், இலக்கியத்தில் இடம் பெறுவது அண்மைக்கால வழக்காகும். இஃது இருபதாம் நூற்றாண்டின் புதுமையாகக் கருதப்படுகிறது. ‘‘இப்புதுமையை அறிமுகம் செய்தவர்களே சித்தர்கள் தான். இதனையொட்டியே குறவஞ்சி, பள்ளு போன்ற மக்கள் இலக்கியங்கள் எழுந்தன. எனவே சித்தர் பாடல்களும் மக்கள் இலக்கியமே என்பது பொருந்தும்’’. . .[167]

இலக்கியம் என்பது காலத்தின் கண்ணாடியாகும். ஒரு கால கட்டத்தில் சமுதாயம் எவ்வாறெல்லாம் இயங்கியதோ அக்கால கட்டத்தில் எழுந்த இலக்கியங்கள் அதனை

அவ்வாறே பிரதிபலித்தன. இலக்கியத்தைக் கொண்டு அது எழுதப்பட்ட காலத்தில் மக்களின் வாழ்க்கை முறை, நடை முறைப் பழக்க வழக்கங்கள், பண்பாடு, நாகரிகம் கலைகளின் வளர்ச்சி ஆகியவற்றைத் தெளிவாகத்தெரிந்து கொள்ள இயலும். ஆனால் சித்தர் பாடல்களைக் கொண்டு அவை எழுந்த காலத்தைத் தெளிவாகக் கணிக்க இயலவில்லை. அவற்றில், வரலாற்றுக் குறிப்புகளோ, சமுதாய நிலைகளோ கலை, பண்பாட்டுக் கூறுகளோ, மக்களின் வாழ்க்கை முறை பற்றிய செய்திகளோ, அக்கால நிகழ்வுகளோ இடம் பெறவில்லை. யாப்பமைதியும், சொல்லாட்சியும் கொண்டு, சித்தர்களின் காலத்தை முடிவு செய்ய இயலவில்லை. உயர்ந்த ஆன்மீகக் கருத்துக்கள், சமுதாயத்தின் அனைத்துப் பிரிவினரையும் எளிதாகச் சென்றடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் எளிமையான சொற்களையும், எளிய நடையையும் அவர்கள் பயன்படுத்தியிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

சித்தர்களின் காலத்தை வரையறுத்துக் கூற இயலாவிடினும் அறிஞர்களின் கருத்துக்களை ஒப்பு நோக்குவது தவறன்று. 'சித்தர்களின் காலம் கி.பி.5-6 ஆம் நூற்றாண்டில் தொடங்குகிறது.'..[168] என்கிறார் திரு. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள். திரு. V.செல்வநாயகம் அவர்கள், கி.பி.6-9 ஆம் நூற்றாண்டு ஆகும்..[169] என்கிறார். திரு.க.வெள்ளை வாரணன் அவர்களின் கருத்துப்படி 'ஒன்பது முதல் பதினோரு திருமுறைகள் நம்பியாண்டார் நம்பிகளுக்குப் பின்னும் (9ம் நற்றாண்டின் இறுதி) சேக்கிழார் காலத்திற்கு முன்னும் தொகுக்கப்பட்டன...'[170] எனவே சேக்கிழார் காலம் கி.பி.12 ஆம் நூற்றாண்டாதலின், சித்தர்களின் காலம் அதற்கு முன்பே தொடங்கியிருக்க வேண்டும் என்பது தெளிவு. சித்தர்களுள் திருமூலரே மிகப் பழமையான காலகட்டத்தைச் சேர்ந்தவர். அவரது காலம், ''கீழெல்லையாக கி.பி. நான்காம் நூற்றாண்டையும், மேலெல்லையாக கி.பி. ஆறாம் நூற்றாண்டையும்'' அறிஞர்கள் கொள்கின்றனர்...[171]. எனவே சித்தர்களின் காலம் கி.பி. 4ம் நூற்றாண்டிலிருந்து இன்று வரை தொடர்கிறது எனக் கொள்வது ஏற்புடைத்தாகும்.

**சித்தர் பாடல்களில் சித்தர் – சொல் வரையறை**

சித்தர் என்னுஞ் சொல்லுக்கான விளக்கம் சித்தர் பாடல்கள் பலவற்றில் காணக் கிடைக்கின்றன. சித்தர்களில் தலைமைச் சிறப்புடைய திருமூலர், பத்தாம் திருமுறையில் இச்சொல்லை விரிவாக விளக்குகின்றார்.

**'சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்**

**சுத்தச் சிவமாவர் தோயார் மலபந்தம்' . . .**[172]

என்பது ஒரு விளக்கம். ''சித்தர் அண்டத்தில் மட்டுமன்றி உணர்விலும் சிவனைக் காண்பவர். அவன் திருவடி நினைவு அகலாதவர். சுத்தமாயை, அசுத்த மாயைகளில் தோய்ந்தாலும், தாமரை இலைத் தண்ணீர் போல் ஒட்டியும் ஒட்டாமலுமிருப்பர். குண்டலினியை வசப்படுத்தி சதாசிவத் தன்மை அடைந்தவராவர்''...[173] என்பது மற்றுமொரு விளக்கம். ''சித்தர் இங்கேயே சிவலோகத்தைக் கண்டவர்கள். நாத தத்துவத்தை மனத்தத்துவத்தாலே தியானித்துக் காணும் முறைமையுடைவர்கள். இவர்கட்கு என்றும் அழிவில்லையாதலின் நித்தர் என்றும், மலம் கெட்டொழிதலின் நிமலர் என்றும், ஒன்றிலும் பற்றாத உள்ளத்தான் நிராமயர் என்றும் அவர்கள் அடையவிருக்கும் பெருநிலை பரமுத்தியாதலின் நீள்பரர் என்றும் அவர்கள் அடையும் முத்திக்கு முதலாகிய கருவி முப்பத்தாறு தத்துவங்களாம்''...[174] என்பது பிறிதோர் விரிவாக்கம் ஆகும். சித்தர்களின் நிலையை,

**'தூங்கிக் கண்டார் சிவலோகமும் தம் உள்ளே**
**தூங்கிக் கண்டார் சிவயோகமும் தம் உள்ளே**
**தூங்கிக் கண்டார் சிவ போகமும் தம் உள்ளே''**

என்றுரைக்கும் திருமூலர் இறுதியில், **'தூங்கிக் கண்டார் நிலை சொல்வதெவ்வாறே'** என்று சித்தர்களின் நிலையை முழுமையாக விளக்க இயலாமையை ஒப்புக் கொள்கிறார். தூங்குதல் என்பது 'சிதாகாசப் பெருவெளியாகிய புருவமத்தியில் சோதியோடொன்றி ஏனையவற்றையெல்லாம் மறந்திருத்தல் எனவும், நிட்டை கூடுதல் எனவும் பொருள்படும்.'[175]

சமுதாயத்தில் பரவியிருக்கும் வெற்றுச் சாத்திரம், பொருளற்ற சடங்குகள் ஆகியவற்றை மறுத்து அவற்றைக் களைய முற்பட்டவர்களே சித்தர்கள் என்னும் பொருள்பட, **'சாத்திரத்தைச் சுட்டெரித்தாலவனே சித்தன்'...**[176] என்பது அகத்தியர் அளிக்கும் வரையறையாகும். சிவனுக்கும், சீவனுக்கும் இடையே உள்ள வேறுபாடுகளை உண்மையாக உணர்பவனே சித்தன் எனப் பொருள் கொண்டு, **'அவன் சிவன் தெரிந்த ஞானி'...**[177] என்றுரைக்கிறார் சிவவாக்கியர். சித்தர் என்பவர் யோகியர். யோகத்தின் வழியே வீடுபேறு அடைபவர் என்னும் கருத்தமைந்தது, **'யோகச் சமாதி உகந்தவர் சித்தரே'...**[178] என்னும் திருமூலரின் கூற்று. தமக்குள் உறையும் ஆற்றல் வாய்ந்த குண்டலினி சத்தியை வழிபடுவோரே சித்தர் என்னும் கருத்து, **'வாலையைப் பூசித்தவன் சித்தன்'...**[179] என்னும் கொங்கண நாயனாரின் பாடலிலும், **'ஆத்தாளைப் பூசித்தோன்**

**அவனே சித்தன்'...**[180] என்னும் கருவூரார் பாடலிலும் அமைகிறது. உலகெல்லாம் நீக்கமற நிறைந்திருக்கும் சிவனை யறிந்து சிந்தைத் தெளிவுடன் விளங்குபவர்கள் சித்தர்கள் என்னும் கருத்து,

**'சிந்தை தெளிந்திருப்பவனாரவனே சித்தன்**
**செகமெல்லாஞ் சிவமென்றே யறிந்தோன் சித்தன்' . . .**[181]

என்று வால்மீகியாரின் வாய்மொழியில் வெளிப்படுகிறது. சட்டை முனி நாயனார்,

**'எழும்பாமல் வாசனையைக் கொன்றோன் ஞானி**
**ஏகாமல் வாசனையை யடித்தோன் சித்தன்' . . . .**[182]

என்று வரையறை அளிக்கிறார். உலக வாழ்க்கையினின்று வீடு பேறு அடைவதற்கான வழியைக் காட்டி நிற்போர், சித்தரென்பது. . .[183] காரைச் சித்தரின் கூற்றாகும்.

சித்தர்களின் புறநிலையைப் பட்டினத்தார்,

**'பேய் போல் திரிந்து பிணம் போல் கிடந்து இட்ட பிச்சை எல்லாம்**
**நாய் போல் அருந்தி நரி போல் உழன்று நன் மங்கையரைத்**
**தாய் போல் கருதித் தமர் போல் அனைவருக்கும் தாழ்மை சொல்லி**
**சேய் போல் இருப்பர் கண்டீர் உண்மை ஞானம் தெளிந்தவரே . . .**[184]

என்று விளக்குகிறார். இப்பாடலின் கருத்தாவது: சித்தன் என்பவன் பேய் போல் திரிந்து (தனக்கென்று எந்த உடைமையுமின்றி) பிணம் போல் கிடந்து, (தன் சூழ்நிலைகளின் தாக்கம் எதுவுமின்றி) இட்ட பிச்சையெல்லாம் நாய் போல் அருந்தி (உணவு என்று இடப்பட்டதை, உணர்வுகள் - விருப்பு வெறுப்பின்றி உண்டு, தன் சிறுமையை உணர்ந்து) நன் மங்கையரைத் தாய் போல் கருதி, (காமத்தை வென்று பெண்களை தாயாக நினைத்து) தமர் போல் தாழ்மை சொல்லி, (பிறரைத் தம்மைப் போல் நினைத்து, அனைவருக்கும் ஆன்ம வழிகாட்டியாய் விளங்கி) சேய் போல் (எளிமையான குற்றமற்ற தன்மையுடன்) விளங்குபவரே என்பது தெளிவாகிறது.

'சித்தர்' என்னுஞ் சொல்லிற்கு உள்ளார்ந்த பல விளக்கங்கள் சித்தர் பாடல்களிலிருந்து பெறப்படுகின்றன. சித்தர்கள் சமயச் சார்பின்றி, யோக நெறியிற் நின்று, தன்னை உணர்ந்து தமக்குள் இறைவனைக் கண்டு, தெளிந்த சிந்தையுடன் விளங்கியவர்கள்.உலகப் பற்றின்றி வாழ்ந்த போதும், சமுதாயம் மேன்மை அடையத் தேவையான அறக் கருத்துக்களையும், விளக்கங்களையும் தம் இலக்கியத்தின் வாயிலாக

வெளிப்படுத்தி, மனித வாழ்வை, மானுடப் பிறவியின் குறிக்கோளை நோக்கிச் செலுத்திய ஆன்மீக நெறியாளர்களுள் சிறப்பான இடம் பெற்றிருப்பவர்கள் என்னும் கருத்து தெளிவாகப் புலனாகின்றது.

**சித்தர் - பதினெண்மர்**

சித்தர்கள் எல்லாக் காலங்களிலும் உலகெங்கிலும் வாழ்ந்து வந்தனர். வாழ்ந்தும் வருகின்றனர். எண்ணிக்கையற்ற சித்தர்கள் இருந்தமையை,

**'மேவுமென் கைலாய பரம்பரையா மாணா**
**வெகு கோடி ரிடிகளுக்கு முபதே சித்தர்**
**மேவுமென்று சித்தரிலே யனேகங் கோடி'...**[185]

என்னும் சட்டை முனியாரின் பாடல் இயம்புகிறது. பொதுவாக சித்தர்கள் பதினெண்மர் என்று குறிக்கும் மரபு காணப்படுகிறது.

**'சிவ சிவா பதினெண் பேர் பாடற்கெல்லாம்'...**[186]

என்னும் வால்மீகரின் பாடலும்

**'திட்டமதாய்ப் பாணம் வைத்துத் தேவி பூசை**
**சீர் பெற்றார் பதினெட்டுச் சித்தர் தாமே' ....**[187]

என்றுரைக்கும் கருவூரார் கருத்தும்

**'சித்தர் பதினெண்மர் செய்கையிற் றேன்றாத**
**அத்தனருளும் புசுண்டன் யான்' ...**[188]

என்னும் காகபுசுண்டரின் குறளும் சித்தர் - பதினெண்மர் என்றே விளம்புகின்றன. ஆனால் அவர்கள் யாவர் என்பது தெளிவாகத் தெரியவில்லை. இன்று நமக்குக் கிடைக்கும் சித்தர் பாடல் தொகுப்புகளில் ஏறக்குறைய முப்பதுக்கும் மேற்பட்ட பெயர்கள் காணப்படுகின்றன. இவ்வாறிருக்க பதினெண்மர் என்று குறித்ததன் நோக்கம் ஒரு வேளை சித்தர் கூட்டத்தில் இப்பதினெண்மர் சிறப்புப் பெற்றவர்களாக இருந்திருக்கக் கூடுமோ என்று எண்ணத் தோன்றுகிறது. அவ்வாறெனில் இப்பதினெண்மர் பெயர்ப் பட்டியல் சித்தர் பாடல்களின் பதிப்புகள் அனைத்திலும் ஒன்றாகவே இருக்க வேண்டும். ஆனால் அவ்வாறில்லாமல் ஒவ்வொரு பட்டியலிலும் வேறு வேறு பெயர்கள் காணப்படுகின்றன. தமிழகத்தில் கடையேழு வள்ளல்கள் என்று எழுவரை குறிப்பிட்டுக் கூறுவது மரபு. அவ்வெழுவரின் பெயர்ப்பட்டியல் ஒன்றாகவே காணப்படுகிறது.

பதினெண் சித்தர்கள் என்னும் தலைப்பில் காணப்படும் பெயர்களில், அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உள்ளது.

| | | |
|---|---|---|
| நந்தி | இடைக்காடர் | எழுகண்ணர் |
| அகத்தியர் | போகர் | அகப்பேயர் |
| மூலர் | புலிக்கையீசர் | பாம்பாட்டி |
| புண்ணாக்கீசர் | கருவூரார் | தேரையர் |
| புலத்தியர் | கொங்கணவர் | குதம்பையர் |
| பூனைக் கண்ணர் | காலாஞ்சி | சட்டநாதர். . . [189] |

என்பது அரு. ராமநாதன் பதிப்பில் காணப்படும் தொகுப்பாகும்.

| | | |
|---|---|---|
| அகத்தியர் | நந்தி | கமலமுனி |
| போகர் | கூன்கணர் | இடைக்காடர் |
| கோரக்கர் | கொங்கணர் | புண்ணாக்கீசர் |
| கைலாச நாதர் | மச்சமுனி | சுந்தரானந்தர் |
| சட்டை முனி | வாசமுனி | ரோமரிஷி |
| திருமூலர் | கூர்மமுனி | பிரமமுனி ... [190] |

என்பது மற்றுமோர் பட்டியலாகும்.

| | | |
|---|---|---|
| நந்தி | இடைக்காடர் | காலாங்கி |
| திருமூலர் | புலிக்கையீசர் | பாம்பாட்டி |
| அகத்தியர் | கொங்கணர் | தேரையர் |
| புண்ணாக்கீசர் | அழுகணி | குதம்பை |
| புலத்தியர் | கருவூரார் | சட்டை நாதர். . . [191] |

என்பது மற்றொரு தொகுப்பு.

| | | |
|---|---|---|
| அகத்தியர் | கொங்கணர் | மச்சமுனி |
| திருமூலர் | கமலமுனி | வராஹமுனி |
| போகர் | இடைக்காடர் | கூர்மமுனி |
| கோரக்கர் | சுந்தரானந்தர் | புண்ணாக்கீசர் |
| சட்டை முனி | ரோம முனி | கைலாச நாதர் |
| நந்தி | பிரம்ம முனி | கூன் கண்ணார்.. [192] |

என்பது பிறிதோர் பட்டியலாகும்.

சித்தர்கள் மருத்துவம், வானியல், இரசவாதம், யோகம், மெய்யியல் உள்ளிட்ட பல துறைகளில் பல நூல்களை இயற்றியுள்ளனர். அவர்களுடைய பெயர்களைக்

கொண்டு, அவற்றை இயற்றியவர்கள் யாரென்பதை உறுதியாக உரைக்க இயலவில்லை. எடுத்துக்காட்டாக அகத்தியர் என்னும் பெயர் அனைத்துப் பதினெண் சித்தர் பட்டியலிலும் இடம் பெறுகிறது. ஆனால் ‘சுமார் முப்பத்தேழு அகத்தியர்கள் பல்வேறு காலங்களில் இருந்ததாகக் குறிக்கப்படுகிறது’...[193] ‘மூன்றுக்கும் மேற்பட்ட அகத்தியர்கள், பல்வேறு காலங்களில் வாழ்ந்து பல்வேறு இலக்கியங்களை இயற்றியுள்ளனர்...’[194] என்பது வரலாற்றாசிரியர்களின் கூற்று. எனவே அகத்தியர் என்ற பெயரில் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் இருந்திருத்தல் கூடும் என்பது தெளிவு. இவ்வாறிருக்க அகத்தியர் என்னும் பெயரில் பதினெண்மர் பட்டியலில் இடம் பெறுபவர் யாரென்று உறுதியாகக் கூற இயலவில்லை.

சித்தர் - பதினெண்மர் பெயர்ப் பட்டியலில் காணப்படும் பெயர்கள் வேறுபட்டு இருப்பதால் பதினெண்மர் என்னுஞ் சொல், எண்ணிக்கையை மட்டும் குறித்துச் சொல்லப்பட்டதா, என்ற ஐயம் எழாமல் இல்லை.

சித்தர்கள் இறைவனைப் பதி என்று குறித்தனர். **‘பதி தனிலே தங்கிப் பலரும் கதி பெறவே...**[195] என்பது பட்டினத்துச் சித்தர் ஞானப்பாடலாகும். பதி என்னும் சொல், தலைவன் என்று பொருள் படும். சித்தர்கள், தங்கள் தலைவனாகிய இறைவனைப் பதியை, ஞான நெறியிற் நின்று எய்தியவர்கள். ஞான நெறி என்பது, மனிதனின் அறியாமையானது, இடையறாது மேற்கொள்ளப்படும் தவமுயற்சிகளாலும், யோக நிலைகளாலும், அகலப்பெற்று, பேரறிவாகிய இறைவனை இறையருள் உணர்த்த உணரப்பெறும் நெறியாகும். இந்நெறியில் பதியை எண்ணி முத்திப் பேறு பெற்றவர்கள் சித்தர்களாகும். இவர்களது முத்தி நிலை சாயுச்சிய நிலையாகும்; இறைமை எய்துதல்; இறைவனோடு கலத்தலாகும். பதியை ஞான நெறியிற் நின்று வணங்கி பதி-நிலை எய்தியவர்கள்; பதியினை இடைவிடாது எண்ணி அந்நிலையை எட்டியவர்கள். எனவே பதி-எண், பதி-எட்டு சித்தர்கள் என போற்றப்பட்டிருக்கலாம். இவ்வாறு கூறுவதும் பொருத்தமாகவே அமைகிறது.

அட்டம் என்னுஞ் சொல் எட்டு என்னும் எண்ணைக் குறிக்கும். சித்தர்கள் அட்டமா சித்துக்கள் கை வரப் பெற்றவர்கள் அவை:-

1. அணிமா : தோற்றத்தில், பெரிய பொருளை மிகச் சிறியதாக ஆக்குவது

2. மகிமா : தோற்றத்தில் மிகச்சிறிய பொருளை, மிகப் பெரிய பொருளாக ஆக்குவது

3. லகிமா : சுமையுள்ள பொருளை மிகவும் இலேசான தாக ஆக்குவது.

4. கரிமா : கனமில்லாத பொருளை மிகவும் சுமையுடைய பொருளாக ஆக்குவது

5. பிராத்தி : எவ்வுலகத்தும், எவ்விடத்தும் தடையின்றிச் சஞ்சரித்தல்

6. பிரகாமியம் : பிறர் காயத்தில் நுழைந்து நினைத்தவரிடத்து அக்கணமே தோன்றுவது.

7. ஈசத்துவம் : ஐந்தொழில்களையும் நடத்துதல்

8. வசித்துவம் : எழுவகைத் தோற்றமாகிய, தேவ மானிட நரக, மிருக, பறப்பன, ஊர்வன, மரம் முதலியவற்றைத் தம் வசப்படுத்துதல்...[196]

சித்தர்கள், மேற்கண்ட அட்டமா சித்துக்களை, யோக நெறிப் பயிற்சிகளால் கைவரப் பெற்று பதி - நிலை எய்தியவர்கள். எனவே பதி-எட்டு சித்தர்கள் என அழைக்கப்பட்டிருக்கலாம். இச்சொல் காலமாற்றங்களுக்குட்பட்டு, மருவி பதினெட்டு, என்னும் சொல்லாகியிருக்கக்கூடும்.

கணபதி என்னும் பகுபதம், கணம் + பதி எனப் பகுக்கப்படுகிறது. கணம் என்னுஞ் சொல் கூட்டம், அல்லது ஒரு தொகுப்பு, தொகுதி, என்னும் பொருளையும் பதி என்பது அக்கூட்டத்தின் தலைவன் என்பதையும் குறிக்கும். கணங்கள் பதினெட்டு ஆகும். அக்கணங்களின் தலைவர் கணநாதர் அல்லது கணபதி என்று வழங்கப் பெறுகிறார்.

**'அமரர் சித்தர் அசுரர் தைத்தியர்**
**கருடர் கின்னரர் நிருதர் கிம்புருடர்**
**காந்தருவர் இயக்கர் விஞ்சையர் பூதர்**
**பிசாசர் அந்தரர் முனவர் உரகர்**
**ஆகாயவாசியர், போக பூமியரெனப்**
**பாகுபட்டன பதினெண்கணமே. . .**[197]

கணங்களின் எண்ணிக்கை பதினெட்டு. அவற்றுள் சித்தர் கணமும் ஒன்று என்னும் கருத்து பெறப்படுகிறது.

பதினெண்சித்தர் என்னும் மரபு பொதுவாக வழக்கில் இருந்தாலும், சித்தர்கள் எண்ணிக்கையற்றவர்கள் கால-இட எல்லைகளைக் கடந்து வாழ்ந்து வந்துள்ளமையை அவர் தம் பாடல்களால் அறிய முடிகிறது. பதினெண் என்னுஞ் சொல். எண்ணிக்கையை மட்டும் உணர்த்தாது சித்தர்கள், எட்டுப்படி நிலைகளைக் கொண்ட அட்டாங்க யோக நெறியில் நின்று, அட்டமாசித்துக்கள் கைவரப் பெற்றவர்கள் என்ற உ ண்மையையும், அவை கைவரப் பெற்று பதியினை எண்ணி, பதி நிலை எய்தியவர்கள் என்னும் கருத்தையும் ஒருங்கே உணர்த்துவது நினைவிற் கொள்ள வேண்டியதொன்றாகும்.

**சித்தர் நெறி**

எளிமையான தமிழ்ச் சொற்களில், நாட்டுப்புறப்பாடல்களின் பாங்கில்,பல்வேறு யாப்பு சந்த வகைகளில் இயற்றப்பட்டு மனித நல் வாழ்விற்குத் தேவையான உயர்ந்த கருத்துக்களையும், அறிவியல் உண்மைகளையும் கொண்டு தமிழ் இலக்கிய உலகிற்குப் பெருமை சேர்த்தது சித்தர் இலக்கியம் ஆகும். அவற்றுள் வாழ்வியற் பண்புகள், சமுதாய மேம்பாட்டு வழி முறைகள், பொதுமையான இறைத் தத்துவம், மருத்துவம் ,இரசவாதம், யோகம் உள்ளிட்ட தற்கால சமுதாயத்திற்குத் தேவையான அத்தனை கருத்துக்களுடன் கூடிய முற்போக்கு சிந்தனைகளுடனான சித்தர் நெறி பொதிந்து வைக்கப்பட்டுள்ளது.

பெரும்பான்மையான சித்தர் பாடல்களில் அமைந்துள்ள சந்த நயமும், சொல்லாட்சியும் அவை பாமரர் மத்தியில் வெகுவாகப் பரிமளிக்கக் காரணமாயின உண்மையில் சித்தர் பாடல்கள் மறைபொருளை உள்ளடக்கியவை. குழுவுக்குறிச் சொற்கள் பெருமளவில் அவற்றில் பயின்று வருகின்றன. அவை சித்தர்களின் அனுபவ மொழிகள். ஆழ்ந்து பயின்றால் மட்டுமே பொருள் விளங்கக்கூடியவை. மேலெழுந்த வாரியாகப் பயிலும்போது, சாதாரணப் பாடல்களைப் போன்ற தோற்றமளிப்பதால், உள்ளார்ந்த பொருள் விளங்காமலேயே, சித்தர் பாடல்களை உலக வழக்கில் மக்கள் பெரும்பான்மையாகக் கையாள்கின்றனர்.

**‘நந்த வனத்தில் ஓர்ஆண்டி அவன்**
**நாலா று மாதமாய்க் குயவனை வேண்டி**
**கொண்டு வந்தான் ஒரு தோண்டி – மெத்தக்**
**கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி . . .** [198]

என்னும் கடுவெளிச் சித்தரின் பாடல், ஒரு இயல்பான நிகழ்வை உள்ளடக்கிய வேடிக்கைப் பாட லாகத் தோன்றிடினும், ஆழ்ந்த வாழ்க்கைத் தத்துவத்தைத் தன்னுள் கொண்டது.

உலகத்திற்கு நந்தவனமும், மனித ஆன்மாவிற்கு ஆண்டியும் இறைவனுக்குக் குயவனும் உவமைகளாகின்றன. மனித ஆன்மா இறைவனிடமிருந்து நான்காறு மாதங்களாக உருவாக்கப்பட்ட உடலைப் பெறுகிறது. உடலைப் பெற்று இப்புவியில் பிறக்கிறது. ஆண்டி, குயவனிடமிருந்து பெற்ற தோண்டியைச் சரியான காரணங்களுக்காக பயன்படுத்தியிருக்க வேண்டும். ஆன்மா இறைவனிடமிருந்து வேண்டிய பெற்ற உடலை வைத்து இறைவனை அறிதற்கும், வீடு பேறு அடைவதற்கான வழிவகைகளைக் கண்டுணர்ந்து அதன் வழி செல்வதற்கும் பயன்படுத்த வேண்டும். இந்நோக்கத்திற்காகவே மனிதப்பிறவி கொடுக்கப்படுகிறது. தோண்டி கிடைத்தவுடன், ஆண்டி அதனை வைத்து மனம் போன போக்கில் கூத்தாடியதால் அது உடைந்து விடுகிறது. இதுபோல மனிதனும் ஆணவத்தின் பிடியில் அகப்பட்டுத் தவறான பாதையில் சென்று பல கொடுமைகளைச் செய்து பிறவியை வீணாக்கி விடுகிறான். உடல் விரைவில் மறைந்து விடுகிறது. பிறவியின் நோக்கமாகிய முத்திப்பேறு அடைதல் நிறைவடையவில்லை. ஆன்மாவிற்கு மீண்டும் பிறவிகள் வந்து சேருகின்றன. தனக்கென எந்த உடைமையும் இல்லாதவன் ஆண்டி. எனவே ஆன்மா ஆண்டியாகவும், மனம் போன படி மனிதன் வாழும் வாழ்க்கைக்குக் கூத்தாடுதலும், உடல் தோண்டியாகவும் மிகப்பொருத்தமாக உருவகிக்கப்பட்டுள்ளமை உணர்ந்து இன்புறத் தக்கது. இவ்வாழ்ந்த ஆன்மீக உண்மை, எளிய பொருத்தமான உவமைகளுடன் பேச்சு வழக்குச் சொற்களில் நான்கே வரிகளில் உணர்த்தப்பட்டுள்ளமை, சித்தர் பாடல்களின் எளிமைக்கும், உள்ளார்ந்த கருத்தாழத்திற்கும் சான்றாக அமைகிறது.

**இறைக்கோட்பாடு**

சித்தர் பாடல்களில் வெளிப்பட்ட கருத்துக்களில் முதன்மையானதும், எல்லாக்காலத்திற்கும், எல்லா இன மக்களுக்கும் பொருந்தக் கூடியதுமான ஒன்று உண்டெனில் அது இறைமை பற்றிய சித்தர்களின் கருத்துக்கோவையாகும்.

இறைமை என்பது அனைத்தும் கடந்ததொரு பூரண நிலை. ஆதாரம் காட்டி நிருபிக்க முடியாத கருத்து. எந்த மொழியிலும் முழுமையாக விளக்க இயலாத மெய்யியல் கோட்பாடு. முழுமையான விளக்கமும், வரையறையும் அளிக்க இயலாத காரணத்தால்

எல்லாச் சமயங்களும், தத்தம் நிலைக்கேற்ப, காலத்திற்கேற்ப இறைமைக்கான விளக்கங்களைத் தந்தன. இவ்விளக்கங்கள் காலப்போக்கில் இறைவனுக்குப் பல பெயர்களும், உருவங்களும் ஏற்பட வழிவகை செய்தன. ஒன்றே குலம், ஒருவனே தேவன் என்று முதன்முதலில் ஓங்கி ஒலித்த குரல் சித்தர்களுடையதே.

**'' ஒன்றென்றிரு: தெய்வம் உண்டென்றிரு''**

என்று பட்டினத்தாரும்,

**'அரியுமாகி அயனுமாகி அண்டமெங்கும் ஒன்றதாய்**
**பெரியதாகி உலகு தன்னில் நின்ற பாதம் ஒன்றலோ**
**அறிவினோடு பாரும் இங்கும் அங்கும் எங்கும் ஒன்றதே'**

என்று சிவவாக்கியரும்,

**'ஒரு தெய்வீகங் கண்டோம் என்றே தும்பீபற'**[199]

என்று இடைக்காட்டுச் சித்தரும் இறைவன் ஒன்றே என்னும் கருத்தை வலியுறுத்தினர்.

இறைவனுக்குப் பெயரிட்டுப் பிரித்த செயலும், தெய்வங்கள் பல என்னும் கருத்தும் சமுதாயத்தில் ஊடுருவி, சாதி, மதப் பிரிவினைக்கு அடிகோலி, ஒற்றுமையைக் குலைத்தன, இருபதாம் நூற்றாண்டுச் சித்தரெனத் தம்மைக் கூறிக்கொள்ளும் பாரதியாரும்,

**''ஆயிரந் தெய்வங்கள் உண்டென்று தேடி**
**அலையும் அறிவிலி காள்**
**உய்வதனைத்திலும் ஒன்றாய் – எங்கும்**
**ஓர் பொருளானது தெய்வம் ''**[200]

என்றுரைத்து தெய்வங்கள் பல என்று எண்ணுவது அறிவிற்குப் பொருந்தாத தவறான எண்ணம் என சுட்டிக் காட்டுகின்றார்.

இறைவனின் எல்லைகளற்று, எங்கும் பரந்து நிறைந்துள்ள தன்மையைச் சித்தர்கள் தம் பாடல்களில் விளக்கினர்.

**'அருவாயும் உருவாயும் அந்தியாயும்**
**அந்தமாயும் ஒளியாயும் ஆகமமாயும்**
**திரு தாயும் குருவாயும் சீவனாயும்' ....**[201]

இருப்பவன் இறைவனே என்பது பாம்பாட்டிச் சித்தரின் கூற்று.

இப்பிரபஞ்சம் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவன், உலகத்தில் வாழும் உயிர்களிடத்தும் நிறைந்துள்ளான் என்னும் உண்மை பெறப்படுகிறது. உயிரினங்களில் தலைமையிடம் வகிக்கும் மனிதனிடம் இறைவன் உறைவதைச் சித்தர்கள் சுட்டிக் காட்டினர்.

**''வானில் கதிர் மதியாய் வளர்ந்து பின் ஒன்று ஆனது போல்**
**ஊன் உடலுக்குள்ளிருந்த உயிர்ப்பறியேன் பூரணமே''**

என்று பட்டினத்தாரும்,

**'.....காடு நாடு வீடு விண் கலந்து நின்ற கள்வனை**
**நாடி ஓடி உம்முள்ளே நயந்துணர்ந்து பாருமே . . .**[202]

என்று சிவவாக்கியரும் மனிதனுள் இறைவன் உறைவதை உணர்த்தினர்.

மனிதனுள் உறைகின்ற இறைவனை உள்ளத்தால் வழிபடும் அக வழிபாடு என்னும் இறைவழிபாட்டு நெறியே சித்தர்களின் வழிபாட்டு முறையாகும். இறை உணர்வின்றி ஆலயங்களுக்குச் செல்வது, இறைவன் என்று கருதப்படும் உருவ அமைப்பிற்குச் சில சடங்குகள் செய்வது, வேத மந்திரங்கள் ஓதுவது, சமயச் சின்னங்கள் அணிவது இவை அனைத்தும் ஐம்புலன்களால் மேற்கொள்ளப்படும் செயல்களேயன்றி, முழுமை பெற்ற இறை வழிபாடாகாது. இத்தகைய நிலை, புற வழிபாடு ஆகும். புற வழிபாடுகளை மனத்தூய்மை இன்றி வெறும் செயல்களாகச் செய்யும் போது அவை இறை உணர்வைத் தருவதில்லை. மனத்தில் இறை உணர்வுடன் கூடிய புற வழிபாட்டு முறைகளைச் சித்தர்கள் எதிர்க்கவில்லை. சித்தர்கள் ஆலயங்களுக்கும் சமய வழிபாட்டு நெறிகளுக்கும், கடவுள் கொள்கைக்கும் எதிரானவர்கள் அல்லர்.

**'கையொன்றுசெய்ய விழியொன்று நாடக் கருத்தொன்று எண்ணப்**
**பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழும்**
**மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க'....**[203]

மேற்கொள்ளப்படும் வெற்றுச் சடங்குகளை மட்டுமே, அவை பயனற்றவை என்றுரைத்தனர்.

குறிப்பிட்ட சில தலங்களில் மட்டுமே, இறைவன் உறைவதாக எண்ணி, புனித யாத்திரை என்ற பெயரில் பொழுதையும், பொருளையும் செலவிட்டு, அவ்விடங்களுக்குச்

செல்வதும், தேவையற்ற வெற்றுச் சடங்குகளைக் கண்மூடித்தனமாக நம்பி அவற்றை நிறைவேற்றுவதும், அதற்காக பிற உயிர்களைத் துன்புறுத்துவதும், பாவச் செயல்களுக்கு பரிகாரமாக யாகங்களையும், பூசனைகளையும் நடத்துதலுமாகிய நிகழ்வுகளைச் சித்தர்கள் வெறுத்துரைத்தனர். இவை முழுமையான இறைவழிபாடாகாது என்பது அவர்களது கருத்து.

**'சாவதான தத்துவச் சடங்கு செய்யும் ஊமைகாள்**
**தேவர் கல்லும் ஆவரோ ? ..................**
**மூவராலும் அறியொணாத முக்கணன் முதற்கொழுந்து**
**காவலாக உம்முள்ளே கலந்திருப்பன் காணுமே'...**[204]

என்னும் சிவவாக்கியரின் கருத்தாழம் மிக்க பாடல் இங்கு நினைவு கூரத்தக்கதாகும்.

சித்தர்கள் புற வழிபாட்டு முறைகளை, முழுவதுமாக ஒதுக்கவில்லை. சமய வளர்ச்சிக்கு மட்டுமே துணை நின்ற வெற்றுச் சடங்குகளையும், பொருளற்ற பூசை முறைகளையும் மட்டுமே கண்டித்தனர். இறைவன் மீது அன்பு வழித்தோன்றும் பத்தி உணர்வின் வெளிப்பாடாகவே வழிபாடு அமைய வேண்டும் என்பது அவர்களுடைய கருத்து.

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு நன்னெறிகளும் இறை வழிபாட்டிற்குரியவைகளாக இயம்பப்படுகின்றன. பல காலம் யோகப் பயிற்சிகளில் ஈடுபட்டு சித்தந் தெளிந்து நின்ற சித்தர்களுக்கு யோக நெறியும், ஞான நெறியும் இறை வழிபாட்டிற்குரியவைகளாயின.

ஞானம் என்னும் சொல்லுக்கு அறிவு, கல்வி , தெளிவு, நல்லொழுக்கம் ஆகிய விளக்கங்கள் கொடுக்கப்படுகின்றன...[205] உலகத்துப் பொருட்களைப் பற்றிய அறிவும், உயிர்களைப் பற்றிய அறிவும் கல்வி, கேள்விகளால் பெறக்கூடியவை. இவ்வறிவும் இது தரும் உலக அனுபவங்களும் மனிதனைப் பக்குவமடையச் செய்கின்றன. மனத்தினை நல்வழிப்படுத்தி, மனிதனை நல்லெண்ணங்கள், நற்செயல்கள் பால் செலுத்துகின்றன.

**'சென்ற இடத்தால் செலவிடா தீது ஒரீஇ**
**நன்றின் பால் உய்ப்பது அறிவு' ...**[206]

என்பது பொய்யா மொழி. ஐம்புலன்களின் வழியில் நுகரப்படும் இன்ப உணர்ச்சிகளின் பால் ஈடுபட்டு, மனம் அவற்றின் போக்கில் செல்லுமேயானால், கட்டுப்பாடற்று வாழ்வு சீர்குலைந்து போகும். அறிவு, மனதுடன் இணைந்து ஐம்புலன்களை கட்டுப்படுத்த

வேண்டும். இந்நிலையில் நல்லொழுக்கமும், மனத்தெளிவும், தூய்மையும் கைவரப் பெறுகிறது. இந்நிலையே முத்தி நிலையின் முக்கியப்படி என்பது,

**'மனமென்னும் மாடு அடங்கில் தாண்டவக் கோனே' முத்தி**
**வாய்த்ததென்று எண்ணேடா தாண்டவக்கோனே'...**[207]

என்னும் இடைக்காட்டுச் சித்தரின் வாக்கால் அறியப்படுகிறது. மனம் சலனங்களற்று தெளிந்த நிலையில், இறை அருள் உணர்த்த இறைவனை மனதுள் உணர முடிகிறது. இப்பேரறிவு வாய்க்கப் பெறுவதே ஞான நிலையாகும். இந்த அறிவு மனிதனை, பந்த பாசத் தொடர்புகளிலிருந்தும் அறியாமையென்னும் இருளிலிருந்தும் விடுவிக்கிறது. இந்நிலையை எய்த சித்தர்கள் யோக நெறியைக் கடைப்பிடித்தனர்.

சித்தர்களின் யோக நெறி எட்டு அங்கங்களைக் கொண்டது. அட்டாங்க யோகம் என்று அழைக்கப்பெறுவது. அவை இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி ஆகியன. இப்படி நிலைகள் எட்டும், படிப்படியே, உடல், மனம், ஆன்மா ஆகிய மூன்றின் தூய்மைக்கும் துணை செய்வன. இக்கருத்தைத் திருமூலர்,

**'அந்நெறி இந்நெறி என்னாது அட்டாங்கத்து**
**அந்நெறி சென்று சமாதியிலே நின்மின்**
**நன்னெறி செல்வார்க்கு ஞானத்தில் ஏகலாம்'...**[208]

எனக் குறிக்கிறார்.

'இயமம் (தவிர்க்கப்பட வேண்டியவை) நியமம் (கடைப்பிடிக்க வேண்டியவை) ஆசனம் அல்லது ஸ்தூலக் கிரியை (உடம்பை இருத்திக் கொள்ளும் முறைகள்) பிராணாயாமம் அல்லது சூட்சுமக்கிரியை (மூச்சுக்கட்டுப்பாடு) பிரத்தியாகாரம் (புலன் அடக்கம்) தாரணை (மனம் ஒரு நிலைப்படுதல்) தியானம் (ஆழ்ந்த ஒருமை உணர்வு) சமாதி (முற்றடங்கல்). இவற்றில் கடைசி மூன்றும் தியானம் (சம்யமம்) பற்றியவை. முன்னதாகக் குறிப்பிடப்பட்ட ஐந்தும் உடல் தொடர்பானவை'[209]

அட்டாங்க யோகத்தில் படிப்படியாக ஏழு நிலைகள் எய்தப் பெற்று, இறுதியில் சமாதி நிலை கை கூடி வர, முத்திப் பேறு கிடைக்கப்பெறும்.

**'சமாதி செய்வார்க்குத் தகும் பல யோகம்**
**சமாதிகள் வேண்டாம் இறையுடன் ஏகின்**

**சமாதி தான் இல்லை தான் அவன் ஆகில்**
**சமாதியில் எட்டெட்டுச் சித்தியும் எய்துமே'. . .**[210]

என்று திருமந்திரம் சமாதி நிலையை விளக்கி நிற்கிறது. ஆன்மாவானது சிவமேயானால் அங்கே சமாதியேயில்லை என்பது திருமூலரின் கூற்று.

சித்தர்களின் இறைமைக் கொள்கை மிக உயர்ந்தது. தனித்துவம் வாய்ந்தது. மக்கள் அனைவருக்கும் பொதுவானது இறைவன் ஒருவனே; மனித மனத்துள் இறைவன் உறைகின்றான். தன்னை உணர்ந்து சித்தம் தெளிந்திடின், புற வழிபாடுகள் தேவையற்றவை. தனக்குள் இருக்கும் இறையை உணர யோகமும், ஞானமும் சிறந்த நெறிகள் ஆகும். இவற்றின் வழி நின்று வீடுபேறு பெறுதலே மனிதப் பிறவியின் இலக்கு என, படிப்படியாகத் தங்கள் கருத்துக்களை சமுதாயத்தின் முன் வைத்தனர்.

**சமுதாயச் சீர்திருத்தம்**

சமுதாயத்தைப் பல பிரிவுகளுக்கு உட்படுத்திய சாதி என்னும் மாயையைச் சித்தர்கள் அனைவரும் ஒருமித்து எதிர்த்தனர். அதனைச் சமுதாயத்தினின்று களைய முற்பட்டனர்.

**'சாதியாவது ஏதடா, சலம் திரண்ட நீரலோ**
**பூத வாசல் ஒன்றலோ பூதம் ஐந்தும் ஒன்றலோ**
**காதில் வாளி காரை கம்பி பாடகம் பொன் ஒன்றலோ**
**சாதி பேதம் ஓதுகின்ற தன்மை என்ன தன்மையே'**[211]

என்னும் சிவவாக்கிய வரிகள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கவை. வாளி, காரை, கம்பி , பாடகம் ஆகியவை காதில் அணியப்படும். அணிகலன்கள். வெவ்வேறு வடிவ அமைப்பும், எடையும் கொண்டவை. அவை அனைத்தும் பொன்னால் ஆனவை. அவற்றின் உட்பொருள் பொன். அது போல நிறமும், தோற்றமும், உருவ அமைப்பும் வேறுபடலாம். ஆனால் மனித உடலின் உட்பொருள் ஐம்பூதங்களே. இவ்வாறிருக்க எதனை வைத்து சாதிப் பிரிவுகள் கொள்ளப்பட்டன என வினவும் சிவ வாக்கியரின் வினா கருத்திற்கொள்ளப்பட வேண்டியதொன்றாகும். கொங்கண சித்தர்,

**' சாதி பேதங்கள் சொல்லுகிறீர் – தெய்வம்**
**தானென்றொரு வுடல் பேதமுண்டோ**
**ஓதிய பாலதிலொன்றாகி யதிலே**
**உற்பத்தி நெய் தயிர் மோராச்சு**[212]

என்ற பாடலின் மூலம் பால் என்ற ஒரே பொருள் தயிர், மோர், நெய் என்று பல பொருள்களை உருவாக்குகிறது. ஆனால் இவ்வனைத்திலும் அடங்கியிருக்கும் உட்பொருள் பால் ஒன்றே. அதுபோல உருவ அமைப்பால் வேறுபட்ட மக்கள் அனைவரிடத்தும் உறையும் கடவுள் ஒன்றே என்று விளக்கி, சிவ வாக்கியரின் சிந்தனைக்கு உரமிடுகிறார்.

**''சாதிப் பிரிவினிலே தீயை மூட்டுவோம்'**

என்று பாம்பாட்டிச் சித்தரும்,

**''சாதி வகை இல்லாமல் சஞ்சரிப்பது எக்காலம்** [213]

என்று பத்திரகிரியாரும் சாதி மதப் பிரிவுகளற்ற சமுதாயத்தையே அவாவினர். இருபதாம் நூற்றாண்டின் சமுதாயச் சிற்பியான பாவேந்தரின்.

**மத - ஓடத்திலேறிய மாந்தரே - பலி**
**பீடத்திலே சாய்ந்தீரே**
**மூடத்தனத்தை முடுக்கும் மதத்தை - நிர்**
**மூலப்படுத்தக்கை ஓங்குவீர் - பலி**
**பீடத்தை விட்டினி நீங்குவீர் -** [214]

என்னும் பாடல் வரிகள் இங்கு நினைவு கூரத் தக்கவையாகும்.

சமுதாயத்தில் மக்களின் ஒற்றுமையான வாழ்வைச் சீர்குலைத்த சாதிப் பிரிவுகளுக்குப் பல அர்த்தமற்ற மூடப் பழக்கங்களும் இணைந்து உரமூட்டின. இப்பழக்க வழக்கங்கள் ஒரு சாதியை மற்றொன்றிலிருந்து வேறுபடுத்த வேண்டும் என்னும் நோக்கத்துடன் புகுத்தப்பட்டவையே தவிர, இவற்றால் எள்ளளவும் சமுதாயத்திற்கு நன்மை விளைவதில்லை. தாம் சார்ந்திருக்கும் சமயத்திற்குச் சிறப்பு செய்வதாகக் கருதிக் கண்மூடித்தனமாக மக்கள் அவற்றை நிறைவேற்றினர். மக்கள் வாழ்வில் இடம் பெற்று விட்ட மூடப் பழக்க வழக்கங்களின் போலித் தன்மையை விளக்கி, அவற்றைக் களைய முற்பட்டனர் சித்தர்கள்.

புண்ணிய நதிகளில் நீராடுவதால் செய்த பாவங்கள் ஒழியும் என்னும் மூட நம்பிக்கை சமுதாயத்தில் பரவலாக இருந்து வருகிறது. எல்லா நதிகளும் ஒன்றே. அவ்வாறிருக்க, சில குறிப்பிட்ட நதிகள் மட்டும் புனிதத் தன்மை வாய்ந்தது;

பாவங்களைப் போக்கும் தன்மையுடைத்து என்று எண்ணுவது அறிவிற்குப் பொருந்தாது. இஃது ஒரு மூட நம்பிக்கையே என சித்தர்கள் உரைத்தனர். கடுவெளிச் சித்தரின்,

**'கங்கையாடில் கதி தானுமுண்டாமோ?**

என்னும் வினாவிற்கு,

**''கூறும் உடல் பல நதியாடிக் கொண்டதால்**
**கொண்ட மலம் நீங்காதென்று ஆடு பாம்பே''** [215]

என்று பாம்பாட்டிச் சித்தர் பதிலுரைக்கிறார். ஆன்மீகத்தின் பெயரில் கண்மூடித்தனமாக போலிப் பழக்க வழக்கங்கள் உருவாவதைக் கண்டித்த சித்தர்களுள் சிவ வாக்கியர் தலைமையிடம் வகிக்கிறார்.

**'ஊரிலுள்ள மனிதர் காள் ஒரு மனதாய்க் கூடியே**
**தேரிலே வடத்தைவிட்டு செம்பை வைத்து இழுக்கிறீர்**
**ஆரினாலும் அறியொணாத ஆதிசித்த நாதரை**
**பேதையான மனிதர் பண்ணும் பிரளி பாரும் பாருமே** [216]

என்ற பாடலில் அறிவதற்கரிய ஆண்டவனை ஒரு உருவ அமைப்பில் வடித்து ஊர் மக்கள் கூடித் தேரில் வைத்து இழுத்து வெடி முழக்கங்களுடன் நகர் வலம் வந்து விழா எடுப்பது, மூட நம்பிக்கையின் வெளிப்பாடேயன்றி வேறில்லை என்னும் கருத்து வெளிப்படுகிறது.

மெய் ஞானிகளைப் போலவே தோற்றம் கொண்ட தன்னலக்காரர்களின் ஆதிக்கத்தையும் அவர்களுடைய செயல்களையும் சித்தர்கள் வெளிப்படுத்தினர். சமுதாய ஒற்றுமையைக் குலைத்த வேடதாரிகளின் இயல்பினைக் கண்டு வெகுண்டெழுந்து,

**'ஆசை கொண்டு அனுதினமும் அன்னியர் பொருளினை**
**மோசம் செய்து அபகரிக்க முற்றிலும் அலைபவர்**
**பூசையோடு நேம நிட்டை பூரிக்கச் செய் பாதகர்**
**காசினியில் ஏழு நரகைக் காத்திருப்பது உண்மையே'** [217]

என்று வேடதாரிகளுக்கு சாபமிடுவது போல் அவர்களுடைய நோக்கையும் போக்கையும் சிவவாக்கியர் தெளிவுபடுத்துகிறார். சிவவாக்கியரின் கருத்திற்கு,

**'பூரண நிற்கும் நிலையறியான் வெகு**
**பொய் சொல்வான் கோடி மந்திரஞ் சொல்வான்**
**காரண குரு அவனுமல்ல விவன்**
**காரிய குரு பொருள் பறிப்பான்'** [218]

என்று கொங்கண நாயனாரும் உடன்படுகின்றார். வேடதாரிகள் ஒடுக்கப்பட்டாலே மூட நம்பிக்கைகளும், வெற்றுச் சாத்திரச் சடங்குகளும் பெருமளவில் குறைந்துவிடும் என்று தன்னலவாதிகளின் இயல்புகளை மக்களுக்கு உணர்த்தி சித்தர்கள் மக்களின் அறியாமையைக் களைய முற்பட்டனர்.

தமிழ்ச் சமுதாயம் தோன்றிய காலம் முதல் சமுதாயத்தில் பெண்களுக்குச் சம உரிமை வழங்கப்பட்டு வந்தது. தொழில்கள் செய்ததோடு மட்டுமின்றி கல்வி கேள்விகளிலும், அரசியலிலும், கலைகளிலும் பெண்கள் மேம்பட்டு விளங்கினர். சங்க காலத்தில் வாழ்ந்த ஔவையார், காக்கைபாடினியார், வெள்ளி வீதியார், நற்செள்ளையார் உள்ளிட்ட இருபதுக்கும் மேற்பட்ட பெண்பாற் புலவர்களின் பாடல்களை, சங்க இலக்கியங்களில் காண முடிகிறது. காப்பிய காலத்தில் எழுந்த சிலப்பதிகாரம், உரை சால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தும் நிலையை நிறுவியது. இளங்கோவடிகள் பத்தினிப்பெண்டிரை வழிபடும் நிலைக்கு உயர்த்தினார். சாத்தானரும் தம் காவிய நாயகியின் பெயரையே, காப்பியத்தின் பெயராக அமைத்தார்.

வெளி நாடுகளிலிருந்து தமிழகம் வந்து பரவிய சமண மதமும் , புத்த மதமும் பெண்மைக்குச் சிறப்போ பெருமையோ அளிக்கவில்லை. ‘பெண்பிறவி தாழ்ந்த பிறவி பாவம் செய்தோரே பெண்ணாய்ப் பிறப்பர் என்பது சமண சமயக் கொள்கைகளில் ஒன்று.’[219] இக்கருத்திற்கு அரண் செய்வது போல் ‘பெண்ணின் பிறவியும் பீடுடைத்தன்றே’ என்று சூளாமணி உரைக்கிறது. ‘அன்புடைக் கணவர் அழிதக்க செயினும் பெண்ணாய்ப் பிறந்தோர்க்குப் பொறையே பெருமை’ என்றுரைத்த பெருங்கதை தன்முன்னோர் மொழி மட்டுமன்றி அவர் தம் கருத்துக்களையும் வழி மொழிந்தது. சமுதாயத்தில் சமநிலை என்ற நிலை மாறி பெண்களின் நிலை தாழ்வுற்றது. பெண்மையை இழித்துப்பேசும் இழிநிலையைச் சித்தர்கள் ஆதரிக்கவில்லை.

**‘மண்ணுமில்லாமலே விண்ணுமில்லை கொஞ்சம்**
**வாசமில்லாமலே பூவுமில்லை**
**பெண்ணுமில்லாமலே யானுமில்லை - யிது**
**பேணிப் பாரடி ஞானப்பெண்ணே’** [220]

என்று பெண்களின் சம நிலையை நிலை நாட்ட முயன்றார் கொங்கணச் சித்தர். தாயாக. உடன்பிறந்தாளாக, மனைவியாக ஒரு ஆணின் அனைத்து வளர்ச்சி நிலைகளிலும் பெண்ணின் துணை அவசியமாகிறது.

**'மாதாவாய் வந்தே அமுதந் தந்தாள் - மனை**
**யாட்டியாய் வந்து சுகங்கொடுத்தாள்**
**ஆதரவாகிய தங்கையானாள் - நமக்**
**காசைக் கொழுந்தியு மாமியானாள்'** [221]

என்றுரைத்த கொங்கண நாயனார், பெண்மையைச் சத்தியாக, வாலையாக எண்ணி வழிபடுகிறார்.

**'மாதர் தோள் சேராத தேவர் மாநிலத்தில் இல்லையே**
**மாதர் தோள் புணர்ந்த போது மனிதர் வாழ்வு சிறக்குமே**
**மாதராகுஞ் சத்தி' ....** [222]

என்று சிவ வாக்கியர் கொங்கண நாயனாரின் கருத்துக்கு அரண் செய்கின்றார். ஊருஞ் சதமல்ல, உற்றார் சதமல்ல, என்றுரைத்து உலகப்பற்றினைத் துறந்த பட்டினத்தார் தாய்ப்பாசத்தினை மட்டும் துறக்க இயலாமல் வருந்துகிறார்.

**'ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்து பெற்றுப்**
**பையலென்ற போதே பரிந்தெடுத்துச் செய்ய இரு**
**கைப்புறத்தில் ஏந்திக் கனக முலை தந்தாளை**
**எப்பிறப்பில் காண்பேன் இனி'** [223].

என வரும் அவரது பாடல் பெண்மையின் பூரணத்துவத்தை விளக்கி நிற்பது கண்டுணரத் தக்கது.

சமுதாயத்தில் இருந்த சாதி, மதப் பிரிவுகளைக் கடிந்துரைத்து, மூடப் பழக்கங்களையும் மூட நம்பிக்கைகளையும் இடித்துரைத்து, வேடதாரிகளின் பொய் வேடங்களை, மக்களுக்கு இனங்காட்டி, தாழ்வுற்றிருந்த பெண்மைக்குத் தம் பாடல்களால் சிறப்பு செய்து, மொத்தத்தில் சித்தர்கள் சமுதாய சீர்திருத்த வாதிகளாகவே விளங்கினர் என்பதற்கு மாற்றுக் கருத்தொன்றில்லை.

**வாழ்வியல் சிந்தனைகள்**

மக்கட் சமுதாயத்தின் அடிப்படை அலகு தனி மனிதனாகும். மனிதர்கள் பலர் ஒன்று கூடி உருவாகும் சமுதாயம், மேன்மையுற்று விளங்க வேண்டுமெனில், மனித வாழ்வு நன்னெறிகளுடன் அமைதல் வேண்டும். நல்ல எண்ணங்களும், நற்பண்புகளுமே நற்செயல்களுக்குக் காரணமாய் அமைகின்றன. உயர்ந்த நற்பண்புகளுடன் கூடிய உலகியல் வாழ்வு, முத்திப்பேறு பெற அடித்தளமாய்

அமைகிறது. சித்தர்கள் தனி மனித வாழ்வு மேம்பட, அன்பு ஈகை, வாய்மை, ஒழுக்கம் உள்ளிட்ட வாழ்வியற் பண்புகளைத் தம் பாடல்களில் அறிவுறுத்தினர்.

வாழ்வியல் நன்னெறிகளுள் அடிப்படைப் பண்பாக விளங்குவது அன்பு என்னும் பண்பாகும். இப்பண்பு கருணை, பரிவு, இரக்கம் ஆகிய பண்புகளின் பிறப்பிடமாய்த் திகழ்கிறது. உலகில் உள்ள அனைத்துச் சமயங்களும், பிற உயிர்களிடத்தே அன்பு செலுத்த வேண்டும் என்னும் கருத்தை ஒருங்கே வலியுறுத்தின. உன்னைப் போல் உன் பிறனையும் நேசி என்பது விவிலியம் தரும் அருள்வாக்கு. அன்பின் சிறப்பை,

**'எள்ளளவும் அன்பகத்தில் இல்லாதார் முத்தி**
**எய்துவது தொல்லுலகில் இல்லை'...** [224]

என்றுரைத்த பாம்பாட்டிச் சித்தர், வீடு பேற்றிற்குத் தேவையான அடிப்படைப் பண்பு அன்பு என்றுணர்த்துகிறார்.

அன்பு என்னும் பண்பினை ஒரு அரிய சத்தியாகவே போதிக்கிறார் கடுவெளிச் சித்தர்.

**'அன்பெனும் நன் மலர் தூவிப் - பர**
**மானந்தத் தேவின் அடியினை மேவி . . .'** [225]

என்னும் அவரது பாடல், அன்பினால், இறைவனின் திருவடிகளை அடையலாம் என்னும் உண்மையை வெளிப்படுத்துகிறது. இதற்கெல்லாம் ஒரு படி மேற் சென்று திருமூலர்.

**'அன்பினுள்ளாகி அமரும் அரும் பொருள்**
**அன்பினுள்ளார்க்கே அணை துணையாமே' . . .** [226]

என்று அன்புள்ளம் கொண்டவர்களுக்கே இறைவன் துணையாகிறான் என்றுரைக்கிறார். மனிதர்களிடத்தில் மட்டுமின்றி விலங்குகள், தாவரங்கள் உள்ளிட்ட எல்லா உயிர்களிடத்தும், அன்பு செய்ய வேண்டும் என்று வழிகாட்டிய அண்மைக் காலத்துச் சித்தரான வடலூர் வள்ளல் பிரானின், வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன் என்னும் கருணை மொழிகள் கருத்திற் கொள்ள வேண்டியவையாகும்.

அன்பு குடி கொண்ட உள்ளத்தினின்று பிறக்கும், கருணை, பரிவு, இரக்கம் ஆகிய உணர்வுகள் ஈகை என்னும் உயர்ந்ததோர் பண்பிற்கான படிகளாகும். தமிழர்களின் வாழ்வியற் பண்புகளில் தலையானது ஈகை. பலனை எதிர்பாராமல், உரிய நேரத்தில், பிறருக்கு வேண்டுவனவற்றைத் தருவது ஈகையாகும். ஈகைப் பண்பு தழைக்க

வேண்டுமாயின், மனிதன் உலக நிலையாமையையும், வாழ்வு நிலையாமையையும் உணர வேண்டும்.

**'அன்னம் பகிர்ந்து இங்கு அலைந்தோர்க்கு உதவி செய்யும்**
**சென்மம் எடுத்தும் சிவன் அருளைப் போற்றாமல்**
**பொன்னும் மனையும் எழில் பூவையரும் வாழ்வும் இவை**
**இன்னும் சதமாக எண்ணினையே நெஞ்சமே'**[227]

என்னும் பட்டினத்தாரின் பாடல் இங்கு நினைவுகூரத் தக்கதாகும்.

மனிதன் நன்னெறிகளில் ஒழுகி வாழும் நல்வாழ்விற்கு நல்லொழுக்கம் இன்றியமையாததொரு பன்பாகும். பொய், களவு, கொலை ஆகியன, மனசாட்சியை ஒடுக்கி மனிதனை அழிவுப் பாதையில் செலுத்துவன. நல்லொழுக்கம் இன்றி வாழும் மனிதர்கள் தாம் அழிவதுடன், சமுதாயத்திற்கும் கேடு விளைவிப்பர். இக்கருத்து

**'சொல்லறாஞ் சூது பொய் மோகம் - செய்தாற்**
**சுற்றத்தை முற்றாய்த் துடைத்திடும் நாசம்'. . .**[228]

என்னும் கடுவெளிச் சித்தரின் பாடலில் காணக்கிடைக்கிறது.

**'மோட்சமது பெறுதற்குச் சூட்சஞ் சொன்னேன்**
**மோகமுடன் பொய் களவு கொலை செய்யாதே' ...**[229]

என்னும் அகத்தியர் ஞானப் பாடல் நல்லொழுக்கம் இன்றி, வீடுபேறு கிட்டாது என்ற உண்மையை வெளிப்படுத்துகிறது.

நல்வாழ்க்கை என்பது நற்பண்புகளைாலும் நற்பழக்க வழக்கங்களாலும் ஆனது. பழக்க வழக்கங்கள் மனிதன் பிறக்கும் போது உடன் பிறப்பதில்லை. வளர்ச்சி நிலைகளில் பிறரிடமிருந்து கண்டும், கேட்டும், அறிந்தும், உணர்ந்தும் பின்பற்றப்படுபவையே. இவற்றை மனிதன் தன் நல்வாழ்வைக் கருத்திற் கொண்டு எந்த வயதிலும் மாற்றி அமைத்துக் கொள்ளும் மனவலிமை உடையவராய் விளங்குதல் வேண்டும். மனிதன் பழக்க வழக்கங்களை ஆளுமை செய்ய வேண்டுமே தவிர, அவை மனிதனை அடிமையாக்கல் கூடாது. தேவையற்ற பழக்கங்கள் நாளடைவில் மனிதனை அவற்றின் பிடியிலிருந்து மீள விடாமல், மூழ்கச் செய்யும்.

புகை பிடித்தல், சூதாடுதல், கள்ளுண்ணல், மதி மயக்கத் தரும் பொருட்களைப் பயன்படுத்துதல் உள்ளிட்ட பழக்கங்கள் பழகும்போது தற்காலிகமாக இன்பம் தருவது

போலத் தோன்றிடினும், தொடர்ந்து பழகுங்கால் நாளடைவில் காலத்தை வீணடித்து, கடமைகளை மறக்கச் செய்து, மனசாட்சியை மழுங்க வைத்து, ஒரு பயனுமின்றி அறிவை செயலிழக்கச் செய்து விடும். இவை உடலுக்குத் தீங்கு விளைவிப்பது மட்டுமின்றி, சமுதாயத்தில் மதிப்பையும் இழக்கச் செய்யும். சித்தர்கள் தேவையற்ற பழக்கங்களிலிருந்து மீண்டு வருமாறு மக்களுக்கு அறிவுறுத்தினர்.

**'கஞ்சாப் புகை பிடியாதே - வெறி**
**காட்டி மயங்கியே கட்குடியாதே'**

என்னும் கடுவெளிச் சித்தரின் அறிவுரையும்

**'கள்ளுண்டு தள்ளுண்டு நில்லாதே - பின்பு**
**கஞ்சா உறக்க முங் கொள்ளாதே' . . .** [230]

என்னும் மதுரைச் சித்தரின் மொழிகளும் தனி மனித வாழ்வின் மேனிலை குறித்து எழுந்தவை.

மனித வாழ்வியல் குறித்து பல அறிவுரைகளையும் அறவுரைகளையும் அளித்த சித்தர்கள். மனித உடற் கூறு பற்றியும் ஆராய்ந்துள்ளனர். அவர்கள் ஆராய்ந்து கண்டு பிடித்த உண்மைகளின் தொகுப்பு சித்த மருத்துவம் என்று வழங்கப்படலாயிற்று. ஆன்ம விடுலையே சித்தர்களின் இலக்காக இருந்த போதிலும், உடலும் உயிருமாய் விளங்கும் இறைவனை அறிந்து கொள்ள. உயிர் நெடுங்காலம் நிலைபெற்றிருக்க, உடலை நல்ல முறையில் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். உயிர் இயக்கத்திற்கு உடல் அவசியமானதாலும், யோக பயிற்சிகளுக்கு உடல் இன்றியமையாததாலும் உடல் நலம் காக்கப்பட வேண்டும் என்று அறிவுறுத்தினர்.

**'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்**
**திடம் பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்**
**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே**
**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே '...** [231]

என்பது திருமந்திர மொழியாகும்.

மண், நீர், தீ, காற்று, வெளி ஆகிய பஞ்ச பூதங்களும் ஒன்றுடன் ஒன்று மாறுபட்டுக் கலப்பதே பிறப்பிற்கு , உடல் தோற்றத்திற்குக் காரணமாகிறது.

**'பரமாய சக்தியுள் பஞ்சமா பூதம்**

**தரமாறில் தோன்றும் பிறப்பு' .. .** [232]

என்றுரைக்கிறது ஔவைக் குறள். இவ்வாறு இயற்கையுடன் தோன்றி, இயற்கையோடு இயைந்து வாழ்வு நடத்தும், மனிதனின் உடற்கூற்றில் மாறுபாடு ஏதும் எற்படுவதில்லை. இயற்கை விதிகளுடன் மனிதன் முரண்படும் போதும், அவற்றைத் தன் இச்சைக்காக மீறும் போதும் உடலில் குறைபாடு ஏற்படுகிறது. இக்குறைபாடு நாளடைவில் நோயாக வெளிப்படுகிறது. இயற்கைக் கூறுகளுடன் கூடிய உடலின் குறைபாடுகளை அகற்ற, சித்தர்கள் இயற்கைப் பொருட்களையே பயன்படுத்தினர்.

நாகரிகமும், வாழ்க்கை முறைகளும் சுற்றுச் சூழலும் பெருமளவில் மாறுபடும் தற்காலத்திலும், பெருகி வரும் பல பிணிகளுக்கான தீர்வுகள் சித்த மருத்துவத்தில் இருப்பதாக செய்திகள் மூலம் அறிகிறோம். இந்தியாவில் அதிகாரப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளப்பட்ட மருத்துவ முறைகளுள் சித்த மருத்துவமும் ஒன்று.

'மருந்து என்பது உடலில் உள்ள பிணியினை நீக்க வேண்டும். உடல் நலமும் மன நலமும் ஒன்றுக் கொன்று தொடர்புடையன எனவே மன நோயையும் அது தீர்க்க வல்லதாய் அமைதல் வேண்டும். எதிர் விளைவுகளை ஏற்படுத்தாது, இனி பிணிகள் வராது தடுக்கும் ஆற்றலைப் பெற்றிருத்தல் வேண்டும். உடலில் என்றும் இளமை நலத்தைத் தந்து, அழிவற்ற வாழ்வை அளிக்க வல்லதாய் இருத்தல் வேண்டும்...'[233] என்பது மருந்து குறித்த சித்தர்களின் கருத்துருவாக்கம் (concept) ஆகும்.

**'நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும்**
**வாய் நாடி வாய்ப்பச் செயல்' . .** [234]

என்னும் வள்ளுவரின் பொய்யாமொழியும், சித்தர்களின் கருத்துருவாக்கமும் ஒத்து அமைந்திருப்பது அறிதற்குரியது.

சித்தர்களின் யோக நெறியில் மனித உடல் உறுப்புகளுக்குச் சிறந்த வகையில் பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன. இப்பயிற்சிகள் உடலுறுப்புக்களைப் பாதுகாப்பதோடு அமைந்து விடாமல் பழுதாகாமல் தடுக்கும் ஆற்றலையும் கொண்டவையாகும். இத்துடன் மட்டுமின்றி, மன அழுத்தம் மனச் சோர்வு, மனச்சிதைவு உள்ளிட்ட மன நோய்கள் அணுகாமல் பாதுகாக்கும் திறன் வாய்ந்தவை...[235] மருத்துவம் மட்டுமின்றி உலோகங்களை ஒன்றிணைத்தும், அவற்றுடன் மூலகங்களைக் கூட்டுவித்தும் செய்யப்படும் இரசவாதம், சோதிடம், வானியல், காலக் கணக்கீடு செய்தல், உள்ளிட்ட

பல அறிவியல் சார்ந்த துறைகளில் சித்தர்கள் வல்லவர்களாகத் திகழ்கின்றனர். நூற்றாண்டுகள் பல கடந்த நிலையிலும், சமுதாயம் பல்வேறு மாறுதல்களுக்குட்பட்டு இருக்கின்ற போதும், சித்தர்கள் கண்டுபிடித்து உரைத்த அறிவியல், ஆன்மீக உண்மைகளில் மாற்றமில்லை என்பதை எவரும் மறுக்கவியலாது. ''பண்டைத் தமிழகத்து விஞ்ஞானிகள் மனித குலத்தின் வாழ்வுக்காகவே உழைத்தார்கள். ஆதலால் அவர்கள் மக்களையோ, உலகத்தையோ இயற்கைப் பொருட்களையோ நாசமாக்கக்கூடிய தீய சக்திகளைக் கண்டுபிடிக்கவில்லை. இவற்றைக் கண்டுபிடிப்பதில் தங்கள் அறிவையும், காலத்தையும் செலவிட்டு வீணாக்கவில்லை. மனித சமுகம், மகிழ்ச்சியுடன் வாழ்வதற்கான துறையிலேயே அவர்கள் உழைத்தார்கள். காலங்கடத்தினார்கள் ; கருத்தைச் செலுத்தினார்கள். அவர்கள் தாங்கள் உழைத்த, முயன்ற துறையில் வெற்றியும் கண்டனர். இத்தகைய விஞ்ஞானிகள் யார்? தியாகிகள் யார்? அவர்கள் தாம் நம் நாட்டிலே வாழ்ந்த சித்தர்கள்''. . .[236] என்னும் திரு.சாமி. சிதம்பரனாரின் கூற்று இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

சமயம் என்பது மனிதன் தன்னை உணர்ந்து கொள்வதற்கும், மேனிலைப்படுத்திக் கொள்வதற்கும், உலக வாழ்வியல் முறைகளை நெறிப்படுத்திக் கொள்வதற்கும், உறு துணையாய் அமையும் அமைப்பாகும். சமயம் சார்ந்தும், சமயச் சார்பற்ற நிலையிலும் வாழ்ந்த ஆன்மீக நெறியாளர்கள் அனைவரும், மனிதனின் முறையான நல்வாழ்விற்கும், வீடுபேறு அடைவதற்குரியதுமான வழிகளை வகுத்துத் தந்துள்ளனர். பிறப்பின் காரணங்களை விளக்கி அதனின்று விடுபடுவதற்குரிய வழிகளையும் வகுத்துத் தந்துள்ளனர். தெய்வப்புலவரின்,

**'பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பு என்னும்**
**செம்பொருள் காண்பது அறிவு' . . .**[237]

என்னும் பொய்யா மொழிக்கேற்ப, பிறவித் தொடரிலிருந்து விடுபடவும், குற்றமற்ற சிறப்புடையதும், செம்மையானமான மெய்ப்பொருளைச் சென்று சேர்தற்குரிய வழிவகைகளையும் சைவ சித்தாந்தமும், சித்தர் நெறியும் அறிவுறுத்துகின்றன, என்பது தெளிவு.

## குறிப்புகள்

1. தொல்காப்பியர்–தொல்காப்பியம் – பொருளதிகாரம்: மரபியல் – நூற்பா எண்:1589.

2. கணேசலிங்கம். க – சைவத்தை அறியுங்கள் (சென்னை – உலக சைவப் பேரவை – 1998) ப.எண்.10.

3. 'The Word Hindu' was applied to the people of India by the Persians and Greeks, the term having its origin in the name of the 'Sindu' or 'Indus River'. Yogi Ramachandraka – 'The Philosophies and Religions of India [Bombay – Wilco Publishing House – 1980] Page No.144.

4. சுப்பிரமணிய பிள்ளை.கா – தமிழ் நாட்டு இந்து சமயங்களின் வரலாறு (மதுரை – தமிழர் சமயப் பாதுகாப்புக் கழகம் – 1984) ப:2.

5. சுப்புரெட்டியார். ந – அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம் (சென்னை – பழனியப்பா பிரதர்ஸ் – 2001) ப:64.

6. சுப்பிரமணிய பிள்ளை. கா –தமிழ் நாட்டு இந்து சமயங்களின் வரலாறு – மு.நூல் ப:2, 3.

   மேலும் காண்க: HINDU dated 23.11.1947. (Origin of the world Hindu) 'Gandhiji then referred to a question...' what is Hindu? What is the origin of the word? He said that the word Hindu did not occur in the vedas. But when Alexander the great invaded india, the inhabitans of the country to the east of Sindu, which is known to English speaking Indians as Indus were described as Hindus the letter 'S' had become 'h' in Greek, The religions of these inhabitants become Hinduism'....

   மேலும் காண்க: INDIAN EXPRESS dated 11.1.960. MrH.V.Pataskar – Governor of Madya Pradesh said here today that Hinduism was not a Religion, but a culture or a synthesis of all faith, which originated in India... He said that the word Hindoo itself came into existance in about the 12th centure A.D.... There was never and there had never been a religion known as Hinduism in the sense of its being a single form of faith or worship. Hinduism as it came to be understood later and and was understood commonly even now included all forms of worship and faiths, in India, except the two faiths of islam and Christianity which originated outside India.

மேலும் காண்க: ‘கி.வா.ஜகன்னாதன் – உள்ளங்கவர் கள்வன் ‘இந்து மதம் என்று இக்காலத்தில் வழங்கும் பெயர் பல சமயங்களுக்கும் பொதுவானது. அப்படி ஒரு தனிச்சமயம் இல்லை. ஆனாலும் சைவம், வைணவம் முதலிய சமயங்கள் பலவற்றிற்குப் பொதுவாக அந்தப் பெயர் அயல் நாட்டவரால் வழங்கப்பெற்று. நாளடைவில் நாமும் வழங்கும்படியாயிற்று.....

மேலும் காண்க: ‘இப்போது ஹிந்து மதம் என்று ஒன்றைச் சொல்கிறோமே இதற்கு இந்தப் பெயர் கிடையாது. ஹிந்து என்றால் ஹிம்சையை தூஷிப்பவன் என்று சிலர் சொல்வதேயாகும். நம்முடைய பழைய சாஸ்திரம் யாதிலும் ஹிந்து மதம் என்கிற வார்த்தையே கிடையாது ஹிந்துக்கள் என்பது அந்நிய நாட்டினர் நமக்கு வைத்த பெயர் தான்... ஸ்ரீ காமகோடி பீடாதிபதியவர்கள் – தெய்வத்தின் குரல் – ஐந்தாம் பதிப்பு . ப: 125.

7. தமிழ் – தமிழ் – அகராதி –(சென்னை வர்த்தமானன் பதிப்பகம்-2006) ப.785.

8. மாணிக்கவாசக சுவாமிகள் - திருவாசகம் (சென்னை – சைவ சித்தாந்தப் பெரு மன்றம் – 1999) ப: 11, 12.

9. பாரதியார் கவிதைகள் – (சென்னை – திருமகள் நிலையம் – 1986) ப: 272.

10. வைத்தியநாதன். கு - சைவ சமய வரலாறு -(திருவிடைமருதூர் – திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம் – 1995) ப:1.

11. ஸ்ரீ சபாபதி நாவலர் – சமயம் (திருவாவடுதுறை – ஆதீனவெளியீடு – 1949) ப:1.

12. கலியாண சுந்தரனார். வி- சைவத்தின் சமரசம்- (சென்னை – பாரி நிலையம் – 1992). ப:12.

13. திருமூலர் – திருமந்திரம் – திருவாவடுதுறை – ஆதீன வெளியீடு – 1987) செ. எண்: 1512.

14. திருவாசகம்-மு.நூல், ப:13, கீர்த்தித் திரு அகவல் அடி எண். : 85
திருநாவுக்கரசர் தேவராம் – நான்காம் திருமுறை : (சென்னை – வர்த்தமானன் பதிப்பகம் – 1998) பா.எண்: 602.

15. Pope G.U.– Thiruvachagam – Translation – Reprint (Madras University of Madras – 1959) Pg. LXXIV.

16. Sastri K.A.N. Nilakanta – Article - A Historical Introduction to Saivaism – The cultural heritage of India Vo. IV. (Calcutta – 1956) p.64

17. Marshall, Sir John – Mohenjadaro and the indus civilization (London – 1931) Part I Preface Pg. VIII.

18. Maraimalai Adigal – The Saiva Siddantha as Philosophy of Practical Knowledge (Madras – Kazhagam -1966). Preface Pg-34 -35.

19. கந்தையா ந.சி - சிவன் - (Sathur–International linguistic Centre –2000) : ப. 2

20. Man in earliest times struck with the beauty of the universe with the splendour and regularity which everywhere were in evidence made no doubt that there was some divinity who therein presided and then presented the sun as expressing the likeness of the deity' william Tyler olcott – Sun Lore of all ages – Page no:42.

21. கந்தையா ந.சி - சிவன் – முந்நூல் - ப: 5

22. நச்சினார்க்கினியர் - உரையாசிரியர் - தொல்காப்பியம் - பொருளதிகாரம் (சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் - 1996) ப: 221.

23. நக்கீரர் - திருமுருகாற்றுப்படை - அடி எண். 2
கடியலூர் உருத்திரங்கண்ணனார் - பெரும் பாணாற்றுப்படை - அடி எண்.2
இளங்கோவடிகள் - சிலப்பதிகாரம் - அடி எண் : 4 (மங்கல வாழ்த்துப்பாடல்)

24. சித்தலிங்கம் டி.பி - சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும் (சென்னை - திருவரசு புத்தக நிலையம் - 1998) ப:18

25. மறைமலையடிகள் - Saiva Siddantha as a Philosophy of practical knowledge (Madras Kazhagam – 1966) preface – page No.35

26. Srinivasa Iyengar P.T. - Stone age in India (Madras – Asian Educational service – 1982) Pg – 48 , 49

27. Kalildas Nag – India and the Pacific world – (calcutta – Book company limited – 1941) pg.78

28. திருநாவுக்கரசு சுவாமிகள் - மூவர் தேவாரம் : தலைமுறை கும்பகோணம் - ஸ்ரீகாமகோடி ஆய்வுமையம் - 1988) ப: 1482 பா.எண்: 9, 5.
மாணிக்கவாசக சுவாமிகள் - திருவாசகம், முந்நூல், ப: 56,46.

29. அருணாசலம் .ப – பக்தி இலக்கியம் (சென்னை – பாரி புத்தகப் பண்ணை – 1983) ப.29–31.

30. மறைமலையடிகள் - சைவசமயம் - (சென்னை - மணிவாசகர் பதிப்பகம் - 1998) மு.நூல் ப:140

31. திருவாசகம் - மு.நூல் - ப:14.

32. தொல்காப்பியம் - நூற்பா எண். 1594.

33. மறைமலையடிகள் - தமிழர் மதம் - (சென்னை - மணி வாசகர் பதிப்பகம் -1998 ப.148.

34. மதுரைக் காஞ்சி - கடவுள் வாழ்த்து அடிகள் - 1,2
ஐங்குறு நூறு - கடவுள் வாழ்த்து அடிகள் 1,2
கலித்தொகை - கடவுள் வாழ்த்து அடிகள் 1-4
பதிற்றுப்பத்து - கடவுள் வாழ்த்துச்செய்யுள்

'எரி எள்ளு அன்ன நிறத்தினன் - விரி இணர்க்
கொன்றையம் மைந்தன் அகலத்தன் பொன்றார்
எயில் எரி ஊட்டிய வில்லன் பயிலிருள்
காடு அமர்ந்து ஆடிய ஆடலன் நீடிப்
புறம் புதை தாழ்ந்த சடையன் குறங்கறைந்து
வெண்மணி ஆர்க்கும் விழவினன் நுண்ணூல்
சிரந்தை இரட்டும் விரலன் இரண்டுருவாய்
ஈரணி பெற்ற எழில் தகையன் ஏரும்
இளம்பிறை சேர்ந்த நுதலன் களங்கனி
மாறேற்கும் பண்பின் மறுமிடற்றான் தேறிய
சூலம் பிடித்த சுடர்ப்படைக்
காலக் கடவுட்கு உயர்கமா வலனே!

35. அகநானூறு - கடவுள் வாழ்த்துச் செய்யுள் முழுமையும்

36. புறநானூறு - பாடல் எண்கள் 6,55,56,166
அடி எண்கள் - 18, 5, 1,2, 1,2

37. மேற்படி நூல் - பா. எண். 91

38. இளங்கோவடிகள் – சிலப்பதிகாரம் - (சென்னை – பூம்புகார் பதிப்பகம் – 1990) கால் கோட்காதை - அடி எண். 65, கட்டுரை காதை-அடி எண் : 91
மேற்படி நூல் - ப: XXX அடி எண்: 40,41, பக்: 24 அடி எண்:169.

39. சீத்தலைச் சாத்தனார் – மணிமேகலை, (சென்னை - கழகம்- 1969) அடிகள் 1-54

40. திருவாசகம் - முந்நூல் - திருவெம்பாவை: அடி எண் :1

41. கந்தசாமி சோ. ந- தமிழும் தத்துவமும் - (சென்னை - மணிவாசக நூலகம்- 1976) ப:1.

42. சுத்தானந்த பாரதியார் யோகிஸ்ரீ - சிவஞானதீபம் (சென்னை -அழகு பதிப்பகம் - முதற்பதிவு- 2002) ப:13.

43. Krishnan P.Dr. - Divine grace and Human freedom - Paul Tillich and Saiva Siddantha – (Madras - University of Madras Dr.S.Radhakrishnan Institute for advanced study in Philosophy – 1993) Pg.11.

44. கலியாண சுந்தர முதலியார் வி - தலைமை உரை - ‘சித்தாந்தம்’ - (சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் மாதத் தமிழ் பத்திரிகை மலர் : 8, 1935, மகா சமாஜம்- சென்னை) ப: சு.

45. மேற்படி நூல் - ப: கூ.எ.அ.

46. திருமந்திரம் - செய்யுள் எண். : 1421.

47. தண்டபாணி தேசிகர் ச - உரை- திருமூலர் திருமந்திரம் (ஸ்ரீபஞ்சாஷர தீபம்) திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு - 1990 ) ப: 463.

48. ஆவூர் மூலங்கிழார் - புறநானூற்றுப்பாடல் எண். 166, அடி எண். 1-4

49. திருஞான சம்பந்தர்- தேவாரம் - இரண்டாம் திருமுறை - (சென்னை வர்த்தமானன் பதிப்பகம் - 1998) ப: 164.

50. திருநாவுக்கரசு சுவாமிகள் - தேவாரம் - (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு - 1982) ஆறாம் திருமுறை : ப: 108, 112.

51. திருமந்திரம் - முந்நூல் - செய்யுள் எண்:84.

52. அறிவொளி அ - சிவபுராணம் - அநுபவ விளக்கம் - (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் - 1999) ப: 222.

53. திருஞான சம்பந்தர் - தேவாரம் - முந்நூல் – முதல் திருமுறை ப: 437 .

54. ஆறாம் திருமுறை - மு.நூல் – ப: 156.

55. திருவாசகம் - மு.நூல் – ப:50.

56. Shanmuga Mudalilar – Siva Agamas and their relationship to Vedas. (Madras Sri Kapaleeswarar Temple - 1972) pg.No.5.

57. திருமந்திரம் - மு.நூ. – செய்யுள் எண். 51.

58. மறைமலையடிகள் - திருவாசக விரிவுரை - (சென்னை : பூம்புகார் பதிப்பகம் - 2003) ப: 37.

59. திருமந்திரம் - செ.எண். 2397.

60. ஆச்சார்யா - பி.எஸ். திருமந்திர சாரம் - உரை (சென்னை - நர்மதா பதிப்பகம் - 2005) ப: 21.

61. சுந்தரமூர்த்தி சுவாமிகள் - தேவாரம் (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு - 1980) ப: 186.

62. திருவாசகம் – மு. நூல் – ப.3.

63. மேற்படி நூல் - ப-1.

64. George Joseph V.S - Centrality of self - Saiva Sidd antha (Chennai University of Madras – 2005) Pg.1

65. அருள் நந்தி சிவாசாரியர் – சிவஞான சித்தியார் சுபக்கம் - (திருவிடைமருதூர் - திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம் - 1999) செ.எண். 267.

66. சித்தலிங்கம் டி.பி - சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும் - (சென்னை - திருவரசு புத்தக நிலையம் - 1998) ப:30.

67. பிங்கல முனிவர் - பிங்கலந்தை - (சென்னை - கழகம் - 1968) ப: 3982 (ஒரு சொல் - பலபொருள்).

68. சேக்கிழார் - பெரியபுராணம் - (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு, 1988) ப.178.

69. திருஞானசம்பந்த சுவாமிகள் - தேவாரம் - முதல் திருமுறை - (சென்னை வர்த்தமானன் பதிப்பகம் – 1998) ப: 596.

70. உமாபதி சிவம் – திருமுறை கண்டபுராணம் - (திருவாவடுதுறை ஆதீனவெளியீடு – 1987) செய்யுள் எண்: 28.

71. வெள்ளை வாரணர் க – பன்னிரு திருமுறை வரலாறு - முதற்பாகம் - (சிதம்பரம் – அண்ணாமலைப் பல்கலைக் கழகம் – 1969) ப:34.

72. சிதம்பரனார் அ - துடிசைகிழார் – அடங்கன் முறை ஆராய்ச்சி - (கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழா வெளியீடு – 1938).

73. திருமூலர் – திருமந்திரம் – மு. நூல் செ எண் – 115.

74. அருள் நந்தி சிவாசாரியார் – சிவஞான சித்தியார் –மு.நூல் – செ.எண்: 7.

75. சுந்தரமூர்த்தி. கு – உரை – சிவஞானசித்தியார் (திருநெல்வேலி – அருள் நந்தி சிவம் அருட் பணி மன்றம் – 1989) ப: 8, 9.

76. சிவஞான சித்தியார் – மு.நூல் – செய்யுள் எண்கள்: 12, 13, 14, 19.

77. சுப்பு ரெட்டியார் ந - சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம் – (சென்னை - கழக வெளியீடு – 2001) ப.34.

78. சிவஞான சித்தியார் – மு.நூல் – செய்யுள் எண்: 24.

79. ஆனந்தராசன் ஆ – சிவஞானபோதம் – வழித்துணை விளக்கம் (திருநெல்வேலி– அருள் நந்தி சிவம் புத்தக நிலையம் – 2007) ப.50.

80. திருஞான சம்பந்த சுவாமிகள் –தேவாரம் – முதல் திருமுறை (திருவாவடுதுறை – ஆதீன வெளியீடு, 1983) ப.22.

81. சிவஞான சித்தியார் - மு.நூல் - செய்யுள் எண்: 93

82. உமாபதி சிவாசாரியார் – சிவப்பிரகாசம் – மூலமும் உரையும் (திருவாவடுதுறை – ஆதீன வெளியீடு – 1953) ப:33.

83. உமாபதி சிவம் - நெஞ்சுவிடுதூது – பா. எண்.100.

84. மாணிக்கவாசகர் - திருவாசகம் - மு.நூல் – ப.79, 102.

85. திருக்குறள் - எண்:9.

86. தாயுமானவர் பாடல்கள் - மெய்யப்பன் ச (பதி – ஆர்), (சென்னை – மணிவாகசர் பதிப்பகம் – 1998) ப: 156 .

87. சுந்தரமூர்த்தி கு - உரை – சிவஞானசித்தியார் (திருநெல்வேலி –அருள் நந்தி சிவம் அருட்பணி மன்றம் – 1989 – ப: 122.

88. உமாபதி சிவாசாரியார் – சிவப்பிரகாசம் – மு.நூல் - செ.எண்: 19.

89. மறைமலையடிகள் – திருவாசக விரிவுரை – மு.நூல் - ப:77, 78.

90. திருவதிகை மனவாகங்கடந்தார் – உண்மைவிளக்கம் (திருவாவடுதுறை – ஆதீன வெளியீடு – 1999) ப:131, பா.எண்.22.

91. மறைமலையடிகள் – திருவாசகவிரிவுரை – மு.நூல் - ப: 65.

92. சிவஞான சித்தியார் – மு.நூல் - செ.எண்: 170.

93. சிவஞான சித்தியார் - மு.நூல் – பா.எண் 103.

94. மேற்படி - நூல் - பா.எண்: 130.

95. உமாபதி சிவம் - திருவருட்பயன் - (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு - 1999) செ.எண்: 52.

96. வைத்தியநாதன் கு – உரையாசிரியர் – திருவருட்பயன் - (திருவிடைமருதூர் சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம் – 1995) ப.152.

97. சிவஞான சித்தியார் – செ.எண்: 143.

98. சுப்புரெட்டியார் ந - சைவசமய விளக்கு - (சென்னை – பாரி நிலையம், 1984) ப.217.

99. Schomerus H.W. – Saiva Siddhantha (Delhi – Motilal – Banarsidass ~~Publishes~~ – 2000) Pg.118.

100. சிவஞான சித்தியார் – மு.நூல் - செ.எண்.161.

101. சித்தலிங்கம் டி.பி – சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும் - (சென்னை – திருவரசு புத்தக நிலையம் – 1998) ப.37.

102. வாகீசமுனிவர் – ஞானாமிர்தம் - (திருப்பனந்தாள் – ஸ்ரீகாசிமடம் – 1988) ப:12.

103. சிவஞான சித்தியார் - மு.நூல் – செ.எண். 270.

104. மேற்படி நூல் – செ. எண்: 271.

105. சித்தலிங்கம் டி.பி - சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும் - மு.நூல் – ப–33.

106. திருநாவுக்கரசு சுவாமிகள் - ~~தேவாரம்~~ – ஆறாம் திருமுறை (திருவாவடுதுறை ஆதீன வெளியீடு – 1982) ப.74, பா.எண்.3.

107. வைத்தியநாதன் கு (உரை) – சிவஞான சித்தியார் – மு.நூல் - ப.307.

108. சுந்தரேசம் பிள்ளை மு (உரை) - திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம்- (திருவாவடுதுறை – ஆதீன வெளியீடு – 1983) ப.22.

109. திருஞான சம்பந்தர் - தேவாரம் - ~~மேற்படி~~ நூல் – ப.38.

110. சிவஞான சித்தியார் - மு. நூல் – செ.எண்: 273.

111. சேக்கிழார்– பெரிய புராணம் - (திருவாவடுதுறை ஆதீன வெளியீடு – 1988) ப:41, பா.எண் : 181.

112. மேற்படி நூல் - ப.36 – பா. எண்: 140.

113. தண்டபாணி தேசிகர் ச (உரை) - திருமூலர் திருமந்திரம் – ஸ்ரீ பஞ்சாஷர தீபம் (திருவாவடுதுறை – ஆதீன வெளியீடு – 1990) ப: 520, 521.

114. அருணாசலம் ப - திருமந்திரக் கோட்பாடு - (சென்னை – முல்லை நிலையம் – 2002) ப:159.

115. ஸ்ரீ நிரம்பவழகிய தேசிகர் – உரையாசிரியர் - சிவஞான சித்தியார் சுபக்கம் - (திருவாவடுதுறை – ஆதீன வெளியீடு – 1958) ப.948, 949.

116. திருவாசகம் - மு.நூல் - ப.27.

117. மேற்படி நூல் - ப:2.

118. ஆனந்தராசன் ஆ - சிவஞான போதம் – வழித்துணை விளக்கம் - (திருநெல்வேலி – அருள் நந்தி சிவம் புத்தக நிலையம் - 2007) ப.228.

119. சுப்பிரமணியன் - ச.வே. – பதிப்பாசிரியர் - மாதவச் சிவஞான யோகிகள் – சிவஞான மாபாடியம் - (சென்னை – உலகத் தமிழ்க் கல்வி இயக்ககம் – 1986) - ப.334.

120. சிவஞானசித்தியார் - மு.நூல் - செ.எண்.: 321.

121. ஆடலரசு நா – விளக்கக்கட்டுரை - உண்மை விளக்கம் - (சென்னை – தெய்விக சித்தாந்த இலக்கிய மன்றம் – 1987) ப.37.

122. வைத்தியநாதன் கு - உரையாசிரியர் – வினாவெண்பா – அட்டகம் - (திருவிடை மருதூர் – சைவ சித்தாந்தப் பயிற்சி மையம், 1995) ப.192.

123. சிவஞான சித்தியார் - மு.நூல் – செய்யுள் எண்.270.

124. மேற்படி நூல் - செய்யுள் எண்கள்: 271, 272, 273, 274.

125. ஔவையார் – விநாயகரகவல் - அடிஎண்கள்: 21, 22.

126. தமிழ் - தமிழ் அகராதி - (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம். 2006) ப: 476.

127. இராமநாதன் அரு. – பதிப்பாசிரியர் – சித்தர் பெரிய ஞானக்கோவை - சித்தர் பாடல்கள் - (சென்னை - பிரேமா பிரசுரம் - 1992) இரண்டாம் பாகம் ப-67 பா. எண்: 5.

128. மேற்படி நூல் - முதல் பாகம் - ப: 223, பா.எண்- 18

129. திருநாவுக்கரசு சுவாமிகள் - தேவாரம் - (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு - 1982) ஆறாம் திருமுறை- ப: 195 - பா.எண். 6.

130. மாணிக்கவாசகம். இரா. - நம் நாட்டுச் சித்தர்கள் - (சென்னை - அன்னை அபிராமி அருள் – 1978) ப: 48

131. குறுந்தொகை – பாடல் எண் - 130

132. மெய்யப்பன் ச. பதிப்பாசிரியர் - தாயுமானவர் பாடல்கள் - (சென்னை - மணிவாசகர் பதிப்பகம் - 1998) ப: 88

133. கலியாண சுந்தர முதலியார் வி - (சித்தாந்தம் - மாத இதழ் - சென்னை , சைவ சித்தாந்த மகா சமாஜம் - 1935) ப: எ.

134. மாணிக்க வாசக சுவாமிகள் - திருவாசகம் - (சென்னை - சைவ சித்தாந்தப் பெருமன்றம் - 1999) ப : 103.

135. திருஞான சம்பந்த சுவாமிகள் - தேவாரம் - முதல் திருமுறை (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு - 1983) ப:51.

136. திருநாவுக்கரசு சுவாமிகள் - தேவாரம்- (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு - 1982) ஐந்தாம் திருமுறை - ப:3, 17.

137. திருவாசகம் - மு.நூல் – ப: 78.

138. நம்பியாண்டார் நம்பி - திருநாவுக்கரசு தேவர் திருஏகாதசமாலை - (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் - 1995) ப: 1042 (11ம் திருமுறை)

139. மீனாட்சி சுந்தரனார். தெ. பொ - சித்தர் - கலைக்களஞ்சியம் (சென்னை - தமிழ் வளர்ச்சிக்கழகம் - 1956) ப: 643. பகுதி IV.

140. அருணாசலம் மு - தமிழ் இலக்கிய வரலாறு - 14ம் நூற்றாண்டு, (திருச்சிற்றம்பலம் - மாயூரம் காந்தி வித்யாலயம் - 1969) ப: 339

141. மாணிக்கவாசகம் இரா - நம்நாட்டுச் சித்தர்கள் - (சென்னை - அன்னை அபிராமி அருள் - 1982) - ப: 50

142. கணபதி த.ந - தமிழ்ச் சித்தர் மரபு - (சென்னை - ரவி பப்ளிகேஷன்ஸ் - 2004) ப: 26

143. நாராயணன் க - சித்தர் சிவவாக்கியர் - (புதுச்சேரி- மாரி பதிப்பகம் - 2003) ப: 18

144. கலியாண சுந்தர முதலியார் வி - முந்நூல் - ப: க0.

145. தொல்காப்பியர் - தொல்காப்பியம் - பொருளதிகாரம் - புறத்திணையியல் - நூற்பா எண். 16.

146. நச்சினார்க்கினியர் - நச்சினார்க்கினியம் (ச.பவானந்தம் பிள்ளை பதிப்பு - 1916) ப: 254.

147. நக்கீரர் - திருமுருகாற்றுப்படை - (சென்னை : திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் - 1978) ப:ரு

148. நாராயண வேலுப்பிளை எம் - உரை பதினோராந்திருமுறை- (சென்னை - தமிழ்நிலையம் - 1995) ப: 376.

149. புறநானூற்றுப் பாடல் - எண். 192

150. மாணிக்கனார் அ - (உரை) - புறநானூறு (வர்த்தமானன் பதிப்பகம் - 1999) ப:373

151. இளங்கோவடிகள் - சிலப்பதிகாரம் - (சென்னை - பூம்புகார் பதிப்பகம் - 1996) நாடு காண் காதை - ப: 58.

152. அடியார்க்கு நல்லார் - (உரை) - சிலப்பதிகாரம் - (சென்னை -உ.வே. சாமிநாதையர் - 1927) ப. 282 - 283.

153. திருஞான சம்பந்தர் - தேவாரம் - (திருவாவடுதுறை -ஆதீன வெளியீடு - 1983) மூன்றாம் திருமுறை பா.எண்.

154. திருநாவுக்கரசு சுவாமிகள் - தேவாரம் - மு.நூல் - நான்காம் திருமுறை - பா.எண்.584.

155. இராமசுப்பிரமணியம் வ.த - (உரை) - நான்காம் திருமுறை - (சென்னை - தமிழ் நிலையம் - 1995) ப- 502.

156. மேற்படி நூல் - பாடல் எண். 627

157. ஐந்தாம் திருமுறை - மு.நூல் – பா. எண். 862

158. திருவாசகம் - மு.நூல் - ப- 88

159. சுப்பிரமணிய பிள்ளை கா - உரை - திருவாசகம் - (சென்னை- கழக வெளியீடு - 1978) ப: 455.

160. திருமூலர் - திருமந்திரம் - (திருவாவடுதுறை -ஆதீன வெளியீடு - 1987) எட்டாந் தந்திரம் - ப: 392, பா. எண். 2525.

161. தாயுமானவர் பாடல்கள் - (சென்னை - மணிவாசகர் பதிப்பகம் - 1998) ப. 244, பா.எண். 148.

162. இராமலிங்க அடிகள்- திருவருட்பாத்திரட்டு - (வடலூர் - சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம் - 1982) ப: 249,111

163. பாரதியார் கவிதைகள் - (சென்னை - திருமகள் நிலையம் - 1980) ப: 185 பா.எண்-9.

164. தொல்காப்பியம் - நூற்பா எண். 1336

165. சுப்பிரமணியன் ச.வே - உரை - தொல்காப்பியம் தெளிவுரை - (சென்னை - மணிவாசகர் பதிப்பகம் - 2003) ப: 557

166. மாணிக்கவாசகம் இரா - நம்நாட்டுச் சித்தர்கள் - மு.நூல் - ப.236.

167. மாணிக்கவாசகம் இரா- 'சித்தர்கள்' - கட்டுரை 'பெருந்தமிழ்' - ப: 156 (சென்னை - பல்கலைக்கழக வெளியீடு - 1975)

168. சதாசிவ பண்டாரத்தார் டி.வி - தமிழ் இலக்கிய வரலாறு - கிபி.250 - 611 (சிதம்பரம் - அண்ணாமலைப்பல்கலைக்கழகம் 1963), ப: 83.

169. செல்வ நாயகம் வி - தமிழ் இலக்கிய வரலாறு - (யாழ்ப்பாணம் - ஸ்ரீலங்கா அச்சகம் 1965), ப:125.

170. வெள்ளை வாரணன் க - பன்னிரு திருமுறை வரலாறு – பாகம் :1 - (சிதம்பரம் - அண்ணாமலை பல்கலைக்கழகம், 1969) ப: 25.

171. Narayana Iyer C.V – Origin and Early History of Saivaism in South India (Madras – University of Madras – 1936) Pg 223-224.

172. திருமூலர் - திருமந்திரம் - (திருவாவடு துறை - திருவாவடுதுறை ஆதீனம் 1987) செய்யுள் எண். 2969.

173. ஆச்சார்யா பி.எஸ் - திருமந்திர சாரம் - (சென்னை - நர்மதா பதிப்பகம் - 2005) ப: 455

174. தண்டபாணி தேசிகர் ச - ஸ்ரீபஞ்சாஷரதீபம் - உரை - திருமந்திரம் 1,2,3 தந்திரங்கள் (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு - 1989) - ப: 24, 25.

175. மேற்படி நூல் : ப 24, 25

176. சித்தர்பாடல்கள் - மு.நூல் - முதற்பாகம் ப: 288, பா.எண்-5

177. மேற்படி நூல் - ப: 125 பா.எண். 110

178. திருமந்திரம் - பா.எண். 1490.

179. சித்தர் பாடல்கள் - மு.நூல் - ப: 239, பா.எண். 74.

180. மேற்படி நூல் : ப- 324, பா.எண்.18.

181. மேற்படி நூல் : ப: 311 பா.எண் -2.

182. மேற்படி நூல் - இரண்டாம்பாகம் - ப:13, பா.எண் : 56.

183. கோவேந்தன் - த (பதி) - சித்தர் பாடல்கள் - (சென்னை - பூம்புகார் பதிப்பகம் - 1992) ப: 519, பா.எண். 17.

184. சித்தர் பெரிய ஞானக்கோவை என வழங்கும் - சித்தர் பாடல்கள் - முதற்பாகம் - மு.நூல் ப: 52, பா.எண்.35.

185. மேற்படி நூல் - இரண்டாம் பாகம் - ப- 39, பா.எண். 84.

186. மேற்படி நூல் - முதற்பாகம் -ப- 313 பா. எண். 11.

187. மேற்படி நூல் - ப.325, பாடல் எண். 23.

188. மேற்படி நூல் - இரண்டாம் பாகம் - ப- 73, பா.எண். 6.

189. ராமநாதன் அரு - பதிப்பாசிரியர் - சித்தர் பாடல்கள் - மு.நூல் -ப.3.

190. மாணிக்கவாசகம் இரா - நம்நாட்டுச் சித்தர்கள் - மு.நூல் - ப.116.

191. Shanmugavelan A - Siddars Science of Longevity and Kalpa Medicine of India (Chennai – Sakthi Nilayam – 1963) – P – 40.

192. Subramania Aiyar A .V - The Poetry and the philosophy of the Tamil Siddhars- (Tirunelveli –S. Mahadevan – 1957) P.72.

193. சிதம்பரனார் சாமி - அகத்தியர் வரலாறு - (சென்னை இலக்கிய நிலையம் -1974) பக்-2

194. Raghava Iyengar Ra – Tamil Varalaru - (Chidambaram - Annamalai University – 1952) P.216.

195. அறிவொளி அ - உரையாசிரியர் - சித்தர் பாடல்கள் - (இரண்டாம் தொகுதி) சென்னை வர்த்தமானன் பதிப்பகம் - 2007) ப: 791. பா.எண்: 40.

196. மாணிக்க வாசகம் இரா - நம் நாட்டுச் சித்தர்கள் – மு.நூல் – ப: 90, 91.

197. மேற்படி நூல் - ப: 109

198. சித்தர் பாடல்கள் - மு.நூல் - முதற்பாகம் ப: 50

199. மேற்படி நூல் ப: 50, 137, 200.

200. பாரதியார் கவிதைகள் - (சென்னை - திருமகள் நிலையம் 1986) ப: 185, 205

201. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – மு.நூல் - ப: 174

202. மேற்படி நூல் - ப. 85, 144

203. மேற்படி நூல் - ப: 48.

204. மேற்படி நூல் - ப: 126.

205. தமிழ் - தமிழ் அகராதி - (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் - 2006) ப:520.

206. திருக்குறள் எண் : 422.

207. சித்தர் பாடல்கள் - மு.நூல் - ப.194

208. திருமூலர் - திருமந்திரம் - மு.நூல் – செ.எண்: 551.

209. கணபதி த ந - தமிழ்ச் சித்தர் மரபு - (சென்னை - ரவி பப்ளிகேஷன்ஸ் - 2004) ப: 143.

210. திருமந்திரம் - மு.நூல் – செ. எண்: 631

211. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல். ப.116

212. மேற்படி நூல் - ப- 116

213. மேற்படி நூல் - ப.190, 102

214. பாரதிதாசன் கவிதைகள் (சென்னை - ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ் - 1992) முதல் தொகுதி - ப.113, 114.

215. சித்தர் பாடல்கள் மு.நூல் - ப:223, 181.

216. மேற்படி நூல் - முதற்பாகம் -ப- 139.

217. மேற்படி நூல் - ப- 171.

218. மேற்படி நூல் - ப- 242.

219. வேங்கடசாமி சீனி - சமணமும் தமிழும் - (சென்னை - கழகம் -1954) ப: 185.

220. ஞானக்கோவை என வழங்கும் சித்தர்பாடல்கள் - மு.நூல் - ப: 239.

221. மேற்படி நூல் - ப: 238.

222. மேற்படி நூல் - ப- 170.

223. மேற்படி நூல் - ப- 56.

224. மேற்படி நூல் - ப- 184.

225. மேற்படி நூல் ப- 223.

226. திருமந்திரம் – மு.நூல் - செய்யுள் எண்: 279.

227. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல்- ப.77.

228. மேற்படி நூல் - ப- 221.

229. மேற்படி நூல் - ப- 285.

230. மேற்படி நூல் - ப- 224, 256

231. திருமந்திரம் – மு.நூல் – செய்யுள் எண்: 724

232. கோவேந்தன் – பதிப்பாசிரியர் – ஔவைக்குறள் – சித்தர் பாடல்கள் - (சென்னை, பூம்புகார் பதிப்பகம் – 1992) ப.85.

233. ‘மருந்தது தேகத்தின் உபாதை நீக்கும்
மருந்தது மனத்தின் நோய்கள் தீர்க்கும்
மருந்தது பிணிகள் வாராது தடுக்கும்
மருந்தது அழிவற்ற வாழ்வைக் கொடுக்கும்
ஸ்ரீ தேவநாத ஸ்வாமிகள் – இந்தியப் பெருஞ்சித்தர்கள் ஆறுபேர் (சென்னை – நர்மதா பதிப்பகம் – 2005), ப:24.

234. திருக்குறள் எண்: 948.

235. Jindal S.R.Dr.- Nature Cure – A wayof life (Bangalore – Institute of Naturopathy & Yogic Science – 1993), Page No.3.

236. சிதம்பரனார் சாமி – சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம் - (சென்னை – இலக்கிய நிலையம் – 1974) ப.18.

237. திருக்குறள் எண்: 358.

# இறையியல்

## இறை : விளக்கம்

இயற்கை என்னும் சொல்லுக்கு, இயல்பு, தன்மை, வழக்கம், பான்மை, முறைமை, குணம்,கொள்கை, இலக்கணம், தகுதி ஆகிய விளக்கங்கள் கொடுக்கப்படுகின்றன...[1] நெருப்பின் இயற்கை வெப்பம். தண்ணீரின் இயல்பு குளிர்ச்சி. இவை இயற்கையாகத் தம் நிலையிலிருந்து மாறுபடுவதில்லை. இயற்கை அறிவற்றது. சடப்பொருள், அஃறிணை. அஃது தன் இயல்பான நிலையிலிருந்து மாறுபட வேண்டுமெனில் ஒரு காரணம், அப்பொருளினின்று வேறாக வெளியிலிருந்து அமைதல் வேண்டும். அஃறிணைப் பொருளால் தன் இயல்பில் எந்த ஒரு மாற்றத்தையும் தானாக உருவாக்கிக் கொள்ள இயலாது. பேரறிவு கொண்ட ஓர் ஆற்றல் இயற்கையுள் நின்று அதனை இயக்கவே அது இயங்குவது உண்மை. இங்ஙனம் மனித அறிவிற்கும், ஆற்றலுக்கும் அப்பாற்பட்ட, அதனினும் உயர்ந்த, பேரறிவுடைய ஒரு ஆற்றலால் மட்டுமே இயற்கையையும், இவ்வுலகத்தையும், படைத்தலும், காத்தலும். இயக்குதலும் சாத்தியமாகிறது. அண்டங்களின் இயக்கத்திற்குக் காரணமான மிக உயர்ந்த பேராற்றல் கொண்ட பேரறிவுடைய சத்தியை இறை எனக் கொள்ளல் வேண்டும்.

**'இறை'** என்னுஞ் சொல் **'தங்குதல்'** என்னும் பொருள் தருவது. **'தேன் இறைகொள்ளும்'**[2] என்ற புறநானூற்றுத் தொடரில் தேன் தங்குகின்ற எனவும், **'வண்டு இறை கொண்ட கமழ்பூம் பொய்கை'**[3] என்ற மதுரைக் காஞ்சித் தொடரில் வண்டுகள் தங்குகின்ற எனவும் பொருள் கொள்ளப்படுகிறது. எனவே இறைவன் என்னுஞ் சொல் தங்குபவன் என்னும் பொருள் கொண்டது என்பது தெளிவாகிறது.

> **'அண்டம் நீ அகண்டம் நீ ஆதி மூலமானோ நீ**
> **கண்டம் நீ கருத்தும் நீ காவியங்கள் ஆனோன் நீ**
> **புண்டரீக மற்றுளே புணருகின்ற புண்ணயர்**
> **கொண்ட கோல மான நேர்மை கூர்மை என்ன கூர்மையே'**[4]

என்னும் சிவவாக்கியரின் சிந்தனையில் இறைவன் யாவற்றிலும் நிறைந்து நிற்கும் உண்மை தெளிவுபடுத்தப்படுகின்றது. சித்தரின் இக்கருத்தினை உமாபதி சிவாசாரியார், 'அகரம் என்னும் முதல் உயிர் எழுத்தின் ஒலி, மற்றைய எழுத்துக்களுடன் கலந்து நிற்பதைப் போல' இறைவனும் அனைத்துப் பொருட்களிலும் நிறைந்துள்ளான் என்னும் கருத்தினை,

**'அகர உயிர் போல் அறிவாகி எங்கும்**
**நிகரில் இறை நிற்கும் நிறைந்து' ...**[5] என்னும்

அடிகளில் உறுதிப்படுத்துகிறார்.

**கடவுள் : சொற்பொருள் விளக்கம்**

கடவுள் என்னுஞ் சொல்லே, அது உணர்த்தும் பொருளைத் தன்னுள் கொண்டுள்ளது. அஃது அனைத்துப் பொருட்களையும் கடந்து, அவற்றினுள்ளும் நிற்பது என்பதாகும். கடவுள் இவ்வுலகத்துள்ளும், உலகத்தில் வாழும் உயிர்களுள்ளும் நின்று, அவற்றைக் கடந்தும் நிற்பவர் ஆவார். நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி ஆகிய ஐம்பெரும்பூதங்களின் கலப்பினால் ஆனவை இவ்வுலகமும் உலகத்துப் பொருட்களுமாகும். மனித அறிவால் முதலில் அறியப்படுவது உலகம் குறித்த அறிவும், அதிலுள்ள பொருட்களைப் பற்றிய அறிவுமாகும். இவ்வறிவு நமக்கு மெய், வாய், கண், மூக்கு செவி ஆகிய ஐம்பொறிகளின் வழியாகக் கிடைக்கப் பெறுகிறது. இவ்வாறு ஐம்பொறிகளால் நாம் பெறும் உலகத்துப் பொருட்களைக் குறித்த அறிவு, அவற்றை அறிந்தவுடன் அழிந்து விடுவதில்லை. நேற்று நாம் கண்ட காட்சிகளும், செவி மடுத்த சொற்களும், கற்றுணர்ந்த கருத்துக்களும் நேற்றுடன் மறந்து போய் விடுவதில்லை. அவற்றைப் பற்றிய அறிவு நம் நினைவில் பதிந்து விடுகின்றது. நாம் கண்ட பொருட்கள் காலப்போக்கில் அழிந்து போகலாம். அப்பொருட்களைப் பற்றி நாம் அறிந்த அறிவு, அதன் நினைவுகள், நம் உள்ளத்தில் வேரூன்றிப் பதிகின்றன. நாம் நினைத்த உடன் அவற்றை நம் நினைவிற்குக் கொண்டு வருவதும் அறிவின் செயலே. ஆகவே ஐம்பெரும் பூதங்களாலான உலகத்துப் பொருட்களையும், அப்பொருட்களை நாம் அறியத் துணை நிற்கும் ஐம்பொறிகளையும், அவற்றால் பெறப்படும் அறிவையும், அவ்வறிவு பதிக்கும் நினைவுகளையும் ஆகிய இச்செயற்பாடுகள் அனைத்தையும் கடந்து நிற்பவர் கடவுள் என்னும் கருத்து புலனாகின்றது. அங்ஙனமே, ஐம்பூதங்களாகவும், ஐம்பொறிகளாகவும், அவற்றை அறியும் அறிவாகவும், அறிவு பதிக்கும் நினைவுகளாகவும் விளங்கி, அவற்றின் உள் உறைபவரும் கடவுளே.

**'வாக்கும் மனமும் கடந்த மனோலயன் காண்,**
**அணுவுக்கும் மேருவுக்கும் அகம் புறமாய் நின்றான் காண்'**[6]

என்னும் பட்டினத்தார் பாடலில், கடவுள் உள் நின்றும், கடந்தும் நிற்கும் நிலை தெளிவுபடுத்தப்படுகின்றது. கடவுள் எல்லாமுமாகி விளங்கும் சிறப்பையும், அனைத்தையும் கடந்து நிற்கும் பெற்றியையும்,

**'இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி**
**இயமானனாய் எறியும் காற்றுமாகி**
**அருநிலைய திங்களாய் ஞாயிறாகி**
**ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி'....**

**என்றும்,**

**'இருநிலனும் விசும்பும் விண்ணும் ஏழுலகும்**
**கடந்து அண்டத்து அப்பால் நின்ற**
**போரொளியை'....** [7]

என்றும், தம் திருமுறை வாக்கில் திருநாவுக்கரசு சுவாமிகள் தெள்ளிதின் புலப்படுத்துகின்றார்.

உலகத்தையும், உலகத்துப் பொருட்களையும் கடந்து நிற்பவர் கடவுள் எனில், எவ்வகையில் இவற்றைக் கடந்து நிற்பவர் என்னும் ஐயம் எழாமல் இல்லை. கடந்து நிற்றல் என்பது, இடங்கடந்து நிற்றல், காலங் கடந்து நிற்றல், பொருள் தன்மைகளைக் கடந்து நிற்றல் என வகைப்படுத்தப்படும். இடங்கடந்து நிற்றல் என்பது அனைத்து இடங்களிலும் நிறைந்து நின்றும், எல்லைகளற்று அவற்றைக் கடந்தும் நிற்றல் என்று பொருள் படும். கடவுளின் இத்தன்மையை.

**'எங்கும் நிறைந்து நின்ற ஏக பரவத்து வினை'** [8]

என்று யோகச் சித்தரும்,

**'எங்கும் நிறைந்தே இருக்கின்ற சோதியை'....**
**...அண்டத்துக்கு அப்பால் அகன்ற சுடரினை'....** [9]

என்று குதம்பைச் சித்தரும் குறிக்கின்றனர்.

**'எங்கும் ஆகி நின்றானும்'** [10]

என்னும் திருஞான சம்பந்தப் பெருமானின் கூற்றும்,

**'அண்டத்து அண்டத்தின் அப்புறத்து**
**ஆடும் அமுதன்'** [11]

என்னும் சுந்தர மூர்த்தி நாயனாரின் மொழியும், சித்தர்களின் கருத்திற்கு அரணாய் அமைகின்றன.

காலங்கடந்து நிற்றல் என்பது முக்காலங்களையும் கடந்து கால வரையறைக்குள் அகப்படாது நிற்றல் என்று பொருள் படும். இறைவனுக்குத் தோற்றமோ. வளர் நிலைகளோ, முடிவோ வரையறுக்க இயலாது. எல்லாவற்றிற்கும் முற்பட்ட காலந்தொட்டே இறைவன் இருப்பவன் என்று கூறுதல் கூட இறைத் தன்மைக்கு இழுக்காகும்.

**'கால மூன்றுங் கடந்த கதிரொளி'**[12]

என்பது இடைக்காட்டுச் சித்தர் இயம்பு மொழியாகும். இக்கருத்தை

**'முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே**
**பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே'**[13]

என மணிவாசகப் பெருமான் நிறுவுகிறார். அடிகளாரின் இவ்வடிகள் இறை இலக்கணத்தை மிகச் சிறப்பாக இயம்புகின்றன. பழமை, புதுமை என்னும் சொற்கள் தனித்துவம் வாய்ந்தவை அல்ல. காலம் என்ற சொல்லை இடையீடாகக் கொண்டு சொல்லப்படும் ஒப்பு நோக்குச் சொற்களாகும். காலம் என்பது தோற்ற ஒடுக்கம் இல்லாதது. இடையீடு இன்றிச் செல்வது. கால ஓட்டத்தில் நேற்றுத் தோன்றியவை இன்று பழமையாக ஆகிவிடும். நாளை தோன்றப் போகின்றவை புதுமையெனக் கொள்ளப்படுகிறது. பழமை என்பது இறந்தகாலம். புதுமை என்பது எதிர்காலம். நிகழ்காலத்தில் இந்த ஒரு நொடியில் தோன்றும் ஒரு பொருள், தோன்றியவுடன் இறந்த காலமாகி விடுகிறது. தோன்றுவதற்கு முன்னர் எதிர்காலமாகும். இங்ஙனம், பழமை, புதுமை ஆகிய இவ்விரு சொற்களும் இறந்தகாலம், எதிர்காலம் என்ற இரு காலங்களுக்குள் அடங்கி விடுகின்றன.

பல கோடி ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றிய இவ்வுலகம், என்று தோன்றியது என்று அறிவியலால் இன்றும் வரையறுத்துக் கூற இயலாத காலப் பழமை வாய்ந்தது. தோன்றிய எந்தப் பொருளும் என்றோ ஒரு நாள் மறைந்தே தீர வேண்டிய கடப்பாடுடையது. 'முன்னைப் பழம் பொருள்' என மணிவாசகப் பெருமான் குறிப்பிடுவது, தோற்றமறைவிற்கு உட்பட்ட இப்பேரண்டத்தையே ஆகும். இப்பழம் பொருளாகிய பேரண்டத்தின் தோற்றத்திற்கும் முன்னர் என்ன இருந்திருக்கும் என்ற வினாவும் எழுகிறது. இப்பிரபஞ்சம் ஒரு காலத்தில் இல்லாமல் இருந்தது. இப்போது இயங்கிக் கொண்டிருக்கிறது. என்றோ ஒரு நாள் மறைந்தும் போய்விடும். அதாவது,

தோற்றம், இருப்பு, மறைவு ஆகிய மூன்று நிகழ்வுகளும் பிரபஞ்சத்தின் இயல்பு. இம் மூன்று நிகழ்வுகளும் இல்லாத ஒரு பழம்பொருளும் உண்டு. அப்பழம் பொருளே இப்பிரபஞ்ச நிகழ்வுகளுக்குக் காரணமானது. அப்பழம் பொருளையே முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளாகிய இறைவன் என மாணிக்கவாசகர் குறிக்கிறார். எதிர்காலத்தில் இப்பிரபஞ்சத்தில் மனிதனுக்குப் புதுமைகளாகத் தோன்றக் கூடியவற்றிற்கும் காரண கர்த்தாவாக விளங்கி என்றும் ஒரு நிலைப் பட்டவனே இறைவன் எனவே பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே' என்றுரைக்கிறார்.

கடவுள், பொருட்களின் தன்மைகளைக் கடந்து நிற்பவர் ஆவார். ஒரு பொருளின் தன்மை, அதன் வண்ணம், வடிவம், அளவு,சுவை ஆகிய அலகுகளைக் கொண்டு வரையறுக்கப்படுகிறது. கடவுளை எந்த வடிவத்தினுள்ளும், வண்ணத்தினுள்ளும். எவ்வித அளவையினிலுள்ளும், எச்சுவையினுள்ளும் அடக்கவியலாது. இக்கருத்தை

**'. . . பத பதார்த்தங்கள் அல்லான்**
**அந்தமும் ஆதி இல்லான் அளப்பிலன் ஆதலாலே**
**எந்தை தான் இன்னன் என்றும் இன்னது ஆம் இன்னதாகி**
**வந்திடான் என்றும் சொல்ல வழக்கொடு மாற்றம் இன்றே**[14]

என அருள் நந்தி சிவாசாரியார் விவரிக்கின்றார். இங்ஙனம் உலகத்தையும், உலகப் பொருட்களையும், அவற்றின் தன்மைகளையும், கால இட எல்லைகளையும் கடந்து நின்றும், அவற்றினுள் நிறைந்து நின்றும் விளங்குபவரே கடவுள் என்ற பொருளை அச்சொல்லே உணர்த்துகிறது.

**தெய்வநிலை**

சமுதாயத்தில் காலப்போக்கில், சூழ்நிலை மாற்றங்களால், மக்கள் கடைப்பிடித்த கொள்கைகளிலும், கொண்ட கருத்துக்களிலும் முரண்பாடுகள் தோன்றின. அவை வளர்ச்சி பெற்று சமுதாயத்தில் பல மதங்கள் என்ற நிலையும், அவற்றுள் பல பிரிவுகளும் உருவாயின. ஒவ்வொரு மதமும் தத்தம் கொள்கைகளுக்கேற்ப, விளக்கங்களுக்கேற்ப, பல வடிவங்களை, வழிபடு முறைகளை மக்களிடையே புகுத்தின. மதங்கள், பல இனங்களாக பல குலங்களாகப் பிரிந்த நிலையில், ஒவ்வொரு குலத்திற்கும் ஒரு தெய்வம், குலதெய்வம் என்னும் பெயரில், வழிபாட்டுத் தெய்வமாக வழிபடும், முறை வழக்கில் இருந்தது. இன்றும் குல தெய்வ வழிபாடு, பல இடங்களில் பல்வேறு முறைகளில் வழக்கில் இருந்து வருகிறது.

தெய்வம் என்னும் நிலை, இறைநிலையிலிருந்து வேறுபடுகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலங்களாகப் பகுக்கப்பட்ட பண்டைத் தமிழகத்தில் ஒவ்வொரு நிலப்பகுதிக்கும் உரித்தான கருப்பொருட்களைக் கூறும் தொல்காப்பியம்,

**''தெய்வம் உணாவே மா மரம் புள் பறை''**[15]

என ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு தெய்வம் இருந்தமையைக் காட்டுகிறது.

பத்துப்பாட்டுத் தொகுதியினுள், நெடுநல்வாடையில் பாண்டிய மன்னனது அரண்மனையை வடிவமைக்கும் அறிஞர்கள்.

**'தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி'**[16]

திசைகள் தோறும் தெய்வங்கள் அமையும் இடங்களைக் குறித்தனர் என்னும் குறிப்பை நக்கீரர் நவில்கிறார். **'தெய்வமென்பது சாதியொருமை'**[17] என்பது 'தெய்வம்' என்னும் சொல்லுக்குப் பரிமேலழகர் தரும் உரை விளக்கமாகும்.

திருவள்ளுவர், கடவுள், இறைவன் என்னும் சொற்களைக் கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் மட்டுமே கையாண்டுள்ளார். இவ்வதிகாரத்தில் கூறப்படும் இறைநிலை, கருத்துப் படிவ (Conceptual) நிலையாகும். உலகத்து உயிர்களுக்கெல்லாம் பொதுவான ஒரு நிலையாகும். 'ஆதிபகவன்', வாலறிவன், வேண்டுதல் வேண்டாமை இலான், எண்குணத்தான், தனக்குவமை இல்லாதான்,[18] ஆகிய சொற்கள் பெயர்களாலும் வடிவங்களாலும் வரையறுக்க முடியாத ஒரு முதற் பொருளை, முற்றறிவு நிலையை, எங்கும் எல்லைகளின்றி நிறைந்து நிற்கும் பேராற்றலை விளக்கி நிற்கும் சொற்களாகும். அமரர், இமையார், தெய்வம், தேவர், வானத்தவர், வானுறையும் தெய்வம், வானோர்''[19] என வள்ளுவர் குறிப்பிடும் சொற்கள் தெய்வ நிலையில் இருப்போரைச் சுட்டும் சொற்களாகும். இத்தகையோர் வாழிடங்களை, 'அவ்வுலகம், புத்தேள் உலகம், மேல் உலகம், புத்தேளிர் வாழும் உலகம்'[20] எனப் பல்வேறு பெயர்களால் குறிக்கிறார். அத்தேவருலகத்திற்குச் செல்லும் தகுதியுடையோரை, 'அருளுடையவர்கள், யான் எனது என்றும் செருக்கு அற்றவர்கள், அடக்கம் உடையவர்கள், ஈகை செய்வோர் களவு செய்யாமல் வாழ்வோர்'[21] எனப் பட்டியலிடுகிறார். கொல்லான், புலால் மறுத்தான், ஐயப்படாது, அகத்தது உணர்வார், தன்னுயிர் தானறப் பெற்றான்'[22] ஆகிய பண்புகளைக்

கொண்டு வாழ்கின்றவர்கள், தாம் வாழும் காலத்திலேயே தெய்வமாகப் போற்றப்படுவர்; வணங்கப்படுவர் என்றுரைக்கிறார். ஆகவே தெய்வம் என்னும் நிலையை வையத்துள் வாழ்வாங்கு வாழும் மனிதர்கள், தாம் வாழும் காலத்திலேயோ, அல்லது மறைந்த பின்னரோ எய்தவியலும். எனவே தெய்வநிலை என்பது இறைநிலையினின்று வேறுபட்டது என்னும் கருத்து தெளிவாகிறது.

சிலப்பதிகாரத்தில் கொற்றவை என்னும் தெய்வத்தை வழிபடும் வேட்டுவ குலப் பெண்ணான சாலினி, அத்தெய்வத் தன்மை பெற்று, கண்ணகியின் பெருமைகளைப் பேசுவதாக

**'திருமாமணி எனத் தெய்வம் உற்று உரைப்ப'**[23]

என வரும் அடியிலும், கவுந்தியடிகள் கண்ணகியின் சிறப்புக்களைப் போற்றும் போது,

**'கற்புக் கடம் பூண்ட இத்தெய்வம் அல்லது**
**பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்'**[24]

என்னும் அடிகளிலும் தெய்வம் என்னும் சொல், மனிதரில் சற்று மேம்பட்ட நிலையிலுள்ளோரைக் குறித்த சொல்லாகவே ஆளப்பட்டுள்ளது.

மணிவாசகப் பெருந்தகையும், பிறப்புகளின், பல நிலைகளைத் தொகுத்துக் கூறும் போது, இறுதியில்.

**'முனிவர் ஆய்த் தேவர் ஆய்'**[25]

என்றுரைக்கிறார். 'பொறி புலன்களை அடக்கி முனிவர்களாகப் பரிணமிக்கின்றவர்கள், உடற்கூட்டைத் துறந்து திரும்பப் பிறப்பு எடுக்கும் வரை. இடைக்காலத்தில் தேவர்களாய்ச் சூக்கும உடலோடு வாழ்கிறார்கள். தேவர்களாக வாழ்ந்தாலும் கூட மறுபடியும் பிறக்க வேண்டிய கடப்பாடு உடையவர்கள் என்பதை இந்நாட்டுச் சமயங்கள் கூறுகின்றன'[26] என்பது பேரா.அ.ச.ஞா. அவர்களின் விளக்கவுரையாகும்.

'உயிர்களுக்கு அவைகளின் தன்மையின் பொருட்டு, அவற்றின் வினைக்கு ஏற்ப, பல வகைப் பிறவிகளைக் கொடுப்பவன் பதி ஆகிய இறைவன். அவற்றுள் ஒரு வகை, தேவர் அல்லது தெய்வம் என்பது. இஃது ஏனைய பிறிவிகளை விடச் சிறந்ததே யன்றிக் கடவுளாகாது. ஆகவே கடவுள் வேறு தெய்வம் வேறு எனவும், கடவுள் ஒருவன் தான்,

தெய்வங்கள் பல எனவும் உணர்தல் வேண்டும். தெய்வங்களும், ஏனைய பிறவிகளை அடைந்த உயிர்கள் போலப் பிறந்தும், ஆயுட் காலம் வரை வாழ்ந்தும், பின்னர் இறந்தும் செல்லும் நிலையினவாம்'[27] என்பது திரு.அருணை வடிவேலு முதலியார் அவர்களின் கூற்றாகும். இக்கூற்று அ.ச.ஞா அவர்களின் விளக்கத்தை ஒத்துள்ளது புலனாகிறது. இக்கருத்து, தேவர்களும் அணுக முடியாத பரம்பொருளே இறைவன் என்னும் பொருள் பட வரும்.

**'விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா விழுப்பொருளே'**[28]

என்னும் திருவாசக அடிகளால் உறுதிப்படுத்தப்படுகிறது. மணிவாசகப் பெருமானின் இச்சொற்களை,

**'விண்ணிலுள்ள தேவர்கள் அறியொணாத மெய்ப்பொருள்'**[29]

என சிவவாக்கியர் எதிரொலிக்கிறார்.

இறைநிலையும், தெய்வ நிலையும் எளியதோர் எடுத்துக்காட்டால் தெளிவாகப் புலப்படுகிறது. ஒரு நாட்டிற்கு அரசனாக ஒருவனே இருக்க இயலும். தன்னுடைய ஆணைகளை நிறைவேற்றுவதற்காக, தன் முழு அதிகாரத்தில் சிறிது பகிர்ந்து அளித்து சிலரைத் தன் அமைச்சரவையில் அவன் நியமித்திருக்கலாம். இவர்கள் அரசனின் சபையிலிருக்கலாம். ஆனால் அரசனைப் போல் முழு சுதந்திரத்துடனும், ஆற்றலுடனும் செயல்பட வல்லவர்கள் அல்லர். அவர்கள் அரசனின் ஆளுகைக்குட்பட்டவர்கள். சாதாரண நிலையிலுள்ள குடிமக்களை விட சிறிது உயர்ந்த நிலையிலுள்ளவர்கள். குடிமக்களின் வணக்கத்திற்குரியவர்கள். இதுபோல, இறைவன் ஒருவனே. இறைவனது திருவருளால் தெய்வ நிலையை அடைந்தவர்கள் பலர். அவர்கள் அனைவரும் உயிர் இனம் எனப்படும் பசுக்களேயன்றி இறை ஆக மாட்டார். உயிரினங்களைப் பசுக்களைக் காக்கும் தலைவன் பதி, பசுபதி ஒருவனேயாகும். எனவே தெய்வநிலை என்பது இறைநிலையினின்று வேறுபட்டது எனத் தெளிவாகிறது.

**இறை ஒன்றே**

அண்டங்களுக்குள் உறைந்தும் அவற்றை இயக்கியும், அவற்றைக் கடந்தும் நிற்கும் பரம்பொருளே, இறைவன் என்னும் கருத்து தெள்ளிதின் புலப்படுகிறது. எல்லைகளற்ற, நிகரற்ற ஆற்றலே இறைமை எனில், இறை என்பது ஒன்றாகத்தான் இருக்க வேண்டும். இறைவன், கடவுள் ஆகியன, எண்ணுப் பெயர்களில் ஒருமையாகும். இச்சொற்களுக்குப் பன்மைப் பெயர்கள் மரபிலும், வழக்கிலும் இல்லை. இவ்வுண்மை ஒன்றே இறைவன் ஒன்று என்பதை நிலை நிறுத்துவதாகும். இறைவன் ஒன்று என்று உரைக்கும் போது, ஒன்று என்பது, இதனையல்லால் வேறு ஒரு பொருளும் இல்லை என்பதை உணர்த்தும் அலகு (Absolute Unit) என்று பொருள் கொள்ளப்படும்.

**'நீயலால் பிறிது மற்றின்மை ----**
**....ஒன்றும் நீ யல்லை அன்றி யொன்றில்லை'**[30]

என்னும் திருவாசக அடிகள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கவையாகும்.

இறைவனை அறிய விழைந்த அருளாளர்கள் அனைவருமே இறை ஒன்றே என்னும் கருத்தை உறுதிபட உரைக்கின்றனர்.

**'எத்தனை பேரோ எடுத்தெடுத்துத் தான் உரைத்தார்.**
**அத்தனை பேர்க்கு ஒன்றானது'**[31]

என்னும் பட்டினத்தார் பாடலும்,

**'அங்கும் இங்கும் ஆகி நின்ற ஆதி மூர்த்தி ஒன்றலோ'**[32]

என்னும் சிவவாக்கியர் சிந்தனையும்

**'சத்தியே பராபரமே ஒன்றே'**[33]

என்னும் அகத்தியரின் அறவுரையும், இறை ஒன்றே என்னும் உண்மையை விளக்குகின்றன. சைவத் திருமுறைகளில் பலவிடங்களில் இவ்வுண்மை அறிவுறுத்தப்படுகிறது.

**'ஒருவனாகி நின்றானிவ் வுலகெலாம்'......**
**....'உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே'**[34]

என்னும் அப்பர் அடிகளின் அருளுரையும்,

**'ஒருவனே போற்றி, ஒப்பில் அப்பனே போற்றி**
**'ஒப்புனக்கில்லா ஒருவனே'**[35]

என்னும் திருவாசகமும் சித்தர்களின் கருத்தை உறுதிப்படுத்துகின்றன.

கண்ணால் காணக்கூடிய பொருளை அறிவதற்கும். முழுமையாக உணர்வதற்கும், மனிதனுக்குப் பல்வேறு விளக்கங்கள், பலநிலைகளில் தேவைப்படுகின்றன. இங்ஙனம் இருக்கையில். இறைவன் கண்ணால் காண முடியாத, ஆதாரம் காட்டி நிரூபிக்க இயலாத பரம்பொருள். ஆகவே இறைவனை அறிய பல்வேறு வடிவநிலை விளக்கங்களும், கருத்துக்களும் தேவை. விளக்கங்களும், விளக்கப்படும் முறைகளும் வேறுபடலாம். ஆனால் விளக்கப்படும் பொருளாகிய இறை ஒன்றே ஆகும். அஃது அண்டங்களின் இயக்கத்திற்குக் காரணமாகி, எல்லைகளற்று, அளவிட முடியாத பேராற்றலுடன் விளங்கும் பேரறிவுப் பொருளாகும்.

**'. . . . உலகம் எல்லாம்**
**வருமுறை வந்து நின்று போவதும் ஆதலாலே**
**தருபவன் ஒருவன் வேண்டும். தான் முதல் ஈறுமாகி**
**மருவிடும் – அநாதி முத்த சித்து உரு மன்னி நின்றே'**[36]

என்னும் சிவஞான சித்தியார்ப் பாடல் இறைவன் ஒருவனே என்னும் இறையுண்மையையும், இறையிலக்கணத்தையும் இனிதே இயம்புகின்றது.

**இறை சிவமே**

'சிவம்' என்னும் சொல்லுக்கு, 'நன்மை, இறையருள், மங்கலம், முத்தி' ஆகிய விளக்கங்கள் அகராதி வழி பெறப்படுகின்றன.[37] 'சிவன் என்னுஞ் சொல் 'எளிதில் நலம் தருபவன்' என்று பொருள் படும். செம்மை, செந்நிறம், நேர்மை, நீதி, ஒழுங்கு, முழுமை நன்மை முதலிய பல பொருள்களைக் குறிக்கும் ஒரு சொல்லாகும்.[38] சிவம் என்னும் சொல்லே, நன்மை என்னும் பொருள்' கொண்டமையால், திருவாசகம், சிவபெருமானை,

**'தீதிலா நன்மைத் திருவருட் குன்றே'**[39]

எனப் போற்றுகிறது.

'வேதங்களில், முதன்மையானதான இருக்கு வேதத்தில் உருத்திரன் என்னும் சொல்லே முழு முதற்கடவுள் பெயராக அமைந்தது 'சிவம் என்னுஞ்சொல் அதன் கட்காணப்படாமை என்னையெனின் ருத்ரன் எனுஞ்சொல், ருத் (துன்பம்) எனவும், த்ராவயதி (ஓட்டுகிறான்) எனவும் பகுக்கப்பட்டுத் 'துன்பத்தை நீக்குபவன்' என்று பொருடருதலினாலும்.. துன்பத்திற் கிடந்துழன்று பெரிதும் வருந்தா நின்ற உயிர்கட்கு முதலில் அவற்றின் துன்பத்தைப் போக்கி யல்லது இன்பத்தைத் தருதல் ஏலாமையினாலும், முதன்மறையாகிய இருக்கின் வாயிலாக முதற்கண் இறைவனை வேண்டலுறும் உயிர்கள், முன்னர்த் தமது துன்பத்தைத் துடைக்கும் பொருட்டே முதல்வனை வழுத்துவராதலினாலும், அவற்றின் துயரைத் தீர்க்கும் நிலையில் நிற்கும் எல்லாம் வல்ல ஆண்டவனை அதற்கேற்ப 'உருத்திரன்' என்று இருக்கு மறை பலகாலும் பரவுவதாயிற்று. தமது துன்பம் நீங்கிய அளவிலே, பின்னர் அவ்வுயிர்கள் இன்பப்பேற்றை விரும்பி அவ்விறைவனைத் தொழுவராதலின், அதற்கேற்ப அதற்கடுத்த இரண்டாம் மறையாகிய எசுர், இன்பத்தைத் தருதற்குரிய நிலையில் இன்புருவாய் நிற்கும் முதல்வனைக் குறிக்குஞ் 'சிவன்' எனுஞ் சொல்லை மிக்கெடுத்துக் கூறுவதாயிற்று. எனவே முதலாவதான இருக்குமறை, துன்பத்தை நீக்கிக் கோடலையே பொருளாகக் கொண்டு அதற்கியைந்த சொல்லால் 'உருத்திரன்' எனவும், இரண்டாவதான யசுர் மறை இன்பப் பேற்றினையேக் கருத்தாகக் கொண்டு அதற்கு வாய்ப்பான மொழியாற் 'சிவன்' எனவும் வழுத்துரை கூறிய நுட்பம் பெரிதுங் கடைப்பிடித்தல் வேண்டும்''[40] என்பது மறைமலையடிகளாரின் விளக்கமாகும்.

பஸ்மஜாபால உபநிடதக் கூற்றான,

**'ப்ரஹ்ம விஷ்ணு ருத்ராதீத**
**மேகமா சாஸ்யம் பகவந்தம் சிவம்'** [41]

என்னும் கூற்று, பிரமன், விட்டுணு, உருத்திரர் ஆகிய மூவர்க்கும், முதற்பொருள் சிவம் என்று பொருள் கொண்டு அமைகிறது. மாண்டுக்ய உபநிடதம், 'கண்ணிற்குப்புலப்படாததும், மொழிக்கு எட்டாததும், கைக்கு எட்டாததும், அளவை நூலுக்கு அடங்காததும், சிந்தைக்கு எட்டாததும், இத்திறத்தது என முடிவு கூற இயலாததும், ஒரு தனி இன்பப் பொருளானதும், உலக ஒடுக்கத்துக்கு இடமாய் உள்ளதும்,அமைதியாய் இருப்பதும், அத்துவைதமாய் உள்ளதும் ஆகிய சிவம்' என சிவத்தின் உள்ளார்ந்த பொருளை விளக்குகிறது.[42] மேற்கண்ட விளக்கங்களினால் சிவமே – முழுமுதற்கடவுள் என்ற கருத்து பெறப்படுகிறது.

இறைவன் என்னுஞ் சொல் சிவபெருமானையேக் குறிக்கும் என சைவ சமயம் உறுதிபட உரைக்கின்றது. உயிர்களைக் காப்பவன், உயிர்களின் தலைவன் என்னும் பொருள்பட 'பதி' என்னும் தத்துவக் குறியீட்டுச் சொல்லால் சைவ சித்தாந்தம் சிவபெருமானைப் போற்றுகின்றது. சிவம் என்னும் சொல், 'சித்து, சிகாரம், சிவதத்துவம் ஐந்தில் ஒன்று, சிவமே சிவ சமயம், முதற் கடவுள், பல வடிவங்களில் பேசப்படுபவன், சிவமே சத்தி, சத்தியே சிவம், ஆக்குபவனும் அழிப்பவனும் சிவனே, பக்குவப்பட்ட உயிர்களுக்கு அருள் புரிந்து உணர்த்துபவன், இரக்கமே வடிவானவனும், முதல்வனுமானவனும் சிவமே. இயற்கைப் பொருள்களில் உள்நின்று உணர்த்துபவன், குருவாகப் புறத்தே வந்து அருள் புரிபவன். மனித வடிவில் தோன்றி அருளுவது சிவத்தின் எளிமைப்பண்பு. முக்கடவுள்களில் முதன்மையானவன்'[43] என பொருள் கொள்ளப்படுகிறது. 'சிவன்' என்னும் பெயர்க்காரணத்தை,

**'குறைவிலா மங்கலக் குணத்தன் ஆதலின்**
**நிறை மலம் அநாதியின் நீங்கி நிற்றலின்**
**அறைகுவர் சிவன் என அறிவின் மேலவர்**
**இறை அவன்பெருமையை யாவர் கூறுவர்'**[44]

என்றுரைக்கும் மாதவச் சிவஞான யோகிகளின் மொழிகள் இங்கு நினைவு கூரத்தக்கவை.

சிவபெருமானின் சிறப்பினை,

**---- 'முழுவதும்**
**படைப்போற், படைக்கும் பழையோன் படைத்தவை**
**காப்போற் காக்குங் கடவுள் காப்பவை**
**கரப்போன் கரப்பவை கருதாக்**
**கருத்துடைக் கடவுள் திருத்தகும்**
**அறுவகைச் சமயத்து அறுவகையோர்க்கும்**
**வீடு பேறாய் நின்ற விண்ணோர் பகுதி**
**கீடம் புரையுங் கிழவோன்'**[45]

என திருவாசகம் இயம்புகிறது. ஆறுவகைச் சமயங்கள் என்பவை, வெவ்வேறு பெயர்களில் தத்தம் தெய்வங்களைக் கூறியபோதும், அப்பெயர்கள் உணர்த்தும் தன்மைகள், பண்புகள் அனைத்திற்கும் இடமளித்து உறைபவன் சிவபெருமானே என்னும் மாணிக்க வாசகப் பெருமானின் வாசகங்கள், நினையுந்தோறும் கருத்தாழம் மிகுந்து நம் மனத்தில் நீங்கா இடம் பெறத் தக்கனவாகும்.

வைணவ நெறியும்,

**'இன்னம் பல பல யோனியில் எய்தாநெறி பெறவே**
**முன்னம் பலர் அடி தேடவும் முடி தேடவும் எட்டா**
**அன்னம் பல பயில்வார் புனல் அணி தில்லையுள் ஆடும்**
**பொன்னம்பலநாதன் கழல் பொற்போடு பணிந்தான்'**[46]

என்றுரைத்து, பிறவித் துன்பத்திலிருந்து விடுபட, பொன்னம்பல நாதனாகிய சிவபெருமானின் திருவடிகளைச் சரணடைதல் வேண்டும் என்னும் கருத்தை வில்லிபுத்தூராழ்வாரின் கூற்றாக வெளிப்படுத்தி அமைகிறது.

சங்க இலக்கியத் தொகுப்பினுள், கூத்தராற்றுப் படையின் ஆசிரியரான பெருங்கௌசிகனார்,

**'நீர் அகம் பனிக்கும் அஞ்சு வரு கடுந்திறல்**
**பேர் இசை நவிரம் மேஎய் உறையும்**
**காரி உண்டிக் கடவுளது இயற்கையும்**[47]

எனக்குறிக்கிறார். இவ்வுலகம் அஞ்சும்படி வலிமையான நஞ்சினை உண்டவரும். புகழ் பெற்ற நவிர மலையில் உறைபவருமான கடவுள் என்னும் கருத்து, கடவுள் என்ற பெயரில், ஈண்டு இப்புலவர் குறிப்பது சிவபெருமானையே என உணர்த்துகின்றது.

இறைவன், கடவுள் ஆகிய பொதுப் பெயர்கள் சுட்டும் பரம்பொருள் சிவபெருமானே, என்பது ஐயமின்றித் தெளிவாகின்றது. சித்தர்களும் இறைவனைச் 'சிவம்' என்றே வழிபட்டனர்.

**'சிவபெருமானைச் செம்பொனம்பலவனை'**
**'கடிமலர்க்கொன்றைச் சடைமுடிக்கடவுளை'**

**'அம்பலத்தரசனை ஆனந்தக் கூத்தனை,**
**'திருச்சிற்றம்பலத்து ஒளிருஞ் சிவனை'** [48]

என்னும் பட்டினத்தாரின் பாடல் வரிகளிலும்,

**'அரியதோர் நமச்சிவாயம் ஆதியந்தம் ஆனதும்**[49]

என்னும் சிவாக்கியச் சித்தரின் வாக்கிலும்,

**'சிவன் சீர் பாதங்கண்டு தெளிந்து ஆடு பாம்பே'** [50]

என்னும் பாம்பாட்டிச் சித்தரின் பாடலிலும்,

**'எல்லாம் இருந்தாலும் ஈசன் அருள் இல்லையேல்
இல்லாத் தன்மையென்றே பசுவே...** [51]

என்னும் இடைக்காட்டுச் சித்தரின் இயம்பு மொழிகளிலும்,

**'சிவமின்றி வேறே வேண்டாதே'** [52]

என்னும் கடுவெளிச் சித்தரின் கவிதையிலும்,

**'கங்கையணி சிவசம்பு வாஞ்சற்குரு
பங்கயப் பொற்பதங் காப்பாமே'** [53]

என்னும் கொங்கண நாயனார் கூற்றிலும், இறைவன் சிவபெருமானே என்னும் ஒருமித்த கருத்து ஒளிர்வதைக் காணமுடிகிறது.

சமயங்கள் அளித்த கடவுட்கொள்கைகளும், விளக்கங்களும் ஒன்றுக் கொன்று முரண்பாடுடையவைகளாய் அமைந்திருந்ததால், அவ்விளக்கங்களில் கருத்தூன்றிய மக்கள் தமக்குள் பிளவுபட்டு நின்றனர். சமுதாயப் பிரிவினைக்குச் சமயங்களும் காரணமாயின. இவை முன்னிறுத்திய பல்வேறு இறை வடிவங்களும், நிலைகளும், சமயங்கள் தோறும் வேறு வேறு கடவுள் இருப்பது போல, ஒரு மாயத்தோற்றத்தை உண்மையற்ற நிலையை உருவாக்கின. இறை என்பது ஒன்றே. அஃது சிவமே என்னும் உண்மையை மக்கள் முன் வைத்து, சமுதாய ஒற்றுமைக்கு அடிகோலியவர்களுள் சித்தர்கள் முதன்மையானவர்கள் ஆவர்.

**'ஆழியோனும் ஈசனும் அமர்ந்து வாழ்ந்திருந்திடம்....
'எருதில் ஏறும் ஈசனும் இயங்கு சக்ரதரனையும்
வேறு வேறு பேசுவார் வீழ்வர் வீண் நரகிலே'.....
....'தில்லை நாயகன் அவன் திருவரங்கனும் அவன்
----- ஏக முத்தியும் அவன்** [54]

என்னும் சிவவாக்கியரின் சிந்தனையிலும்

**'ஒன்றான பிரமமே வெவ்வேறாக உலகத்தில்'** [55]

என்னும் காகபுசுண்டரின் கவிதையிலும், மிளிரும் சமயப் பொதுமை நோக்கும், சிவபெருமானே முதல்வன், இறைவன் என்னும் உண்மையும், சைவச் சாத்திர நூல்களிலும், தோத்திர நூல்களிலும் மிளிர்ந்தன.

**'மாலோடயனும் அமரர்**
**பதியும் வந்து வணங்கி நின்று**
**ஆலகண்டா! அரனே!**
**அருளாய் என்றென்றவரேத்த' . . . . .**
**......'அருள் பெறின் அகலிடத்திருக்கலாமென்று**
**அமரர்கள் தலைவனும் அயனும் மாலும். . . .**
**ஏத்துகின்றார் இன்னம் எங்கள் கூத்தை'**[56]

என்னும் ஒன்பதாம் திருமுறை அடிகளும்,

**'சிவனோடொக்குந் தெய்வம் தேடினும் இல்லை**
**அவனோடொப்பார் இங்கு யாவரும் இல்லை....**
**....அவனை ஒழிய அமரரும் இல்லை**
**அவனன்றி மூவரால் ஆவதொன்றில்லை'...**[57]

என்னும் திருமந்திர மொழிகளும், இறைவன் ஒன்றே அஃது சிவமே என்னும் சித்தர்களின் கருத்தை உறுதி செய்தன.

**'எவர் எவர்கள் எப்படிக் கண்டு எந்தப்படி நினைத்தார்**
**அவர் அவர்க்கு அப்படி நின்றான்'**[58]

என்னும் பத்திரகிரியாரின் ஞானப் பாடலிலும்,

**'எவ்வடிவுகளும் தான் ஆம்**
**எழில் பரை வடிவு அது ஆகி'**[59]

என்னும் உமாபதி சிவாசாரியாரின் கூற்றிலும்,

**'யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே**
**மாதொரு பாகனார் தாம் வருவர்'**[60]

என்னும் அருள் நந்தி சிவாசாரியாரின் அருளுரையிலும், தெய்வ நிலைகளும், வடிவங்களும், உருவங்களும், உயிர்களின் மனம் மற்றும் அறிவு நிலைகளுக்கேற்பவும், வழிபடும் முறைகளுக்கேற்பவும். வேறுபடினும், அவ்வடிவங்களில், அந்நிலைகளில், அவ்வழிபாட்டு முறைகளில், விளங்கி நின்று, அருள் புரிபவன் சிவபெருமானே என்ற உண்மை ஒருங்கே விளக்கப்படுகிறது.

**சிவ வடிவ நிலைகள்**

வடிவம் என்பது எல்லைகளுக்குள் அடங்குவது. இறைவனுக்கு வரையறுக்கப்பட்ட யாதொரு வடிவமும் இல்லை என்பதே உண்மை நிலையாகும்.

வடிவங்களுக்கு அப்பாற்பட்ட இறைவன், வடிவ நிலைகள் கொள்வது உயிர்களின் பொருட்டேயாகும். உருவமற்ற நிலையை உயிர்கள் உணர்ந்து கொள்வது கடினம் என்ற பெருங்கருணையினால் இறைவன் வடிவ நிலைகளைக் கொள்கிறான். சிவபெருமான் கொள்கின்ற திருமேனிகள் மூன்று நிலைகளில் அடங்குவன. அவை அருவம், அருவுருவம், உருவம் ஆகியன இதனை,

**'உருவாகி அருவாகி ஒளியாகி வெளியாகித்**
**திருவாகி நின்றது காண் குதம்பாய்'** [61]

என குதம்பைச் சித்தரும்,

**'உருவும் அருவும் ஒளியும் வெளியும்**
**கருவும் கடந்த கன மாயன்'**[62]

என திரிகோணச் சித்தரும் குறிக்கின்றனர். 'ஒளி' என்பது சிவபெருமானுடைய அருஉருவத் திருமேனியைக் குறிப்பதாகும். இம்மூன்று வடிவ நிலைகளையும் திருமந்திரம்,

**'உருவும் அருவும் உருவோடு அருவும்**
**மருவு பரசிவன் . . .'**[63]

எனக் குறிக்கிறது.

**'அருவும் உருவும் அறிஞர்க் (கு) அறிவாம்**
**உருவும் உடையான் . .'**[64]

என சைவச் சாத்திர நூலும்,

**'உரு மூன்றாய் உணர்வின் கணொன்றானானை'**[65]

என சைவத் தோத்திர நூலும் சித்தர்களின் கூற்றுக்கு அரண் செய்கின்றன.

அருவத் திருமேனி காட்சிக்குப் புலனாகாதது. சிவம், சத்தி, நாதம் விந்து ஆகியன அருவத் திருமேனிகளாகும். இவற்றை வடமொழியில் 'நிட்களம்' என்பர். 'அருவுருவம் என்பது காட்சிக்குச் சிறிது புலனாகியும், புலனாகாமலும் இருப்பது. இது ஒளி வடிவமாகும். காட்சிக்குப் புலனாகும் போதும் உறுப்புகள் இன்றி ஒளிப்பிழம்பாய்த் தோன்றும். சதாசிவம் என்பது அருவுருவத் திருமேனியாகும். இதுவே சிவாலயங்களில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கத் திருமேனியாகும். இதனைச் 'சகளநிட்களம்' எனக் குறிப்பர். உருவத் திருமேனி காட்சிக்கு நன்கு புலனாகக் கூடியது. மகேசுவரன், உருத்திரன், மால், அயன்

ஆகிய நான்கும் உருவத் திருமேனிகளாகும். இம் மகேசுவர வடிவங்கள் இருபத்தைந்தாகும். இதனைச் 'சகளம்' என வழங்குவர். 'சகளம்' என்னும் வடமொழிச் சொல் உருவம் எனப் பொருள்படும். சிவபெருமானே, சிவமும் சத்தியுமாக, உயிர்களின் பொருட்டும், ஐந்தொழில் இயற்றும் பொருட்டும், மேற்கண்ட ஒன்பது வகையான திருமேனிகளைக் கொள்வான் என்னும் கருத்து,

**'நவம் தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்'**[66]

என சிவஞான சித்தியாரில் விளக்கப்படுகிறது.

மூவகைத் திருமேனிகளும், ஐந்து நிலைகளில் வைத்து விளக்கப்படுகின்றன. அவை சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், வித்தை என்பன. இவை அனைத்தும் சத்தி பேதங்களால் ஆனவை. சத்தி என்பது. சிவத்துள் அடங்கி நிற்கும் ஆற்றலாகும். சிவம் தன் ஆற்றலாகிய சத்தியின் மூலம், அனைத்துக் காரியங்களையும் இயற்ற வல்லதாகிறது. உலகத்தில் உள்ள இருளை முழுவதுமாக அகற்ற வல்லது ஞாயிறு ஆகும். ஞாயிறு தான் நேராக இருளை நீக்காமல் தனது ஆற்றலாகிய ஒளியைக் கொண்டு நீக்குவது போல, சிவபெருமான், உயிர்களின் மல மயக்கத்தைத் தனது திருவருளாகிய சத்தியால் போக்குகிறான். சூரியனிடமிருந்து அதன் ஒளியினைப் பிரிக்க இயலாததைப் போன்று, சிவத்திடமிருந்து அருளாகிய சத்தியைப் பிரிக்க இயலாது. இதனை,

**'அருள் அது சத்தி ஆகும் அரன் தனக்கு அருளை இன்றித்**
**தெருள் சிவம் இல்லை அந்தச் சிவமின்றிச் சத்தி இல்லை**
**மருளினை அருளால் வாட்டி மன்னுயிர்க்கு அளிப்பன் கண்கட்கு**
**இருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப் போல ஈசன்..**[67]

என அருள் நந்தி சிவாசாரியார், தெளிவுபடுத்துகிறார்.

சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், வித்தை ஆகிய இவ்வைந்தும் சத்தி நிலைகளேயாகும். சத்தி என்பது ஒன்றே; பல்வேறு செயல்பாடுகளுக்காக இச்சத்தி. இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, என மூவகைப்படுத்தப்படுகிறது. இவற்றுள் இச்சா என்பது, இச்சை, அன்பு, அருள் எனப் பொருள்படும். சிவபெருமான் உயிர்களின் மீது கொண்டிருக்கும் எல்லையற்ற கருணையே இச்சாசத்தியாகும். ஞான சத்தி என்பது, உயிர்களை உய்விப்பதற்கான வழிகளைத் தம் திருவருள் கொண்டு அறிவிப்பதாகும். ஞானம் என்பது பேரறிவு நிலை. சிவபெருமானாகிய பேரறிவு, உயிர்களை அறியாமையினின்று அகற்றத் தம் திருவருள் கொண்டு, உயிர்களுக்குத் தம்மை

அறிவுறுத்துவதாகும். கிரியா சத்தி என்பது, உலக இயக்கத்திற்குக் காரணமாக அமைவது. கிரியை என்பது செயல் அல்லது இயக்கம் என்று பொருள்படும்.

இயற்பியல் அறிஞர்கள், ஆற்றலை இருவகைப்படுத்துவர். நிலைபேறுடைய ஆற்றல், [Potential Energy] இயங்கு ஆற்றல் [Kinetic Energy] என்பன அவையாகும். சத்தி நிலைகளில் ஞானசத்தி என்பது நிலைபேறுடைய நிலைத்த ஆற்றலாகும். இயக்கம் இல்லாதிருப்பினும் கூட, தன்னளவில் தன்னிலையில் ஆற்றல் கொண்டு விளங்கும் இயல்புடையது. கிரியா சத்தி என்பது, இயங்கு சத்தி நிலையாகும். இஃது அனைத்து இயக்கங்களுக்கும் காரணமாய் அமைவது. இயற்பியல் விதிப்படி ஆற்றல் தோன்றுவதுமில்லை. அழிவதுமில்லை ஒரு நிலையிலிருந்து மற்றோர் நிலைக்கு மாறக் கூடியதே ஆற்றல். நிலைபேறுடைய ஆற்றலிலிருந்து அதன் ஒரு பகுதி இயங்கு ஆற்றலாக வெளிப்படுகிறது.

ஞான சத்தி என்பது, நிலை பேறுடைய ஆற்றல், இஃது சிவம் என்னும் நிலையாகும். இந்நிலை அனைத்திற்கும் முதன்மையான நிலையாகும். இயங்கு ஆற்றல் நிலையில் கிரியா சத்தி, தனித்து விளங்குவதே சத்தி என்னும் நிலையாகும். ஞான சத்தியும், கிரியா சத்தியும் சமமான நிலையில் விளங்குவதே சதாசிவ நிலையாகும். ஞான சத்தி குறைந்தும், கிரியா சத்தி மிகுந்தும் உள்ள நிலை ஈசுரம் என்னும் நிலையாகும். கிரியா சத்தி குறைந்தும், ஞான சத்தி மிகுந்தும் உள்ள நிலை வித்தை என்றும் வழங்கப்படுகிறது.

'மற்றொரு வகையாகவும் சிவபெருமானின் திருமேனிகள் வகைப்படுத்தப் பெறும். அருவத் திருமேனிகளான சிவம், சத்தி இரண்டும் உலகம் யாவையும் ஒடுங்குதற்கு இடமாய் நிற்றலால் இலயம் என்றும், சதாசிவம் ஏனைய மூர்த்தங்களைத் தோற்றுவித்தலால் போகம் என்றும், ஈசுரத்தில் மகேசுவரத் திருமேனிகள் இருபத்தி ஐந்தும், சுத்த வித்தையில் மாலும், அயனும் தொழில் செய்வதால் அதிகாரம் எனவும் அறியப்படுகிறது. 'சிவபெருமானை 'அட்டமூர்த்தி' என்ற பெயராலும் வழங்குவர். சிவபெருமான் ஐம்பூதங்களையும், திங்களையும், ஞாயிற்றையும், இயமானன் என்னும் ஆன்மாவையும் தம் திருமேனிகளாகக் கொண்டவன்'[68] என்றும் கூறுவர்.

அருவம், அருவுருவம், உருவம் ஆகிய அனைத்து நிலைகளையும் கடந்து முழு நிறைவாய் வரம்புகளற்று நிலைபெற்றிருப்பவனே இறைவன். அவனது நிறைவில், பரிபூரணத்தில் அனைத்து உலகங்களும், உயிர்களும் அடங்கக் கூடியன. இறைவனது இயல்பினை,

**‘அருவான் உருவான் அருவுருவும் அல்லான்**
**மரியான் மரிப்பார் மனத்தான்’...**[69]

என உமாபதி சிவாசாரியார் உரைக்கிறார். இக்கருத்தினை,

**‘அருவும் உருவும் அருவுருவும் அல்லா**
**ஒருவன் உயிர்க்குயிராய் ஓங்கி’....**[70]

என அதே சொற்களில் சித்தர்களும் உறுதிப்படுத்துகின்றனர். சிவபெருமானுடைய எல்லைகளற்று, எங்கும், என்றும் நிறைந்து இயங்கும் இயல்பினால், தாம் நினைத்த வடிவங்களை நினைத்த இடங்களில் எடுக்கும் அருட் செயலை சிவஞான சித்தியார்,

**‘நிறுத்திடும், நினைந்த மேனி நின்மலன் அருளினாலே’**[71]

என விளக்குகிறது. இங்ஙனம் சிவபெருமான் வடிவங்களை மேற்கொள்வதும், உயிர்களின் மீது கொள்ளும் பெருங்கருணையினாலும், அவற்றை உய்விக்கும் பொருட்டுமாகும். அவ்வடிவங்கள் அனைத்துமே அருள் வடிவங்கள் என்றும்,

**...தனக்கு ஒன்று இன்றி அருளுரு உயிருக்கு**
**என்றே ஆக்கினன் அசிந்தன் அன்றே**[72]

என்ற அடிகளில் சிவஞான சித்தியார் தெளிவுபடுத்துகிறது.

உயிர்கள் பெற்றிருக்கும் அறிவு எல்லைகளுக்குட்பட்டு இயங்குவது. அறிவிக்க அறியும் தன்மையுடைத்து. உருவமற்ற இறைப்பொருளை, உயிர்களால் முழுமையாக அறியவோ, மனத்தால் நினைத்துப் பற்றி வழிபடவோ இயலாது. மனித மனம் மிகுந்த ஆற்றல் வாய்ந்தது தான். எனினும் கட்டுகளற்று ஓடும் குதிரையைப் போன்று நொடிகள் தோறும், மாறுகின்ற எண்ணங்களால் சலனப்படக் கூடியது. அறிவு என்னும் கடிவாளமிட்டு மனதை ஒரு நிலைப்படுத்த முயன்ற போதும், ஏதேனும் ஒரு வடிவத்தை, உருவத்தை மனத்தில் நிறுத்தியே, அதைப் பற்றிக் கொண்டு அதன் மீது, எண்ணங்களை ஒருமுகப்படுத்துதல் என்பது சாத்தியமாகிறது. பல படி நிலைகளில் நின்று இறைப்பொருளை உணரத் தலைப்பட்ட பக்குவப்பட்ட ஞானியரால் மட்டுமே உருவமற்ற இறையை, மனதுள் நிலை நிறுத்திச் சிந்தித்து அகவழிபாடு செய்ய இயலும். சிவவாக்கியர் இந்நிலையை,

**‘உருவமாய் இருந்த போது உன்னை நான் அறிந்தனன்’**[73]

என உரைக்கிறார். சிவவாக்கியரின் கருத்திற்கு,

**'அகளமாய் யாரும் அறிவு அரிது அப்பொருள்**
**சகளமாய் வந்தது என்று உந்தீ பற'**[74]

என்னும் திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனாரின் மொழிகள் அரண் செய்கின்றன.

உயிர்கள் இறை நாட்டம் கொண்டு, இறைப்பற்றுடன் விளங்கினால் மட்டுமே, மனம் பக்குவப்பட்டு, வினைகளிலிருந்து மீண்டு, வீடு பேற்று நிலையை எய்துதல் இயலும். பரந்துபட்ட வியாபகத் தன்மை கொண்ட இறைவன், பக்குவம் பெற்ற உயிர்களுக்காகத் தம் திருவருளே காரணமாக அவற்றை ஆட்கொள்ளும் பொருட்டு, அவற்றின் மீது கொண்ட எல்லையற்ற பெருங் கருணையினால் உருவத் திருமேனிகளை மேற்கொள்கின்றான்.

**'எல்லா உலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்....**
**...எல்லாரும் உய்யக் கொண்டிங்கே அளித்தலால்**
**சொல்லார்ந்த நற்குருச் சுத்த சிவமே'**[75]

என்னும் திருமந்திர மொழி, இறைவன் உருவத் திருமேனி கொண்ட காரணத்தைத் தன்னுள் கொண்டுள்ளது. இக்கருத்து, இறைவனின் எளி வந்த தன்மையை முதன்மைப்படுத்துகிறது.

**'பூவில் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்**
**ஒழிவற நிறைந்து மேவிய பெருமை**
**இன்றெனக் கெளி வந்தருளி**
**அழி தரும் ஆக்கை ஒழியச் செய்த ஒண்பொருள்**
**இன்றெனக் கெளி வந்திருந்தனன் போற்றி'**[76]

என்னும் திருவாசக அடிகளில், பூவின் மணம் போன்று எல்லையற்று பரவி நிற்கும் பரம்பொருள், தனக்காக,தன்னுடைய அழியக் கூடிய பாசங்களுடன் பிணைந்த உடலை ஒழியச் செய்து திருவருட் திறத்தால், எளி வந்து தன்னை ஆட்கொண்டமையை எண்ணி, எண்ணி, மணிவாசகப் பெருமான் உருகி நின்றமை புலனாகின்றது.

உயிர்கள் உய்யும் பொருட்டு, இறைவன் கொள்ளும் உருவத் திருமேனிகள் போக வடிவம், யோக வடிவம், வேக வடிவம் என வகைப்படுத்தப்படுகிறது. போக வடிவம் கொள்வது அம்மையப்பராய்க் காட்சி தந்து உயிர்களுக்கு உலக இன்பியல் வாழ்வை

வழங்கும் பொருட்டாகும். யோக வடிவு கொள்வது இறை இன்பத்தை நாடும் உயிர்களுக்கு, ஞானம் வழங்கும் பொருட்டு, குரு வடிவம் கொள்வதாகும். வேக வடிவம் கொள்வது. உயிர்களின் தவறுகளை தீவினைகளைக் கடிந்து, ஒறுத்து அருள் செய்யும் பொருட்டுமாம். இவ்வுண்மை சிவஞான சித்தியாரில்,

**'போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல்...**
**யோகியாய் யோகமுத்தி உதவுதல்....**
**வேகி ஆனாற் போல் செய்த வினையினை வீட்டல்'**[77]

எனத் தெளிவுபடுத்தப்படுகிறது. உயிர்களுக்காகவே இறைவன் உருவத் திருமேனிகளைக் கொள்கின்றான் என்னும் கருத்து உறுதிப்படுத்தப்படுகிறது.

இறைவன் உருவங் கொண்டு நிற்றலின், உயிர்களின் வாக்காலும், மனத்தாலும் உடலாலும் வணங்குதற்குரியவனாகின்றான். உலகத்துப் பொருட்களுள் உறைந்து நின்ற போதும், அவற்றைக் கடந்து நின்ற போதும், அண்டங்களின் தோற்ற ஒடுக்கத்திற்குத் தாமே முதற் காரணமாய் நின்ற போதும், உலகத்துப் பொருட்களில் தானும் ஒருவனாக இறைவன் என்றுமே விளங்குவதில்லை. அவற்றை விட சொற்களால் முழுவதுமாக உணர்த்தவியலாத, சொற்களில் அடங்காத மிக உயர்ந்த உன்னத இயல்பினனே இறைவன் ஆகும். இறைவனின் இயல்புகளை இன்னவை என உரைக்க இயலாத நிலையில் சிவவாக்கியர்,

**'உருவுமல்ல வெளியுமல்ல ஒன்றை மேவி நின்றதல்ல**
**மருவுமல்ல காதமல்ல மற்றதல்ல அற்றதல்ல**
**பெரியதல்ல சிறியதல்ல பேசும் ஆவிதானுமல்ல'....**[78]

என இயம்புகின்றார்.

இறைவனின் குறைவற்று எங்கும் நிறைந்து நிலைபெற்று இயங்கும் தன்மையாலும், முற்றறிவும், முடிவில்லாத பேராற்றலும் கொண்டு விளங்குவதாலும், பாசத்தின் தொடர்பு அறவே அற்று விளங்கும் இயல்பினாலும், தான் நினைத்த உருவத்தில் தான் நினைத்த இடங்களில் கால வரையின்றித் தோன்றக் கூடிய ஆற்றலுடையவனாய்த் திகழ்கின்றான். இவ்வுண்மையை அருள் நந்தி சிவாசாரியார்,

**--- பெரும் கடவுள் தானும்**
**எண்ணிய யோக சித்தர் போல் உரு இசைப்பன் காணே'**[79]

என்று குறிக்கிறார். அவ்வாறெனில், யோக சித்தர்களில் இறைவனும் ஒருவனோ என்னும் ஐயம் எழக்கூடும். யோக சித்தர் என்போர், எண் வகையான பேறுகள் (அட்டமா சித்திகள்) இறைவனருளால் படிப்படியாகக் கைவரப்பெற்றுத் தாம் நினைத்த வடிவத்தை இறையருளால் மாயையிடமிருந்து பெறுவர். மாயையிடமிருந்து பெறுவதால் அவ்வகை வடிவங்களுக்குத் தோற்றமும் முடிவும் உண்டு; வரம்புகளும் உண்டு. யோக சித்தர்கள் உயிர்களுள் ஒரு வகையினரேயன்றி, இறைவனுக்கொப்பாகார். இறைவனின் உருவத் திருமேனிகள் அனைத்தும் இறைசத்தியின் அருள் வடிவங்கள். அவற்றிற்கு தோற்றமும் முடிவும் எல்லைகளும் வகுக்க இயலாது.

**. . ‘காயமோ மாயை அன்று காண்பது சத்தி தன்னால்’**[80]

என்னும் சிவஞான சித்தியார்த் தொடர் இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

**இறை இயல்புகள்**

சைவ சித்தாந்தம் கூறும், பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள்கள் அனைத்தும், தத்தம் நிலையில், இயல்பில் பரவி நிறைந்து நிற்கும் வியாபகத் தன்மை உடையனவாகும். பசு எனப்படும் உயிரானது, உடலைச் சார்ந்தே உலகத்தில் இயங்குகிறது. உயிர் கொண்டுள்ள அறிவும், தானாக அறியும் ஆற்றல் அற்றது. அறிவிக்க அறியும் இயல்புடையது. எனவே உயிர்கள் அறியும் பொருட்டு இறைவன் அவற்றினுள் உறைந்துள்ளான். உலகத்தில் உள்ள எந்த சடப் பொருளும் தானாக இயங்குவதில்லை. இயக்கமற்ற பொருளே சடம் ஆகும். எனவே தாமே இயங்க இயலாத சடப்பொருட்களையும் இறைவன் அவற்றுடன் ஒன்றாக இருந்து இயக்குகிறான். இங்ஙனம் அறிவுடைய உயிராக இருப்பினும், அறிவற்ற சடப்பொருளாக இருப்பினும், அனைத்துப் பொருட்களிலும், அவற்றின் இயல்புகளுக்கு ஏற்ப, இறைவன் அவற்றுடன் ஒன்றாக இருந்தே அவற்றை இயக்குகிறான் என்ற உண்மை பெறப்படுகிறது. அறிவுள்ள உயிர்களுக்கும், அறிவற்ற சடப்பொருள்களுக்கும் தனது முழு நிறைவில், பரிபூரணத்தில் இடமளித்து, அவற்றினுள் உறைந்தும் விளங்குகின்றான். இவ்வாறு இறைவன், உயிர்களிடத்திலும் உலகத்துப் பிறபொருட்களிலும், உறைந்திருத்தலை, சைவ சித்தாந்தம் ‘ஒன்றாய் நிற்றல்’ என்றுரைக்கின்றது.

**‘பாசம் உடலாய்ப் பசு அதுவும் தான் உயிராய்**
**நேசமுடன் நீ பொருளாய் நின்றனையே’**[81]

என்னும் பட்டினத்தார் பாடலும்,

**'எள்ளில் தைலம் போல் எங்கும் நிறை பொருளை'...**[82]

என்னும் இடைக்காட்டுச் சித்தரின் மொழியும், 'ஒன்றாய் நிற்றல்' என்னும் சைவ–சித்தாந்தக் கருத்தையே எதிரொலிக்கின்றன.

இறைவன், அறிவுள்ள உயிர்கள், அறிவற்ற சடப்பொருள்கள் ஆகியவற்றோடு ஒன்றாய் இருத்தல் என்பது, அவை அனைத்தையும் இயக்கவல்ல தலைவனாய், இறைவன் மட்டுமே விளங்குவதால் சாத்தியமாகிறது 'இறைவன், உயிர்களுடன் ஒன்றாய் நிற்றலை, இரண்டற்ற தன்மை, இரண்டற்ற கலப்பு என்றுரைக்கிறார் உரையாசிரியர் இளவழகனார்'.[83] இரண்டறக்கலப்பு என்பது இரண்டற்ற தன்மையில் அமைவது. இரண்டறக் கலந்த பொருளை ஒன்று என்றோ இரண்டு என்றோ கூறவியலாது. இரண்டற்ற நிலையில் கலந்த பொருட்கள் இரண்டு என்றும், கலப்பில் அவை இரண்டில்லாதபடி ஒன்றாய்க் கலக்கின்றன என்றும் பொருள்படும். எடுத்துக் காட்டாக பாலில் நீர் கலந்த பின்பும் அதனைப் பால் என்றே கூறுகிறோம். ஆனால் அதனுள் பால் என்ற ஒன்றும், நீர் என்ற ஒன்றும் இரண்டு பொருட்கள் இருப்பதை நாம் அறிவோம். இவ்விரு பொருட்களும் வேறு, வேறு தன்மைகள் கொண்டவை. ஒன்றாகக் கலந்த போது ஒரே பொருளாகத் தோற்றமளிக்குமே, தவிர தத்தம் தன்மைகளிலிருந்து. இயல்புகளிலிருந்து மாறுபடுவதில்லை. இங்ஙனமே இறையும், உலகத்துப் பொருட்களும் ஒன்றாய் நிற்கும் நிலை, ஒன்றாய் நிற்றல்' என்னும் இயல்பு விளக்கப்படுகிறது. இந்நிலையைப் பத்தாம் திருமுறை,

**'ஒன்றும் இரண்டும் இலதுமாய் ஒன்றாக**
**நின்று .......**[84]

எனக்குறிக்கிறது. சைவச் சாத்திர நூலான திருக்களிற்றுப் படியார்,

**'வானகமும் மண்ணகமுமாய் நிறைந்த வான்பொருளை**
**....... மண்முதலாம்**
**ஆதனமே அன்றோ அதற்கு'**[85]

என்று விளக்கமளிக்கிறது.

உயிர்களுடனும், உலகத்துப் பொருட்களுடனும், ஒன்றாய்க் கலந்திருக்கும் அந்நிலையிலும், இறைவன் அவற்றின் வேறாகித் தானேயாய் விளங்குவான். உயிர்களின் இயல்பு சிற்றறிவுடைமை. அவ்வறிவும் பாசத்தால் பிணைக்கபட்டு மறைக்கப்பட்டுள்ளது. இறைவன் உயிரறிவை விளக்கி, பொருள்களை அறியும் தகுதியை அடையச் செய்கின்றான். இறை அறிவு அறிவிக்க, உயிரறிவு அறியும் தன்மைத்து. ஏனைய உலகத்துப் பொருட்கள் இறைவனால் இயக்கப்படுவதால் இயங்குகின்றன. இங்ஙனம் உயிர்களுக்கு அறிவுறுத்தும் பொருட்டும், அறிவற்ற சடப்பொருள்களை இயக்கும் பொருட்டும், இறைவன் அவற்றுடன் ஒன்றாய்க் கலந்து நின்றும், வேறாகி நின்றும் விளங்க வேண்டியுள்ளது. பொருட்களின் தன்மைகளுக்கு ஏற்றவாறு அவற்றினுள் கலந்து நிற்கும் இறைவன், வேறாய் நிற்கும் போது பொருட்களைக் கடந்து நிற்கின்றான். கலந்தும், கடந்து வேறாகியும் நிற்கும் நிலையில் தான் அறிவுறுத்துதலும் இயக்குதலும் சாத்தியமாகிறது. இறைவன் உயிர்களுடன் ஒன்றாய்க் கலந்த நிலையிலும், சற்று உற்று நோக்குங்கால், இறைத்தன்மை வேறு உயிர்த் தன்மை வேறு என்பது புலப்படுகின்றது. எனவே வேறாய் நிற்றல் என்ற சொல்லும் பொருத்தமுடையதாகிறது.

உமாபதி சிவாசாரியார் இறைவனது வேறாகி நிற்கும் இயல்பினை, சூரிய ஒளியும், கண்ணொளியும் போல் என்னும் எளியதொரு உவமையால் விளக்கிக் காட்டுகிறார்.[86] கண் காணக் கூடிய இயல்புடையது தான். எனினும் இருளில் கண்ணால் ஒன்றையும் காண இயலாது. சூரிய ஒளியோ, விளக்கொளியோ ஒரு பொருள் மீது பட்டு, அப்பொருளைத் தெரியப்படுத்தினால் மட்டுமே கண்ணொளியால் காண இயலும். சூரிய ஒளியும் கண்ணொளியும் வேறு வேறு. சூரிய ஒளி இறைவனுக்கும், கண்ணொளி உயிருக்கும் உவமைகளாகின்றன. கண்ணொளியினின்று வேறாகி நின்று, சூரிய ஒளி உணர்த்தினால் மட்டுமே, பொருட்களைக் கண்ணால் காண முடிகிறது. வேறான சூரிய ஒளி கண்ணொளியோடு கூடி நின்றால் தான் ஒரு பொருளைக் காண முடிகிறது. இது போலவே உயிர் அறியும் தன்மை பெற்றிருந்தும், தானாக எதையும் அறிய முடியாது. இறை அறிவு அறிவிக்கவே அறியும். உயிரின் அறிவை விளக்கி அறிவிக்கவும், சடப்பொருட்களின் இயக்கத்திற்கும் இறைவன் அவற்றினின்று வேறாகி நிற்றல் அவசியமாகிறது.

இறைவன் உயிர்களுடன் ஒன்றாகவும், அவற்றினின்று வேறாகவும் விளங்கும் தன்மையை,

**'எவ்வுயிரும் எவ்வுலகும் ஈன்று புறம்பாய்**
**இருந்து திருவிளையாட் டெய்தியும், பின்னர்**
**அவ்வுயிரும் அவ்வுலகும் ஆகியு நின்ற**
**ஆனந்த வெள்ளம்....**[87]

எனப் பாம்பாட்டிச் சித்தர் உரைக்கிறார்.

இறைவன், ஒன்றாய், வேறாய் நின்று உணர்த்துவதால் அறிவு விளக்கம் பெறும் உயிர்கள், பின் தாமே பொருளை அறிவதில்லை. உயிரறிவு பொருளை அறியும்படி இறைவன், அதனோடு தானும் உடன் நின்று அறிய வேண்டும். ஒன்றாகிக் கலந்து நிற்றலை விட, வேறாகி நிற்றலை விட, உடனாகி நிற்றல் என்பது, உயிர்களின், உலகத்துப் பொருட்களின் தொடர் இயக்கத்திற்கு அவசியமாகிறது. சூரிய ஒளி ஒரு பொருளை விளக்கிக் காட்டினால் மட்டும், கண்ணொளி அதனைக் கண்டு விடுவதில்லை. கண் காணும் போது, அறிவும் உடன் இயைந்து செயல்பட்டால் தான், அப்பொருளை நம்மால் கண்டு உணர முடியும். கண்ணொளி மூலம் அப்பொருளை நாம் காண, கண்ணொளியுடன் உயிரறிவு இணைந்து, உடனாகி நின்று அறிவிக்கிறது. உயிரறிவுடன் இறைவன் உடனாகி நின்று அறிவிக்கவில்லையெனில். உயிர்கள் எதையும் அறியமாட்டாது. எனவே உயிர்கள் பொருள்களை அறிந்து அனுபவிப்பதற்கு இறைவன், உயிர்களுடன் உடனாய் நிற்றல் இன்றியமையாததாகிறது. சடப்பொருட்களின் தொடர் இயக்கமும் இறைவன் அவற்றுடன் உடனாகி நின்று அவற்றை இயக்குவதால் தான் நடைபெறுகிறது. இறைவன் ஒன்றாய், வேறாய், உடனாய் நிற்கும் நிலையை,

**''உள்ளினும் புறம்பினும், உலகம் எங்கணும் பரந்து**
**எள்ளில் எண்ணெய் போல நின்று இயங்குகின்ற எம்பிரான் '...**[88]

எனச் சிவவாக்கியரும்,

**'என்னை விட்டு நீங்காமல் என்னிடத்து நீ இருக்க'....**[89]

என்று பத்திரகிரியாரும்.

**'உள்ளும் புறம்புமாய் உடலுக்குள் நீயிருந்தது.'**[90]

எனப் பட்டினத்தாரும். தம் பாடல்களில் நிறுவுகின்றனர். சித்தர்களின் கூற்றை,

**'உலகு எலாம் ஆகி வேறு ஆய் உடனுமாய்'....**[91]

என சைவச் சாத்திர நூலும் ,

**ஊனாய் உயிர் புகலாய் அகலிடமாய் ,....**[92]

என சைவத்தோத்திர நூலும் ஆமோதிக்கின்றன.

இறைவன் உயிர்களுடன் ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும் நிற்பதைச் சைவ சித்தாந்தம், அத்துவிதம் என்றுரைக்கிறது. அத்துவிதம் என்னும் சொல், இரண்டாக இருப்பினும், வேறு வேறு இன்றிக் கலந்து நிற்கும் தன்மை எனப்பொருள் கொள்ளப்படும். இந்நிலையை மெய்கண்டார்.

**'அவையே தானே ஆய்' .....**[93]

எனக் குறிக்கிறார். இத்தொடருக்குப் பொருள் விளக்கம் அளித்த மாதவச் சிவஞான யோகிகள் 'அவையே தானே ஆய் என்பதனை இரட்டுற மொழிதலான், அவையேயாய்த், தானேயாய், அவையே தானேயாய்....'[94] என்றுரைக்கிறார். அவை என்பது உயிர்களைக் குறிக்கும். உயிர்களோடு இறைவன் அவையேயாய் இருப்பான். தானே யாய் இருப்பான்; அவையும் தானுமாய் இருப்பான் என்பதாகும். அவையேயாதல் என்பது ஒன்றாய் நிற்றலையும், தானே யாதல் என்பது வேறாகி நிற்றலையும் அவையும் தானுமாதல் என்பது உடனாய் நிற்றலையும் குறிக்கும்.

**பதியின் ஐந்தொழில்கள்**

உயிர்களுடன் கலந்தும் அவற்றைக் கடந்தும் இறைவன் நின்று நிலைத்திருப்பது உயிர்களை மேனிலையுறச் செய்வதற்காக, ஐந்தொழில்களை ஆற்றும் பொருட்டேயாகும். எல்லையற்ற ஆற்றல் கொண்ட பேரறிவுடைய, நிலைத்த, முடிவில்லாத பரம்பொருள், பாசங்களால் கட்டுண்டு அறியாமையில் உழல்கின்ற உயிர்களுடன் இயைந்து நிற்பது என்பது , இறைவனின் அளவற்ற பெருங்கருணையினால் விளைவதன்றிப் பிறிதில்லை. பேரருள் கொண்டு, உயிர்களின் பொருட்டே இறைவன் அவற்றுடன் இயைந்து நின்று ஐந்தொழில் ஆற்றுகிறான்.

இறைவனின் செயல்களைப் படைத்தல் , காத்தல், அழித்தல் என மூன்று வகைப்படுத்துவது உலக வழக்கமாகும். இவற்றுடன் மறைத்தல், அருளல் ஆகிய இரு செயல்களையும் இணைத்து, சைவ சித்தாந்தம் ஐந்தொழில்கள் என்றுரைக்கிறது. இறைவன் உயிர்களைக் காக்கும்போது ,அவற்றிற்கு உலக அனுபவங்களைத் தந்து,

தன்னை மறைத்து நிற்றலின் மறைத்தல் என்பது காத்தல் தொழிலிலும், அழித்தல் என்பது, பிறவிகள் தோறும் தொடர்ந்து துயருறும் உயிர்கள், இளைப்பாறுதலின் பொருட்டு நிகழ்த்தப்படுவதால் இதற்கும் இறையருளே காரணமாவதால் அஃது அருளல் தொழிலிலும் அடங்குகின்றன. இங்ஙனம் ஐந்தொழில்களும், முத்தொழில்களுள் அடங்குவனவாகும்.

உயிர்களின் அறிவையும் செயலையும் மறைத்து நிற்கும் தன் முனைப்பு நலிவடைந்து , உயிர்கள் தளைகளிலிருந்து நீங்கும் பொருட்டே படைத்தல் தொழில் மேற்கொள்ளப்படுகின்றது. உயிர்களுக்குள்ள வினைப்பயன்களை அவை நுகர்வதற்காகவும், நுகர்ந்து வினைகளைத் தொலைப்பதற்காகவும் காத்தல் தொழில் நடைபெறுகிறது. பிறப்பு , இறப்புகளில் பட்டு வருந்துகின்ற உயிர்களுக்கு, வினைகளால் ஏற்படும் களைப்பு நீங்குதற் பொருட்டு அழித்தல் தொழில் நடைபெறுகிறது. வினைப்பயன்களைத் துய்க்கும் போது, அவற்றில் உயிர்களுக்கு ஈடுபாடு ஏற்படும்படி செய்து, இறைவன் தன்னை மறைத்து நிற்றலே மறைத்தல் தொழில் ஆகும். வினைப்பயன்களை நுகர்ந்தொழித்து, தன் முனைப்பு அகன்ற நிலையில் உயிரறிவை விளக்கித் தன் திருவடிப்பேற்றினை உயிர்களுக்கு வழங்குதல் அருளல் ஆகும்.

இறைவன் மேற்கொள்ளும் இவ்வைந்து தொழில்களையும், சர்வசிருஷ்டி, திதி, சம்ஹாரம், திரோபவம், அனுக்கிரஹம் எனத் திருமூலர் வரிசைப்படுத்தி விவரிக்கின்றார்....[95] இறைவனை,

**‘ஐந்து தொழிற்கும் உரியோன் அநாதி’.....**[96]

எனக் குதம்பைச் சித்தர் குறிக்கிறார்.

**.....‘அனைத்துலகும்**
**ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய்**
**போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின் தொழும்பின்.....**[97]

என்னும் திருவாசகப் பகுதி. இங்கு நினைவு கூரத்தக்கதாகும். இத்துடன் அமைந்து விடாமல் இறைவனின் திருவடிச் சிறப்பினைச் சிறப்பிக்கையில்,

**‘போற்றி எல்லா உயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்**
**போற்றி எல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்**

**போற்றி எல்லா உயிர்க்கும் ஈறாம் இணையடிகள்**
**போற்றி மால் நான்முகனுங் காணாத புண்டரிகம்**
**போற்றி யாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன் மலர்கள்...'**[98]

என்றுரைக்கிறார். இறைவனின் திருவடிகள், எல்லா உயிர்க்கும் தோற்றமாம் என்றதால் படைத்தலையும், போகமாம் என்றதால் காத்தல் தொழிலையும், ஈறாம் என்றதால் அழித்தலையும், காணாத என்றதால் மறைத்தலையும், ஆட்கொண்டருளும் என்றதால் அருளலையும், ஆகிய ஐந்தொழில்களையும் இயற்றுகின்றன என மாணிக்கவாசக சுவாமிகள் போற்றுகின்றார். மணிவாசகப் பெருமானின் கூற்றை அவ்வாறே உமாபதி சிவாசாரியாரும் வழி மொழிகின்றார்....[99]

**படைத்தல்**

படைத்தல் என்பது இல்லாத ஒரு பொருளை உண்டாக்குதல் என்பதன்று. ஒவ்வொரு பொருளுக்கும் இயல்பாக இரு நிலைகள் உள்ளன. 1. காரணநிலை, 2. காரிய நிலை காரணநிலை யென்பது சூக்குமமானது. கண்களுக்குப் புலப்படாத நிலையாகும். காரிய நிலை யென்பது தூலமானது. கண்களுக்குப் புலப்படக்கூடியது. காரணமின்றிக் காரியமில்லை. காரண நிலையில் நிற்கும் பொருட்களைக் காரிய நிலைக்குக் கொண்டு வருதலே படைத்தலாகும். சூக்கும நிலையில், அநாதியாக ஆணவமலப் பிடிக்குள் அகப்பட்டு, அறியாமை வயப்பட்டுக் கிடக்கும் உயிர்களுக்கு, அறிவு விளக்கம் ஏற்படக்கருதி உயிர்களுக்கான உடல் (தனு), மனம், புத்தி , சித்தம் , அகங்காரம் (கரணம்) ஆகிய உட்கருவிகள், உயிர்கள் உடலுடன் வாழ்வதற்கான இடம் இவ்வுலகம் (புவனம்) உடலும் உயிரும் அனுபவிக்கும் இன்ப நுகர்ச்சிப் பொருட்கள் (போகம்) ஆகியவற்றை உண்டாக்கி அவற்றை இயங்கும் நிலைக்குக் கொண்டு வருதலே படைத்தலாகும். உயிர்கள் தத்தம் வினைப்பயனை நுகர்தல் வேண்டி படைத்தல் தொழில் இயற்றப்படுகின்றது.

**காத்தல்**

தூல நிலைக்குக் கொண்டு வரப்பட்ட உயிர்களை, அவற்றின் தனு, கரண, புவன போகங்களை, ஒரு குறிப்பிட்ட கால எல்லை வரை நிறுத்தி வைத்து (அவை தம் வினைப்பயனை அனுபவித்து முடிக்கும் வரை) உயிர்களுக்குப் பயன்படும்படி செய்தல் காத்தல் எனப்படுகிறது.

## அழித்தல்

அழித்தல் என்பது முற்றிலும் இல்லாமல் செய்து விடுவதன்று. உயிர்களிடமிருந்து தனு கரண புவன போகங்களைப் பிரித்து, தூல நிலையில் இயங்கிக்கொண்டிருந்த உயிரைச் சூக்கும நிலைக்குக் கொண்டு சென்று மாயையில் ஒடுக்குதலே அழித்தலாகும். தொடர்ந்து பிறவிகளெடுத்து வினைப்பயன்களை அனுபவித்து உழன்றதால், உயிர்களுக்கு ஏற்படும் இளைப்பானது நீங்கும் பொருட்டே அழித்தல் தொழில் நடைபெறுகிறது.

## மறைத்தல்

தன் முனைப்பு உயிர்களுக்கு அறியாமையை அளிக்கிறது. உயிர்கள் தன் முனைப்பைச் சார்ந்து நின்று அறியாமையில் அழுந்துகின்றன. தன் முனைப்பின் ஆற்றலினால், உயிர்கள், யான் எனது என்னும் செருக்குடன் இயங்குவதால், கன்மத்தையும் மாயையையும் இணைத்து, உயிர்களுக்கு உலக இன்பங்களைக் காட்டுவித்து, அவை உலகத்தையே நோக்கி இயங்குமாறு செய்து, இறைவன் தன்னை மறைத்து நிற்றலே மறைத்தல் தொழிலாகும். ஆணவம், கன்மம், மாயை ஆகியன, உயிர்களுடன் இணைந்து தொடர்ந்து இயங்கும் போது நலிவடைகின்றன. அவற்றின் ஆற்றல் படிப்படியாகக் குறைந்து உயிர்களிடமிருந்த அறியாமை மெல்ல அகன்று விடும். எனவே மறைத்தல் தொழிலும், உயிர்களின் அறியாமையை அகற்றி, அறிவு விளக்கம் அளிப்பதற்காகவே நடைபெறுகிறது.

## அருளல்

தொடர்ந்து வரும் பிறப்புக்களில் பிறந்து உழன்றதால், உயிர்களுக்கு ஆணவப்பற்று சிறிது சிறிதாகக் குறைகிறது. இதனால் அறியாமை மெல்ல அகல்கிறது. உயிர்களின் அறிவு, விளக்கம் பெறுதலின் இறைப்பற்று மிகுகிறது. இறைப்பற்று மிகுதலால், கட்டுக்களிலிருந்து விடுபட வேண்டும் என்னும் விருப்பமும், இறைவனை உணர்ந்து திருவடிகளைச் சேர வேண்டும் என்னும் நோக்கமும் எற்படுகின்றது. இந்நிலையில் இறைவன் அறியாமையினின்று உயிர்களைக் காத்து, உயிர்களுக்கு தன்னை அறிவுறுத்தித் தன் பேரருளால் தன் திருவடிக்கீழ் இருந்து பேரின்ப நிலையை எய்துவதற்கு அருளல் தொழிலை மேற்கொள்ளுகிறான்.

ஐந்தொழில்களுள் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்றும் மாயை என்னும் சடப்பொருளினிடத்தும், மறைத்தல் அருளல் ஆகிய இரண்டும் உயிர்களிடத்தும் நிகழ்வன. எனினும் இவ்வைந்து தொழில்களுமே. உயிர்கள் முத்திப்பேற்றினை அடைய வேண்டும் என்னும் இறைவனின் பெருங்கருணையினால் நிகழ்த்தப்படுவனவாகும்.

ஐந்தொழில், அதிசூக்கும் ஐந்தொழில், சூக்கும ஐந்தொழில் தூல ஐந்தொழில் என மூவகைப்படுத்தப்படுகிறது. உயிர்கள் பிறப்புக்கு உட்பட்டு, உலகத்தில் இயங்கும் காலத்தில் இறைவன் அவற்றின் உயிர்க்குயிராய் நின்று, இடைவிடாமல் அறிவித்து இயற்றுவது அதிசூக்கும நிலையாகும். இந்நிலையில் ஐந்தொழில்களும், உயிர்களிடத்தே நிகழ்கின்றன. 'உயிர்கள் பிறப்புக்கு உட்படுவதற்கு முன் உள்ள கேவல நிலையில் அவை பிறப்புக்கு உட்படும் தகுதி உடையனவா என்றறிதல். (படைத்தல்) அத்தகுதி இல்லாத உயிர்களை கேவலத்தில் வைத்தல். (காத்தல்) தகுதி உள்ளனவற்றைக் கேவலத்தினின்று நீக்குதல், (அழித்தல்) கேவலத்தில் உள்ள உயிர்களுக்கு அந்நிலை தோன்றாது இருக்கச் செய்தல், (மறைத்தல்) தகுதியான உயிர்களைப் பிறப்புக்கு உட்படுத்துதல், (அருளல்) ஆகிய ஐந்தொழில்களும் இறைவன் தன் இடத்திலேயே, சூக்கும நிலையில் நிகழ்த்தப்பெறுவதால் சூக்கும ஐந்தொழில்கள் எனப்படுகின்றன...'[100] தூல ஐந்தொழில் என்பது, சங்கார காலத்தில் மீண்டும் உலகத்தைக் தோற்றுவிக்கும் பொருட்டு, மாயையினின்று தனு, கரண, புவன போகங்ளைத் தோற்றுவித்துக் காத்து, அழித்து, மறைத்து, அருள் செய்து ஆகிய ஐந்தொழில்களையும் இறைவன் இயற்றும் நிலையாகும். இவை சடப்பொருளான பாசத்தில் நிகழ்வனவாகும். இவற்றை சிவஞான மாபாடியம் விரிவாக விவரிக்கின்றது...[101]

ஒரு பொருள் மற்றொரு பொருளின் சார்பினால் ஏற்கும் தன்மை, பொது இயல்பு ஆகும். இறைவனின் இயல்புகள் எப்பொருளின் சார்பினாலும் மாறுபடுவதில்லை. என்றும் ஒரே தன்மையதாய் விளங்குவதே இறை ஆகும். பதியின் பொது வியல்பென்பது. மேற்கண்டவாறு உயிர்களின் பொருட்டு படைத்தல், காத்தல், அழித்தல் மறைத்தல் அருளல் ஆகிய ஐந்தொழில் ஆற்றுவதும் உயிர்கள் வழிபட்டு உய்யும் பொருட்டு உருவம் ஏற்பதும் ஆகும் என சைவசித்தாந்தம் விவரிக்கின்றது.

இறைவனின் சிறப்பியல்பாவது, தனித்திருந்து எண்குணங்கள் உடையவனாய் நிலைபெற்று விளங்குதலாகும். தன்வயம் உடைமை, தூய உடம்பு, உடைமை, இயற்கை

உணர்வு உடைமை, முற்றுணர்வு உடைமை, இயல்பாகவே பாசம் இன்மை, பேரருள் உடைமை, முடிவில் ஆற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை ஆகிய இவை இறைவனின் எண்குணங்களாகும். இதனை,

**'எண் குணத்தான் எல்லார்க்கும் இறைவனனெல்லாம் வல்லான்' ...**[102]

என வடலூர்ச் சித்தர் வள்ளலார் குறிக்கிறார். இக்கருத்து

**'எட்டுகொலாம் அவர் ஈறில் பெருங்குணம்' . . .** [103]

என அப்பர் அடிகளால் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

**தன் வயம் உடைமை**

தான் விரும்பியவற்றைத் தான் விரும்பியவாறு செய்தல், பிறர் வயப்பட்டு நடவாமை, குறைவற்ற முழுமையான சுதந்திரத்துடன் இயங்குதல். எல்லா நிலைகளிலும் சுதந்திரமான இயக்கமே, பதி எனப்படும் தலைவனுக்கு இன்றியமையாததொரு பண்பாகும். அத்தகைய முழுமையான சுதந்திரம் என்பது ஒருவனுக்குத் தான் இருக்க முடியும். சிவபெருமானே அனைத்திலும் முழுமையான முதன்மை பெற்று விளங்குவதால் முழுமுதற் கடவுள், சர்வேசுவரன், பதி, இறைவன், கடவுள் ஆகிய சொற்கள் அனைத்தும் சிவபெருமானையேக் குறித்து நிற்பனவாகும். சிவபெருமானே ஏகன் என்று வழிபடப்படுகிறான்.

**'ஏக நாயகனை, இமையவர்க்கு அரசை. . .'** [104]

என்பது சேந்தனாரின் செந்தமிழ் வாக்காகும்.

**'ஊட்டுவிப்பானும் உறங்குவிப்பானும் இங்கு ஒன்றொடொன்றை**
**மூட்டுவிப்பானும் முயங்குவிப்பானும் முயன்ற வினை**
**காட்டுவிப்பானும் இரு வினைப்பாசக் கயிற்றின் வழி**
**ஆட்டுவிப்பானும் ஒருவன் உண்டே தில்லை அம்பலத்தே . . .** [105]

என அத்தனை செயல்களையும் தன் வயத்துடன் இயற்றக் கூடியவன் ஒருவனே; அவனே தில்லையில் உறையும் சிவபெருமான் என பட்டினத்தாரும் உறுதிப்படுத்துகின்றார்.

**தூய உடம்பு உடைமை**

இறைவன் அருவம், அருவுருவம், உருவம் ஆகிய மூன்று வகைகளிலான திருமேனிகளைக் கொள்பவன் ஆவான். இவை அனைத்துமே உயிர்கள் மீது கொண்டுள்ள கருணையினால், உயிர்களின் பொருட்டுக் கொள்ளும் திருவருள் வடிவங்களே, தன் முனைப்புச் சார்பு கொண்டு இயங்கும் உயிர்களின் மாயாகாரிய வடிவம் போலல்லாது, இன்னது. இப்படிப்பட்டது என வரையறுக்க இயலாத பேரருளே, இறையருளே, திருமேனிகளாகக் கொண்டவனாதல்.

**இயற்கை உணர்வு உடைமை**

தன் இயல்பான அறிவுடன் விளங்குதலே இயற்கை உணர்வு உடைமையாகும். உலகத்துப் பொருட்களையும், பிறவற்றையும் பற்றிய அறிவு உயிர்களுக்கு ஐம்புலன்கள் மூலமாகவும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் உள்ளிட்ட கருவிகளைக் கொண்டும், கற்றல், கேட்டல், சிந்தித்தல் ஆகிய செயல்களின் மூலமே பெறப்படுகிறது. இஃது இயல்பான அறிவு அன்று. இவ்வறிவு, பிறர் அறிவிக்க பிற பொருட்களின் துணை கொண்டு பெறும் அறிவாகும். இவ்வாறன்றி, இறைவனின் இயல்பே அறிவாகும். இவ்வறிவு தானாக, தன்னியல்பாய், இயற்கையாக அமைந்த அறிவாகும். இக்கருத்தைப் பட்டினத்தார்,

**'அறிவாகி நின்ற அளவறியேன் பூரணமே' . . .** [106]

எனக் குறிக்கிறார்

**'பல் ஆர் உயிர் உணரும் பான்மை என மேல் ஒருவன்**
**இல்லாதான் எங்கள் இறை ' . . . . . .** [107]

என்னும் உமாபதி சிவாசாரியாரின் கூற்றிலும் இறைவனின் இயற்கை உணர்வு உடைமை புலப்படுகின்றது.

**முற்றுணர்வு உடைமை**

இறை அறிவு, இயல்பாய் விளங்குவதோடின்றி, ஏக காலத்தில் அனைத்துப் பொருட்களையும் முழுமையாக அறியும் முற்றறிவு ஆகும். உயிர்களின் அறிவு ஒரு காலத்தில், ஒரு பொருளைக் குறிப்பிட்ட எல்லை அளவே அறியும் இயல்புடையது. இவ்வறிவும் காலத்திற்கேற்ப மாறுபடும் சிற்றறிவாகும். இஃது முழு அறிவு ஆகாது.

உயிர்களால் தம் அறிவைக் கொண்டு, ஒரு பொருளை, ஒரு காலத்தில் முழுமையாக அறிதல் என்பது இயலாது. இறைஅறிவு, எல்லைகளற்று அனைத்துப் பொருட்களையும் ஏக காலத்தில் முழுமையாக அறியும் அறிவாகும். இஃது முற்றறிவு என்பதாகும்.

**இயல்பாகவே பாசம் இன்மை**

மும் மலங்களால் பிணைக்கப்பட்டிருக்கும் உயிர்களைப் போல்லாமல், தளைகளின் சார்பு இன்றி, கட்டுப்பாடு இன்றி, தூய்மையுடன் விளங்குவதாகும். இறைவனின் இத்தன்மையைத் திருமூலர்,

**'நின் மல மேனி நிமலன் ' ....**[108]

என இயம்புகிறார்.

**பேரருள் உடைமை**

எண்ணற்ற உயிர்கள் ஆணவ மலப் பிடியுள் சிக்குண்டு அறியாமையில் அழுந்தி, பேரின்பம் துய்க்க இயலாது, துன்புறுவதைக் கண்டு அவற்றை உய்விப்பதற்காகத் தம் திருவருள் கொண்டு அருட் செயல்களை மேற்கொள்ளுதலே பேரருள் உடைமையாகும். உயிர்களுக்குப் பாச நீக்கம் செய்து நிலைத்த இன்பத்தை நல்குதல் வேண்டும் என்று இறைவன் திருவருள் கொள்ளுதலே பேரருளுடைமையாகும்.

**முடிவில் ஆற்றலுடைமை**

இறைவனுடைய இயல்புகளில் ஒன்று, முற்றுணர்வு. முற்றுணர்வு என்பது எல்லைகளற்று விளங்கும் முழுமையான பேரறிவு இப்பேரறிவு அனைத்துச் செயல்களையும் எல்லாக் காலங்களிலும் செய்ய வல்ல பேராற்றல் கொண்டது. ஆற்றல் என்பது சத்தி ஆகும். சிவபெருமானுடைய சத்தியே பல நிலைகளில், அண்டங்களின் இயக்கத்திற்குக் காரணமாய் அமைகிறது. இறைவனது ஆற்றல் வரம்புகளற்று, தோற்ற ஒடுக்கமற்று தொடர்ந்து இயங்கும் முடிவில் ஆற்றலாகும். இத்தன்மை குறித்தே, உலகியல் வழக்கில் எந்தவொரு நிகழ்ச்சியைத் தொடங்கும் போதும், ' எல்லாம் வல்ல இறைவன் திருவருளால்' என்றுரைத்துத் தொடங்கும் வழக்கம், வழக்கில் இருந்து வருகிறது.

**வரம்பில் இன்பம் உடைமை**

குறைவற்ற நிலைத்த பேரின்பமுடைமை: இறைவன் யாதொரு குறையுமில்லாதவன்; நிறைவான எல்லைகளற்ற நிலைபேறுடைய இன்பம் உடையவன். இறைவனது இவ்வியல்பே, 'வீடு பேறு அடைதல்' என்னும் சொல்லுக்கு, நிலைத்த பேரின்ப நிலையை எய்துதல் என்று பொருள் கொள்ளக் காரணமாகிறது. இறைவனின் இவ்வியல்பினை, அகப்பேய்ச் சித்தர்,

**'இறைவனென்றதெல்லாம் அகப்பேய் . . . .**
**அறைவ நீ கேளாய், ஆனந்தமானதடி...**[109]

என மொழிகிறார். இக்கருத்தை , எட்டாந் திருமுறையும்,

**. . . யாவையுங் கடந்த இன்பமே** [110]

என எதிரொலிக்கின்றது.

சைவ சித்தாந்தமும் சித்தர் நெறியும் ஒருங்கே இயம்பும் இறைவனின் எண் குணங்களை, உடநிடதங்கள், சச்சிதானந்தம் என்ற சொல் வடிவில் குறிக்கின்றன. 'சத்' என்பது என்றும் ஒரே நிலையில் நிலைத்திருப்பதாகும். எண் குணங்களில், தன் வயம் உடைமை, தூய உடம்பு உடைமை, பேராற்றல் உடைமை, இயல்பாகவே பாசமின்மை ஆகிய நான்கு குணங்களும் என்றும் மாறுபாடின்றி ஒரே நிலையில் நிலைத்து நீடிக்கும் இயல்புகளாய் 'சத்' ஆகிய தன்மையன. 'சித்' என்பது அறிவைக் குறிக்கும். இயற்கை உணர்வு உடைமை முற்றுணர்வு உடைமை. பேரருள் உடைமை ஆகிய மூன்று குணங்களும் அறிவை அடிப்படையாகக் கொண்டவை. இயற்கை உணர்வு என்பது இயல்பான அறிவு. முற்றுணர்வு என்பது முழுமையான நிறைந்த எல்லைகளற்ற அறிவு. பேரருள் என்பது இறை அறிவினால் இயற்றப்படும் திருவருட் செயல்கள். இச்செயல்கள் அனைத்தும் உயிர்களின் அறிவு விளக்கத்திற்காகவே மேற்கொள்ளப்படுபவை. எனவே இம்மூன்று இயல்புகளும் 'சித்து' ஆகும் தன்மையின. ஆனந்தம் என்பது வரம்பில் இன்பமுடைமையைக் குறிக்கும். இங்ஙனம் இறைவனின் எண் குணங்களும் 'சச்சிதானந்தம்' என்னும் சொல்லில் அடங்குவனவாம். பதியின் இயல்பினை, உமாபதி சிவாசாரியார்,

**'. . . . . . . . . . . . பதி பரமே அதுதான்**
**நிலவும் அரு உருவின்றிக் குணம் குறிகளின்றி**

**நின் மலமாய் ஏகமாய் நித்தம் ஆகி**
**அலகிலுயிர்க் குணர்வாகி அசலமாகி**
**அகண்டிதமாய் ஆனந்த உருவாய் அன்றிச்**
**செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரியதாய்த்**
**திகழ்வது தற்சிவமென்பர்’ . . . . . .**[111]

என்றுரைக்கின்றனர். ‘குணங்குறிகளின்றி’ என்னும் தொடருக்கு, ‘உயிர்களுக்குரிய இராசதம், தாமதம், சாத்வீகம் ஆகிய முக்குணங்களின்றி’...[112] என்னும் விளக்கம் அளிக்கப்படுகின்றது. இக்கருத்தைத் திருமூலரும் **‘முக்குண நிர்க்குணம்’...**[113] என்னும் தொடரில் உறுதிப்படுத்துகின்றார். தாயுமானவரின்,

**‘நிர்க்குணமான பரதெய்வமே’ . . .**[114]

என்னும் கூற்று இவண் ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

சைவ சித்தாந்த மெய்யியலும், சித்தர் நெறியும் இறை ஒன்றே; அஃது சிவமே என்னும் கருத்தினை ஒருங்கே புலப்படுத்துகின்றன. சைவ சித்தாந்த மெய்யியல் குறிக்கும் அருவ அருவுருவ, உருவ சிவவடிவ நிலைகள், சித்தர் நெறியிலும் குறிக்கப்படுகின்றன. இறைவனின் எல்லைகளற்று என்றும் எங்கும் நிறைந்து விளங்கும் தன்மையை இவ்விரு நெறிகளும் உறுதிப்படுத்துகின்றன. இறைவனின் எண் குணங்களும், ஐந்தொழில்களும் இவ்விரு நெறிகளிலும் விளக்கப்படுகின்றன. இறைமை குறித்த அடிப்படைக் கருத்துக்களில் சித்தர் நெறியும் சைவ சித்தாந்த மெய்யியலும் வேறுபடவில்லை என்பது தெளிவு.

## குறிப்புகள்

1. தமிழ் - தமிழ் அகராதி (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் – 2006) ப: 141.
2. புறநானூறு - மூலமும் உரையும் (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் - 1999) ப- 59.
3. பத்துப்பாட்டு - இரண்டாம் பாகம் (சென்னை - வர்த்தகமானன் பதிப்பகம் – 1999) மாங்குடி மருதனார் இயற்றிய மதுரைக்காஞ்சி , ப: 14
4. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – மு.நூல் – ப: 118.
5. உமாபதி சிவாசாரியார் – சித்தாந்த அட்டகம் – (திருவிடை மருதூர் – சைவ சித்தாந்த நேர் முகப் பயிற்சி மையம் – 1995) திருவருட்பயன் - பா. எண்: 1.
6. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு. நூல் – ப: 70 - 71.
7. திருநாவுக்கரசு சுவாமிகள் – தேவாரம் (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு - 1982) ஆறாம் திருமுறை – ப. 217, 3
8. அறிவொளி அ. – சித்தர் பாடல்கள் மூலமும் உரையும் – (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் - 2006) இரண்டாம் தொகுதி - ப : 757.
9. மேற்படி நூல் - முதற்பாகம் – ப : 358, 359
10. திருஞானசம்பந்த சுவாமிகள் – தேவாரம் (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் - 1995) இரண்டாம் திருமுறை - முதல்பாகம் ப: 82.
11. சுந்தரமூர்த்தி சுவாமிகள் – தேவாரம் - (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் 1995) ஏழாம் திருமுறை - ப: 121.
12. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – மு. நூல், முதற்பாகம். ப: 198.
13. மாணிக்கவாசக சுவாமிகள் – திருவாசகம் (சென்னை - சைவ சித்தாந்தப் பெருமன்றம் - 1999) ப: 35.
14. அருள் நந்தி சிவாசாரியார், – சிவஞான சித்தியார் (திருநெல்வேலி - அருள் நந்தி சிவம் அருட்பணி மன்றம் , 1989) ப: 37
15. தொல்காப்பியம் - பொருளதிகாரம், – நூற்பா எண். 964.

16. நக்கீரர் – நெடுநல்வாடை (பத்துப்பாட்டு தொகுதி - இரண்டாம் பாகம் - சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் - 1999) அடி எண். 77.

17. பரிமேலழகர் – (உரை) – திருக்குறள் – (சென்னை - பூம்புகார் பதிப்பகம் - 2004) ப.31

18. திருவள்ளுவர் – திருக்குறள் - கடவுள் வாழ்த்துப் பகுதி – குறள் எண்கள்.1, 2, 3,4,9,7.

19. மேற்படி நூல் – குறள் எண்கள் : 121, 906,50, 1073, 86 , 346.

20. மேற்படி நூல் - குறள் எண்கள் : 247, 213, 222, 58

21. மேற்படி நூல் – குறள் எண்கள் : 222, 243, 346, 290

22. மேற்படி நூல் – குறள் எண்கள் : 260, 268, 702.

23. இளங்கோவடிகள் - சிலப்பதிகாரம் (சென்னை - பூம்புகார் பதிப்பகம்- 1996) ப: 73.

24. மேற்படி நூல் - ப: 98

25. திருவாசகம் - (மு. நூல் – ப:1

26. ஞான சம்பந்தன் அ.ச – திருவாசகம் – சில சிந்தனைகள் (சென்னை – கங்கை புத்தக நிலையம் – 2002) ப : 67

27. அருணை வடிவேலு முதலியார். – சி. முப்பொருள் இயல்பு – (சென்னை - சைவ சித்தாந்தப் பெரு மன்றம் - 1994) ப: 67,68.

28. திருவாசகம் - மு. நூல் - ப: 62.

29. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – மு.நூல் - முதற்பாகம் – ப: 125.

30. திருவாசகம் – மு. நூல் – ப:66

31. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் மு.நூல் - முதற்பாகம் ப: 86

32. மேற்படி நூல் – ப: 127.

33. மேற்படி நூல் – ப : 285.

34. திருநாவுக்கரசு சுவாமிகள் - தேவாரம் – மு.நூல் – ஐந்தாம் திருமுறை – ப: 127, ஆறாம் திருமுறை : ப: 89

35. திருவாசகம் - மு. நூல் – ப: 24, 87.

36. சிவஞான சித்தியார் – மு.நூல் – பாடல் எண். 21.

37. தமிழ் - தமிழ் – அகராதி (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம்- 2006) ப: 480

38. சித்தலிங்கம் டி.பி. – சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும் – (சென்னை - திருவரசு புத்தக நிலையம் - 1998) ப: 17

39. திருவாசகம் – மு.நூல் - ப: 66

40. மறைமலையடிகள் - திருவாசக விரிவுரை – (சென்னை - பூம்புகார் பதிப்பகம் , 2003) ப. 23, 24

41. சோம சுந்தரனார் பி.மா. – சிவம் - பரப்பிரமம் (இராணிப்பேட்டை–புலவர் வெளியீடு - 1988) ப:23

42. மேற்படி நூல் - ப:22

43. மூர்த்தி அ.கி.– சைவ சித்தாந்த அகராதி – (சென்னை - கழக வெளியீடு 1998) ப:119

44. அருணை வடிவேலு முதலியார் – முப்பொருள் இயல்பு - மு.நூல் – ப: 65

45. மாணிக்கவாசகர் - திருவாசகம் – மு.நூல் – ப:7

46. சோமசந்தரனார் பி.மா. – சிவம் , பரப்பிரம்மம் – மு.நூல் – ப : 17

47. பெருங்கௌசிகனார் - மலைபடுகடாம் – பத்துப்பாட்டுத் தொகுப்பு, (சென்னை – வர்த்தமானன் பதிப்பகம் –1999) ப: 523.

48. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு. நூல் – ப 28, 29

49. மேற்படி நூல் – ப:110

50. மேற்படி நூல் – ப: 173

51. மேற்படி நூல் – ப: 196

52. மேற்படி நூல் – ப: 224

53. மேற்படி நூல் – ப: 232

54. மேற்படி நூல் – ப: 117, 118

55. மேற்படி நூல் - இரண்டாம் பாகம் : ப: 49

56. திரு வாலிய முதனார் – திருவிசைப்பா - ஒன்பதாம் திருமுறை - (திருப்பணந்தாள் - ஸ்ரீகாசிமடம் , 1989) ப: 64
மேற்படி நூல் – புருடோத்தம நம்பி - திருவிசைப்பா - ப: 70

57. திருமூலர் - திருமந்திரம் (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு - 1987) ப:2, பாடல் எண்கள் -5,6

58. சித்தர் பாடல்கள் - மு. நூல் – முதற்பாகம் - ப. 109

59. உமாபதி சிவாசாரியார் - சித்தாந்த அட்டகம் (திருவிடை மருதூர்-சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம், 1995) உண்மை விளக்கம் – ப: 273.

60. சிவஞான சித்தியார் - மு. நூல் - ப: 64

61. அறிவொளி .அ – சித்தர் பாடல்கள் மூலமும் உரையும் – (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் - 2007) முதற்பாகம் ப: 363

62. மேற்படி நூல் – இரண்டாம் பாகம் ப: 657.

63. திருமூலர் – திருமந்திரம் – மு. நூல் – பாடல் எண். 1763

64. உமாபதி சிவாசாரியார் – மு.நூல் – திருவருட்பயன் – பாடல் எண் 5

65. திருநாவுக்கரசு சுவாமிகள் – தேவாரம் – ஆறாம் திருமுறை (திருவாடுதுறை – ஆதீன வெளியீடு - 1982) ப: 201

66. சிவஞான சித்தியார் – பா. எண்- 164.

67. மேற்படி நூல் – பா. எண்: 239.

68. மணி சி.சு. – சைவ சித்தாந்தத் தேனமுது – (திருநெல்வேலி - அருள் நந்தி சிவம் அருட்பணி மன்றம் - 1989) ப: 20.

69. உமாபதி சிவாசாரியார்– சித்தாந்த அட்டகம் - மு.நூல் – நெஞ்சுவிடு தூது ப: 237

70. ஞானக்கோவை என வழக்கும் சித்தர்பாடல்கள் - மு. நூல் – இரண்டாம் பாகம் - ப: 200

71. சிவஞான சித்தியார் – மு.நூல்– பா.எண். 65

72. மேற்படி நூல் –பா.எண். 67

73. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற் பாகம் – ப: 139

74. திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனார் - திருவுந்தியார் - (திருவிடை மருதூர் - திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம் - 1995) ப:1

75. திருமந்திரம் – மு.நூல் – பாடல் எண்: 1576

76. திருவாசகம் – மு.நூல்– ப:9

77. சிவஞான சித்தியார் – மு.நூல் – பாடல் எண். 70

78. சித்தர் பாடல்கள் – மு.நூல் – முதற்பாகம் – ப:120.

79. சிவஞான சித்தியார் – மு.நூல் – பாடல் எண்:59.

80. மேற்படி நூல் - பா.எண். 61

81. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் – ப: 88

82. மேற்படி நூல் – ப: 198

83. இளவழகனார் - சிவஞான போத ஆராய்ச்சி – (சென்னை - கழக வெளியீடு - 1997) ப: 103

84. திருமந்திரம் - மு.நூல் – பா. எண். 1437

85. திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனார் – திருக்களிற்றுப்படியார் – (திருவிடை மருதூர் - சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம் - 1995) ப : 72

86. உமாபதி சிவாசாரியார் - சிவப்பிரகாசம் (திருவாவடுதுறை-ஆதீன வெளியீடு - 1953) ப: 109.

87. அறிவொளி அ. – சித்தர் பாடல்கள் – மு.நூல் - முதற்பாகம் ப: 477

88. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு. நூல்- முதற்பாகம் ப: 145

89. மேற்படி நூல் – ப : 104

90. மேற்படி நூல் – ப: 84

91. சிவஞான சித்தியார் – மு.நூல் – பாடல் எண். 91

92. சுந்தர மூர்த்தி சுவாமிகள் – தேவாரம் - மூவர் தேவாரம் : தலமுறை (கும்பகோணம் ஸ்ரீகாமகோடி ஆய்வு மையம் - 1988) ப- 1131

93. மெய்கண்ட தேவர் - சிவஞான போதமும் பொழிப்புரையும் (திருவாவடுதுறை, ஆதீன வெளியீடு - 1984) ப : 105

94. மாதவச் சிவஞான யோகிகள் – சிவஞான மாபாடியம் – (சென்னை - உலகத் தமிழ் கல்வி இயக்ககம் - 1986) ப: 5

95. திருமந்திரம் – மு.நூல் – ப. எண். 62 - 72 வரை

96. அறிவொளி அ. சித்தர் பாடல்கள் – மூலமும் உரையும் – மு.நூல் : ப. 365.

97. திருவாசகம் – மு.நூல்: ப.2

98. மேற்படி நூல் – ப: 37

99. உமாபதி சிவாசாரியார் - சிவப்பிரகாசம் - மு. நூல் – பாடல் எண். 18

100. வைத்தியநாதன் கு- சைவ சித்தாந்த அடிப்படைக்கொள்கைகள் – (திருவிடை மருதூர் - சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம் 1995) – ப: 26.

101. மாதவச் சிவஞான யோகிகள் – சிவஞான மாபாடியம் - மு. நூல் ப: 106 – 108.

102. ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – இரண்டாம் பாகம் – மு.நூல் – ப: 109.

103. திருநாவுக்கரசு சுவாமிகள் – தேவாரம் – நான்காம் திருமுறை – மு.நூல் – ப: 32.

104. சேந்தனார் – திருவிசைப்பா – ஒன்பதாம் திருமுறை : (திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடம் - 1989) ப: 13.

105. ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – மு.நூல் – ப :43

106. மேற்படி நூல் - ப: 85

107. உமாபதி சிவாசாரியார் - சித்தாந்த அட்டகம் -மு. நூல் – திருவருட் பயன் –ப: 125.

108. திருமந்திரம் - மு. நூல் – பா.எண். 2584

109. அறிவொளி . அ. – சித்தர் பாடல்கள் - மூலமும் உரையும் - மு. நூல் : இரண்டாம் பாகம் – ப: 1048

110. திருவாசகம் - மு. நூல் – ப: 64

111. உமாபதி சிவாசாரியார் - சிவப்பிரகாசம் - மு. நூல் : பாடல் எண். 13

112. ஸ்ரீசிதம்பரநாத முனிவர் – (உரை) – சிவப்பிரகாசம் – (திருவாவடுதுறை ஆதீன வெளியீடு - 1953) ப: 25.

113. திருமந்திரம் – மு.நூல் –செ.எண்: 2296.

114. சுப்புரெட்டியார். ந. – தாயுமானவர் (சென்னை – கலைஞன் பதிப்பகம் – 2001) ப:55.

# உயிரியல்

## மெய்ந்நிலை

மெய்யியல் என்பது, ஒரு பொருளை அணுகி, அதன் இயல்புகளை ஆராய்ந்து, உண்மை நிலையினை வெளிப்படுத்துவதாகும். ஒரு பொருளை அணுகி, ஆராயும் ஆராய்ச்சியில் அறிவு முதலிடம் வகிக்கிறது. அறிவானது ஒரு பொருள் குறித்து பல்வேறு வினாக்களைப் பல்வேறு கோணங்களில் எழுப்பி, அவற்றிற்கான விடைகளைக் காண முற்படுகிறது. இம்முறை அறிவியல் துறைகளுக்குப் பெருமளவில் உதவி புரியக் கூடும். ஒரு பொருளை அல்லது ஒரு கருத்தை, பல்வேறு சோதனைகளுக்கு உட்படுத்தி, விளைவுகளை அறிந்து அவற்றின் அடிப்படையில் ஒரு கருதுகோளை அமைத்து, நிறுவுவது என்பது அறிவினை மட்டுமே துணையாகக்கொண்டு மேற்கொள்ளப்படும் அறிவியல் ஆய்வாகும்.

அறிவை மட்டுமே வைத்து, எல்லாவற்றையும் முழுமையாக ஆராய்ந்து விட முடிவதில்லை. எடுத்துக்காட்டாக, நான் யார்? என்னும் வினாவிற்கு அறிவு பூர்வமாக விடைகாண முற்படும்போது, நான் என்பது உடலன்று, ஐம்பொறிகளுமன்று, இதயமுமன்று , மூளையுமன்று, மூச்சுக்காற்றுமன்று என்றெல்லாம் பகுத்தறிந்து கொண்டு செல்லும்போது இறுதியில் நான் என்பது, அறிவு கொண்டு காரண, காரிய முறைகளில் ஆராய்ந்து முடிவு காண முடியாததொன்று என்ற நிலை ஏற்படுகிறது. அறிவோடு இயைந்த உள்ளுணர்வின் துணை கொண்டு உணரப்படுவதே நான் யார்? என்னும் வினாவிற்கான விளக்கமாக அமைகிறது.

இறைவன் , ஆன்மீகம், சமயம், உயிர், வாழ்வியற் பண்புகள் ஆகியவற்றை அறிவதற்கு அறிவு மட்டுமே துணை புரிவதில்லை. இவற்றைப் பற்றிய அறிவுடன், அவை குறித்து மனதில் தோன்றும் உள்ளுணர்வுகளையும் மதிப்பீடு செய்து,அறிவும் உணர்வும் இயைந்த நிலையில் உணரப்படுபவையே இவற்றின் உண்மை நிலையை வெளிப்படுத்தும். அறிதல் என்பது வேறு. உணர்தல் வேறு. அறிதல் என்பது பொருள்களைத் திட்டவட்டமாகத் தெரிந்து கொள்வதை மட்டுமே குறிக்கும். உணர்தல் என்பது பொருட்களை அறிந்து கொண்ட அளவுடன் நில்லாமல், அவ்வறிவு, அறிந்த பொருட்களில் அழுந்திப் பெறும் அனுபவத்தையும் குறிக்கும். பொருளறிவு முழுமையான அறிவாகாது. அவ்வறிவு, அப்பொருளின் இயல்புகள் அனைத்தையும். முழுமையாக விளங்கச் செய்யாது. அறியப்படும் பொருட்களில் அழுந்திப் பெறுகின்ற

அனுபவ உணர்வானது அப்பொருட்களின் இயல்புகளை முழுமையாக வெளிப்படுத்தும். இங்ஙனம் அறிவும், உணர்வும் கொண்டு வெளிப்படுவதே மெய்ந்நிலையாகும். திருவள்ளுவர் உண்மை ஞானத்தை உலகிற்கு அறிவுறுத்திய அதிகாரத்திற்கு மெய்யறிதல் என்று பெயரிடாமல், மெய்யுணர்தல் என்று பெயரிட்டிருப்பது கருத்திற்கொள்ள வேண்டியதொன்றாகும்.

தத்துவரீதியாக ஒரு பொருளின் அல்லது ஒரு கருத்தின் இயல்புகளை ஆராயும்போது, எடுத்துக்காட்டாக கருணை என்ற பண்பினை ஆராயும்போது, அஃது மனித மனத்தில் தோன்றக்கூடிய ஒரு இயல்பூக்கம். (Instinct) இப்பண்பு பிற உயிர்களுக்கு உதவ வேண்டும் என்ற எண்ணத்தை ஏற்படுத்தும். பிற உயிர்களின் துன்பங்களைக் களைய வேண்டும் என்ற உந்துதல் தோன்றும். ஈகை என்ற நற்பண்பின் தோற்றுவாய் கருணை; பிறர் நலம் விழையும் பெற்றியாளனாக மனிதனை இப்பண்பு மேம்படுத்தும்; மனிதன் மறைந்து விட்டாலும், சமுதாயத்தில் அவனுடைய புகழ் நிலை பெறுவதற்குரிய காரரணங்களில் கருணையும் ஒன்றாகும்; ஆகிய இவ்விளக்கங்கள் பெறப்படுகின்றன. இவை அறிவு சார்ந்த ஆய்வினால் மட்டும் பெறக்கூடியவை அல்ல. அறிந்த விளக்கங்களில் மனம் ஈடுபட்டு அழுந்திப்பெற்ற அனுபவ உணர்வுகளின் தொகுப்பாகவும் விளங்குகிறது. அதே சமயம் கருணை என்னும் இப்பண்பு மனித மனத்தில் ஏன் தோன்றியது? எப்படித் தோன்றியது? என்ற வினாக்களெல்லாம் மெய்யியல் விளக்கத்திற்குத் தேவையற்றவை. 'The function of philosophy is analysis clarification. Its function is to define as clearly as possible, the limits of human knowledge and set down the distinctions between different kinds of knowledge[1]' என்ற தத்துவ மேதையின் விளக்கம் இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும்.

**உயிர்–மெய்ந்நிலை விளக்கம்**

உயிர் என்னும் சொல், உய் + இரு எனப் பகுக்கப்படுகிறது. உய்தல் என்னும் சொல்லுக்கு, ஈடேறுதல், துன்பத்திலிருந்து நீங்குதல், கழிதல் ஆகிய விளக்கங்கள் அளிக்கப்படுகின்றன...[2] தொடர்ந்து வரும் வினைகளால் ஏற்படும் பிறவித் தொடரிலிருந்து, விடுபட்டு வீடு பேறு அடைதலே உய்தல் என்னும் பொருளைக் கொண்ட உயிர் என்பதன் இலக்காகும். எனவே உயிர் என்பது உய்வடைய வேண்டும் என்ற காரணப்பெயராகவே வழங்கி வருகிறது. சைவ சித்தாந்தம் உயிரைப் 'பசு' என்னும் தத்துவக் கலைச்சொல்லால் குறிக்கிறது. பாசமாகிய தளைகளால் பந்திக்கப்படுவது

(கட்டுண்டிருப்பது) பசு என்னும் உயிராகும். உயிரின் விளக்கம் சிவஞான போதத்தில் நிறுவப்படுகிறது.

**‘‘ உளது இலது என்றலின் எனதுடல் என்றலின்**
**ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்**
**உண்டி வினை இன்மையின் உணர்த்த உணர்தலின்**
**மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா’...**[3]

**இலது என்றலின் உளது**

உயிர் என்ற ஒன்று இல்லை என்கின்றபோது, இவ்வாறு சொல்லுகின்ற அறிவுடைய பொருள் எதுவோ அதுவோ உயிராகும்.

**எனதுடல் என்றலின் உளது**

எனது உடல் என்று உடலை வேறாகக் கூறுமிடத்து, அவ்வுடலுக்கு வேறான ஒரு பொருள் இருப்பது அறியப்படுகிறது. யானே உடல் என்று கூறாது எனது உடல் என்று கூறுமிடத்து, உடலினும் வேறானது உயிர் என்ற உண்மை புலனாகிறது.

உடலில் உள்ள ஐம்பொறிகளுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு புலனை மட்டுமே அறியும் இயல்புடையது. கண் உருவத்தை மட்டுமே காணக்கூடியது. செவி ஓசையை மட்டுமே கேட்கக்கூகூடியது. வாய் சுவையை மட்டுமே உணரக்கூடியது. ஒரு பொறி, மற்றொரு புலனை அறியாது . ஐம்பொறிகளாலும் அறியப்படும் பொருள் உயிராகும். எனவே அஃது ஐம்பொறிகளுக்கும் வேறாக உள்ளது.

**ஒடுக்கம் அறிதலின் உளது**

ஒடுக்கம் என்பது ஐம்பொறிகளும் தொழிற்படாத நிலையைக் குறிக்கும். கனவு நிலையில் நாம் காணக்கூடிய நுண்ணுடலே உயிர் எனக் கருதினால் அவ்வுடலை இடமாகக்கொண்டு அனுபவிக்கின்ற பொருள் வேறு. எனவே நுண்ணுடலினும் உயிர் வேறானதாகும்.

**கண்படில் உண்டிவினை இன்மையின் உளது**

கண்படில் என்பது உறங்குதல் என்றும் உண்டிவினை என்பது இன்ப துன்ப நுகர்ச்சி என்றும் பொருள் படும். உயிர்க்காற்றே உயிர் எனக் கொண்டால், உறக்கத்தில்

உயிர்க்காற்று இயங்கிக்கொண்டிருப்பினும் நனவுக் காலத்தில் உள்ளது போல் செயற்பாடுகளும், இன்ப துன்ப நுகர்ச்சியும் இல்லை. எனவே உயிர்க்காற்றினும் உயிர் வேறுபடுவதாகும்.

**உணர்த்த உணர்தலின் உளது**

இறைவனே உயிர் எனக்கொண்டால் இறைவன் பேரறிவாளன். கருவிகளின் துணை இன்றி எல்லாவற்றையும் ஒரு சேர அறியும் முற்றறிவாளன். ஆனால் உயிர் அறிவுடைய பொருளாயினும், இயற்கையாக, கருவிகளின் துணையின்றி எதனையும் அறியாது. ஒவ்வொன்றாக அறிகின்றது. அறிவித்தால் தான் அறிகிறது. சிற்றறிவுடையது. எனவே உயிர் இறைவனினின்று வேறாக உள்ளது.

**மாயா இயந்திர தனுவுள் ஆன்மா உளது**

தனு என்பது உடல் என்று பொருள் படும். நுண்ணு டல், பருவுடல் ஆகியவற்றின் தொகுப்பு உடல் என்றே பெயர் பெறும். இவ்வுடல் தொகுப்பினும் வேறானது உயிராகும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அந்தக் கரணங்களை உயிர் எனக் கொள்ளலாகாது. இவை உட்கருவிகளாக இயங்கி உயிருக்கு அறிவைப் பெற உதவுவனவேயன்றி இவை உயிராகா. இங்ஙனம் 'உயிர்' என்பது எது? என்னும் தத்துவ ஆய்வில் கருத்துக்கள் வேறுபடுவதால், அவற்றைத் தெளிவுபடுத்தி உயிர்த் தத்துவத்தை மெய்கண்டார் நிறுவுகிறார்.

**''அன்னியன் - இவ்வுடம்பு தனக் கழிவிலன் சிற்றறிவாளன்**
**பின்னை மலமொடு புணர்வோன் பெரிய வியாபகனசடன்**
**துன்னுறு தன் வினை நுகர்வோன் சொல்லிய வவ்வினை முதல்வன்**
**தன்னை நிகர்வுறு மிறைவன்றடையுடையன் பசுவென்பான்''**[4]

என்னும் தசமணிமாலைச் செய்யுள் மெய்கண்டாரின் விளக்கத்திற்கு அரண் செய்கிறது.

சைவ சித்தாந்தம் நிறுவும் உயிர்க் கருத்துக்களை சித்தர்களும் தம் பாடல்களில் ஆமோதிக்கின்றனர்.

**'ஊன் நிறைந்த காயம் உயிர் இழந்து போகுமுன்னம்'...**[5]

என்ற பத்திரகிரியார்ப் பாடல், உடல் வேறு, உயிர் வேறு என்னும் கருத்தினை உறுதிப்படுத்துகிறது.

**'எள்ளில் எண்ணெய் போல் உயி ர் எங்கும் நிறைந்த ஈசன்'......**[6]

என்னும் பாம்பாட்டிச் சித்தரின் பாடலில், இறைவன் வேறு உயிர் வேறு, எனினும் இறைவன் உயிருடன் எஞ்ஞான்றும் அத்துவிதக் கலப்பில் ஒன்றாக நிறைந்துள்ளான் என்னும் சைவ சித்தாந்தம் நிறுவும் கொள்கை மிளிர்கிறது. இக்கருத்து,

**''அத்துவிதம் போலும் என்ற ஆத்துமத்தின் உள்ளிருந்து'' ...**[7]

என்னும் பத்திரகிரியாரின் பாடலிலும்,

**'அணுவுள் அவனும் அவனுள் அணுவும்**
**கணு அற நின்ற கலப்பது'**[8]

என்னும் திருமூலரின் மொழிகளிலும் பொதிந்து வைக்கப்பட்டுள்ளமை நோக்கத் தக்கது.

இறைவன் உயிர்களுடன் ஒன்றாய், உடனாய் விளங்கி அவற்றை இயக்கும் நிலையிலும், உயிர்கள் பிறவியின் போது ஆணவமலப் பிடியினுள் அகப்பட்டமையால் அஃது உயிர்களுக்கு அறியாமையை விளைவிக்கிறது. கன்மமலம் கருவிலேயே உயிரினைப் பற்றிக் கொள்கிறது. இவற்றால் தூண்டப்பட்டு, வினைகளை இயற்றி, இறைவன் தன்னுள் உறைவதையே உயிர்கள் அறிவதில்லை. இறையருள் அறிவிக்கத் தன்னை, தன் உண்மை இயல்பினை அறியும்போது, அதற்கான தவ முயற்சிகள் மேற்கொள்ளும்போது பாசங்களின் பிடியினின்று விடுபட்டு , இறையருளை உயிர்கள் சார்ந்து நிற்கையில் உயிர்களின் உண்மையான இயல்பு வெளிப்படுகிறது. தன் மெய் இயல்பினை உணர்ந்த உயிர்கள் இறைவனோடு கூடி பிரிப்பில்லாமல் நிற்கும் பேரின்ப நிலையை விழைகின்றன.

**'பாசத்தை நீக்கிப் பசுவைப் பதியில் விட்டு**
**நேசத்தின் உள்ளே நினைந்திருப்பது எக்காலம்? ...**[9]

என்ற பத்திரகிரியாரின் பாடல் இங்கு நினைவு கூரத்தக்கது.

**உயிர்- வேறு பெயர்கள்**

உயிரினைப் பட்டினத்தார் 'குருகு' என்றும், கடுவெளிச்சித்தர் ஆண்டி என்றும், பாம்பாட்டிச் சித்தர், 'சூத்திரம்' என்றும், பத்திரகிரியார் 'ஆவி' என்றும், திருமூலர் 'சீவன்' என்றும், 'அணு' என்றும் குறிக்கின்றனர்....[10] சைவ சித்தாந்தம் பசு என்றும், சீவன் என்றும் ஆன்மா சகலன், கேவலன், புருடன் , சுத்தன் என்றும் உயிர்களின் நிலைகளுக்கேற்ப பெயர்களை வழங்குகிறது....[11]

**உயிர் - இயல்புகள்**

உயிர்கள் எண்ணிக்கையற்றவை. எண்ணிக்கையைக் கடந்து தொகையே அற்றவை. இச்செய்தி,

> **'பிறந்த நாள் மேலும் பிறக்கும் நாள் போலும்**
> **துறந்தோர் துறப்போர் தொகை'.....**[12]

என்னும் உமாபதி சிவாசாரியாரின் கூற்றில் காணக்கிடைக்கிறது. உலகத்தில் உயிர்களில் வேறுபாடு உள்ளதால், **'பல உயிர்கள்'**[13] என்னும் சொற்றொடர் உண்மையே எனத் தெளிவாக உணர முடிகிறது. உயிர்கள் உலகில் பிறக்கும்பொழுது முட்டையில்; தோன்றுவன, வியர்வையில் தோன்றுவன, வேர் வித்து ஆகியவற்றில் தோன்றுவன, கருப்பையில் தோன்றுவன என்று நான்கு விதங்களில் பிறவி எடுக்கின்றன. இந்நான்கு விதங்களில் பிறக்கும் உயிர்கள், ஏழுவகைப்பிறப்புகள் எய்துகின்றன. அவற்றின் பேதங்களையும் எண்ணிக்கைகளையும் சிவப்பிரகாசம்,

> **....'ஊற்றம் மிகு தாவரங்கள் பத்தொன்பது என்றும்**
> **ஊர்வ பதினைந்து அமரர் பதினொன்றோடு உலவா**
> **மால் தரு நீர் உறைவன. நல் பறவைகள் நால் காலி**
> **மன்னியிடும் பப்பத்து ,மானுடர் ஒன்பதின்மர்.... யோனி......**
> **.....எண்பத்து நான்கு நூறாயிரம் என்று எடுத்தே....**[14]

என விரிவாக உரைக்கிறது.

| | | |
|---|---|---|
| தாவரங்கள் | ...................................... | 1900,000 |
| ஊர்வன | ...................................... | 1 500,000 |
| தேவர்கள் | ...................................... | 1100,000 |
| நீர் வாழ்வன | ...................................... | 1000,000 |
| பறவைகள் | ...................................... | 1000,000 |
| மிருகங்கள் | ...................................... | 1000,000 |
| மனிதர்கள் | ...................................... | 900 ,000 |
| | | 84, 00,000 |

**'எண்பத்து நான்கு நூறாயிரம் செனனமும் சனித்துப்
புண்பட்டு நானும் புலம்பினேன் பூரணமே....**[15]

என்னும் பட்டினத்தாரின் வரிகளும்,

**'நாலுவகையோனி - கிளியே எழுவகைத் தோற்றத்தாலும்......**[15i]

என்னும் வேதாந்தச் சித்தர் வாக்கும்,

**'எழுவகைத் தோற்றமும் நால்வகை யோனியில் எய்திடினும்'**[16]

என்னும் திருவள்ளுவர் ஞானப்பாடலும், உமாபதி சிவாசாரியார் உரைத்த உண்மையைச் சித்தர்கள் வழி மொழிந்தமைக்குச் சான்றுகளாகின்றன.

பல திறப்பட்ட உயிர்கள் என்றும் நிலைபேறுடையவை. தொடக்கமும், முடிவுமற்ற அநாதிப் பொருளாகும். தோற்றமும், மறைவும் அற்ற உயிரின் தன்மையை சிவவாக்கியர்,

**...'உடம்பு உயிர் எடுத்தபோது உயிர் இறப்பது இல்லையே ' ....**

என்றும்

**'' உருத்தரிக்கு முன்னெலாம் உயிர்ப்பு நின்றது அப்புவில்'**

என்றும்

**உயிர் அகத்தில் நின்றிடும் உடம்பெடுத்ததற்கு முன்
உயிர் அகாரம் ஆயிடும்'....**[17]

என்றும் விளக்குகிறார். உயிர்களின் அநாதி இயல்பினை

**'அநாதி எனப் பெற்ற அணுவை ...**[18]

எனத் திருக்களிற்றுப்படியாரும்,

**......சுடர் ஒளியான்**
**என்றும் உளன் அன்று அளவும் யானும் உளன்' ...**[19]

என நெஞ்சு விடு தூதும், உறுதிப்படுத்துகின்றன.

அநாதியான நுண்பொருளான உயிர் பருப்பொருளாகிய உடலில் தங்கி, அதனை இயக்கும் ஆற்றல் வாய்ந்தது. பருப்பொருளான உடலுக்கு அழிவு உண்டு. உடல் அழியும் போது உயிர் அதனை விட்டு நீங்கி வேறோர் உடலைச் சார்ந்து இயங்கும். உயிர்கள் உடல் மாறிப் பிறப்பதே பிறவி எனக் கொள்ளப்படுகிறது. உயிர்களால் இயற்றப்படும் அறம் பாவங்களாகிய வினைகளின் பயன்களாகிய இன்ப துன்பங்களைத் துய்த்தற்பொருட்டு, இவ்வுலகில் பல்வேறு பிறப்புகளில் பிறந்து, இறந்து பிறவித் தொடரில் உழன்று வரும் இயல்புடையது. உயிர்கள் வினைகளை இயற்றுவதற்கான காரணம் அவற்றை அநாதியே பற்றியுள்ள ஆணவமாகும்.

**........பந்தித்த,**
**பாசப்பெருங்கயிற்றால் பல்லுயிரும்.......**[20]

என்னும் உமாபதி சிவாசாரியாரின் கூற்று இவண் நினைவு கூரத்தக்கது.

உயிர் துய்த்தற்குரிய வினைகள் மூன்று நிலைகளில் உள்ளன. உயிர்களால் இயற்றப்படும் வினைகளுள், இறந்த உடல்களால் நுகரப்பட்டனவும், பிறந்த உடலால் முகர்ந்து நின்றனவும் போகப் பின்னும் நுகர்வதற்குரியதாய் எஞ்சியிருக்கும் வினை பழவினை ஆகும். உயிர் எடுத்திருக்கின்ற உடம்பின் வழி நுகர்ந்து வரும் வினை நுகர்வினை ஆகும். இங்ஙனம் நுகர்ந்து வருங்கால், மனம்,மொழி,மெய்களால் மேலும் இயற்றப்படும் வினை வருவினை எனப்படும். இவ்வாறு உயிர்கள் இயற்றும் வினைகளுக்கேற்ப உடலைப் பொருந்தும் என்பது பிறவி பற்றிய கொள்கையாகும். இக்கருத்தை ,

**'இருவினைக்கீடாய் எடுத்த**
**பொம்மை தனைப் போட்டு'...**[21]

என்று பத்திரகிரியாரும்.

**வினைப் பிறவி என்கின்ற**
**வேதனையில் அகப்பட்டு ......** [22]

என்று மாணிக்க வாசகப் பெருமானும் ஆமோதிக்கின்றனர்.

உயிர்கள் இயற்றும் வினைகளுக்கேற்ப அவற்றிற்கு உடல்களை இறைவன் தருகின்றான். உயிர்கள் தம் வினைப் பயன்களை நுகர்தற் பொருட்டே உடல் அளிக்கப்படுகிறது. இவ்வுண்மையை,

**பல்லாயிரம் கோடிப் பகிரண்டம் உன் படைப்பே**
**அல்லாது வேறிலை '....** [23]

எனப் பத்திரகிரியாகும்.

**'மூல மலத்தால் சாலும் மாயை**
**கருமத்து அளவில் தரும் உரு இறைவன்**
**செறிந்து இரு பயனும் நுகர்ந்திடும் உயிர்கள்'...** [24]

என்று உமாபதி சிவாசாரியாரும்,

**'' உயிரையும் உடம்பையும் ஒன்று விப்பது அச்சிவம்''...** [25]

என்று சிவவாக்கியரும் நிலை நிறுத்துகின்றனர்.

உயிர்கள் பற்றுக்கோடின்றி தனித்து இயங்கும் ஆற்றல் அற்றவை. பிறிதொரு பொருளைச் சார்ந்தே இயங்கும் தன்மையுடையவை. உயிர் எந்தப் பொருளைச் சார்ந்து நிற்கின்றதோ அந்தப்பொருளின் தன்மையைத் தன் தன்மையாய் ஏற்று விளங்கும் இயல்புடையது. இதனைச் சார்ந்ததன் வண்ணமாம் தன்மை என்பர். இத்தன்மை உயிரின் சிறப்பு இயல்பு ஆகும். உயிருக்கு இருவகைச் சார்புகள் உண்டு. 1. உலகச்சார்பு 2. இறைச்சார்பு, உலகம் தோன்றி, நின்று, மாறுபாடுகளடைந்து மறையும் தன்மையுடையது. எனவே உலகம் அசத்து ஆகும். இறைவன் தோற்ற முடிவின்றி ,மாறுபாடின்றி எல்லைகளற்று வியாபித்திருக்கும் நிலைபேறுடைய செம்பொருள். எனவே இறை சத்து ஆகும். உயிர், சத்து ஆகிய இறைவனு மன்று, அசத்து ஆகிய உலகமுமன்று.

இவ்விரண்டுமின்றி வேறு ஆகிய ஒரு தனிப்பொருள். உயிர், சத்தினை (இறைவனை) சத்தின் கண் நின்று (இறையருளைப் பற்றி நின்று) சத்தினாலறிந்து (இறையருளால் அறிந்து) சத்தாகும் (வீடுபேறு) தன்மையும் பெறும். அதேபோன்று அசத்தினை (உலகத்தினை) அசத்தின் கண் நின்று (உடலைப் பற்றி நின்று) அசத்தினாலே அறியும் (உலகப்பொருட்களால் அறிந்து) தன்மையும் பெறும். இதனை சிவஞான போதம்,

**'இரு திறன் அறிவுளது இரண்டலா ஆன்மா'.....**[26]

என்ற அடியில் விளக்குகிறது.

**'சத்தையும் அசத்தையும் அறியும்**
**தன்மையதாய் --- சத்தும் அசத்தும்**
**அல்லாத சதசத்து ஆகிய உயிர்'....**[27]

என்னும் சிவஞான முனிவரின் வாக்கு இங்கு ஒப்புநோக்கத்தக்கது. உயிரின் இச்சிறப்பு இயல்பினை மணிவாசகப்பெருமானும்,

**'இரண்டும் இலித் தனியனேன்'....**[28]

என்றுரைக்கின்றார்.

**உயிரறிவு**

உயிர்கள் அனைத்தும் அறிவுடையன. ஓரறிவு உடைய உயிர் தொடங்கி ஐந்தறிவு உடைய உயிர் வரை உயிர்கள் அறிவுடையனவாகவே உள்ளன.

**'சித்து இல்லாத போது சீவன் இல்லை இல்லை இல்லையே'...**[29]

என்பது சிவவாக்கியரின் மெய்வாக்கு. ஐம்பொறிகளால் அறியப்படும் ஐந்தறிவுடன் ஆறாவது அறிவாகிய மன அறிவு இயைந்து, பெறப்படும் பகுத்தறிவுடன் விளங்கும் உயர்ந்த பிறப்பே மானுடப்பிறவியாகும்....[30]

மனித அறிவு, நுகர்வு,நினைவு ஆகிய இரு நிலைகளில் செயல்படுகிறது. ஒரு பொருளைப் பற்றி அறியும்போது, அது தொடர்பான விளக்கங்களைப் பதிவு செய்தல் நுகர்வு ஆகும். பின்னர் நுகர்ந்தவற்றைக் கொண்டு மேலும் அப்பொருளின் தோற்றம்,நிலை,செயல்பாடு, தொடர்பு குறித்து அறிவது நினைவு ஆகும்.

அப்பொருளைப் பற்றிய விளக்கங்கள் மனதில் நிலை பெற்று இருக்கச் செய்வதும் அறிவின் செயல்பாடே.

இயற்கையில் முற்றறிவுடன் விளங்குவது இறை ஒன்றே. உயிர்கள் அறியும் தன்மை கொண்டவை. அதனால் அவை அறிவுடையன.

**'அறியும் அறிவு அது'...** [31]

என்பது திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனாரின் கூற்று. உயிர்கள் தாமே அறியாது. அறிவிக்க அறியும் இயல்புடையன. நூல்களைக் கற்பதாலும், கற்றோர் சொற்களைக் கேட்பதாலும், பெறக்கூடிய அறிவும் , உலக வாழ்வில் அழுந்தி, அனுபவத்தால் அறியும் அறிவும், பொறிகளினால் உயிர்கள் பெறுகின்றன. எனவே உயிர்கள் பெறும் அறிவு செயற்கையானது. சிற்றறிவும் கூட. உயிர்கள் ஒவ்வொன்றாகத்தான் அறியும். அறிந்தவற்றை மறந்து விடும் இயல்புடையன. உயிரறிவின் இலக்கணத்தை,

**'அறிந்திடும் ஆன்மா ஒன்றை ஒன்றினால் அறிதலானும்**
**அறிந்தவை மறத்தலானும் அறிவிக்க அறிதலானும்**
**அறிந்திடும் தன்னையுந்தான் அறியாமையானுந் தானே**
**அறிந்திடும் அறிவன் அன்றாம் அறிவிக்க அறிவன் அன்றே'.........** [32]

என சிவஞான சித்தியார் விளக்கமுற எடுத்துரைக்கின்றது.

அறிவுப்பொருள் என்பதைச் சைவ சித்தாந்தமும்,சித்தர் தத்துவமும் சித்து என்னும் சொல்லால் குறிக்கின்றன. இறைவனும் சித்து; உயிர்களும் சித்து என்கின்ற நிலையில் சித்தின் இயல்புகளில் வேறுபாடுகள் உள்ளன. இறைவன் முற்றறிவுடைய சித்து. உயிர்கள் ஒரு காலத்தில் ஒன்றை மட்டுமே அறிவன. இறைவன் தானே அறியும் சித்து. உயிர்கள், இறைவன் அறிவிக்க அறியும் சித்து. இறைவன் பிறப்பு, இறப்பு, வீடு பேறு ஆகியவற்றை அளிக்கும் சித்து. உயிர்கள் அத்தகைய ஆற்றலின்றி இவற்றில் அழுந்தி நிற்கும் சித்து. எனவே இறைவன் பேரறிவும் பொருள். குறைபாடுகள் உள்ள உயிரறிவு சிற்றறிவாகும்.

உயிர்கள் , உலக அறிவை , இறையருளால், ஐம்பொறிகளுடன் கூடிய உடலால் பெறுகின்றன. உலகமும் உடலும் நிலையற்றவை; சடப்பொருட்கள்; அறிவற்றவை. அசத்துப்பொருட்களாம். அவற்றால் பெறப்படும் அறிவும் அசத்தாகும், நிலையற்ற அறிவாகும். எனவே தான்

**''அறிவினால் அறிந்த யாவும்**
**அசத்து ஆதல் அறிதி'...**[33]

என சிவப்பிரகாசம் அறிவிக்கின்றது. இயல்பாகவே உயிரறிவு, எல்லாவற்றையும் பொறிகளின் உதவியாலேயே நுகர்ந்து, அவற்றோடு பொருந்தி அந்தந்தப் பொருளில் சார்ந்ததன் வண்ணமாய் நின்று, அறியும் அறிவு ஆகும். இவ்வாறு அறிந்த அந்த அறிவும் நிலையில்லாத அசித்து ஆகும். இக்கருத்தை

**''சித்தும் அசித்தும் விட்டே ..... அகப்பேய்**
**சேர்த்து நீ காண்பாயே '...**[34]

என இறைவன் பேரறிவாகிய சித்துப்பொருள். உலகம் அசித்து உயிரறிவு சார்ந்ததன் வண்ணமாய் நின்று சித்து, அசித்து என்று அறியும் தன்மை கொண்டதாய் விளங்குகிறது என அகப்பேய்ச் சித்தர் அறிவுறுத்துகிறார்.

உயிரறிவு, சித்து, அசித்து என்று அறிந்து கொள்வது இறையருள் கூடினால் மட்டுமே இயலும். இறைவனே சித்தாகவும், அசித்துப் பொருட்களுடன் ஒன்றாகவும், உடனாகவும் விளங்கி நின்று அவற்றை உயிர்களுக்கு அறிவிக்க, உயிரறிவு அறியும் தன்மை பெறுகின்றது.

**''தானே அறியான் அறிவிலோன் தானல்லன்**
**தானே அறிவான் அறிவு சதசத்தென்று**
**ஆனால் இரண்டும் அரனருளாய் நிற்க '**[35]

என்னும் திருமந்திர மொழிகளை

**'ஈசன் உயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன்' ...**[36]

என்றும் சிவஞான சித்தியார் செய்யுள் அடி எதிரொலிக்கின்றது. இறைவன் உயிர்களுக்கு அறிவிக்கும், படி நிலைகள் இரண்டாகும். முதற்கண் உயிர்களின் அறிவை விளக்கி, அவை அறியப்பெறும் தகுதியுடையவனவாகச் செய்தல். இது காட்டல் அல்லது காட்டும் உபகாரம் எனப்படும். இரண்டாம் நிலையில் உயிர் அறியும் போது, இறைவன் தானும் உடன் நின்று அறிவித்தல். இது காணல் அல்லது காணும் உபகாரம் ஆகும். இவ்வுண்மையை

**'பொறியாய்ப் புலன் ஆகிப் பூதபேதப் பிரிவாய்**
**அறிவாகி நின்ற அளவறியேன் பூரணமே ...**[37]

என்று பட்டினத்தாரும்,

**"அறிதரும் சிவனே எல்லாம் அறிந்து அறிவித்தும் நிற்பன்...**[38]

என்று அருணந்தி சிவாசாரியாரும் ஒருங்கே உறுதியுரைக்கின்றனர். இறைவனே உயிரறிவை விளங்கச்செய்கின்றானெனில் அனைத்து உயிர்கட்கும் அறிவு விளக்கம் ஒன்றுபோல் நிகழ்வதில்லையே என்ற ஐயம் எழக்கூடும். உயிர்கள் தாம் இழைத்த வினைகளுக்கேற்பவே அறிவு விளக்கம் பெறுகின்றன. அவரவா் கன்மத்திற்கேற்ற ஏற்றத்தாழ்வான அறிவு நிலை விளக்கம் பெறுகின்றனா் என்பது சிவஞான சித்தியார் உரைக்கும் விளக்கமாகும்...[39]

**உயிர் நிலைகள்**

உயிருக்கு இருவகை நிலைகள் வகுக்கப்படுகின்றன. 1. காரணநிலை, 2. காரியநிலை என்பதாகும். நிலை என்பதனை அவத்தை என்னும் தத்துவக் குறியீட்டுச்சொல்லால் சைவ சித்தாந்தம் குறிக்கிறது. 'காரண அவத்தை என்பது காரியத்திற்கு முற்பட்ட அருவ நிலை என்றும், காரிய அவத்தை என்பது உருவாக உண்டாக்கப்பட்ட நிலை என்றும் பொருள் கொள்ளப்படுகிறது'.[40]

காரண நிலை, கேவலம், சகலம், சுத்தம் என மூவகைப்படுத்தப்படுகிறது. இதனை,

**'மதியோர் பசு மூவகையென மதிப்பர்**
**பன்னில் கேவலன் சகலன் இன்னியல்**
**சுத்தன்'**[41]

என ஞானாமிர்தம் உறுதிப்படுத்துகிறது.

**கேவல நிலை :** இந்நிலை உயிர்கள் பிறப்புக்கு உட்படாத நிலையாகும். இஃது அநாதி கேவலம் என்றும் குறிக்கப்படுகிறது. கேவலம் என்னும் சொல், தனிமை என்றும் பொருள்படும். ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று தளைகளில், கன்மம், மாயை ஆகியவற்றின் தொடர்பின்றி உயிரானது ஆணவத்தை மட்டுமே சார்ந்து நிற்கும் நிலையாகும். ஆணவச் சார்பினால், அறிவு விளக்கத்திற்கான கருவிகள் கூடாமல்

இருப்பதால் இந்நிலையில் உயிர்கள் தன்னையும் அறியாது, தான் சார்ந்திருக்கும் ஆணவத்தை விட்டு நீங்கும் வழி வகையும் அறியாது, அறியாமையில் அழுந்தி நிற்கும். இந்நிலையை இருள் நிலை எனவும் குறிப்பர். இதனை ,

**'ஆங்கு அறிவை அறிவரிதாய் ,அறிகருவி அணையா**
**ஆதலினால் இருள் .....**
**...நீங்கும் வகை இன்றி நித்த வியாபகமாய் அங்ஙண் நிற்பது கேவலம்'**[42]

என சிவப்பிரகாசம் இயம்புகிறது. இதனை,

**'ஆணவ மூலமடி - அகப்பேய்**
**அகாரமாய் வந்ததடி '**[43]

என்று அகப்பேய்ச் சித்தர் குறிக்கிறார்

**சகல நிலை**

ஆணவ மலச் சார்பு கொண்டு கேவல நிலையில் இருந்த உயிர்கள், உடல்களைப் பெற்று பிறப்பெடுக்கும் நிலை சகல நிலையாகும். சகலம் என்னுஞ் சொல் அனைத்தும் என்று பொருள்படும். ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களுடனும், கலை முதலிய முப்பத்தாறு தத்துவங்கள் அனைத்துடனும் கூடி பிறவிகளெடுத்து, பிறப்பு இறப்புகளில் உழன்று நிற்கும் நிலை. இந்நிலையில் உடல், கருவி, உலகம், நுகர்பொருள் ஆகிய மாயா காரியங்களுடன் தொடர்பு கொண்ட உயிர்கள், மனம், வாக்கு, செயல் ஆகியவற்றால் இருவினைகளை இயற்றுகின்றன. இவற்றுடன் கலப்புற்று நிற்கும் நிலையில் இந்நிலை கலப்புநிலை எனப்படுகிறது. இதனை,

**'உருவுற்றுப் போகமே போக்கியம் துற்று**
**மருவுற்றுப் பூதமனாதியான் மன்னி**
**வரும் அச்செயல் பற்றிச் சத்தாதி வைகிக்**
**கருவுற்றிடுஞ் சீவன் காணும் சகலத்தே'**[44]

என்று திருமந்திரம் விளக்குகிறது. இந்நிலையில் உயிர் இறைவனை அறிய விழையாமல் கருவி கரணங்களைச் சார்ந்து, நிலையற்ற உலகப்பொருட்களை அடைய விரும்பி, போகம் நுகர்ந்து, அவற்றில் அழுந்தி நிற்கும். எனவே இந்நிலை மருள் நிலை எனப்படுகிறது.

**சுத்த நிலை**

இந்நிலையில் உயிர்கள் தளைகளில் இருந்து நீங்கி, மும்மலங்களிலிருந்து விடுபட்டு,தூய்மையாய் விளங்குவதால் சுத்த நிலை எனப்பட்டது. பிறவிச் சுழற்சியில் தொடர்ந்து வினைப்பயன்களை அனுபவித்ததால் உயிர்களின் ஆணவ ஆற்றல் மெலிவடைகிறது. பிறவித் துன்பத்திற்கு மூன்று தளைகளே காரணம். தளைகளிலிருந்து விடுபட்டால் தான், பிறவித் தொடரிலிருந்து விடுபடமுடியும் என்று உயிர்கள் உணர்கின்றன.

**'முக்காய மாடுகளை முன்னங்கட்டு கோனே – இனி**
**மோசமில்லை நாசமில்லை முத்தியுண்டாம் கோனே'** [45]

என்னும் இடைக்காட்டுச் சித்தரின் கூற்றுப்படி, முத்தி நிலையின் முதல் படியாக, இறையருளால் உயிர்களுக்கு நல்வினை தீவினைகளைச் சமமாகக் கருதும் இருவினையொப்பு நிகழும். பின்னர் உயிர்களினுள் உறைகின்ற இறையருள் வெளிப்பட்டு மும்மல நீக்கம் பெற்று, நிறைவான இறையருளில் அழுந்தி திருவடிப்பேறு அடையும். இந்நிலையில் இறை அருளையே உயிர்கள் சார்ந்திருப்பதால் இஃது அருள் நிலை எனப் போற்றப்படுகிறது. இந்நிலையை.

**'இருவினை ஒத்திட, இன்னருள் சத்தி**
**மருவிட.....**
**....பெருமலம் நீங்கிப் பிறவாமை சுத்தமே '** [46]

எனத் திருமூலரும்.

**'திரிமலமும் அகல, உயிர் அருள் சேர் முத்தி**
**திகழ் முத்தி'** [47]

என உமாபதி சிவாசாரியாரும் ஒருங்கே விளக்குகின்றனர்

**காரிய நிலைகள்**

சகல நிலையில் உயிர்களுக்குக் காரிய நிலைகள் ஐந்துள்ளன. அவை சாக்கிரம்,சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன. இவற்றைத் தமிழில் விழிப்பு (நனவு) கனவு, உறக்கம்,பேருறக்கம், உயிர்ப்படங்கல் எனக் குறிப்பர்.[48] இக்காரிய நிலைகள் ஒவ்வொன்றிலும், உயிர் குறிப்பிட்ட கருவி கரணங்களுடன் இணைந்து

தொழிற்படும். கருவி கரணங்கள் தொழிற்படும் நிலையிலிருந்து, அவை தொழிற்படாமல் ஒடுங்கும் நிலை வரை, இவ்வைந்து அவத்தைகளாகப் பகுக்கப்பட்டன. கருவிகள் முழுமையாக நன்கு செயல்படுதலும், மிதமாகச் செயல்படுதலும், செயல்படாமல் ஒடுங்குதலும், வினைகள் தம் பயனை ஊட்டு முறைக்கு ஏற்ப நிகழும். உயிரின் அறிவு விளக்கத்திற்கு இக்கருவிகள் ஒரளவு உதவுகின்றன.

சாக்கிரம் என்னும் விழிப்பு நிலையில், சகல நிலையில் உயிர் விழிப்புடன் இயல்பாக உலக வாழ்வில் இருக்கும்போது, முப்பத்தைந்து கருவிகள் தொழிற்படுகின்றன. அவையாவன: மெய், வாய், கண், மூக்கு செவி - ஞானேந்திரியம் ஐந்து, கை, கால்,வாய், எருவாய், கருவாய்— கன்மேந்திரியம் ஐந்து, நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை, சத்தாகிவிடயம் - ஐந்து, வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் ...... வசகாதி விடயம் ஐந்து. பிராணன் அபானன், வியானன், உதானன், சமானன், நாகன் , கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் - பிராணாதி பத்து, மனம், புத்தி, அகங்காரம், சித்தம்,-அந்தக்கரணம் நான்கு, புருடத்துவம் – ஒன்று ஆக முப்பத்தைந்து கருவிகளுடன் இணைந்து ஆன்மா தொழிற்படுகிறது. [49]

சொப்பனம் எனப்படும் கனவு நிலையில்,ஆன்மா கண்டத்தானம் என்படும் கழுத்தில் நின்று, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம், ஐந்து ஆகிய பத்துக்கருவிகள் நீங்கலாக எஞ்சியுள்ள இருபத்தி ஐந்து கருவிகளுடன் செயல்படுகிறது.

சுழுத்தி எனப்படும் உறக்க நிலையில், ஆன்மா, இதயத்தில் நின்று, அந்தக் கரணங்களில் சித்தம் ஒன்றும், தசவாயுக்களில் பிராணன் ஒன்றும் ,புருடன் ஒன்றும் ஆக மூன்று கருவிகளுடனும் இணைந்து தொழிற்படும்.

துரியம் எனப்படும் பேருறக்க நிலையில் ஆன்மா, இதயத்திலிருந்து கீழிறங்கி உந்தியில் நின்று, பிராணவாயு, புருடன் ஆகிய இரு கருவிகளுடன் கூடி செயல்படும். இந்நிலை தளைகளின் தொடர்புகள் அகன்ற நிலையாகும். கருவிகள் அனைத்தும் நீங்கப் பெற்று நிட்டை என்று இந்நிலை குறிக்கப்பெறுகிறது. இந்நிலையை,

> **‘‘துரியத்தில்**
> **தோத்தி அணுவாய்த் திகழும் சுடரொளியாய்த்**
> **தேத்தியுரு வாக வந்து சென்மிப்போன்....** [50]

என்று திரிகோணச் சித்தர் குறிக்கிறார். தூங்காமல் தூங்கலாகிய யோக நிலை - துரியம் எனக்கொள்ளப்படுகிறது.

**'கங்குல் பகல் அற்றிடத்தே காட்டிக்கொடுத்தாண்டி' ..** [51]

என்பது அழுகணிச் சித்தரின் கூற்று. இரவு பகல் அற்ற இடம் என்பது துரிய நிலையாகும். துரியமாகிய யோக நித்திரையில் தளைகள் விலகி, இறையருள் கிட்டும் என்பது பொருள். துரிய நிலையைப் பட்டினத்தடிகள்,

**'எனதற, நினைவற, இருவினை மலமற**
**..... மருளற , இருளற இரவொடு பகலற'** [52]

என்று விளக்குகிறார்

துரியாதீதம் எனப்படும் உயிர்ப்படங்கல் நிலையில், புருடன் என்னும் ஒரே கருவியுடன் இணைந்து, ஆன்மா மூலாதாரத்தில் நின்று தொழிற்படுகிறது. தளைகள் உணர்வுகள் என எவற்றையும் அறியாமல், உயிர் ஒடுங்கும் நிலையே துரியாதீதம் ஆகும். மலங்களின் தொடர்பு முழுமையாக அகன்ற நிலையில், அவ்வனுபவத்தை அறிந்த ஆன்மாவும், அனுபவமாய் நின்ற இறையும் இன்றி, இரண்டும் இரண்டறக் கலந்து நிற்கும் முத்தி நிலையாகும். இதனை,

**...'யோகமதின் பாதம் அதைத் தொட**
**துரியாதீதம் வெளிப்பட்டு......அங்கு**
**சும்மாயிருந்ததைச் சொல்ல எம்மாலாகுமோ'** [53]

என மச்சேந்திர நாதர் விளக்குகிறார் இறை நிலையை விளக்கும் திரிகோணச் சித்தரோ,

**.... 'துரியாதீதம்**
**கடந்து திகழ் அம்பரம் கடந்து**
**போதம் கடந்து நின்ற பொற்பதத்தான்'** [54]

என்று துரியாதீதம் எனப்படும் உயிர்ப்படக்க சமாதி நிலையையும் கடந்ததே இறைநிலை என இயம்புகிறார்.

ஆன்மா, புருவ நடுத்தானத்திலிருந்து சிறிது சிறிதாகக் கீழிறங்கி, மூலாதாரத் தானத்தை அடைவது கீழாலவத்தை எனப்படும். மூலாதாரத்திலிருந்து மீண்டும் மேலேறுதல் மேலாலவத்தை ஆகும். மேற்கண்டவாறு சகல நிலையில் ஐந்தவைத்தைகள் நிகழ்கின்றன. இவ்வைந்து அவத்தைகளையும்,

**'ஐ ஐந்து பத்துடன் ஆனது சாக்கிரம்**
**கைகண்ட ஐ ஐந்தில் கண்டம் கனா என்பர்**
**பொய் கண்ட மூவர் புருடன் சுழுனையின்**
**மெய் கண்டவன் உந்தி மேவல் இருவரே'**[55]

எனத் திருமந்திரம் ஒருங்கே இயம்புகிறது. திருமூலரின் மொழிகளை,

**'சாக்கிரம் முப்பத்து ஐந்து நுதலினில் கனவு தன்னில்**
**ஆக்கிய இருபத்து ஐந்து களத்தினில் சுழுனை மூன்று**
**நீக்கிய இதயம் தன்னில் துரியத்தில் இரண்டு நாபி**
**நோக்கிய துரியாதீதம் நுவலில் மூலத்தில் ஒன்றே '....**[56]

என அவ்வாறே அருள் நந்தி சிவாசாரியார் வழிமொழிகிறார்.

''உயிர்கள் கேவல நிலையில் தன்னை அறியாது, கருவி கரணங்களுடன் கூடாது நின்று, பின்னர் கருவிகளுடன் கூடிக் கட்டுண்ட நிலையில் பக்குவப்பட்டு சகல நிலையின் வழி சுத்த நிலையை அடையும். தன்னை அறிகின்ற நிலையில் ஆன்மா சுத்தன். ஒன்றையும் அறியாது கிடக்கின்ற நிலையில் கேவலன். இரண்டிற்கும் இடைப்பட்ட நிலையில் பலவகையான பக்குவ நிலையில் சகலன் எனக் குறிக்கப்படுகிறது'...[57]

உயிரின் இலக்கு சுத்த காரண அவத்தையில் துரியாதீத நிலையை அடைவதேயாகும். இந்நிலை நின்மல துரியாதீதம் - சிவப்பேறு பெறுதல்..[58] எனக் குறிக்கப்பெறுகிறது. உயிரின் மெய்யியல்பும் இதுவே. இதனை உண்மை துரியாதீதம்[59] என சிவஞான சித்தியார் இயம்புகிறது. இவ்வுண்மை

**'தத்துவம் எல்லாம் அகன்ற தன்மையர்க்குச் சின்மயமாம்**
**நித்த முக்தி சுத்த நிறைவே'**[60]

எனத் தாயுமானவர் பாடலில் காணக்கிடைக்கிறது.

**உயிர் வகைகள்**

உயிர்களின் பிறவித் தொடருக்குக் காரணமானவை, ஆணவம், கன்மம், மாயை ஆகிய தளைகளே. உயிர்கள் இத்தளைகளுடன் கொண்டுள்ள தொடர்பிற்கேற்ப மூவகைப்படுத்தப்படுகின்றன. மூலமலம் எனப்படும் ஆணவத்துடன் மட்டுமே தொடர்புடையவர்கள் விஞ்ஞானகலர் எனப்படுவர். இவ்வகையினரை,

**'ஒரு மலத்தர் ஆயும் உளர்'** [61]

என உமாபதி சிவாசாரியாரும்.

**''ஒரு மலத்தன் எனுமாட்டை ஒதுக்கிக்கட்டு கோனே''**[62]

என இடைக்காட்டுச் சித்தரும் குறிப்பிடுகின்றனர்.

ஆணவம், கன்மம் ஆகிய இரு தளைகளுடன் தொடர்புடையோர் பிரளயாகலர் எனப்படுவர். ஆணவம் கன்மம் மாயை ஆகிய மூன்று தளைகளுடன் தொடர்புடையோர் சகலர் எனப்படுவர். இவ்வகையினரைத்

**''திரிமலத்தார் ஒன்று அதனிற் சென்றார்கள்..**[63]

எனத் திருவருட்பயன் விளம்புகின்றது. சகல நிலையினரை **''மும்மலத்தன்''..**[64] என இடைக்காட்டுச் சித்தர் இயம்புகிறார். இம்மூவகையினரின் இலக்கணத்தை திருமூலரும் இவ்வாறே இயம்புகின்றார். [65]

'விஞ்ஞான கலர் என்னும் சொல் விஞ்ஞான + அகலர்; மேலான பேரறிவால், விசேட ஞானத்தால், கலை நீங்கப் பெற்ற ஆன்மா என்றும், பிரளயாகலர் பிரளய + அகலர் உலகு ஒடுங்கும் காலத்து, பிரளய கால முடிவில் கலை நீங்கப்போகிற ஆன்மா என்றும் , சகலர் என்பது கலாதி தத்துவங்களுடன் கூடிய ஆன்மா என்றும் பொருள் கொள்ளப்படுகிறது'.[66] இம்மூவகை உயிர்களும், ஆணவத்தின் தொடர்பு உடையவர்களாகவே உள்ளனர். மூலமலம் எனப்படும் ஆணவம் விஞ்ஞான கலர் ஆன்மாக்களில் சூக்குமமாயும், பிரளயாகலர் ஆன்மாக்களில் தூலமாயும் சகலர் வகை ஆன்மாக்களில் தூலாதாரமாயும் விளங்குகிறது. இவ்வுண்மை

**''மூன்று திறத்துள்ளாரும் மூல மலத்துள்ளார்கள்''..**[67]

என திருவருட்பயனில் காணக்கிடைக்கிறது. சகலர் வகை ஆன்மாக்கள், மாயையின் தொடர்பு உள்ளமையால், நிலையற்ற மாயையின் வெளிப்பாடுகளான உலகத்து நுகர் போகப்பொருட்களை ஆன்மா சார்ந்திருப்பதால், தாம் மூவகைத் தளைகளால் பிணிக்கப்பட்டிருப்பதைத் தம் அவல நிலையை அறிவதில்லை. சகல நிலையினின்று, மூன்று தளைகளிலிருந்து, ஆன்மா தன்னை விடுவித்துக்கொள்ளச் சித்தர்கள் யோக நெறியைச் சாதனமாக உரைத்தனர்.

**‘‘காரணக்கோ மூன்றனையுங் கால் பிணிப்பாய் கோனே- நல்ல**
**கைவசமாம் சாதனங்கள் கடைப்பிடிப்பாய் கோனே...**[68]

என்னும் இடைக்காட்டுச் சித்தரின் அறிவுரைகள் இங்கு நினைவு கூரத் தக்கவை.

‘ஒரு மலமுடையார்க்கு இறைவன் அவர் தம் அறிவினில் அறிவாய், நின்று உள் நின்று உணர்த்துவன். இரு மலமுடையார்க்கு மான், மழு, நாற்றோள், நீலமணிமிடறு, முக்கண் முதலிய உறுப்புகளோடு முத்தொழில் புரியும் வடிவில் குருவாகக் காட்டி முன் நின்று உணர்த்துவன். மும்முலமுடையார்க்கு அவரனைய வடிவு கொண்டு குருமூர்த்தியாக வந்தருளுவன்....[69] இவ்வாறு இறைவனின் எல்லையற்ற பெருங்கருணையினால், திருவருளினால், உயிர்கள் தம்மைப் பிணித்துள்ள தளைகளின்று விடுபட்டுத் தன்னை அறிந்து இறையருளாலே இறைவனடியாம் முத்திப்பேற்றினை எய்துகின்றன.

**தச காரியம்**

தசம் - பத்து, காரியம் - செயற்பாடுகள் உயிரானது, மும்மலங்களிலிருந்து விடுபட்டு, வீடு பேற்று நிலையை அடைய விழையும் போது, இச்சாதனையில் முயன்று முன்னேறும் போது, உயிரறிவில் நிகழும் மாற்றங்கள், படிநிலைகள், செயல்பாடுகள் பத்து வகைகளாக வகுக்கப்பட்டுள்ளன. இப்பத்து வகை செயல்பாடுகளை தசகாரியம் என சைவ சித்தாந்தம் குறிக்கிறது. அவை தத்துவரூபம் , தத்துவ தரிசனம் , தத்துவசுத்தி, ஆன்ம ரூபம், ஆன்மதரிசனம், ஆன்ம சுத்தி ,சிவரூபம், சிவ தரிசனம் ,சிவயோகம், சிவபோகம் என்பனவாகும்.

சரியை, கிரியை, யோகம் ஆகிய நெறிகளில் தொடர்ந்து இறை வழிபாடு இயற்றும் உயிர்கள், சாத்திர நூல்களையும், தோத்திர நூல்களையும் முறையாகப் பொருள் உணர்ந்து பயின்று வருவதாலும், உலக அனுபவத்தில் அழுந்தி நிற்பதாலும்,

**‘சரியை கிரியை யோகம் தாண்டிய பின் ஞான**
**புரிக்கோட்டைக்குள்ளே புகுந்து’....**[70]

என்னும் ஞானச் சித்தரின் கூற்றுப்படி ஞான நெறியில் பயணிக்கத் துவங்குகின்றன. அதன் விளைவாக உலகமும், உடலும், ஏனைய போகப் பொருட்களும் நிலையற்றவை: சடப்பொருள்கள் என்று உணருகின்றன.

**'மாடும் மனைகளும் மக்களுஞ் சுற்றமும் வான் பொருளும்**
**வீடும் மணிகளும் வெண் பொன்னுஞ்செம்பொன்னும் வெண்கலமும்**
**காடுங் கரைகளும் கல்லாம் பணுயுங் கரி பரியும்**
**தேடும் பல பண்டம் நில்லா சிவகதி சேர்மின்களே'....**[71]

என்னும் இடைக்காட்டுச் சித்தரின் மொழிகளுக்கேற்ப, நிலையாமையை உணர்ந்த உயிர்களுக்கு உலகப்பற்றும், உடல் பற்றும் சிறிது சிறிதாக நலிவடைகின்றன.

ஞான நெறியின் முதல் படியாக மண் தத்துவம் முதல் சிவம் எனப்படும் நாத தத்துவம் இறுதியாக உள்ள முப்பதாறு தத்துவங்களின் இயல்புகளையும் நூல்களின் துணை கொண்டோ, கேள்வி ஞானத்தின் வாயிலாகவோ உயிர்கள் அறிந்து கொள்வதே தத்துவ ரூபம் எனப்படும் முதற் செயல்பாடு ஆகும்.

தத்துவங்களை முழுமையாக அறிந்த பின்னர், உயிர்கள், ஆணவ மலச் சார்பின் காரணமாகவே தத்துவங்களுடன் கூடின; எனவே தத்துவங்களும் தம்மை அறியாமையில் அழுந்தச் செய்வன; அவை சடப்பொருட்கள் என்று உயிர்கள் அறிகின்றன. அவற்றின் உண்மை இயல்பினை அவற்றுள் அழுந்தி நின்றே அறியும் உயிர், தாமாக எதையும் அறிய மாட்டாது என்றும் அறிவது இரண்டாம் படி நிலையான தத்துவ தரிசனம் ஆகும். இந்நிலையைத் திருமூலர்,

**அறிவொன்றிலாதன ஐயேழுமொன்றும்**
**அறிகின்ற என்னை அறியாதிருந்தேன்**
**அறிகின்றாய் நீயென்(று) அருள் செய்தார் நந்தி**
**அறிகின்ற நானென்று அறிந்து கொண்டேனே..**[72]

என விளக்கியுரைக்கிறார்.

தத்துவங்களின் சடத் தன்மையையும், நிலையற்ற தன்மையையும் அறிந்த உயிர்கள். அவற்றில் அழுந்தி, அவற்றைச் சார்ந்து நில்லாமல், இறைவன் திருவருள் துணை கொண்டு அவற்றை விட்டு நீங்கி நிற்பது தத்துவ சுத்தி எனப்படும் செயற்பாடாகும். இதனை

**''தூறோடு இசைந்து சுழன்று வரும் தத்துவத்தை**
**வேரோடு இசைந்து விளங்குவது...**[73]

எனப் பத்திரகிரியார் உரைக்கின்றார், இக்கருத்து.

**''தத்துவம் நீக்கி மருள் நீக்கித் தானாகிப் பொய்த்தவம் நீக்கி** [74]

எனத் திருமந்திரத்தில் காணக்கிடைக்கிறது.

ஆணவமலச் சார்பினால் தத்துவங்களைப் பெற்ற உயிர்கள், அவை அறிவற்ற சடப்பொருட்கள் என்றுணருகின்றன. ஆன்ம அறிவை விளக்கும் தத்துவங்கள் அறிவற்றவை, அவற்றின் துணை இன்றி ஆன்ம அறிவு விளங்காது. இவ்வுண்மைகளை உயிர் அறிந்து கொள்ளும் நிலையே ஆன்மரூபம் ஆகும்.

உயிரானது தான் அறிவதையும் தன்செயல்களையும், தன்னாலேயே நிகழ்வதாகக் கருதாமல், இறையருளின் துணையாலேயே தன் அறிவும் செயல்களும் நிகழ்கின்றன எனத் தெளிந்து நிற்றலே ஆன்ம தரிசனம் ஆகும். இக் கருத்தினை,

**'அவன் அசையா விடின் அணு அசையாது என்றல்**
**புவனத்தில் உண்மையடி குதம்பாய்''....** [75]

என்னும் குதம்பைச் சித்தரின் பாடல் வரிகளில் காண முடிகிறது.

**'என் செயல் இன்றி யாவும் நின் செயல் என்று எண்ணுவேன்''...** [76]

என வரும் தாயுமானவரின் பாடல் வரிகளும் சைவ சித்தாந்தம் உணர்த்தும் ஆன்ம தரிசன நிலையையே உரைக்கின்றன.

தன்னால் ஆவது ஒன்றுமில்லை என்று தன் உண்மைத் தன்மையினை உணர்ந்த உயிர், தான் தனது என்னும் செருக்கற்றுத் தன் செயல் அற்று, எல்லாம் இறைவனின் திருவருளே என்றுணர்ந்து இறையருளைச் சார்ந்து, அதனைப்பற்றி அதனில் அழுந்தி நிற்கும் நிலை ஆன்ம சுத்தி எனப்படும் செயல்பாடாகும்.

**'எல்லாம் சிவன்செயல் என்று அறிந்தால் அவன் இன்னருளே**
**அல்லால் புகல் இடம் வேறும் உண்டோ'?...** [77]

என்னும் தாயுமானவரின் பாடல் வரிகள் இங்கு ஒப்புநோக்கத் தக்கவை.

இறைவன் உயிர்களுடன் ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும் நின்று, அநாதியே ஆணவ மலச்சார்பு கொண்டு, தன் அறிவிச்சை செயல்களை இழந்து நிற்கும்

உயிர்களை உய்விக்கின்றான். தனு, கரண, புவன போகங்களை மாயையினின்று படைத்தும், நிலை நிறுத்தியும் , அவற்றை மீண்டும் மாயையில் ஒடுக்கியும் உயிர்களுக்கு மலபரிபாகம் நிகழ்விக்கின்றான். இந்நிலையில் உயிர்கள் தத்துவங்களிலிருந்து நீங்கித் தம் இயல்பினை உணர்ந்து நிற்குங்கால், இறைவன் தன் அருட்சத்தியினை சத்திநிபாதமாக உயிர்களிடத்தே பதிக்கிறான். சத்திநிபாதம் எய்தப்பெற்ற உயிர்களுக்கு இதுவரை உள்நின்று உணர்த்திய இறைவன், முன்னின்று உணர்த்தும் பொருட்டு, குருவடிவாய் எழுந்தருள்வான்.

**''கொள்ளைப்பிறப்பு அறுக்கக் கொண்டான் குருவடிவம்'**
**குருவாகி வந்தானோ? குலம் அறுக்க வந்தானோ?**
**உருவாகி வந்தானோ?'** [78]

என்னும் பட்டினத்தாரின் கூற்றுப்படி, இறைவன் குருவாக எழுந்தருளித் தான் உயிரினின்றும் வேறு அற நின்ற முறையினை விளக்குங்கால், அவ்வாறு விளக்குவது சிவ பரம் பொருளே என்று, உயிர் தன் உள்ளத்தில் ஐயமின்றித் திரிபின்றி அறிவது சிவரூபம் ஆகும்.

**''அவனியில் வந்து குருபரனாகி யருளிய பெருமையை..** [79] எட்டாந் திருமுறையும் எடுத்தியம்புகிறது. குருவின் விளக்கமின்றி, உயிர் தானே இறைஇயல்பை அறிய முடியாது. சிவபெருமானே குருவாகத் திருமேனி கொண்டு தனக்கு உணர்த்துகிறான் என்பதை அறிவதே சிவரூபம் என்னும் செயல்பாடாகும்.

சிவரூபம் உணர்ந்த நிலையில் மண் முதலாம் தத்துவங்களைத் தனது என்றும். அவற்றால் விளக்கம் பெற்ற தன்னை யான் அறிவுடையவன் என்றும் கருதி வந்த ஆன்மா, தற்போதம் நீங்கப் பெற்று யான், எனது என்னும் உணர்வுகளும், அறவே அகலப்பெற்ற நிலையில் சிவபெருமானின் திருவடி தரிசனம் கிடைக்கப்பெறுகிறது. காணும் இடமெல்லாம் சிவபெருமானின் திருவருளையே காண்பதல்லாமல் வேறு எதையும் காணாது. அனைத்தும் சிவமாகக் காணல் திருமுக தரிசனம் ஆகும். இவ்வாறு திருவருளால் திருவருளில் அழுந்தி நிற்கும் ஆன்மா, அஃது எத்தகையது என்று கூற முடியாதபடி இறையருளில் பரவச நிலையில் நிற்பது திரு முடி தரிசனமாகும்.

**'என்ன சொல்லப் போறேன் நான் இந்த அதிசயத்தை'....**
**....சொல்லாலே சொல்லுதற்குச் சொல்லவாய் இல்லையடி'...** [80]

என்னும் பட்டினத்தாரின் அனுபவ மொழிகள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கவையாகும்.

சிவபெருமானின் எல்லையற்ற கருணையினால், சிவமின்றி வேறு பொருள் ஏதும் இல்லை என்று உணரும் உயிர், மீண்டும் தத்துவங்களின் தொகுப்பினில் பொருந்தாமல் விலகி நிற்கும். இவ்வாறு விலகி நின்று தனித்து இயங்கும் ஆற்றல் உயிர்களுக்கு இல்லையாதலின் தான் பிரமம் என்னும் தற்போத உணர்வில் ஒடுங்கும். தளைகளில் இருந்து முற்றிலும் விடுபட்டும் தான் அருளுடையவன் என்ற தற்போத உணர்வில் அழுந்தி அமையாமலும், அதற்கு மேலும் அறிதற்கரிய சிவம், யாண்டும் நீக்கமற நிறைந்திருப்பதை அறிந்து எல்லாம் சிவமாகக் காணலே சிவதரிசனம் ஆகும்.

**'பார்த்த இடம் எங்கும் பரம் எனவே உள் புறம்பும்'**
**...'பார்த்த இடம் எல்லாம் பரன் காண்'...**[81]

என்னும் பட்டினத்தாரின் பாடலில் அமைந்த சிவதரிசனச் செயற்பாட்டுக் கருத்துக்கள்,

**'சிந்தையும் சிவமாய் நின்ற செம்மையோடு**
**அந்தியாய் அனலாய்ப் புனல் வானமாய்ப்**
**புந்தியாய்ப் புகுந்துள்ளம் நிறைந்த எம்**
**எந்தை'.....**[82]

என்னும் நாவுக்கரசரின் மொழிகளிலும் வெளிப்படுதலைத் தெளிவாகக் காண முடிகிறது.

சிவபெருமானின் அருளன்றித் தன்னால் ஒரு அசைவு கூட நிகழ்த்த இயலாது என்று உணர்ந்த உயிரானது, உள்ளும் புறமும் சிவத்துடன் கூடி நிற்றலே சிவயோகம் என்னும் நிலையாகும். தற்செயலும், தற்போதமும் அற்ற நிலையில், மீண்டும் பாசமாகிய தளைகள் தாக்காமல், அவற்றின் பிடியின் சிக்காமல், திருவருளைப்பற்றி அதனில் படிந்து நிற்பதே சிவயோகம் என்னும் பெருநிலையாகும். இந்நிலையை.

**'நீங்காச் சிவயோக நித்திரை' .....**[83]

எனப் பத்திரகிரியார் குறிக்கிறார்.

தசகாரியங்களுள்,இறுதிச் செயல்பாடான சிவபோகத்தை,

**'தனக்கு என ஓர் செயல் அற்றுத் தான் அதுவாய் நிற்கில்**
**நாதன் அவன் உடல் உயிராய் உண்டு உறங்கி நடந்து**
**நானா போகங்களையும் தானாகச் செய்து பேதம் அற நின்று**
**இவனைத் தான் ஆக்கி விடுவன்**
**பெருகு சிவபோகம் எனப் பேசும் நெறி இதுவே'**[84]

என உமாபதி சிவாசாரியர் விளக்குகிறார். இவ்விளக்கம், இயல்பாகவே ஞான சொரூபியாய், இயல்பாகவே பாசங்களின் நீங்கிய சிவ பரம் பொருளே, பொறிகளை வாயிலாகக் கொண்டு உணரும் தன்மை நீங்கி இருந்தபடி, எங்கும் எவற்றையும் கலந்து நின்று உணரும் போதனாவான். பாசங்களினீங்கி, அறிவுருவான ஆன்மாக்களிடத்தில் கலந்து நின்று காட்டியும் காண்பன். ஆன்மாக்கள் தோறும் நிறைந்து நின்று அச்சீவனும் ஆவன்'..[85] என்னும் திருமந்திர விளக்கத்தை ஒத்துள்ளது.

தத்துவரூபமும், தத்துவ தரிசனமும், ஆன்ம ரூபமும், இறைவன் குருநாதனாக உயிர்களுக்குத் காட்சியருளுவதற்கு முன்பு நிகழ்வன. தத்துவ சுத்தியும் ஆன்மதரிசனமும், சிவரூபமும் குருநாதன் உயிர்களுக்குக் காட்சி தரும்போது உடனாக நிகழ்வன. காட்சிக்கு முன் நிகழ்வது அபரஞானம். இதுவே இறையருளைப் பெறுவதற்கு உரிய நெறிமுறைகளை மயக்கமற உயிர்களுக்கு உணர்த்தும். காட்சியின் போது நிகழ்வது பரஞானம். இஃது உயிர்களின் அறியாமையாகிய ஆணவமல மறைப்பை அகற்றி திருவருளை உணர்த்தி, அத்திருவருளால் நிகழும் அனுபவஞானமாகும். சிவதரிசனத்தில் எல்லாம் சிவமே என்னும் உணர்வு தோன்றும். அந்நிலையில் உயிர்களுக்கு உள்ள தளைகள் முற்றிலும் அகன்று விடுவதால் ஆன்மா தூய்மை அடைந்து ஆன்ம சுத்தி நிகழ்கிறது. சிவ தரிசனம் பெற்ற ஆன்மா இறையருளுடன் முழுமையாக ஒன்றி, தற்போதமும், தற்செயலும் அற்று நிற்கும். இந்நிலையே சிவயோகம் ஆகும். இதனைச் சிவஞானபோதம்,

**ஏகனாகி இறை பணி நிற்க ...**[86]

எனக்குறிக்கிறது. இந்நிலையில் உயிர் இருந்தும் இல்லை என்ற நிலையில் சிவம் மட்டுமே உள்ளது என உயிர் காணும் நிலையில், உயிர் சிவ வியாபகத்துள் அடங்கி நிற்கும் என்று பொருள் கொள்ளப்படுகிறது.

சிவயோகத்தில் நிலைத்து நிற்கும் உயிரின் கண் சிவபெருமான் தம் திருவருளைப் பதிக்கும்போது உயிருக்குச் சிவானந்தம் தோன்றும். அந்நிலையில் உயிரானது சிவானந்தப்பெருக்கில் மூழ்கிப் பரவச நிலையில் விளங்கும். இப்பேரின்பப் பெருநிலையே சிவபோகம் எனப்படும். உயிர்கள் அடைய வேண்டிய இலக்கு இதுவேயாகும். இதுவே உயிர்களின் இறுதி நிலை, முடிந்த நிலை என சைவ சித்தாந்தமும், சித்தர் தத்துவமும் ஒருங்கே உரைக்கின்றன.

உயிரானது இவ்வுலகில் இயங்குவதற்கு நிலைக்களனாய் விளங்குவது உடலாகும். உயிர், கேவல நிலையில், ஆணவ மலத்தை மட்டும் பற்றி நிற்கும் போது, அப்பற்றின் காரணமாக உயிரின் அறிவும், செயலும் இயக்கமின்றி, தளர்வுற்று நிற்கிறது. இத்தளர்வை நீக்கும் பொருட்டு, கருணையே காரணமாக இறைவன் உயிர்களுக்கு மாயையின் தொடர்பை வழங்குகிறான். மாயையுடன் இணைந்து உயிர் பெறும் முதல் நுண்ணுடல் காரண உடல் எனப்படும். ஏனெனில், மாயையின் வெளிப்பாடுகளான ஏனைய தத்துவங்கள் உயிரினை வந்தணைய இக்காரண உடலே முதற்காரணமாகிறது. இவ்வுடலைப் பெற்ற அளவில் இதற்கு முன் ஆணவத்தால் பிணைக்கப்பட்டு எதையும் அறியாது இருந்த நிலை சற்று விலகி, உயிர்கள் சிறிதளவு விளக்கம் பெறுகின்றன. இவ்வுடலை இன்பப்போர்வை (ஆனந்த மய கோசம்) என்றழைப்பர்.

காலம், நியதி, கலை, வித்தை, அராகம் ஆகிய ஐந்து தத்துவங்களும் கூடிய நிலையில் புருடன் என்று பெயர் பெறும். இப்புருடத் தத்துவம், உயிருடன் இணைந்த நிலையில் பெறும் உடல் கஞ்சுக உடல் எனப்படுகிறது. உயிரின் அறிவு , இச்சை ,செயல்கள் ஆகியவற்றை சிறப்பாக விளக்கி, உயிருக்குப் பொருள்களை நுகரும் தன்மையை அளிப்பது இப்புருடத் தத்துவமாகும். உயிரின் அறிவு விளக்கத்திற்குக் காரணமாக இருப்பதால் புருடத் தத்துவத்துடன் கூடிய உடல் புலப்போர்வை (விஞ்ஞான மயகோசம்) எனப்பெயர் பெறுகிறது. சாத்துவிகம், இராசதம், தாமசம், என்னும் முக்குணங்களாலான உடல் குண உடல் எனப்படுகிறது. இம்முக்குணங்களும், மனம் உள்ளிட்ட அகக்கருவிகளைத் தம்முள் அடங்கி நிற்றலின் அகப்போர்வை (மனோமயகோசம்) எனப்படுகிறது.

காரண உடல், கஞ்சுக உடல், குண உடல் இவை மூன்றும் பர உடல் எனப்படும். இத்தொகுப்பினுள் வித்தியாத் தத்துவங்கள் ஏழும், சித்தம் ஒன்றுமாகிய எட்டுத் தத்துவங்கள் உள்ளன. மனம், புத்தி, அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் மூன்றும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் தன் மாத்திரைகள் ஐந்தும், ஆகிய எட்டுத் தத்துவங்களாலானது சூக்கும உடல் எனப்படும். நுண்பூதங்கள் எனப்படும் தன் மாத்திரைகளாலாகிய உடல் ஆதலால், நுண்ணுடல் எனவும் பெயர் பெறுகிறது. எட்டுத் துத்துவங்களின் தொகுப்பாதலால் புரியட்ட காயம் ' எனவும் அழைக்கப்படுகிறது.

> **''புரியட்ட காயம் புலப்பட எனக்கு**
> **தெரியெட்டு நிலையும் தெரிசனப்படுத்தி '..**[87]

என வரும் விநாயகரகவல் அடிகள் இங்கு நினைவு கூரத் தக்கவை.

நுண்ணுடல் பிராணன் என்னும் உயிர்க்காற்றுடன் நிற்றலானும், அக்காற்று நீங்கும்போது அக்காற்றுடன் கூடி நீங்குதலானும், நுண்ணுடலை உயிர்ப்போர்வை (பிராணமயகோசம்) என வழங்குவர். நிலம், நீர், நெருப்பு , காற்று, ஆகாயம் ஆகிய ஐம்பூதங்களின் சேர்க்கையில் உருவாகும் உடல் பருவுடல் எனப்படும் தூல உடலாகும். இஃது உணவால் நிலைபெறுவதால் (அன்னமயகோசம்) எனப்பெயர் பெறுகிறது.

**''மருவு ஆனந்தம் விஞ்ஞானம் மனோபிராணன் அன்னமயம்**
**உருவாம் தன்மை உண்டாய், முன் ஒன்றுக்கு ஒன்று சூக்குமமாய்**
**வருமாம் அன்ன மயம் பற்றி, மாயை முதற்காரணமாகும்.**
**அருவாய் ஆன்மா ஐங்கோசத்து ஆர்ப்புண்டு அவற்றின்**
**அகம் புறமாம்...''**[88]

என்று உடல் தத்துவம் சிவஞான சித்தியாரில் உரைக்கப்படுகிறது.

**'காணப்பா அன்ன மயமாகி நின்று**
**கலந்து நின்ற பிராண மய கோசமாச்சே**
**ஊனப்பா விக்ஞான மயமுமாகி**
**உத்தமனே மனோமயமாங் கோசமாச்சு**
**பூணப்பா ஆனந்த மயமுமாகிப்**
**பொங்கிற்றே யஞ்சு திறை போதத்துக்குத்**
**தோணப்பா திறையஞ்சு மாயை மாயை**
**சொல்லுகிறேன் சூட்சத்தைப் பூட்டிப் பாரே'...**[89]

என்னும் கைலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனாரின் பாடலும், 'ஐங்காயக் கோட்டை' - என்னும் ஞானச்சித்தரின் குறியீட்டு மொழியும் சித்தர் தத்துவமும் , சைவ சித்தாந்தமும் உடல் தத்துவத்தை உரைக்கையில் ஒன்றியைந்து நின்றமைக்குச் சான்றுகளாக அமைகின்றன.

உயிர்கள் முதலில் நுண் ணுடலைப் பெறுகின்றன. அதில் உள்ள மனத்திலிருந்து வேறுபாடுகள் எனப்படும் விருப்பு வெறுப்புகள் தோன்றுகின்றன. பின்பு அவற்றின் காரணமாக நல்வினை, தீவினைகள் ஏற்படுகின்றன. பருவுடலைப் பெற்ற பின்னர் உயிரானது பருவுடலில் நின்றே வினைகளைச் செய்கின்றன. பின்னர் வினைகளால், அவற்றிற்கேற்ப உடலும், உடலால் வினைகளும் தொடர்ந்து, பிறவித் தொடர் நிகழ்கின்றது. இவ்வுண்மை

**"பொற்புடை மாயைப் புணர்ப்பின் கண் முற்பால்**
**தனு கரணமும் புவனமும் தந்து, அவற்றால்**
**மனம் முதலால் வந்த விகாரத்தில் வினை இரண்டும்**
**காட்டி, அதனால் பிறப்பு ஆக்கி ...**[90]

என வரும் போற்றிப் பஃறொடை அடிகளால் பெறப்படுகிறது. உயிர் இயக்கத்திற்கு நுண்ணுடலும், பருவுடலும் நிலைக்களன்களாய் விளங்குகின்றன. பரு உடலிற்கு நுண்ணுடலும், நுண்ணுடலுக்கு மாயையும் முதற்காரணங்களாகின்றன. உயிரானது இவற்றுள் நின்று இவற்றை இயக்குகிறது. இவ்வாறு உடல் தத்துவ விளக்கம் தெளிவாக பெறப்படுகிறது.

உயிரானது தத்துவங்களின் சேர்க்கையினால் நுண்ணுடலைப் பெற்று, பின் பருவுடலைப் பெறுகையில் உருவம் கொள்கிறது. தத்துவங்களின் எண்ணிக்கை தொண்ணூற்று ஆறு எனக் கொள்ளப்படுகிறது. அவை " பூதம் -5 , புலன் -5 , கர்மேந்திரியம் -5 , ஞானேந்திரியம் - 5, கோசங்கள்-5, அவத்தை - 5, நாடி -10 வாயு -10, வினை -2, சரீரம் -3, மலம் - 3, தோஷம் - 3, குணம்- 3, மண்டலம் -3, ஈஷணை -3, ஆதாரம் -6, ஆசயம் -7, விகாரம்- 8, கரணம் -4, ஆத்மா - 1...."[91] என வகைப்படுத்தப்படுகின்றன. இக்கருத்தை

**'தொண்ணூத்தாறு தத்துவத்து உரைத்தனைகள் கொண்டோம்"**[92].

என மௌனச் சித்தர் குறிக்கிறார்.

**"மூன்று முப்பத்து ஆறினோடு மூன்று மூன்று மாயமாய்"**[93]

என்பது சிவ வாக்கியர் கூற்று. சித்தர்களின் கூற்றை,

**"துருத்தியாங் குரம்பை தன்னில்**
**தொண்ணூற்றங்கு அறுவர் நின்று"**

என்றும்,

**'முப்பது முப்பத்தாறு முப்பதும் இடு குரம்பை'...**[94]

என்றும் திருநாவுக்கரசு சுவாமிகள் ஆமோதிக்கிறார்.

பருவுடலின் அமைப்பினை, உருவாக்கத்தைப் பட்டினத்தார்,

**''எலும்பொடு நரம்பு கொண்டு இடையில் பிணித்துக்
கொழுந்தசை வேய்ந்தும் ஒழுக்கு விழுங்குடிலைச்
செழும்பெழு உதிரச் சிறு புழுக்குரம்பையை '' ...[95]**

எனக் குறிக்கிறார்.

**'கால் கொடுத்து எலும்பு மூட்டிக்
கதிர் நரம்பு யாக்கை யார்த்துத்
தோலுடுத்து உதிரம் அட்டித்
தொகு மயிர் மேய்ந்த கூரை'...[96]**

என்று வரும் அப்பர் அடிகளின் பாடல், பட்டினத்தார் பாடலை ஒத்திருப்பது நோக்கத்தக்கது.

சித்தர்கள், உடலை மேன்மையாகக் கருதவில்லை. உடல் நிலையற்றது. அழியக்கூடியது. அதனை மெய்யெனக் கருதி அதன் மேல் பற்று வைப்பது கூடாது என்பது அவர்களது கருத்து.

**''நடுவன் வந்தழைத்திட நடுங்கும் யாக்கை
சட்டகம் முடிவில் சுட்டெலும்பாகும்''**

என்னும் பட்டினத்தார் பாடலும்,

**''நாற்றமுடைக்குடம் அது உடைந்தால்
நாயும் நரியும் பெரிய பேயும் கழுகும்
நமதென்றே தின்றிடும்''...**

என்னும் பாம்பாட்டிச் சித்தரின் பாடலும்,

**''நீர் மேல் குமிழியிக் காயம் - இது
நில்லாது போய்விடும் நீயறி மாயம்'...[97]**

என்னும் கடுவெளிச் சித்தரின் கருத்துரையும்

**''நிலையில்லாப்பொய்க்கூடு இத்தேகம்
நிச்சயமற்றது''**

என்னும் மச்சேந்திர நாதரின் கூற்றும்,

**''இந்த வுடல் காயம் இறந்து விடும் இவ்வுலகில் ''[98]**

என்னும் திருவள்ளுவ ஞானப்பாடலும், பருவுடலைச் சித்தர்கள் பெருமையாகக் கருதவில்லை என்ற கருத்திற்குச் சான்றுகளாகின்றன.

சித்தர்களின் இப்போக்கைத் திருமுறை ஆசிரியர்களிடமும் காண முடிகிறது.

**''ஊ னுலா முடை கொள் ஆக்கை**
**உடை கலம் ஆவதென்றும் '....**[99]

என நான்காம் திருமுறையும்,

**''பலரும் கண்டழு தெழ உயிர் உடலைப்**
**பிரிந்து போமிது நிச்சயம்...''**
**....உடலது தன்னைத்**
**தேய்ந்து இறந்து வெந்துயர் உழந்திடும் இப்**
**பொக்க வாழ்வு.....**[100]

என ஏழாம் திருமுறையும்,

**பொத்தை ஊன் சுவர் புழுப்பொதித் துளுத்தசும் பொழுகிய**
**பொய்க் கூரை.....**[101]

என எட்டாந் திருமுறையும்,

**''கழிகின்ற நீரிற் குமிழியைக் காணில்**
**எழுகின்ற தீயிற் கர்ப்பூரத்தை யொக்கப்**
**பொழிகின்ற இவ்வுடல்''.....**[102]

என பத்தாம் திருமுறையும், சித்தர்களின் கருத்தை ஒருங்கே வழிமொழிகின்றன.

சித்தர்களும், திருமுறை ஆசிரியர்களும் உடலை வெறுத்து அதனை இகழ்ந்துரைத்தன் காரணத்தை ஆராயும்போது, உடல் நிலையாமையை அறிவுறுத்தவே அவ்வாறு பாடல்களை இயற்றினர் என்று எண்ண வேண்டியதுள்ளது. உடலைக் கொண்டு இவ்வுலகத்தில் வாழும் வாழ்வே நிலையானது என்று, மனிதன் எண்ணி விட்டால் உலகப்பற்று மிகும். நிலையற்ற உலகப் பொருட்களைத் தனதாக்கிக்கொள்ள ஆவல் மேலிட ஐம்புலன்களின் வழி சென்று, வினைகளைத் தொடர்ந்து இயற்றி, பிறவித் தொடரில் மூழ்க நேரிடும். பின்னர் முத்திப்பேறு கிட்டாது போய்விடும். மனிதப் பிறவி ஒன்றினால் மட்டுமே இறைவனை உணர்ந்து வீடு பேற்றினை அடைய இயலும். உடலின் நிலையற்ற தன்மையை உணர்ந்தால் தான் உலகப் பற்றுகளிலிருந்து விடுபடமுடியும்.

இக்கருத்தை உலகிற்கு உணர்த்த உடல் நிலையாமையை, உடற்கூற்று உண்மையை அறிவுறுத்த வேண்டிய அவசியம் அவர்களுக்கு நேரிட்டது என்றே எண்ணத் தோன்றுகிறது.

உடல் நிலையாமையை வலியுறுத்திய அதே சமயம், உடலைப் பேணிக்காக்க வேண்டும் என்னும் கருத்தையும் சித்தர்கள் அறிவுறுத்தினர். சித்தர்களின் நோக்கில், உடல், வீடு பேற்றினை அடைய உதவும் ஒரு இன்றியமையாத கருவியாகவே விளங்கியது. மனிதன், அனுபவங்கள் அனைத்தையும் உடலின் மூலம் உணர்கின்றான். இறைவனை அறிந்து கொள்வதற்கும் உடல் அவசியமாகிறது.

**'உருக்கலந்த பின்னலோ உன்னை நானறிந்தது' ...**[103]

என்பது சிவ வாக்கியரின் கூற்று. யோக நெறியில் நின்று யோகப் பயிற்சிகளை மேற்கொள்வதற்கு உடல் அவசியமாகிறது. சாதாரண உடல், யோக சாதனையாளனுக்குப் பயன்படுவதில்லை. உடல் தூய்மைப்படுத்தப்பட்டு யோக சாதனைக்குத் தயார் படுத்தப்படவேண்டும். அதன் குறைபாடுகளைக் களைந்து, உடலைப் பேணிக்காத்து, ஆன்மீகக் கருவியாக்கி, யோக சாதனையில் முன்னேற வேண்டும்; ஆன்ம வளர்ச்சி பெற வேண்டும் என்பதும், அட்டாங்க யோகத்தின் இறுதி நிலையான சமாதி நிலையில் முத்திப்பேறு அடைய வேண்டும் என்பதும் சித்தர்களின் கொள்கைகளாகும்.

**பாரப்பா சரீர மீது சமாதிக்காக** [104]

என்பது சட்டை முனி நாயனாரின் கூற்றாகும். அழியக்கூடிய உடலை உரு இலங்கு மேனி' என்றும், அழியாத நுண்ணுடலைத் திரு இலங்கு மேனி என்றும் சிவ வாக்கியர் குறிக்கிறார்......[105] உரு இலங்கு மேனியைக் கொண்ட மனிதன் அதனைத் திரு இலங்கு மேனியாக மாற்றிக்கொள்ள வேண்டும் என்பது அவர் தம் கருத்தாகும்.

உடலைப் பேணிக் காக்க வேண்டியதன் அவசியத்தைத் திருமூலர்,

**''உடம்பார் அழியில் உயிரார் அழிவர்**
**திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்**
**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்**
**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே''...**[106]

என அறிவுறுத்துகிறார். உடலை அழியாமல் காத்து, ஆன்ம விடுதலையடைய அதனைப்பெரும் சாதனமாகப் பயன்படுத்த வேண்டும் என்பது சித்தர்களின் கூற்று. மனித உடலை இறைவன் குடி கொள்ளும் ஆலயமாகவே சித்தர்கள் கருதினர்.

**''ஊத்தைச் சடலமென் றெண்ணாதே யிதை**
**உப்பிட்ட பாண்டமென் றெண்ணாதே**
**பார்த்த பேருக்கே ஊத்தை யில்லை யிதைப்**
**பார்த்துக்கொள் உன்றனுடலுக்குள்ளே''..** [107]

என எங்கும் நிறைந்து எல்லாமுமாகி விளங்கும் இறைவன் உடலிலும் நிறைந்துள்ளான். இக்கருத்தை உணர்ந்து கொள்ள வேண்டும் எனக் கொங்கண நாயனார் விவரிக்கிறார்.

**'' தேகமென்னுஞ் சிவாலயமாமதிற்**
**சென்னி சிறுவாயிற் கோபுரமாம் .....** [108]

என்பது மதுரை வாலை சாமிச் சித்தரின் கூற்றாகும். சிவ வாக்கியர் உடலே ஆலயம் என்னும் கருத்தை விளக்கும்போது விலங்கியல் உண்மையொன்றை உவமையாகக் கூறுகிறார்.

**''கடலிலே திரியும் ஆமை கரையிலேறி முட்டையிட்டுக்**
**கடலிலே திரிந்த போது ரூபமான வாறு போல்**
**மடலுளே இருக்கும் எங்கள் மணியரங்க சோதியை**
**உடலுளே நினைத்து நல்ல உண்மையானது உண்மையே''....** [109]

கரையில் முட்டையிட்டு விட்டுக் கடலுக்குள் செல்லும் ஆமை கடலினுள் எப்போதும் தன் முட்டைகளைப் பற்றி நினைக்கிறது. ஆமையின் இடைவிடாத அந்த நினைவின் காரணமாக முட்டைகள் பொரிகின்றன. அதைப்போல மனிதன் தன் உடலைக் கடவுளின் இருப்பிடமாக எப்பொழுதும் நினைத்து வாழ்ந்தானாகில், உடலானது கடவுளின் உறைவிடமாகவே மாறிவிடுகிறது. சித்தர்களின் கருத்தை

**'ஊனமரும் உடலுள்ளிருந்து உமை பங்கனும்'.......** [110]

என்று ஞான சம்பந்தப்பெருமானும்,

**''காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக'.....** [111]

என்று அப்பர் அடிகளும்,

**'இறைவனே நீயென் உடலிடங்கொணடாய்'....**[112]

என மணிவாசகப்பெருமானும்,

**'உடம்புள்ளே உத்தமன் கோவில் கொண்டான் என்று**
**உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே....**[113]

என்று திருமூலரும் ஒருங்கியைந்து ஆமோதிக்கின்றனர்.

**'ஊனே கருதாம லுள்ளுணர்வோ டொன்றுமது**
**தானே சிவ யோகந் தான்'...**[114]

என உடலை இறைவனின் உறைவிடமாகக் கருதி, உள்ளுணர்வுடன் ஒன்றுவதே சிவயோகம் எனத் திருஞான சாகரம் விளம்புகின்றது.

உயிர் இயல்புகள், நிலைகள், வகைகள் , செயல்பாடுகள் குறித்த மெய்யியல் கோட்பாடுகள் சைவசித்தாந்த மெய்யியலிலும் சித்தர் நெறியிலும் ஒன்றாகவே காணப்படுகின்றன. உடல் என்பது உயிர் இயக்கத்திற்கும், இறைவனை அறிவதற்கும், முத்திப்பேறு என்னும் உன்னதமான இலக்கை அடைவதற்கும், இறைவனால் மனிதனுக்கு அளிக்கப்பட்ட ஒரு வரம். உடல் என்னும் உருவத்துள் இறைவன் உறையும் உண்மையை உணர்ந்து, அதனைப் பேணிப் பாதுகாத்து பிறவா நிலை எய்தும் நெறிமுறைகளை நோக்கிச் செல்ல வேண்டும் என அறிவுறுத்துவதில் இவ்விரு நெறிகளும் இயைந்து நிற்கின்றன.

## குறிப்புகள்

1. Rahdakrishnan.S – Recovery of faith – Harper Collins (Indus Republication 1994) Pg.No.19

2. தமிழ் - தமிழ் அகராதி (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் – 2006) ப. 181

3. மெய்கண்டார் - சிவஞானபோதம். சூ.எண். 3

4. சாமிநாதன். நா. தஞ்சை - திருவருள் அடையும் வழி (தஞ்சாவூர் - குமரன் பதிப்பகம் , 2002) ப. 50

5. ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - (சென்னை - பிரேமா பிரசுரம் 1992) முதற்பாகம் ப : 100.

6. மேற்படி நூல் - ப.173

7. மேற்படி நூல் - ப.107

8. திருமந்திரம் - பாடல் எண் : 2010

9. சித்தர் பாடல்கள் - முதற்பாகம் – மு.நூ – ப:104

10. மேற்படி நூல் : உயிர் எனுங் குருகு விட்டு ஓடும் குரம்பையை : ப: 32
நந்தவனத்தில் ஓர் ஆண்டி ப : 221
வளமான சீவனென்னுஞ் சூத்திரம் - ப. 182
ஆவியும் காயமும் போல் ...... ப 106
உயிராகிய சீவன் ...... திருமந்திரப்பாடல் எண். 2128
அணுவுள் அணுவினை ” ” 2008

11. பதி பசு பாசம் விதிமுறை கிளக்கில் - சங்கற்ப நிராகரணம் (5ம் பாடல்)
சீவனும் இச்சா ஞானக் கிரியையான் ...... சிவஞான சித்தியார்
ஆன்மாவின் வடிவு தானே.....மேற்படி நூல் 195 ம் பாடல்
புருடனே அறிவனாகில்..... மேற்படி நூல் 221 ம் பாடல்
பல உயிர்கள்.....கேவல சகல சுத்தம் என உணர் - சிவப் பிரகாச விகாசம் 33ம் பாடல்

12. உமாபதி சிவாசாரியார் - திருவருட்பயன் – செய்யுள் எண். 11

13. உமாபதி சிவாசாரியார் - போற்றிப் பஃறொடை – கண்ணி எண் : 5

14. உமாபதி சிவாசாரியர் - சிவப்பிரகாசம் – பாடல் எண். 47

15. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - முதற்பாகம் – ப: 83,

15i. அறிவொளி .அ, – சித்தர் பாடல்கள் – மு.நூல் – இரண்டாம் பாகம் ப.726

16. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – மு.நூல் – ப.271.

17. மேற்படி நூல் - ப- 122, 131, 138

18. திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனார் - திருக்களிற்றுப் படியார் – செய்யுள் எண்: 43

19. உமாபதி சிவம் - நெஞ்சுவிடு தூது – கண்ணி எண்: 9

20. உமாபதி சிவம் - போற்றிப் ப ஃறொடை – கண்ணி எண்: 21, 22

21. ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் – ப: 97

22. திருவாசகம் - மு. நூல் - ப. 79

23. சித்தர் பாடல்கள் – மு.நூல் – ப. 104

24. உமாபதி சிவாசாரியார் - சங்கற்ப நிராகரணம் – பா.எண். 7

25. ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் – ப - 138

26. மெய்கண்டார் - சிவஞானபோதம் - சூத்திர எண். 7

27. மாதவச் சிவஞான யோகிகள் - சிவஞான போதச் சிற்றுரை : ஏழாம் சூத்திரம் - மூன்றாம் அதிகரணம் (திருவாவடுதுறை – ஆதீன வெளியீடு – 1984) ப:72.

28. மாணிக்க வாசக சுவாமிகள் - திருவாசகம் (சென்னை : சைவ சித்தாந்தப் பெருமன்றம் -1999) ப. 18, திருச்சதகம் : 26 ம் செய்யுள்

29. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் - ப. 112, பா. எண். 15

30. தொல்காப்பியம் ; பொருளதிகாரம் - மரபியல் – நூற்பா எண். 1526

31. திருவியலூர் உய்ய வந்த தேவனார் - திருவுந்தியார் – பா. எண். 4

32. அருள் நந்தி சிவாசாரியார் - சிவஞான சித்தியார் – பா. எண். 233

33. உமாபதி சிவாசாரியார் - சிவப்பிரகாசம் – பா. எண். 55

34. சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் ப: 209 – பா. எண்.21

35. திருமந்திரம் - ப. எண். 2329

36. அருள் நந்தி சிவாசாரியார் - சிவஞான சித்தியார் – பா. எண். 310

37. சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் - ப: 85 – பா. எண்- 60

38. சிவஞான சித்தியார் - பா. எண். 231

39. சுந்தர மூர்த்தி .கு - சிவஞான சித்தியார் - தெளிவுரை– மு.நூல் – ப: 121, 122.

40. வைத்தியநாதன் கு. - சைவ சித்தாந்தக் குறியீட்டுச் சொல்லகராதி, (திருவிடை மருதூர், திருவாவடுதுறை , ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம் , - 1995) ப : 26, 27

41. வாகீச முனிவர் - ஞானாமிர்தம் (திருப்பனந்தாள் - ஸ்ரீகாசி மடம் - 1988) ப: 14

42. சிவப்பிரகாசம் - பா. எண்: 33

43. சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் , ப - 211 – பா. எண். 43

44. திருமந்திரம் – பா.எண்: 2261

45. சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் ப: 204 – பா.எண். 120

46. திருமந்திரம் – பா. எண்: 2262

47. சிவப்பிரகாசம் - பா.எண்: 50

48. மெய்கண்டார் - சிவஞான போதம் – நூற்பா எண் : 4

49. வைத்தியநாதன் கு. - சைவ சித்தாந்த அடிப்படைக்கொள்கைகள் (திருவிடை மருதூர் - சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சிமையம் - 1995) ப: 43.

50. அறிவொளி அ. - சித்தர் பாடல்கள் : மூலமும் உரையும் (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் - 2006) இரண்டாம் தொகுதி - ப. 655.

51. மேற்படி நூல் - முதல்பாகம் - ப. 328

52. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - முதற்பாகம், மு.நூல் – (சென்னை - பிரேமா பிரசுரம் - 1992) ப: 29.

53. அறிவொளி .அ - சித்தர் பாடல்கள் - மூலமும் உரையும் (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் - 2006) இரண்டாம் பாகம் ப: 644

54. மேற்படி நூல் : ப: 663

55. திருமந்திரம் - பாடல் எண் - 2200.

56. சிவஞான சித்தியார் - பா. எண். 223.

57. அருணாசலம் .ப - திருமந்திரக்கோட்பாடு - (சென்னை- முல்லை நிலையம் - 2002) ப: 243

58. கோமதி சூரியமூர்த்தி - சைவ சிந்தாந்தம் கூறும் முப்பொருள் விளக்கம் (சென்னை - சைவ சித்தாந்தப் பெரு மன்றம் - 2005) ப: 37

59. சிவஞான சித்தியார் - பா.எண். 187

60. தாயுமானவர் பாடல்கள் - மெய்யப்பன். ச. முனைவர். பதிப்பாசிரியர் (சென்னை - மணிவாசகர் பதிப்பகம் , 2004) ப. 262.

61. உமாபதி சிவாசாரியார் - திருவருட்பயன் – பா. எண். 12

62. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் ப: 204 – பா. எண். 116

63. திருவருட்பயன் - பா. எண். - 12

64. சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் ப.204 – பா.எண். 117

65. திருமந்திரம் - பாடல் எண் : 2241

66. வெள்ளை வாரணம் - தா.ம. – சைவ சித்தாந்த வினாடி - வினா – திருவாவடுதுறை- ஆதீன சித்தாந்த பயிற்சி மையம் , சிதம்பரம் - 2006) ப. 28

67. திருவருட்பயன் - பா. எண்: 13

68. சித்தர் பாடல்கள் - முதற்பாகம், மு.நூல் – ப. 204 – பா.எ ண். 122

69. சுந்தர மூர்த்தி. கு. - தெளிவுரை - சிவஞான சித்தியார் – மு.நூல் – ப: 133.

70. அறிவொளி. அ. - சித்தர் பாடல்கள் - மூலமும் உரையும் – இரண்டாம் பாகம் – மு.நூல் – ப: 630

71. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் - ப : 194 – பா. எண். 23

72. திருமந்திரம் - பா.எண். 2181

73. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் – ப - 102

74. திருமந்திரம் - பாடல் எண். 334

75. அறிவொளி அ - சித்தர் பாடல்கள் மூலமும் உரையும் – மு.நூல் – முதற்பாகம் – ப. 364.

76. தாயுமானவர் பாடல்கள் – மெய்யப்பன் ச. முனைவர் -பதிப்பாசிரியர் (சென்னை - மணிவாசகர் பதிப்பகம் - 2004) ப: 134

77. மேற்படி நூல் - ப: 187

78. ஞானக்கோவை சித்தர் பாடல்கள் - மு.நூல் - முதற்பாகம் - ப: 67, 68.

79. திருவாசகம் – போற்றித் திரு அகவல் – 75 , 76 அடிகள்

80. சித்தர் பாடல்கள்– முதற்பாகம் – மு.நூல் – ப: 72

81. மேற்படி நூல் - ப: 73,88

82. இராம சுப்பிரமணியம் வ.த. உரையாசிரியர் - திருநாவுக்கரசர் தேவாரம் - ஐந்தாம் திருமுறை (சென்னை - தமிழ் நிலையம் - 1998) - ப. 310.

83. சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் – ப : 94.

84. உமாபதி சிவாசாரியார் - உண்மை நெறி விளக்கம் - 6ம் பாடல்.

85. திருமூலர் திருமந்திரம் – தண்டபாணி தேசிகர் , ச. - ஸ்ரீபஞ்சாஷர தீப உரை - ஏழாம் தந்திரம் (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு, 1991) – ப : 409.

86. சிவஞானபோதம் - சூத்திர எண். 10

87. ஔவையார் - விநாயகர் அகவல் – அடி எண். 51, 52

88. சிவஞானசித்தியார் – மு.நூல் – பா.எண்: 213.

89. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் - இரண்டாம் பாகம் - ப- 37, 38.

90. உமாபதி சிவாசாரியார் - போற்றிப்பஃறொடை- அடி எண். 11 - 13.

91. இராம சுப்பிரமணியம், வ.,த. – உரையாசிரியர் - திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த தேவாரம் – நான்காம் திருமுறை (சென்னை - தமிழ் நிலையம், 1995) ப. 244

92. அறிவொளி.அ. - சித்தர் பாடல்கள் - இரண்டாம்பாகம்-ப:722– பா. எண். 11.

93. மேற்படி நூல் – முதற்பாகம் ப- 149 - பா. எண். 268

94. திருநாவுக்கரசு சுவாமிகள் - தேவாரம் 4, 5, 6 திருமுறைகள் (திருவாவடுதுறை- ஆதீன வெளியீடு - 1982) நான்காம் திருமுறை ப் 43, பா. எண். 4 , ப- 80 – பா. எண்- 3.

95. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – முதற்பாகம் – ப.32, பா. எண்– 25

96. திருநாவுக்கரசு சுவாமிகள் - தேவாரம் - நான்காம் திருமறை, ப- 98, பா- எண் - 3.

97. ஞானக்கோவை - சித்தர் பாடல்கள் - முதற்பாகம் - ப. 29, 33 அடி.எண். 35, 40, ப, 181 பா.எண். 63, ப: 221 – பா.எண். 3

98. அறிவொளி அ - சித்தர் பாடல்கள் , இரண்டாம் பாகம் - ப. 649 பா. எண். 23 மேற்படி நூல் ப- 965 –பா. எண். 10

99. திருநாவுக்கரசு சுவாமிகள் - தேவாரம்- 4ம் திருமுறை–மு.நூல் – ப. 98, பா. எண் - 6.

100. சுந்தர மூர்த்தி சுவாமிகள் - தேவாரம் (திருவாவடுதுறை – ஆதீன வெளியீடு - 1980) ப: 144, 145– பா.எண். 6 , 8.

101. திருவாசகம் மு.நூல் – ப.72.

102. திருமூல நாயனார் - திருமந்திரம் – செ.எண் – 2587

103. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் -ப: 135 – பா. எண். 196

104. மேற்படி நூல் : இரண்டாம் பாகம் - ப-20, பா. எண். 95

105. மேற்படி நூல் : முதற்பாகம் -ப: 118, பா. எண்- 62

106. திருமந்திரம் - எண் - 724

107. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - முதற்பாகம் – ப- 234, பா. எண். 24

108. மேற்படி நூல், ப - 253, பா.எண்- 38

109. மேற்படி நூல், ப - 123, பா. எண். 95

110. திருஞானசம்பந்தர் தேவாரம் - (மூன்றாம் திருமுறை) மூவர் தேவாரம்: தலமுறை - அடங்கல் முறை (கும்பகோணம் - ஸ்ரீ காமகோடி ஆய்வுமையம் - 1988) ப- 696,பா எண்- 4

111. மூவர் தேவாரம் – மேற்படி நூல் - ப. 1472, பா.எண். 4

112. மாணிக்க வாசக சுவாமிகள் - திருவாசகம் – (மு.நூல்) ப- 65, பா. எண் - 5

113. திருமந்திரம் - எண் - 725

114. நூலாசிரியர் பெயர் குறிப்பிடப்படவில்லை-திருஞானசாகரம்– (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு- 1952) ப : 13, பா. எண். 82.

# தளையியல்

**தளை – விளக்கம்**

சைவ சித்தாந்தம் உரைக்கும் முப்பொருள்களான பதி, பசு, பாசம் ஆகியவற்றுள், பசுவாகிய உயிரைப், பதியாகிய இறைவனுடன், இணையவிடாமல் தடுப்பது பாசம் என்னும் தளையாகும். தளையினை, மலம், அழுக்கு, விலங்கு, கட்டு, குற்றம், இருள் எனப் பல பெயர்களால் குறிப்பர். உயிர்களைக் குற்றங்களுக்கு உட்படுத்துவதால் குற்றம் என்றும், அழுக்கு, மலம் என்றும், உயிர்களைக் கட்டுப்படுத்தி, அவற்றின் அறிவை மறைத்து அவற்றுடன் பிணைந்திருப்பதால் கட்டு என்றும், விலங்கு என்றும் குறிக்கப்படுகிறது. உயிர்களுக்கு அறியாமையை அளிப்பதால் இருள் என்றும் பெயர் பெறுகிறது.

தளைகள், ஆணவம் என்னும், தன்முனைப்பு, வினை என்னும் கன்மம், படைப்புத் தோற்றுவாயாகிய மாயை ஆகியவையாகும். இவை உலகம், உடல், நுகர்ப் பொருட்கள் ஆகியவற்றின் மீது உயிரினைப் பற்றுக் கொள்ளச் செய்வன. பற்றுக் கொள்ளச் செய்வதால் பாசம் என்றும் வழங்கப்படுகின்றன. இம்மூன்றினையும் மும்மலம் எனத் தொகுத்து வழங்குவர்.

**'மும்மலமுஞ் சேர்த்து முளைத்தெழுந்த காயம்'**[1]

எனப் பத்திரகிரியாரும். **'மும்மலம் நீக்கிட'...** [2] என இடைக்காட்டுச் சித்தரும் குறிக்கின்றனர். சைவ சித்தாந்தமும், **'முன்னின்று மும்மலம் தீர்த்து'** எனவும், **'திரிமலத்தார்'**[3] எனவும் உரைக்கின்றது. சிவபெருமான் முப்புரம் எரித்த வரலாற்றில் முப்புரம் என்பது மூன்று தளைகளைக் குறிக்கும் என்னும் கருத்தமைந்த,

**'முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்**
**முப்புர மாவது மும்மலகாரியம்' ...**[4]

என்ற திருமந்திரப் பாடல் இங்கு நினைவு கூரத் தக்கதாகும்.

மாயை என்னும் தளை, மலகன்மங்களோடு கலவாத சுத்தமாயை என்றும், படைப்புத் தோற்றுவாயாகிய அசுத்த மாயை என்றும் எண்ணப்படுகிறது. தளைகளின் எண்ணிக்கையை,

**'முல ஆணவம் ஒன்று: முயங்கி நின்று**
**பாகம் மிக உதவு திரோதாயி ஒன்று**
**பகர் மாயை ஒன்று; படர் கன்மம் ஒன்று**
**தேகம் உறு கரணமொடு புவன போகச்**
**செயல் ஆகும் மாமாயைத் திரட்சி ஒன்று என்று**
**ஆக மலம் ஐந்து'**[5]

என சிவப்பிரகாசம் வரையறுக்கிறது. இக் கருத்தை,

**'மன்னும் மலம் ஐந்தும் மாற்றும் வகையோரான்' ...** [6]

எனத் திருமந்திரமும் உறுதிப்படுத்துகின்றது.

தன் முனைப்பு என்னும் ஆணவம், உயிர்கள் தோறும் இணைந்து நின்று அறியாமையை மிகுவிக்கும். திரோதாயி எனப்படும் மறைப்பாற்றல், தன் முனைப்புடன் பொருந்தி உயிர்களின் அறிவை மறைத்து நிற்கும். உயிர்களிடத்தே செறிந்து இணைந்திருக்கும் நல்வினை, தீவினைகளே கன்மம் ஆகும். மாயை என்பது உயிர்களின் அறிவை மயக்கும். மாயேயம் என்பது மாயையின் வெளிப்பாடுகளான உடல் மற்றும் உலக நுகர்ச்சிப் பொருட்களாகும். மாயையின் மயக்கத்திற்கு முன்னிலைப் பொருளாய் விளங்குவது மாயேயம் ஆகும்.

பதியையும், பசுவையும் போலவே தளையும் தோற்றமில் காலத்தது. தோற்றமும், ஒடுக்கமும் அற்ற அநாதிப் பொருளாகும். இச் செய்தி.

**'அனாதியில் வந்த மலம் ஐந்தால் ஆட்டி' ......**[7]

என்னும் திருமந்திர மொழியால் உறுதிப்படுத்தப்படுகிறது.

பாச மாகிய தளை அறிவற்றது. சடப்பொருள். எனவே, தானே இயங்கும் ஆற்றலும் அதற்கு இல்லை. இவ்வாறிருக்க, இவை எங்ஙனம் உயிர்களைச் சென்று பிணைக்கின்றன? என்ற ஐயம் எழக்கூடும்.

**'மும்மலஞ் சடமென மொழிந்தனை....**
**....... எம்மை வந்தனை தரத்**
**தானோ மாட்டா தியானோ செய்கிலன்**
**நீயோ செய்யாய் நின்மலனாயிட்டு'** [8]

என இருபாவிருபது எழுப்பும் ஐயத்திற்கு,

**' ஆணவம் மாயை கருமம் ஆங்கவை**
**பேணின் செம்பிற் பெருகு இருந் துகள் என'** [9]

ஞானாமிர்தம் மறுமொழி உரைக்கிறது. உயிரானது மாயையிலிருந்து இவ்வுடலைப் பெறு முன்னர். சார்ந்ததன் வண்ணமாகும் தன்மையால் ஆணவமலச் சார்புடன் அறியாமையில் அழுந்தி கன்மம், மாயை ஆகிய தளைகளுடன் பிணைகின்றது. எனவே செம்பின் குணமே களிம்பேறுதல். களிம்பு என்பது வெளியிலிருந்து தோன்றி வந்து செம்பினைப் பற்றி நிற்கவில்லை. செம்பு எப்போது தோன்றியதோ. அப்போதே அது களிம்பேறும் பண்பையும் பெற்றுள்ளது. இவ்வுண்மையை,

**'.. . உயிர் உண்டாவே**
**உளது மலம்; .........**
**நெல்லின் முளை, தவிடு உமி போல் அநாதியாக'** [10]

என உமாபதி சிவாசாரியார் தெளிவுபடுத்துகிறார்.

சைவ சித்தாந்தம் விளக்கும் பசு - பாசப் பிணைப்பினைச் சித்தர்களும் ஒப்புக் கொள்கின்றனர்.

**'ஆணவம் மாயையும் கன்மமும் அம்மலம்**
**காணும் முளைக்குத் தவிடு உமி ஆன்மாவும்**
**'. . . தண்டுலமாய் நிற்கும்' . . . . .** [11]

என்னும் திருமூலரின் திருமொழி இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

**ஆணவம்: தன் முனைப்பு**

தளைக்காரணிகளில் முதன்மையானது தன் முனைப்பு என்னும் ஆணவமாகும். உயிர் பிறப்புக்கு வரு முன்பே. தொடக்கமில் காலந்தொட்டு உயிருடன் இம்மலம் இணைந்திருப்பதால் இதனை **'மூல மலம்'...**[12] எனக் குறிப்பர். உயிரானது உடலைப் பெறுவதற்கான மூல காரணம் ஆணவமாகும். இக்கருத்தினை,

**'ஆணவ மலத் துதித்து அளைந்ததில் உளைந்திடும்' ....** [13]

எனப் பட்டினத்தாரும்,

**'ஆணவத்தால் வந்த காயமதில்'...**[14]

என்று கஞ்சமலைச் சித்தரும், உரைக்கின்றனர். இக்கருத்து,

**'மலம் தாங்கிய பாசப் பிறப்பு'...** [15]

என ஏழாம் திருமுறையில் எதிரொலிக்கின்றது.

தன் முனைப்பு உயிருடன் இரண்டறக் கலந்து நிற்கும் தன்மையது. இரு வேறு தன்மை கொண்ட இரு பொருட்கள் இணைந்து, வேறு அறக் கலக்கும் அத்வைதக் கலப்பில், உயிரும் தன் முனைப்பும் இணைந்துள்ளன. இதனைத் தாயுமானவர்.

**'ஆணவத்தோடு அத்வைதம் ஆனபடி'....** [16]

என்ற தொடரில் விளக்குகிறார். தன் முனைப்பு அறிவற்றது. அதனால் எதையும் அறிந்து அனுபவிக்க இயலாது. அது சடப்பொருள். **'மலம் அசித்தாகி நிற்கும்'...** [17] என்பது அருள் நந்திசிவாசாரியாரின் கூற்றாகும். அறிவற்ற பொருளாகையால் தன் முனைப்பு அறிவைத் தராது. அறியாமையைத் தரவல்லது. உயிருக்கு அறியாமையைத் தரவல்ல ஒரு பொருள் உண்டெனில், அது தன் முனைப்பேயாகும்.

**'அறிவில்லாத என்னைப் புகுந்தாண்டு கொண்டு அறிவதை அருளி'...**
**அடியேன் அறியாமை அறிந்து நீயே அருள் செய்து'...** [18]

என்னும் திருவாசக மொழிகள் இங்கு நினைவு கூரத் தக்கவை. தன் முனைப்பின் தன்மையினை,

**'அறியாமையாம் மலத்தால் அறிவு முதல் கெட்டனடா'...** [19]

என்று பட்டினத்தாரும்,

**'அறியாத பாவிக்கு ஞானமேது?' ....** [20]

என்று காகபுசுண்டரும் உறுதிப்படுத்துகின்றனர்.

தன் முனைப்பு, உயிரறிவை இரண்டு நிலைகளில் மறைக்கிறது. அநாதியில் உயிர் பிறப்புக்கு உட்படாத கேவல நிலையில், உயிருடன் இணைந்து நின்று உயிரின் அறிவை, மறைத்து பேரறியாமை என்னும் போர்வை கொண்டு, உயிரினைச் சுற்றிச் சூழ்ந்து நிற்கும். இந்நிலையில் உயிர் இயக்கமற்றுச் சடம் போலவே இருக்கும். இவ்வியல்பினைக்,

**'கண்ணை மறைத்த கடிய தொழில் ஆணவத்தால்**
**எண்ணும் செயல் மாண்ட எவ்வுயிர்க்கும் ...'** [21]

என போற்றிப் பஃறொடை நிறுவுகிறது.

உயிர் பிறப்புக்கு உட்பட்டுச் சகல நிலையில் இயங்கும் போது, உயிருடன் இணைந்து நின்று அறிவை மறைத்து, அந்நிலையில் உயிருக்கு விபரீத உணர்வுகளைத் தோற்றுவிக்கின்றது. தானே அனைத்திற்கும் காரணமானவன் என்று கருதி உயிர்

செயல்படுவதற்கும், உயிரின் மயக்கத்திற்கும் அறியாமையைத் தரும் தன் முனைப்பே காரணமாகும்.

**'உயிர்க்குயிரா நின்ற உணர்வை ஒளித்து**
**மயக்குவது மூலமலமாசு' ...**[22]

என்பது ஸ்ரீ மறை ஞான சம்பந்த நாயனார் கூற்று. இக்கருத்து ''அறியாமையை விளைத்து நிற்பதெனக் கேவலத்தினின்ற நிலை பற்றிக் கூறுமிலக்கணமே பொதுவியல் பாகலின், ஆன்மாவோடு சகசமாய் நின்று அறியாமையை விளைத்துக் கருவிகளோடு கூடி ஐந்தவத்தையுறுவதற்கே துவாயது மலமென''[23] என்று சிவஞான மாபாடியத்தில் நிறுவப்படுகிறது.

தன் முனைப்பு உயிர்களுடன் இணைந்து நிற்கும் போது தன்னையும் காட்டாது. உயிர்கள் தம் உண்மை இயல்பை அறியவொண்ணாமல் அறிவை மறைத்தும் நிற்கும். ஆன்மாவைக் கணவனாகவும், தன்முனைப்பைப் பெண்ணாகவும், ஒப்புமைப்படுத்திய உமாபதி சிவாசாரியார், **'கணவர்க்கும் தோன்றாத கற்பு' ...** [24] என்று நகைச் சுவையுடன் தன்முனைப்பின் இயல்பினைக் குறிக்கிறார்.

உயிரின் இரு நிலைகளிலும், உயிரறிவைச் செயல்படவிடாமல் மறைத்து நின்று அறியாமைச் செய்வதால் தன் முனைப்பு இருளை விடக் கொடியதாகும். இருளாவது தன்னை மட்டுமாவது காட்டி நிற்கும். தன் முனைப்போ, தன்னையும் காட்டாது, உயிரானது தன் உண்மை இயல்பை உணராமல் தடுத்தும், மறைத்தும் நிற்கும் தன்மையது. இதனைத் திருவருட்பயன்,

**' ஒரு பொருளும் காட்டாது இருள்; உருவம் காட்டும்**
**இரு பொருளும் காட்டாது இது' .....**[25]

என விவரிக்கின்றது.

கேவலம், சகலம் ஆகிய இரு நிலைகளிலும் உயிருடன் இணைந்தே இருப்பதால் தன்முனைப்பை உயிரின் குணம் என்று கருதிவிடலாகாது. உயிர் அறிவுடைப்பொருள், தன் முனைப்பு அறியாமையாகும். எனவே அது உயிரின் குணமன்று.

**'குருடன் தன் கண்ணின் குற்றம் கண்ணின் தன் குணமோ**
**கூறாய்' . . . . . .**[26]

என்னும் எளிய உவமை கொண்டு, தன்முனைப்பு என்னும் அறியாமை. உயிருக்கு ஏற்பட்ட குற்றம் என அருள்நந்திசிவாசாரியார் தெளிவுபடுத்துகிறார்.

தன் முனைப்பு உயிரின் தொடக்க காலந்தொட்டு உயிருடன் இணைந்து விளங்குவது. இவ்வுண்மையை,

**'முதற்கொடிக்கே மோகக்கொடி படர்ந்து' . . .**[27]

எனத் திருக்களிற்றுப்படியார் குறிக்கிறது. உயிரானது பல பிறவிகளில் உழன்று, பக்குவப்பட்டு, வினைகளினின்று நீங்கி, மலபரிபாகம் உற்று இறையருளைப் பற்றி நிற்கும் நிலையிலுங் கூட தன் முனைப்பு அழிவதில்லை. அநாதிப் பொருளாதலால் தோற்றமும், அழிவும் அதற்கு இல்லை.

முத்தி நிலையில், உயிர்கள் இறையருளால், அவ்வருளைப் பற்றி நிற்கையில், தன் முனைப்பு உயிருடன் இணைந்து நின்ற போதும், அதன் ஆற்றல், சத்தி, செயல்பாடு ஆகியன இறையருளால் வெளிப்படாது ஒடுங்கி நிற்கும். முத்தி பெற்ற உயிர்களிடத்து தன் முனைப்பின் ஆற்றல் தோன்றாது. எனவே வீடுபேற்று நிலையில் தன் முனைப்பின் ஆற்றல் உயிர்களிடம் வெளிப்படாது விலகி நிற்குமே தவிர அதன் நித்தியத் தன்மை அழிவதில்லை. இறை ஆற்றலால், தன் முனைப்பின் ஆற்றல் கெடுகிறது. இவ்வுண்மை,

**'அழிந்திடும் சத்தி; நித்தம்**
**அழிந்திடாது; ஒளியின் முன்னர்**
**அழிந்திடும் இருளும், நாசம்**
**அடைந்திடா....'**[28]

என சிவப்பிரகாசத்தில் காணக்கிடைக்கிறது.

தன் முனைப்பு என்னும் அறியாமையின் ஆற்றல் பல விதங்களில் செயல்படுகிறது. புவன போகங்களை அனுபவிக்கும் உயிர்கள், அனைத்துச் செயல்களுக்கும் தாமே காரணம் என்ற எண்ணத்துடன் செயல்படுவதும் தன் முனைப்பின் விளைவேயாகும். உயிர்களுடைய வினைகளைத் தீர்க்கும் பொருட்டுத் தரப்பட்ட, தனு கரண புவன போகங்களை, உயிரானது தனது என்று எண்ணுவதும் அறியாமையே.

**'என்னது யானெனும் அகந்தை' ..... .**[29]

என்பது இருபாவிருபது தரும் தன்முனைப்பிற்கான வரையறையாகும். எனது முயற்சியால்தான், இவற்றைப் பெற்றேன்; நானே அறிவில் சிறந்தவன்; என்னைவிட சிறந்தவர் வேறு எவரும் இலர்; எல்லாம் எனக்கே உரிமை. முதலிய எண்ணங்கள் உயிர்களிடத்தே தோன்றுவதற்குத் தன் முனைப்பே காரணமாகிறது. இருபாவிருபது குறிக்கும் வரையறையினைப் படியெடுத்தது போல அமைந்துள்ளது, **'தானென்ற ஆணவம்'**[30] என்னும் சட்டைமுனியாரின் கூற்று. உயிர்களுக்கு வேறாய் இருக்கும் நிலையற்ற இந்த உலகத்தையும், அதைச்சார்ந்த பொருட்களையும் உயிர் மெய்யானது என்று எண்ணுவதும் அறியாமையின் விளைவே. அடுத்த படி நிலையாக, உலகத்துப் பொருட்கள் மீது பற்றுக் கொள்ளும் உயிர், அவற்றைத் தனதாக்கிக் கொள்ள முனைகிறது. இதற்கான முயற்சிகளில் ஈடுபடும்போது தவறான செயல்பாடுகள் என்று தெரிந்திருந்தும், உயிர்கள் அவற்றைச் செய்வது, தன் முனைப்பின் வெளிப்பாடே. இவற்றிற்கெல்லாம் மூலமுதற்காரணமாக இருப்பது தன்முனைப்பேயாகும். எனவே தான் கல்லுளிச் சித்தர்,

**'ஆணவத்தால் வரும் கேடு - அதை**
**அறியாமல் நடப்பது சுணை கெட்ட மாடு' ....**[31]

என அறிவுறுத்துகிறார்.

உயிர்களின் பிறவித் தொடரில், எண்ணற்ற பிறவிகளில், அவற்றுடன் இணைந்து நின்று உயிர்கள் தாம் முத்திப்பேறு அடைய வேண்டும் என்ற இலக்கையும், இறையருளையும், அறியவொட்டாமல் உயிர்களின் அறிவை மறைத்துத் தடை செய்வது தன் முனைப்பேயாகும்.

**'... உணரும் பான்மை தெரியாத**
**தன்மை, இருளார் தந்தது'...**[32]

என்று உமாபதி சிவாசாரியார் குறிப்பிடுகிறார்.

சித்தர்கள் அனைவரும் தன் முனைப்பாகிய மூல மலத்தை வேரோடு களையுமாறுத் தம் பாடல்களில் வலியுறுத்தினர்.

**'ஆங்காரத்தால் வந்த கேடு - முதல்**
**ஆசையைக் கட்டோடே அப்பாலே போடு'**

என்று கஞ்சமலைச் சித்தரும்,

**'நான் என்ற கர்வம் நசித்தனைச் சுட்டறுத்து'....**

என்று ஞானச் சித்தரும்,

**'ஆணவத்தை வேரோடு அறுத்து விழுத்தாட்டி' ...**

என்று திரிகோணச் சித்தரும்,

**'ஆங்காரமும் ஒழித்தேன்; உண்மை நிலை அறிந்து' ...**

என்று மச்சேந்திர நாதரும்,

**'ஆங்காரம் தனையடக்கி அருள் நிலையை நோக்கி' ...** [33]

என்று மௌனச் சித்தரும் உரைத்த மொழிகள், தன் முனைப்பை முனைந்து களைந்து, அதனின்று விலகி நிற்க வேண்டும் என்று அறிவுறுத்தியமைக்குச் சான்றுகளாகின்றன.

ஆன்மீக நெறியில் வாழ்ந்த மெய்யுணர்வாளர்கள் அனைவருமே, உயிர்களுடன் என்றும் இணைந்திருக்கும் தன் முனைப்பின் இயல்புகளைத் தம் பாடல்களில் விளக்கியுரைத்தனர்.

**'ஒன்றுந் தெரியா ஒழியா இருளாகி**
**இன்றளவும் நின்றதிதுவோதான் - ஒன்றாகிச்**
**செம்பிற் களிம்பு போற் சேர்ந்து நின்ற ஆணவந்தான்'' ....** [34]

என்னும் வரிகளில் ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் தன் முனைப்பின் இலக்கணத்தை இயம்புகின்றார். தன் முனைப்பின் பிடியிலிருந்து விலகி விடுபட்டு நிற்றலே முத்தி நிலைக்கான முதல் நிலை என்பதை,

**'தானென்ற ஆணவத்தைப் போக்கி நீயும்**
**தனித்திருந்து யோகமென்ற தவமே செய்தால்'** [35]

இறையருள் கிட்டும் என சுப்பிரமணியர் ஞானக்கோவை தெளிவுபடுத்துகிறது. இக்கருத்திற்கு,

**'சிந்தை ஆங்காரம் செறிபுலன் அற்றக்கால்**
**முந்தியே ஆகுமாம் வீடு' ...** [36]

என்னும் ஔவைக் குறள் அரண் செய்கிறது. கருணைக் கடலாய் விளங்கும் இறைவன் உயிர்களை, அறியாமையைத் தருகின்ற ஆணவமலப் பிடியினின்று விடுவித்து, திருவருளாம் மெய்ஞ்ஞானத்தை அருள்கிறான் என்ற உண்மையை

**'இருள் மலத்துள்**
**மோகமுறும் பல் உயிர்க்கும் முத்தி அளித்தற்கு மல**
**பாகம் உறவே கடைக்கண் பாலித்து .......**
**ஆணவமான படலம் கிழித்து அறிவில்**
**காணரிய மெய்ஞ்ஞானக் கண் காட்டி' ...**[37]

என குமரகுருபர சுவாமிகள் அருளிச் செய்துள்ளார்.

மகாபாரதத்தில் அருச்சுனனுக்கு பகவத்கீதையை உபதேசித்தன் மூலம், உலக மக்களுக்கு அறமொழிகளை அருளிய பரமாத்மாவின், 'தானுந் தன் தேகாதியனுபவங்களு மெய்யென மோகித்த அஞ்ஞானகங்காரங் கழன்று ஈஷணாத்திரயங்களை விவேகமெனும் வாளாற் பற்றறத் தறித்து எஞ்சிய வைராக்கிய ஞானத்தைக் கைக் கொண்டு ஒப்பற்ற பரப்ரம்ம வஸ்துவையடைதல் வேண்டும்''...[38] என்னும் அருள் மொழிகள், தன் முனைப்பையும், அதை விட்டு அகல வேண்டிய அவசியத்தையும், அதற்கான வழியையும், அதன் பயனையும் ஒருங்கே விளக்கி நிற்பது உணர்ந்து போற்றுதற்குரியது.

**கன்மம்: விளக்கம்**

கன்மம் என்னுஞ்சொல் வடமொழியில், கார்மம், கர்மம், காமியம் ஆகிய சொற்களின் திரிபேயாகும். கன்மம் என்ற சொல்லுக்கும் வினை என்ற சொல்லுக்கும், தொழில், செயல், வினைப்பயன், முற்பிறவிக் கருமம், ஊழ், பாவம் ஆகிய ஏறக்குறைய ஒரே பொருளே அகராதி வழி பெறப்படுகின்றது ...[39.] திருமூலர், கன்மம், வினை ஆகிய இரு சொற்களையும் திருமந்திரத்தில் கையாள்கிறார்...[40]

உயிர்கள் தனித்து இயங்கும் ஆற்றலின்றி அநாதியே ஆணவ மலச் சார்பு கொள்கின்றன. மாயையின் வெளிப்பாடுகளான தத்துவங்களின் சேர்க்கையினால் நுண்ணுடலைப் பெறுகின்றன. நுண்ணுடலைப் பெறுகின்ற அளவில் உயிர்களிடம் வேறுபாடுகள் இல்லை. நுண்ணுடலிலிருந்து இயங்கும் உயிர், பருவுடலைப் பெற்று உருவம் கொள்கையில் பிறவி நிலைக்கு வருகின்றன. பிறப்பெடுத்த உயிர்களின் தூல உடல்களுக்கிடையே பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. உடல் அமைப்பு, உருவம், நிறம் உள்ளிட்ட உடல் சார்ந்த வேறுபாடுகளும், அறிவு, உணர்திறன், மன இயக்கம் ஆகிய கருவிகள் சார்ந்த வேறுபாடுகளும் உயிர்களிடத்தே காணப்படுகின்றன. பிறப்பொக்கும் எல்லா உயிர்களின் மீதும் பெருங்கருணை கொள்ளும் இறைவன் உயிர்களை வேறுபாடுகளுடன் பிறப்புக்கு உட்படுத்துவதில்லை. அவ்வாறெனில்

உயிர்களிடத்தில் காணப்படும் வேறுபாடுகளுக்கு என்ன காரணம் என ஆராயும் எண்ணம் தலைப்படுகிறது. இவ்வினாவிற்கு,

**'இருவினையின் தன்மைகளுக்கு ஈடான யாக்கை' ...**[41]

என சிவப்பிரகாசம் மறுமொழியளிக்கிறது. இக்கருத்தை

**'வன்மை புரி காய மரப்பாவை தன்னையரன்**
**கன்மமெனுஞ் சூத்திரத்தாற் கட்டியே' ....**[42]

என சிவபோக சாரமும் உறுதிப்படுத்துகிறது.

உலகத்தில் பிறப்பெடுக்கும் உயிர்கள் வாழ்கின்ற கால அளவில் வேறுபாடுகள் உள்ளன. இவ்வேறுபாட்டிற்குக் காரணம் வினைப்பயனே என்பது 'தூலதேகத்தில் முன் செய்த புண்ணிய பாவங்களுக்கு ஈடாகிய . . . . ஆயுளும் வரையறைப்படும்' ...[43] என்னும் மாதவச் சிவஞான யோகிகளின் கூற்றால் புலனாகிறது. இக்கருத்தைத் திருமூலரும் உறுதிப்படுத்துகிறார்....[44]

உயிர்கள் இவ்வுலகில் பருவுடலைப் பெற்று வாழும் காலத்தில் அனுபவிக்கின்ற இன்ப துன்ப நுகர்ச்சிகளில் வேறுபாடு காணப்படுகின்றது. உலகில் சில நேரங்களில் உயிர்கள் மேற்கொள்ளும் சிறு முயற்சியால் பெரும் பலன் விளைவதையும், சில நேரங்களில் இடைவிடாத முயற்சி செய்தும் சிறு பயனே விளைவதையும் காண முடிகிறது. வினை எனப்படும் முதற்காரணம் இருப்பதால் பெரும் பலனும், அது இல்லாமையால் பெரு முயற்சி செய்தும் பலனின்மையும் விளைகிறது. எனவே தான், பட்டினத்தார்

**'முன் தொடர்பில் செய்த முறைமையால் வந்த செல்வம்**
**இற்றை நாள் பெற்றோம்' ...**[45]

எனக் குறிக்கிறார். தாவரம் முளை விடுவதற்கு அத்தாவரத்து விதையின் முளை விடும் தன்மை மூல காரணமாகிறது. நிலம், நீர், வெப்பம், காற்று, உரம் ஆகியன துணைக் காரணிகளாகின்றன. இவையனைத்தும் விதையின் முளை விடும் தன்மைக்கு ஊக்கக் காரணிகளாய் அமையும். விதைக்கு முளை விடும் தன்மை அதன் இயல்பில் இல்லையெனில் இக்காரணிகளால் முழுப்பயன் விளைவதில்லை. அது போல உயிர்களின் இன்ப துன்ப நுகர்ச்சிகளுக்கு வினையே மூல காரணமாகிறது. ஆகவே பரு உடலில் காணப்படும் வேறுபாடுகள், உயிர்கள் இவ்வுலகில் வாழும் கால எல்லையில்

வேறுபாடு, இன்ப துன்ப நிகழ்வுகளின் நுகர்ச்சியில் உள்ள வேறுபாடு ஆகியவற்றைக் கொண்டு கன்மம் எனப்படும் வினை இயங்கி வருதலைத் தெளிவாக அறியமுடிகிறது.

வினை உயிருடன் இயைந்து இயங்கி வருதலைப் பட்டினத்தார்,

**'மூலம் அறியேன் முடியும் முடிவறியேன்**
**ஞாலத்துள் பட்ட துயர் நாட நடக்குதடா....**
**பிறியா வினைப் பயனால் பித்துப் பிடித்தனடா ...**[46]

என்று உலகில் உயிர்களால் அனுபவிக்கப்படும் இன்ப- துன்பங்களுக்கு பிறியா வினைப் பயனே காரணமென்கிறார். இவ்வுண்மை,

**'பேறு இழவு இன்பமோடு, பிணி மூப்புச் சாக்காடு என்னும்**
**ஆறும் முன் கருவுள் பட்டது; அவ்விதி அனுபவத்தால்**
**ஏறிடும் முன்பு செய்த கன்மம் இங்கு இவற்றிற்கு ஏது**[47]

என்று அருள் நந்தி சிவாசாரியாரால் தெளிவுபடுத்தப்படுகிறது.

வினை என்னும் மலம் உண்டு என்பதைத் தமிழ் இலக்கியங்களும் உறுதிப்படுத்துகின்றன. எட்டுத்தொகைத் தொகுப்பினுள், புறநானூற்றில்

**... தீதும் நன்றும் பிறர் தர வாரா . . .**
**'நீர்வழிப்படூஉம் புனை போல் ஆருயிர்**
**முறை வழிப் படூஉம் என்பது திறவோர்' ...** [48]

என்ற அடிகள் வினையின் திறத்தை விளம்புகின்றன. திருவள்ளுவர் 'ஊழ்' என்னும் ஒரு அதிகாரத்தை அறத்துப்பால் பிரிவினுள் வைத்துள்ளார். ஊழ் என்னும் சொல்லுக்கு 'அஃதாவது இருவினைப்பயன் செய் தவனையே சென்றடைதற்கு ஏதுவாகிய நியதி'..[49] எனப் பரிமேலழகர் பொருள் காண்கிறார். சிலப்பதிகாரத்தில்,

**'ஒழிக என ஒழியாது ஊட்டும் வல்வினை**
**இட்ட வித்தின் எதிர்ந்து வந்து எய்தி**
**ஒட்டுங்காலை ஒழிக்கவும் ஒண்ணா'...**[50]

என்று வரும் பாடல் அடிகள் வினையின் வலிமையை உறுதிப்படுத்துகின்றன. ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும்' என்பது சிலப்பதிகாரம் உணர்த்தும் உண்மைகளில் ஒன்றாகும். 'There are in nature neither rewards nor Punishments – there are consequences'...[51] என்னும் தத்துவ அறிஞரின் கூற்று இங்கு நினைவு கூரத் தக்கது.

கேவல நிலையில் உயிர் ஆணவ மலத்தைச் சார்ந்து நிற்கிறது. ஆணவ மலச் சேர்க்கையினால், உயிர்களிடம் தானே விருப்பு வெறுப்புக்கள் அமைந்து கிடக்கின்றன.

இவை ஆணவ மலத்தின் இயல்பாகிய அறியாமையின் விளைவு. இவ்வாறு அநாதியாக உயிர்களிடத்தே இணைந்த கன்மம் மூல கன்மம் ஆகும். 'அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினையாய் உயிர்க்குற்றங்களுள் வைத்து எண்ணப்படும்' [52] என்பது சிவஞான யோகிகளின் கருத்தாகும்.

தொடக்கமில் காலந்தொட்டு தோன்றியும் அழிந்தும், உயிர்களுடன் தொடர்ந்து இயங்கும் இக்கன்மம் அநாதித் தன்மையுடையது.

**'நானா போகங்கள் ஆய் நாசோற்பத்தி**
**பண்ணி வரும் ஆதலால் அநாதி ஆகி....**
**....பொருந்தும் இது கன்மமலம்'**[53]

என சிவப்பிரகாசம் கன்மத்தின் அநாதி இயல்பினைக் குறிக்கிறது. உயிர்கள் நுண்ணுடலைப் பெறும் அளவில் தத்துவங்களின் சேர்க்கையினால், அந்தக் கரணங்களாகிய கருவிகளின் செயல்பாட்டினால், விருப்பு வெறுப்புகளையே தொடக்க வினையாகக் கொள்கிறது. பின்னர் இவற்றிற்கேற்ப பரு உடலைப் பெற்று சகல நிலைக்கு வருகின்றன. பரு உடலில் நின்று உயிர்கள் செய்யும் வினைகளுக்கேற்ப பிறப்புகளும் அப்பிறப்புகளில் அவை இயற்றும் வினைகளுமாக ஒன்றுக்கொன்று தொடரக் காரணமாகின்றன. வினையின் இத்தொடர் இயல்பு

**'தொடர்ச்சியால் ஒன்றுக்கு ஒன்று தொன்று தொட்டு அநாதிவித்தின்**
**இடத்தினின் மரம், மரத்தின் வித்தும் இயையுமாபோல்' . . . .**[54]

என்று சிவஞான சித்தியாரில் குறிக்கப்படுகிறது.

கன்மத்தின் இயல்பினை நீரோட்டத்தின் நிலை போல்வது எனக் குறிக்கிறார். முது பெரும்புலவர். சி. அருணை வடிவேலு முதலியார் அவர்கள். 'ஆற்று வெள்ளம் ஒரு நொடி நேரங்கூட ஓய்வில்லாமல் ஓடிக்கொண்டு தான் இருக்கின்றது. முன்னை நொடியில் பார்க்கப்பட்ட நீர் அடுத்த நொடியில் அங்கு இல்லை என்றாலும் ஆற்றில் வெள்ளம் இருந்து கொண்டே தான் இருக்கின்றது. இதுதான் 'பிரவாக நித்தம்' என்னும் நிலை' ... [55] வினையும் தோற்றமும், அழிவும் கொண்டது, எனினும் இடையறாது, முடிவின்றி இயங்கும் தன்மையுடையது.

'கன்மம் அல்லது வினை என்று சொல்லப்படுவது உண்மையில் பொருள்களின் அசைவே. தொழில் என்றும், செயல் என்றும் சொல்லப்படுவதும் இதுவே'..[56] என்று வினை என்னுஞ்சொல்லுக்கான இலக்கணம் வரையறுக்கப்படுகிறது. பொருள்களின்

அசைவு என்ற நிலையில் ஏதேனும் ஒரு பொருளைப் பற்றி நின்றே செயல்படும் தன்மையுடைத்து, வினை என்ற உண்மை தெளிவாகிறது. எனவே தனித்து இயங்கும் ஆற்றல் அற்றது வினை என்ற கருத்து பெறப்படுகிறது. மாயையையும் அதன் வெளிப்பாடுகளான உலகத்தையும் அதைச் சார்ந்த பொருட்களையும் பற்றுக் கோடாகக் கொண்டு இயங்குவதே வினை ஆகும்.

தொடக்கமில் காலந்தொட்டு, கேவல நிலையில் அறியாமையில் அழுந்திச் செயலாற்றுக் கிடந்த உயிரின் அறிவு விளக்கம் பெற வேண்டியே உயிருடன் கன்மமும், மாயையும் கூட்டுவிக்கப்படுகின்றன. தன்முனைப்புடன் கூடிய உயிர் அழுக்கான உடை போன்றது. உடையிலிருந்து அவ்வழுக்கை நீக்க உவர்மண் சேர்த்து தூய்மைப்படுத்தப்படுவதைப் போல, மூல மலமாகிய அறியாமை என்னும் தன் முனைப்பைப் போக்க கருவியாகச் செயல்படுவது கன்மமாகும்.

உயிர்கள், மாயையிடமிருந்து பெறப்பட்ட தனு, கரண, புவனங்களைக் கொண்டே உலகில் வாழ்ந்து உலகியல் அனுபவங்களைப் பெறுகின்றன. உலக அனுபவங்கள், தன் முயற்சிக்கேற்ற பலன்களின் அளவு அமையாத போதும், தாம் நினைத்தது உரிய நேரத்தில் நடைபெறாத போதும், எதிர்பாராத நிகழ்வுகள் நிகழும் போதும், தன்னால் ஆவது ஒன்றுமில்லை என்ற உணர்வை உயிர்கள் பெறுவதற்குக் காரணமாகின்றன. உலக வாழ்வும், உலகத்துப் பொருட்களும் நிலையற்றவை; அவற்றின் மீது கொண்டுள்ள பிடிப்பை விடுத்து, இறையருளைப் பற்றி நின்று இறைவனடியைச் சேர்தலே, மனிதப் பிறவியின் இலக்கு, ஆகிய உண்மைகளை உயிர்களுக்கு உணர்த்துவதும், மாயையிலிருந்து பெறப்பட்ட உலகமும், அதைச் சார்ந்த பொருட்களும், நிகழ்வுகளுமேயாகும். கன்மம் என்பது செயல், வினை, மாயையினைப் பற்றுக் கோடாகக் கொண்டு நடைபெறும் வினைகளே, உலக அனுபவங்களாகி உயிர்களின் தன்முனைப்பினை விலக்கவும் பயன்படுகின்றன. 'கன்ம மலம், ஆணவ பந்தத்தின் பயனை உயிர்கட்கு உறுவித்து நிற்றால் அஃது அநுபந்தம் என்று பெயர் பெறுகின்றது'[57]

தளையாக இருப்பினும், அறியாமையைத் தரும் தன்முனைப்பினைப் போலல்லாமல், உயிர்களுடன் இணைந்து, அவற்றின் அறியாமையை விலக்கி, அறிவு விளக்கம் பெறத் தூண்டுகோலாய் அமைகிறது கன்மம். உயிர் திருத்தம் பெறும் பொருட்டும், இறையருளை உணர்ந்து, தன்முனைப்பின் பிடியிலிருந்து விலக்கம்

பெறவுமே உயிர்களுடன் பிணைக்கப்படுகிறது. 'Karma makes rational experience, and hence the spiritual evolution possible, by making the self undergo several births and deaths'[58] என்னும் விளக்கம் இவண் ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

**கன்மம் இயற்றப்படும் விதம்**

உயிர்கள் மனம், மொழி, மெய் ஆகிய மூன்றின் வாயிலாக வினைகளை இயற்றுகின்றன. இக்கருத்தை

**....'எண்ணி வரும் மன வாச கன்மத்தால் இயற்றும்**
**இயல்பினதாய்' ...**[59]

என சிவப்பிரகாசம் இயம்புகின்றது. உமாபதி சிவாசாரியாரின் கூற்று,

**'மனவாக்குக் காயத்தால் வல்வினை மூளும்'**

என்றும்

**'காய மன வாக்கினால் அடைந்த கன்மம்....**[60]

என்றும் சித்தர்களால் ஆமோதிக்கப்படுகிறது. 'அவற்றுள் மனதால் நினைக்கும் நினைப்பினால் தோன்றுவன 'மானத கன்மம்' என்ற பெயரில் விளங்கும். வாயினால் அவற்றைச் சொல்லும் சொற்களால் தோன்றுவன 'வாசிக கன்மம்' எனப்படும். உடலால், செய்யும் செயல்களால் தோன்றுவன 'காயிககன்மம்' என்று சொல்லப்படும்'.. .[61]

**'உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன் பொருளைக்**
**கள்ளத்தால் கள்வேம் எனல்'**

என மனத்தால் வினை உண்டாதலையும்,

**'நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்**
**பண்பில் சொல் . . . . . .**

என மொழியினால் வினை உண்டாதலையும்,

**'பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா**
**பிற்பகல் தானே வரும்' . . .**[62]

என காயத்தால் கன்மம் ஏற்படுதலையும் வள்ளுவம் உறுதிப்படுத்துகின்றது.

**கன்மத்தின் இரு நிலைகள்**

மாயையைப் பற்றி நின்று இயங்கும் வினைக்கு இரு நிலைகள் உள்ளன. முதலில் காரணநிலை. பின்னர் காரிய நிலை. ஒவ்வொரு செயலுக்கும் ஒரு காரணம்

உள்ளீடாக அமையும். காரண நிலையில் செயல் எதுவும் நிகழாத போதும். அச்செயல் நிகழும் தன்மை அப்பொருளிடத்தில் இருக்கும் இந்நிலையே காரண நிலை ஆகும். எடுத்துக்காட்டாக, நடப்பவனாகிய ஒருவனுக்கு, அங்ஙனம் அவன் நடப்பதற்கு முன்பும், நடக்கும் தன்மை அவனிடத்தே உள்ளதேயாகும். அவன் நடக்கும் போது அத்தன்மை வெளிப்படுகிறது. அங்ஙனம் வெளிப்படாதிருக்கும் நிலையில் அவனுடைய நடை எப்படி இருக்கும்? எந்தத் திசையை நோக்கி இருக்கும்? என்பதை உறுதியாக அறிய இயலாது. செயல் வெளிப்படாமல் பொருளின் கண் அமைந்து உள்ள நிலையே காரணநிலையாகும். செயல் வெளிப்பட்டு நிகழும் நிலை காரிய நிலையாகும்.

வினை என்பது பொருட்களின் அசைவு என்று பொருள்படுகிறது. இந்த அசையும் தன்மை, இயற்கையாய் அந்தப் பொருளிடத்தில் அமைந்துள்ளது. இது காரண நிலையாகும். அத்தன்மை, காலம், இடம் முதலிய சூழ்நிலைகளுக்கேற்ப அதனின்று வெளிப்படுகிறது. இந்நிலை காரிய நிலையாகும்.

பிறப்பெடுத்த பின்னர் உயிர்கள் செய்யும் செயல்களில் உள்ள வேறுபாடுகளுக்கு, பிறப்புக்கு முன்பே ஒரு காரணம் இருத்தல் வேண்டும். கேவல நிலையில், தன்முனைப்பின் இணைப்பால் இயல்பாகவே உயிர்களிடம் அமைந்துள்ள விருப்பு - வெறுப்புத் தொகுதியே காரண கன்மம் எனப்படுகிறது. சமய நூல்கள் இதனை 'மூலகன்மம்' எனக் குறிக்கிறது.

**'கன்மமும் மூலம் காட்டிக் காமிய மலமாய் - நிற்கும்' . . . .**[63]

என்பது அருள் நந்தி சிவாச்சாரியாரின் கூற்று. காரண நிலையில் உள்ள மூல கன்மத்தில், நன்மை தீமை என்னும் பாகுபாடில்லை. இம்மூல கன்மத் தொடர்பினால் தான், சகல நிலையில் உயிர்களிடத்தே காரிய கன்மம் விளைகிறது. காரிய கன்மத்தில் நன்மை, தீமை என்னும் பிரிவுகளுண்டு. சமய நூல்களில் இருவினையென்றும், புண்ணியம், பாவம் என்றும் குறிக்கப்படுவது காரியகன்மமே.

**'இருவினைப் பாசம் மும்மலக்கல் ஆர்த்தலின்**
**வருபவக் கடலில் வீழ் மாக்கள் ' . . . .**[64]

என்று வரும் பெரியபுராணச் செய்யுளில் மும்மலக்கல் என்னும் சொற்றொடரில் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்றும் குறிக்கப்படுகின்றன. காரண நிலையிலுள்ள மூலகன்மமே கன்மம் எனப்படுகிறது. இம்மூன்று கற்களையும், காரிய நிலையிலுள்ள

நல்வினை, தீவினையாகிய இரு கயிறுகளால் கட்டி, உயிர்கள் பிணைக்கப்படுகின்றன என்று பொருள் கொள்ளப்படுகிறது.

நல்வினை, தீவினை ஆகிய இருவினைகளும் உயிர்களுடன் தொடர்ந்து வருபவை. (அநாதியானவை). உயிர்களால் இயற்றப்படுவதால் தொடக்கமும், நுகரப்படுவதால் முடிவும் கொண்டன போலக் காட்சியளிப்பினும் மாயையின் வெளிப்பாடுகளைச் சார்ந்து நின்று, உயிர்களைப் பிணித்து நிற்கும் செயல்பாடுடையனவாய், பிறவிகள் தோறும் தொடர்ந்து வருவன. வெல்லுவதற்கு அரிதாய், விலக்க முடியாததாய்த் தொடர்ந்து வரும் தன்மை உடையதால் தான் திருவாசகம்,

**'......வல்வினையேன் தன்னை....**
**அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி' . . .** [65]

என்று இயம்புகிறது.

உயிர்கள் இருவினையின் பிணைப்பினில் கட்டுண்டு கிடக்கும் நிலையினைச் சித்தர்களும் சுட்டிக் காட்டுகின்றனர்

**'புண்ணிய பாவம் இரண்டுள பூமியில்'**
**'இன்பமுந் துன்பமும் நாட்டாரிடத்துள்ள**
**நன்செயல் புன்செயலால் . ..** [66]

என்பவை திருமந்திர மொழிகளாகும்.

**'இரு வினையாம் மாடுகளை ஏக விடு கோனே' ....** [67]

என்பது இடைக்காட்டுச் சித்தர் இயம்பு மொழியாகும்.

மனம், மொழி, காயத்தால் உயிர்கள் இயற்றும் காரிய வினைகளுள், பிற உயிர்களுக்கு நன்மை பயப்பன நல்வினை (புண்ணியம்) என்றும், தீங்கை விளைவிப்பன தீவினை (பாவம்) என்றும் இருவினைகளாகக் கொள்ளப்படுகின்றன. இக்கருத்து

**'இருவினையென்ப தென்னை கொல் அருளிய**
**மனமே காயம் வாக்கெனும் மூன்றின்**
**இதமே அகிதம் எனுமிவை' . . . .** [68]

என்னும் வரிகளால் தெளிவுபடுத்தப்படுகின்றன. நல்லன இயற்றுதல் இதம். அல்லன இயற்றுதல் அகிதம் ஆகும்.

புண்ணியம், பாவம் ஆகிய இரு வினைகளின் தொகுப்பான காரிய கன்மத்தை சைவ- சித்தாந்தம் ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என மூவகை நிலைகளில் விளக்குகிறது.

**ஆகாமியம்**

உயிர்கள், நல்லனவற்றையும், அல்லனவற்றையும் மனத்தால் நினைப்பதும், சொற்களால் உரைப்பதும், உடலால் செய்வதும் வெளிப்படையாக நிகழ்கின்றவை. இவற்றின் தொகுப்பு தூல கன்மம் எனப்படும். இவை உலகத்தில் அறம், பாவம் என்று குறிக்கப்படுகிறது. இங்ஙனம் நல்லனவும், தீயனவுமாக, உயிர்கள் தாமாகவே புதிதாக இயற்றும் ஒரு வினை அல்லது செயல் ஆகாமிய கன்மம் எனப்படுகிறது. இதனை வருவினை என்னும் சொல்லால் குறிப்பர்.

**'வரும் துயரம் தீர்க்கும் மருந்து' .....** [69]

என்னும் திருவாசக அடியில் ஆகாமிய வினை காரணமான துயரங்கள், 'வரும் துயரம்' எனக் குறிக்கப்படுகின்றன. ஆகாமிய வினையைக் கைலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனாரும் தம் பாடலில் குறித்துச் செல்கிறார். . .. [70]

**சஞ்சிதம்**

உயிர்கள் செய்கின்ற வினைகள், நிகழ்ந்த சிறிது நேரங் கழித்து, முடிந்து இல்லாமற் போய் விட்டது போல நமக்குத் தோன்றுகிறது. உண்மையில் அவை நூல நிலையிலிருந்து சூக்கும நிலையை அடைந்து அழியாமல் நிற்கின்றன. உள்ளது அழிவதில்லை என்னும் சைவ சித்தாந்த சத்காரியவாதக் கொள்கைப்படி, உயிர்களால் இயற்றப்படும் வினைகள் தூல நிலையிலிருந்து நீங்கிச் சூக்கும நிலையில் விளங்கி, உயிர்களைப் பிணைத்து நிற்கும். இவை உயிர்களின் பல்வேறு பிறப்புகளில் நுகரப்படும். இவ்வாறு முற்பிறவிகளிலும், இப்பிறவியிலும், உயிர்கள் இயற்றும் ஆகாமிய கன்மம், நுகரப்படாமல் உயிர்களைப் பிணைத்து நிற்கும். இத்தொகுப்பே சஞ்சிதம் எனப்படும். 'சம்சிதம் என்னும் சொல் நன்கு பெறப்பட்டது; அடையப்பட்டது எனப் பொருள்படும்..' [71] தொல்வினை, பழவினை, கிடைவினை என்று குறிக்கப்படுவது சஞ்சித கன்மமேயாகும்.

தூ

ஏ

**'பண்டு செய்த வல்வினை பற்றற' ....** [72]

என்று திருஞான சம்பந்தப் பெருமான் உரைப்பதும்,

**‘பண்டு செய்த பழ வினையின் பலன் ...** [73]

என்று திருநாவுக்கரசர் குறிப்பதும் சஞ்சித கன்மமேயாகும்.

**‘மகாமிய சஞ்சிதத் தைத்தொல்லை தொலைத்து ...** [74] என்று

கூறுவதன் மூலம் மதுரை வாலை சாமிச் சித்தரும் சஞ்சிதக் கன்மமுண்டு என்னும் கருத்திற்கு உடன்படுகிறார்.

**பிராரத்தம்**

உயிர்கள், தமது சஞ்சிதக் கன்மத் தொகுப்பினில் பக்குவப்பட்டு, பயன்தரும் நிலையில் உள்ள வினைகளின் பயன்களை நுகர்வதற்காகவே பிறவிகள் எடுக்கின்றன. வினைகளுக்கேற்ப பிறவிகள் வந்தடைகின்றன. உயிர்கள் ஒரு பிறவியில் நுகர்வதற்கேதுவாக அமைகின்ற வினையே பிராரத்தம் ஆகும். இவை சஞ்சிதக் கன்மத் தொகுப்பிலிருந்து முகந்து கொண்டவை. நுகர்வினை என்றும், ஊழ் என்றும், விதி என்றும் குறிக்கப்படுவது பிராரத்தமே. இதனை,

**‘. . . சீவரெல்லாஞ்**
**சகச பிராரத்வ வசத்தாகினார்கள்’ . ..** [75]

என காக புசுண்டர் விளம்புகிறார். சஞ்சித, பிராரத்த வினைத் தொகுப்பை **‘முந்தை வினை முழுவதும்’**[76] என்ற திருவாசகத் தொடரில் மணிவாசகப் பெருமான் உறுதிப்படுத்துகிறார்.

கன்மத்தில் ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் ஆகிய மூன்றும் வெவ்வேறானவை அல்ல. ஆகாமியமே சஞ்சிதமாகிப் பின் பிராரத்தமாய் வரும். இவை மூன்றும் காரிய கன்மத்தின் மூவகையான நிலைகள் ஆகும். இவற்றை அம்புகளின் நிலைகளோடு ஒப்பிடுகிறார். திரு.தேவசேனா பதி அவர்கள்

**‘பிராரத்தம் - எய்த அம்பு போன்றது ...**
**ஆகாமியம் - வில்லிலே தொடுக்கப்பட்ட அம்பு போன்றது**
**சஞ்சிதம் - அம்பறாத் துணியில் காணப்படும் அம்பு போன்றது’**[77]

எய்த அம்பு தன் குறியை அடைதல் தப்பாமை போல, துய்ப்பு வினையும் தவறாது தன் பலனைத் தரும். வில்லிலே தொடுக்கப்பட்ட அம்பின் திசையை மாற்றுதல் நம் கையில் உள்ளதைப் போல, ஆகாமிய வினை, உண்டாகாதவாறு செய்தல் நம் கையில் உள்ளது. உலகியல் நோக்கி செயலாற்றாமல், அருளியல் வழியில் செயலாற்ற வேண்டும்.

**கன்ம பலன்கள்**

பிறவிகள் தோறும் உயிர்கள் தன் முனைப்புடன் இயற்றும் ஆகாமிய வினைகள், சஞ்சிதமாக ஒரு தொகுப்பாக உயிர்களைப் பற்றிக் கொள்கிறது. இத்தொகுப்பினுள் பக்குவப்பட்ட வினைகள் மட்டுமே பிராரத்த வினைகளாகி ஒரு பிறவியில் உயிர்களால் நுகரப்படுகின்றன. ஒரு வினையானது தன் பயனைத் தான் தருவதற்குரிய எல்லாச் சூழ்நிலைகளும் வாய்க்கப் பெறுவதே பக்குவப்படுதல் என்பதாகும். வினையானது அத்தகைய சூழ்நிலைகளைப் பெற்று, விளைவிக்கும் பயனானது, சாதி, ஆயுள், போகம் என மூன்றாக நடைபெறும். இக்கருத்து,

> **'கன்ம நெறி திரிவிதம் நல் சாதி ஆயு போகம்**
> **கடனதென வரும் '....**[78]

என சிவப்பிரகாசத்தில் தெளிவுபடுத்தப்படுகிறது. இங்கு, சாதி எனப்படுவது பல்வேறு பிறவி வேறுபாடுகளைக் குறிக்கும். உயிர்களில் தாவரம், நீர் வாழ்வன, ஊர்வன, பறப்பன, விலங்கு, மனிதர், தேவர் ஆகிய தொகுப்புகளுண்டு. ஆயு என்பது உயிர்கள் ஒரு பிறவியில் வாழும் காலத்தைக் குறிக்கும். போகம் என்பது உயிர்கள் தாம் வாழுங்காலத்தில் அனுபவிக்கும் இன்ப, துன்ப உணர்வுகளாகும் இவ்வுண்மை,

> **'ஆக்கை கருவி உலகங்கனுபவமும்**
> **'ஆக்குவிக்கும் கன்மமிரண்டால்' ...**[79]

என்னும் அடிகளால் உறுதிப்படுத்தப்படுகிறது.

பிராரத்த கன்மம் பலன் தரும் போது, மூன்று வாயில்களின் வழியே செயல்படுகிறது. அவற்றை சைவ-சித்தாந்தம், ஆதி தைவிகம், ஆதிபௌதிகம், ஆதி ஆன்மீகம் என்று குறிக்கிறது. 'ஆதி தைவிகம் என்பது தெய்வத்தால் வருவது. ஆதி, பௌதிகம் என்பது ஐம்பூதங்களால் வருவது. ஆன்மாக்களால் வருவது ஆன்மீகம். இவற்றுள் ஆன்மீகம் இருவிதம். அவை சாரீரகமும், மானசமும் என ஆம். சாரீரகமாவது

குன்மம், காசம் முதலான வியாதிகளால் வருவது. மானசமாவது, சோகம், அசூயை மாற்சரியங்களால் வருவது' . .[80]

சஞ்சிதத் தொகுப்பில் உள்ள வினைகள் பிராரத்தமாய் உயிர்களின் நுகர்ச்சிக்கு வரும் போது, இயற்றப்பட்ட முறையில் வரும் என்பதில்லை. முன் செய்த வினையின் பயன் பின்னும், பின் செய்த வினையின் பயன் முன்பும் முறை மாறியும் வரக்கூடும். இஃது வினைகளின் தன்மைக்கேற்ப, வன்மை, மென்மைக்கேற்ப நிகழும் என்றும் கருத்து.

**'தொடங்கு அடைவின் அடையாதே தோன்றும் மாறி'...**[81]

என்று உமாபதி சிவாசாரியரால் நிறுவப்படுகிறது. ஆனால் மிகப்பெரிய நல்வினையும், கொடிய தீவினையும் இயற்றப்பட்ட அப்பிறவியிலேயே பலன் தரும் என்ற செய்தியும்,

**'குற்று ஒருவரைக் கூறை கொண்டு**
**கொலைகள் சூழ்ந்த களவெல்லாம்**
**செற்றொருவரைச் செய்த தீமைகள்**
**இம்மையே வரும் திண்ணமே' . . .**[82]

என்று ஏழாம் திருமுறையில் அறிவுறுத்தப்படுகிறது.

வினையானது சடப்பொருள்; வினைப் பயனும் சடமே. சடப்பொருள் தாமே இயங்கும் தன்மையற்றது. மேலும், ஒரு பிறவியில் எங்கோ ஓரிடத்தில் ஒரு உடலை நிலைக்களனாகக் கொண்டு செய்யப்படும் செயல், அப்பொழுதே நிகழ்ந்து முடிந்து விடுகிறது. சடப்பொருளான வினை அவ்வுயிரினைச் சார்ந்து இயங்கி, பிறிதோர் பிறவியில், பிறிதோர் இடத்தில் பலன் தருதல் என்பது இயலாது. உயிர்களும் தமக்கென அறிவில்லாதன. அறியாமை வயப்பட்டவை. அறிவிக்க அறியும் இயல்புடையன. இவ்வாறிருக்க உயிர்கள் தாம் செய்த வினைகளின் பயனைத் தாமே நுகர்ந்து கொள்ளும் வல்லமை அற்றவையாகவே உள்ளன. அவ்வாறு வல்லமை உடையதாயிருப்பின், தாம் செய்த நல்வினைகளின் பயனான இன்பத்தை மட்டுமே நுகர்வதில் விருப்பம் காட்டும். தீவினையின் பயனான துன்பத்தைத் தாமே விரும்பி ஏற்றுக் கொள்ளாது. அங்ஙனமாயின் வினைகளுக்குரிய பயனை உரிய காலத்தில், உரிய பிறப்பில், உரிய இடத்தில் உயிர்களுடன் கூட்டுவிக்க முற்றுணர்வினனான இறைவனே காரணமாகிறான். உயிர்களுக்குக் கன்ம பலனைச் சேர்ப்பிப்பவன் இறைவனே என்பது சைவசித்தாந்தத்தின் தனிப்பெரும் சிறப்புக் கோட்பாடாகும். இக்கோட்பாடு,

**'. . . . இவை தாம் சென்று நினைந்து, உயிர் நிறுத்திக் கொள்ளாது;**
**அலகு இலா அறிவன் ஆணை' . . .**[83]

என்று சிவஞான சித்தியாரிலும்,

**'செய்வானும், செய்வினையும், சேர்பயனும் சேர்ப்பவனும்**
**உய்வான் உளன் என்று உணர்' . . .**[84]

என்று திருவருட்பயனிலும், நிலைநிறுத்தப்படுகிறது. உயிர்களுக்கு வினைப்பயன் அளிப்பவன் இறைவனே என்ற கருத்து, சிவவாக்கியரால்,

**'பழுதிலாத கர்ம கூட்டம் இட்ட எங்கள் பரமனே'**[85]

என்று உறுதிப்படுத்தப்படுகிறது.

**'பாசஞ்சடம் உயிரோ தானாகப் பற்றறியா**
**ஈசனிரண்டு மிணைத்தாட்டி – பூசலென்றுஞ்**
**செய்பவனே . . .'**

என்றும் ,

**'இன்னவினை இன்ன தலத் தின்னபொழுது இன்னபடி**
**இன்னதனால் எய்தும் எனவறிந்தே – அன்னவினை**
**அன்ன தலத் தன்னபொழுது அன்னபடி அன்னதானற்**
**பின்ன மறக் கூட்டும் பிரான்' . .**[86]

என்றும் , அமைந்த சிவபோக சாரப்பாடல்கள் இங்கு நினைவு கூரத் தக்கவை.

கன்ம பலன்களை உயிர்களிடத்தில் இறைவன் சேர்ப்பிப்பதற்குக் காரணம், உயிர்கள் மீது இறைவன் கொண்டுள்ள பெருங்கருணையேயாகும். உயிர்கள் யான், தனது என்னும் தன் முனைப்புடன் வினைகளைச் செய்கின்றன. வினைகளின் பலனை நுகரும்போது இவ்விளைவு தன்னால் தவிர்க்கப்பட முடிவதில்லையே என்றுணருகின்றன. தன் முனைப்பின் ஆற்றலான நான், எனது என்னும் உணர்வு நலிவடைகிறது. இங்ஙனம் சிறிது சிறிதாக ஆணவ மலப்பற்று குறைந்து ஆணவமலபரிபாகம் ஏற்படும் பொருட்டே இறைவன் வினைப்பயனை ஊட்டுவிக்கிறான். உயிர்கள் ஆணவமலப் பற்று நீங்கி, திருத்தம் பெறும் பொருட்டும், தம்மை உணர்ந்து இறையுணர்வு பெற்று இறையருளைச் சார வேண்டும் என்னும் நோக்கத்திற்காவும், உயிர்கள் மீது கொண்ட அளவற்ற கருணையினாலே இறைவன், கன்ம பலன்களை உயிர்களிடத்தே கூட்டுவிக்கிறான். இவ்வுண்மை,

…"நான் செய்தேன் எனும் அவர்க்குத் தான் அங்கு இன்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்கும் கன்மம்
ஊன் செய்யா ஞானந் தான் உதிப்பின் அல்லால்
ஒருவருக்கும் யான் எனது இங்கு ஒழியாது அன்றே"…[87]

என்று சிவஞான சித்தியாரில் விளக்கப்படுகிறது.

**வினை நீங்கும் வழி**

ஒரு பிறவியில் செய்த வினை முழுவதையும், உயிர்கள் மறு பிறவியில் நுகர்ந்து முடிப்பதில்லை. ஒவ்வொரு பிறவியிலும் பிராரத்தமாய் அனுபவிக்கும் வினைகள் குறைவு. அதே சமயம் ஆகாமியமாய் இயற்றப்படுகின்ற வினை, மிகுதியாகி, சஞ்சிதமாகி உயிரினைப் பிணைத்து நிற்கும். பின்னர் பிறவிகள் தோறும் தொடர்ந்து பிராரத்தமாய் கழியும் போது, புதிதாக ஆகாமிய வினைகள் இயற்றப்படுகின்றன. எனவே தான் காரியவினை, 'நாசோற்பத்தி உடையது' என்று கூறப்படுகிறது. ஒரு வினை நாசமாகும் போது, வேறு வினைகள் அதிலிருந்து தோன்றுதலே நாசோற்பத்தி ஆகும். இங்ஙனமாயின் உயிர் வினைத் தொடரிலிருந்து நீங்குவதற்கு என்ன வழி என்ற வினா எழுகிறது.

தன்முனைப்பின் பிடியிலிருந்து விடுபட முயல்வதே. வினைகளிலிருந்து நீங்குவதற்கான முதல் படியாகும். யான் என்னும் செருக்குணர்வு எத்தனையோ பிறவிகளாக உயிருடன் இணைந்து வளர்ந்ததொன்றாகும். அவ்வுணர்வை அவ்வளவு எளிதாக விட்டு விட முடிவதில்லை. எனினும் தன்னை அறிந்து வீடுபேறு அடைவதற்கே மனிதப்பிறவி கொடுக்கப்பட்டுள்ளபடியால் வாய்ப்பை உறுதியாகப் பயன்படுத்திக் கொள்ள முனைதல் வேண்டும்.

பிராரத்த வினைகள், நன்மையையோ, தீமையையோ பலனாகத் தரும் போது, முற்பிறவியில் நாம் செய்த வினைகளின் பயனே இவை என்றுணர்தல் வேண்டும். இவ்வாறு உணராமல், இப்பிறவியில் நாம் அனுபவிக்கும் இன்ப துன்பங்களுக்கு நாமோ, மற்றவர்களோ தான் காரணம் என்று எண்ணி விருப்பு, வெறுப்பு, மீதூர நட்பும், பகைமையும் கொள்வதும், அதன் விளைவாக இயற்றும் செயல்களும், தன் முனைப்பின் காரணமாகத் தோன்றும், ஆகாமியம் என்னும் வருவினையைக் கூட்டுவிக்கும். மேலும் பிறவிகள் தொடர வழிவகுக்கும். எனவே நான், எனது என்னும் செருக்கினை அகற்றி,

இறைவனின் திருவருளின்றி எதுவும் நடைபெறாது என்று உணர்ந்து, உலக வாழ்வில் நமக்குற்ற பணிகளை விருப்பு வெறுப்பின்றி செய்து வரும் போது தன்முனைப்பின் ஆற்றல் நலிவடையும்.

இன்ப துன்பங்களை சமமாகக் கருதும் இருவினையொப்பு நிகழ்ந்த பின்னர் அனைத்தும் இறைவனின் செயல்களே, என்றுணர்ந்த நிலையில், உயிர்கள் திருத்தம் பெறும். வினைகள் யாவும் உயிர்களை விட்டு நீங்கும். இந்நிலையே சீவன் முத்தர்களின் நிலை, இக்கருத்து

**'' உலகில் என் செயல் எல்லாம் உன் விதியே; நீயே**
**உள்நின்றும் செய்வித்தும் செய்கின்றாய் என்றும்;**
**நிலவுவதோர் செயல் எனக்கு இன்று உன் செயலே என்றும்**
**நினைவார்க்கு வினைகள் எல்லாம் நீங்கும் தானே'' ....**[88]

என அருள் நந்தி சிவாசாரியாரால் தெளிவுபடுத்தப்படுகிறது.

சீவன் முத்தர்களின் வினையை இறைவன் களைந்த நிலையினை,

**'' முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்'**
**பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன்'...**[89]

என்று மணிவாசகப் பெருமான் உறுதியுரைக்கிறார்.

பெருமானின் வாசகத்தை,

**'முன்னை வினையெல்லாம் முழுதும் அறுத்தாண்டி**
**என்னை எனக்கறிய இருவினையும் ஊடறுத்தான்'** [90]

என்று அழுகணிச் சித்தரும்,

**'' அந்தி நின்ற ஆகாம்ய சஞ்சித பிராரத்வம்**
**ஆருக்கு மடுக்குமென்றால் யோகம் எய்தி**
**முத்தி நின்ற ஞானத்தில் புகுந்தோர்க்கு ஐயா**
**மூன்றுமிலை ...**[91]

என்று கைலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனாரும் ஒருங்கே வழிமொழிகின்றனர். சித்தர்கள் சீவன் முத்தர்களாதலால், அவர்களுக்குக் கிடைக்கப்பெறும் பரமுத்தி நிலைக்கும், அவர்களது உடல் முடிவிற்கும் இடையே நிகழும் செயல்கள் அனைத்தும் அவர்களுடைய செயல்கள் ஆகா. அவை திருவருட் செயல்கள். இறையருளாலே நிகழ்த்தப்பெறுவன. அவற்றின் பயன் அவர்களைச் சாராது. எனவே தான் திருமந்திரம், சித்தர்களை,

**‘ ... முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்**
**பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்**
**சென்னியில் வைத்த சிவனருளாலே’ .. ..**[92]

எனப் போற்றுகின்றது.

**வாழ்வியலில் வினைக்கொள்கை**

வினைக் கொள்கையானது, கருத்து வேறுபாடுகளுக்குப் பெரிதும் இடமளிக்ககக்கூடியதொன்றாகும். சமயச் சார்பு கொண்டு எழுந்த இலக்கியங்கள் செல்வாக்குப் பெற்ற காலத்தில், வினைக்கொள்கை மிகுதியாகக் கடவுளோடு தொடர்புடையதாகக் காட்டப்பட்டது. சமுதாயத்தில் காணப்படும். ஏற்றத்தாழ்வுகளுக்கும், வாழ்வின் இன்ப துன்ப நிகழ்வுகளுக்கும், காரணம் புலப்படாத நிலையில், மனித இனம் வினைப்பயனையே இன்றும் காரணங்காட்டி வருகிறது.

தன்னுடைய வாழ்வில் எதிர்பாராமல் நிகழும் நிகழ்வுகளுக்கான காரணம் புரியாத போது, மனிதன் அமைதியிழந்து, வாழ்க்கையில் வெறுப்படைதல் இயல்பு. வெறுப்புணர்விலிருந்து விடுபட்டு, வாழ்வில் பற்றுக் கொள்வதற்கும், மனிதன் மன அமைதி பெறுவதற்கும் வினைக் கொள்கை உறுதுணையாகிறது. வினைப்பயனை மாற்றவோ, அதிலிருந்து விடுபடவோ இயலாது என்னும் கருத்தினை அறியும் போது, அதனையே தனக்கு சாதகமானக் காரணமாகக் கொண்டு மனிதன் முயற்சியோ, உழைப்போ மேற்கொள்ளாமல் இருந்து விடுதலும் உண்டு. மனித முயற்சிக்கும், உழைப்பிற்கும், வினைக் கொள்கை எவ்வகையிலும் தடையாக இருப்பதில்லை. மெய்யுணர்வுச் சிந்தனையாளராகிய திரு.எஸ்.இராதாகிருட்டினன், ‘பரம்பொருள் அனைத்தையும் மேற்பார்வையிடக் கூடிய கர்மாத்யக்ஷன் (ஸ்வேதாஸ்வர உப நிஷத் vi-ii) என்னும் உபநிடதக் கூற்றினைக் காட்டி, வினைக்கொள்கைக்கும், முயற்சிக்கும் உள்ள தொடர்பினை விளக்குகிறார். கரும நியதியைத் தவறாக உணர்ந்த காரணத்தால் அனைத்தும் விதியின் வழியே நடைபெறும் என்று கொண்டு, மனிதன் மன வலிமையிழந்து தன்னால் சிறப்பாகச் செய்யக்கூடியதையும், செவ்வனே செய்ய இயலாத நிலைக்கு ஆளாகிறான். மனித வாழ்க்கைக்கு நம்பிக்கையூட்ட வேண்டிய கருமநியதியானது, அவனது சோம்பல், அச்சம் ஆகியவற்றுக்குச் சமாதானம் கூறும் காரணமாகவும், அவன் மனத்துன்பம் கொள்வதற்கு வழியாகவும் அமைந்தது. பாவச் செயல் செய்து இழிந்த நிலையில் உள்ளவனைப் பார்த்து, ‘நீ இந்த இழிநிலையை அடைய வேண்டுமென்பது முன் கூட்டியே தீர்மானிக்கப்பட்டதொன்று. இந்த

நிலையைத் தவிர வேறு எந்த நிலையிலும் உன்னால் இருத்தல் இயலாது' என்று கூறும், நம்பிக்கை இழக்கச் செய்யும் கருத்து, எக்காரணத்தை முன்னிட்டும் கரும நியதியின் விளைவாக விளைந்ததன்று. கருமநியதியைத் தவறாகப் புரிந்து கொண்டதால் விளைந்ததேயாகும்'[93] என்னும் அவரது விளக்கம் வினைக் கொள்கை உழைப்பிற்குத் தடையாகாமல், மனித வாழ்விற்கு நம்பிக்கையூட்டுவது என்பதை வலியுறுத்துகிறது.

வினைப்பயன் என்பது தனிமனிதர் ஒவ்வொருவரின் செயல்களின் விளைவேயாகும். ஆகவே ஒவ்வொரு மனிதனும் தன் வினைப்பயனைத் தானே நிர்ணயித்துக் கொள்கிறான். எனவே பழவினைப் பயன்களை, அனுபவித்து வரும் ஒருவனுக்கு, இப்பிறப்பில் அவன் மேற்கொள்ளும் முயற்சிக்கும், உழைப்பிற்கும் எவ்வாறு பழவினை தடையாக இயலும். கன்மம் எனப்படும் வினைத்தொகுப்பு ஒருவனுடைய பிறவியையும், அவன் நுகரும் பலனையும் முடிவு செய்வதேயன்றி, அவன் மேற்கொள்ள விரும்பும் செயல்களை முடிவு செய்வதில்லை. அவற்றைத் தானே அவன் விருப்பப்படி செய்கிறான். ''ஒருவன் இப்பொழுது அனுபவிப்பது முற்பிறவியின் வினைப்பயனால் முடிவு செய்யப்பட்டுள்ளதாயினும், அவன் தன் எதிர்காலத்தை உருவாக்கிக்கொள்ளவும் உரிமையுடையவனாவான்; நிகழ்காலம் முன்னரே தீர்வு செய்யப்பட்டது. எதிர்காலம் அவனுக்கு வரையறைக்கு உட்பட்டதாகும்'[94]. என்னும் டி.ஜி. கல்கட்ஜியின் கருத்துரை இங்கு நினைவு கூரத் தக்கதாகும்'.

மனித வாழ்வை சீட்டு விளையாட்டிற்கு ஒப்பிடலாம். இவ்விளையாட்டில் சீட்டுக்களை நம்மால் தேர்ந்து எடுக்க முடியாது. கிடைத்த சீட்டுக்களை வைத்து வெற்றியோ, தோல்வியோ, ஈட்டும் வாய்ப்பு உண்டு. அது போல, பழவினையைத் தேர்ந்தெடுக்க நமக்கு அதிகாரமோ, உரிமையோ இல்லாவிடினும், அதை வைத்துக் கொண்டு மேலே ஆக்குவதோ, அழிப்பதோ நம் கையில் தான் உள்ளது. நம் முயற்சிகளிலும், உழைப்பிலும் வினை தடையாக இருப்பதில்லை. எனவே ''இப்பிறப்பில் இன்ப நுகர்ச்சிகளுக்கு அடிமையாகாமல் தீய பழக்கங்களை அகற்றுதல், நற் பழக்கங்களைக் கடைப்பிடித்தல், உடடினயாகச் செய்ய வேண்டிய கடமையில் விழிப்புடன் கருத்தைச் செலுத்துதல், முறைப்படி வாழ்க்கையை நடத்துதல், நாவடக்குதல், மனத்தை அடக்குதல் ஆகிய செயல்களை முனைப்புடன் முயன்று உள்ளத்தூய்மையும், உறுதியும் பெற்று, பழவினைப்பயனை அனுபவித்துக் கொண்டே நற்செயல்களால் எதிர்வினை இல்லாமல் செய்து கொண்டு விடலாம்'' ...[95] என்னும் மெய்யியல் அறிஞரின் அறிவுரைகளை மனதிற் கொண்டு வாழ்க்கையில்

வினைப்பயனை எதிர்கொள்ள வேண்டும். இவ்வாறு வாழ்வை நடத்தும் போது வினைப்பயனை அனுபவிக்குங்கால், மனத்தளவில் துன்பமின்றி அதனைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றலையும், நல்வினைகளைத் தொடர்ந்து இயற்ற வேண்டிய மன உறுதியையும் இறையருளால், இறை வழிபாட்டின் மூலம் பெற விழைதல் வேண்டும்.

**மாயை – விளக்கம்**

மாயை என்னும் சொல் 'மாயா' என்னும் சொல்லின் திரிபாகும். ''மக்களைப் பிறப்பிக்குந் தாய், 'மா' எனப்பட்டாற் போல உலகங்களையும், உடம்புகளையும் தன் கட்டோற்றுவிக்கும் முதற் பொருளும் மாயை எனப்பட்டது. இம் மா என்னுஞ் சொல்லுக்குப் பிறப்பித்தல் என்னும் பொருளேயன்றி, இறப்பித்தல் என்னும் பொருளும் உண்டு. எது தன்னிடத்தினின்றும் ஒன்றனைத் தோற்றுவிக்கின்றதோ, அதுவே அதனைத் தன் கண் ஒடுக்கிக் கொள்வதற்கும் இடமாய் நிற்கின்றது. 'மா' என்பதோடு 'ய்' என்னும் ஓரெழுத்துச் சேர்ந்து 'மாய்' என நிற்பின் அஃது இறத்தல் என்னும் பொருளைக் காட்டும். இம் 'மாய்' என்னும் முதனிலையிற்றோன்றி எப்பொருளும் மாய்ந்து ஒடுங்குதற்கு இடமாதலின் மாயை எனப்பட்டதென்று உரைத்தலுமாம்''...[96] என மறைமலையடிகள் மாயை என்னும் சொல்லுக்குரிய பொருளை விவரித்துரைக்கிறார்.

'மாயை' என்னும் சொல்லே அச்சொல்லுக்குரிய பொருளைத் தன்னுள் கொண்டுள்ளது. உலகமும், உலகத்துப் பொருட்களும் ஆக்கப்படுதலும், ஒடுக்கப்படுதலுமான செயல்பாடுகள் மாயையில் நிகழ்வனவேயாகும் என்னும் கருத்து பெறப்படுகின்றது. உலகத்துப் பொருட்கள் அனைத்தும் மாயையின் வெளிப்பாடுகளாகும். தோற்றம் பெற்று சிறிது காலம் நிலைபெற்று பின் ஒடுங்கும் தன்மை கொண்ட இவ்வுலகமும், உலகத்துப் பொருட்களும் சடப்பொருட்களே. சடப்பொருள்கள், ஒரு சடப்பொருளிலிருந்து தான் தோன்றமுடியும். ஆகவே உலகமும் அதன் கண் உள்ள அனைத்துப் பொருட்களின் தோற்றத்திற்கும், ஒடுக்கத்திற்கும் முதற் காரணமான மாயை ஒரு சடப்பொருள்; அசித்துப் பொருள் என்னும் உண்மை தெளிவாகிறது.

சடப்பொருட்கள் அனைத்தும் தாமே இயங்கும் ஆற்றல் அற்றவை அவ்வாறிருக்க மாயை உலகத்தையும் அதில் உள்ள பொருட்களையும் தானே தோற்றுவிக்காது. அவ்வாறெனில், வேறான ஓர் ஆற்றல் மாயையை இயக்க வேண்டும் என்ற கருத்து பெறப்படுகிறது. அறிவுடைய பொருளால் மட்டுமே அறிவற்ற சடப்பொருளை இயக்க இயலும். அதே சமயம் அறிவுடைய பொருளினின்று அறிவற்ற சடப்பொருள்

தோன்றுவதில்லை. எனவே மாயை, சித்தாகிய இறைவனிடமிருந்து தோன்றியது எனக் கொள்ளலாகாது. மாயையின் வேறாக நின்று இறைவன் தன் சிற்சக்தியினால் அசித்தாகிய மாயையினை இயக்குகிறான். இவ்வுண்மை,

**'. . .மாயை தான் அசித்து உருவாய் மருவ மாட்டாது**
**அன்னவனும் இது ஒழிய ஆக்க மாட்டான்**
**முன்னவன் அவ் அசித்தை விரித்து எவையும் ஆக்கும்**
**முதன்மை அது கொடுத்தது' . . .**[97]

என சிவப்பிரகாசத்தில் உறுதிப்படுத்தப்படுகிறது

மாயை அசித்துப் பொருளானதால், இறைவனின் சிற்சத்தியை நிலைக்களனாகக் கொண்டு நின்று, இறைவனின் ஆணைப்படி இயங்கும் தன்மையுடைத்து. குயவன் இல்லாமல் மண்ணிலிருந்து குடம் உண்டாகாது போல, இறைவனின் ஆற்றலின்றி, மாயையிலிருந்து உலகம் உண்டாகாது - இக்கருத்து,

**'வித்து உண்டா மூலம் முளைத்தவா தாரகமாம்**
**அத்தன் தாள் நிற்றல் அவர் வினையால் - வித்தகமாம்;**[98]

என்னும் அடிகளால் விளக்கப்படுகிறது. மாயைக்கு வித்தும், உலகத்திற்கு முளையும், இறைவனது சக்திக்கு நிலமும் உவமைகளாகின்றன. விதையானது, நிலத்தினுள் அழுந்தியிருப்பதைப் போல முதற்காரணமாகிய மாயை தனக்கு நிலைக்களமான இறை சக்திக்குள் அமிழ்ந்து இருக்கின்றது. நிலத்தின் வளமையான, ஆற்றலினால் அவ்விதையினின்று முளை தோன்றுவது போல, இறை ஆற்றலினால் மாயையினின்று உலகம் தோன்றும். மாயை, இறை ஆற்றலை நிலைக்களனாயக் கொண்டு நிற்பதால், அம்மாயை இறைவன் விரும்புகிற வழியே உலகத்தைத் தோற்றுவிக்குமேயன்றி, தானே தன்னிச்சைப்படி இயங்காது.

மாயையும் ஆற்றலுடையதே. மாயை இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாய் அமையும். பரிக்கிரகசத்தி என்பது தமிழில் 'வைப்பு ஆற்றல்' எனப்பொருள்படும். வைப்பு ஆற்றலென்பது வங்கியில் பணம் சேமித்து வைத்தலும், தேவைப்படும் போது எடுத்து பயன்படுத்துதலும் போன்றது. காரணநிலையில் மாயை ஒடுங்கி நிற்கும் போது, வங்கியில் சேமித்து வைத்துள்ள பணம் போன்று விளங்குகின்றது. காரிய நிலையில் பயன்பாட்டுக்கு வரும் போது, தன் ஒடுக்க நிலையினின்று அகன்று, பரந்து விரிந்து, பலவாகத் தோற்றமளிக்கும். இது தேவைப்படும் போது பணத்தை எடுத்து பயன்படுத்துதலைப் போன்றது. இறைவன், படைத்தலை மேற்கொள்ளுங்கால்,

**'காணிந்த வுலகத்தில் மாயக் கூத்தும்**
**கண் மூக்குச் செவியோடிந் திரியக் கூத்தும்**
**பூணந்த வாசியினால் வறுமைக் கூத்தும்**
**புகழான செனனமொடு மரணக் கூத்தும்**
**ஆணிந்த அண்டமெல்லாம் படைத்த கூத்தும்**
**ஆங்காரம் மனம் புத்தியான கூத்தும்**
**தோணிந்தப் படி படைத்த பரமேயையா!**
**சொற்பெரிய பூரணமே யென்று கூவே...**[100]

என கைலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனாரின் பாடலில் காணக் கிடைக்கிறது. சட்டை முனி நாயனாரின் கூற்றை

**'தோற்றமும் நிலையும் ஈறும் மாயையின் தொழிலது என்றே**
**சாற்றிடும் உலகம்' ....**[101]

என அருணந்தி சிவா சாரியார் உறுதிப்படுத்துகிறார்.

முதற் பிறப்பு நிகழ்வதற்கு முன்னரே, உயிர்கள் ஆணவ மலச்சார்பு கொண்டமையால், அறியாமையில் அழுந்துகின்றன. ஆணவமல நீக்கத்தின் பொருட்டே, இறைவன் கன்மத்தையும், மாயையையும் உயிர்கட்குக் கூட்டுவிக்கின்றான். மாயையினால் உயிர்கள், தனு கரண, புவன போகங்களைக் பெறுகின்றன. இக்கருவிகளால்தான் உயிர்கள் உலகத்தை அறிகின்றன. உயிர்களின் அறிவு சிறிது சிறிதாக விளக்கம் பெறுகிறது. இதனை,

**'விடிவாம் அளவும் விளக்கு அனைய மாயை**
**வடிவு ஆதி கன்மத்து வந்து' . . .**[102]

என உமாபதி சிவாசாரியார் விளக்குகிறார். சூரிய ஒளி தோன்றும் வரை இருளை ஓரளவு நீக்குவதற்கு விளக்கு பயன்படுவது போல இறைவனின் திருவருள், உயிர்களின் மீது பதியும் வரை உயிர்களின் அறியாமையை, ஓரளவு, மாயையின் வெளிப்பாடுகளும், கன்மமும் அகற்றுகின்றன என்னும் மிகப் பொருத்தமான உவமையுடன் கூடிய இவ்வரிகள் உணர்ந்து போற்றுதற்குரியன.

போற்றிப்பஃறொடையில் காணக் கிடைக்கும்,

**'கட்புலனால் காணார் தம் கைக் கொடுத்த கோலே போல்**
**பொற்புடைய மாயைப் புணர்ப்பின்'....**[103]

என்னும் வரிகளும், கண்பார்வை அற்றவர்களின் கையில் கொடுக்கப்படும் ஊன்றுகோல் ஓரளவு அவர்களுக்கு வழிகாட்டுதல் போல, உயிர்களுக்கு மாயை, அறிவு விளக்கம் பெற உதவுகிறது என்ற கருத்தை உறுதிப்படுக்கின்றன. 'மாயை விளக்கொளி போல நின்று, ஆணவமல இருளைச் சிறிது நீக்கி, உயிருக்கு விளக்கம் தருதலின்

ஓண்தளை' (ஒண்மை - ஒளியுடைமை) என்பது ஆ ஆனந்தராசன் தரும் விளக்கமாகும்...[104] அறிவு விளக்கம் அளிக்கும், மாயையின் இயல்பு,

**'நண்ணிய பாசத்தில் நானெல் ஆணவம்**
**பண்ணிய மாயையில் ஊட்டற் பரிந்தனன்**
**கண்ணிய சேதனன் கண்வந்த பேரருள்'...**[105]

எனத் திருமூலரால் முன்மொழியப்படுகிறது.

உயிர்களுடன் இயற்கையாகவே கலந்து நின்று, இருளாக விளங்கும் ஆணவ மலத்தைப் போலல்லாமல், விளக்கொளி போன்று, உயிர்களின் வேறாய் நின்று, அவற்றின் அறிவு விளக்கத்திற்குப் பயன்படும் மாயையைத் தளைகளில் ஒன்றாகக் கருதுவது எங்ஙனம் பொருந்தும் என்னும் ஐயம் எழாமல் இல்லை. மாயையின் வெளிப்பாடுகள் அறிவு விளக்கம் தருதல் உண்மையெனினும், அதே சமயத்தில், உடலாகவும், உலகத்துப் பொருட்களாகவும் அமைந்த மாயை உயிர்களின் அறிவை மயக்குதலையும் செய்கின்றது. உடலும், வனப்பும், செல்வமும், உலகப் பொருட்களும், பிறவும் மாயையின் வெளிப்பாடுகளே. இவை உயிர்களுக்கு ஆசையையும் , மயக்கத்தையும் விளைவிக்கின்றன. இம்மாய மயக்கத்தை உயிர்கள் வெல்வது அரிது. எனவே தான்

**'மண் காட்டிப் பொன் கட்டி மாய இருள் காட்டி'**

எனப் பட்டினத்தாரும்,

**'மாயாப் பிறவி மயக்கத்தை ஊடறுத்து'**

என பத்திரகிரியாரும்,

**'மண் பிறந்த மாயமும் மயக்கமும்'**

எனச் சிவவாக்கியரும்,

**'மாயக் கலவி வந்து மதி மயக்கமானேனடி'**[106]

என அழுகணிச் சித்தரும் மாயை பெரும் மயக்கத்தைத் தரவல்லது எனக் குறிக்கின்றனர். சித்தர்களின் கருத்திற்கு,

**'மண்ணினில் மாயை மதித்து வகுத்த மயக்கறுமாகாதே'**[107]

என்று மணிவாசகப் பெருமானும்,

**'மயக்கத்தை அறிய மாட்டேன்**
**மையல் கொள் மனத்தனனாகி' . . .** [108]

என அப்பர் அடிகளும் உடன்படுகின்றனர். **'மாயப்பிறவி மயக்கமறுத்து'**[109] என்னும் விநயாகரகவல் சொற்றொடர் இங்கு நினைவிற் கொள்ளத்தக்கதாகும். இங்ஙனம் மயக்கத்தைத் தரக்கூடியதாக அமைந்து உயிர்களைத் தம் வசப்படுத்துவதால், தளைகளில் ஒன்றாக மாயை அமைகிறது.

தளைகளில் ஒன்றான மாயை, மற்றொர் தளையான ஆணவத்தின் விளைவாகிய அறியாமையை, அகற்ற எங்ஙனம் உதவ முடியும் என்னும் வினாவும் விளக்கத்திற்குரியதே. 'முதற்கண் உயிர்கள் ஆணவம் என்னும் ஒரு கட்டுடன் இருந்தன. அக்கட்டினை நீக்குவதற்காக, மாயை, கன்மம் என்னும் இரு கட்டுக்களைச் சேர்க்கின்றான் இறைவன். அவிழ்த்தற்கு அரிய ஒரு கட்டினை அவிழ்ப்பதற்கு நடைமுறையில் நாம் கையாளும் வழி அதனைக் காட்டிலும் இறுக்கமாய மற்றொரு கட்டினைப் போடுவது தான். அதனால் முதற்கட்டு தானே நெகிழ்ந்து விடும் அல்லவா? அது போல இறைவன் ஆணவக் கட்டினை நெகிழ்விப்பதற்காக, மாயை, கன்மங்களாகிய இரு கட்டுக்களை இடுகின்றான்'.[110] என்பது ஆ. ஆனந்தராசன் அவர்கள் அளிக்கும் விளக்கமாகும். இதனை, 'முள்ளை, முள்ளால் எடுப்பது போன்றது'... [111] என்கிறார். சி.சு. மணி அவர்கள்.

மாயையே இவ்வுலகத்தில் நுகர்வதற்குரிய உலகப் பொருட்களாய் இருக்கின்றபடியால், உயிர்கள் அவற்றைத் தம் வசப்படுத்திக் கொள்ளல் வேண்டும் என்ற எண்ணம் மேலிட, அதற்கான முயற்சிகளாகிய வினைகளைப் புரிகின்றன. இங்ஙனம் வினையும் தன் முனைப்புமாகிய இரு தளைகளின் தொழிற்பாடுகளுக்கு மாயை இடமளிக்கிறது. இந்நிலை பிறவிகள் தோறும் தொடர, இவ்விரு தளைகளின் வலிமை குறைகிறது. தளைகளின் வலிமை குறைவதற்கும், இவற்றினின்று விடுபட வேண்டும், இறைவனடி சேர வேண்டும் என்னும் உணர்வினை உயிர்கள் பெறுவதற்குமான உலக வாழ்வியல் அனுபவங்களைத் தர வல்லதாகவும் மாயை அமைகிறது எனவே,

**'மயக்கிடு மாயா காரியமிலையேல்**
**வல்வினை நுகர்ச்சியு மில்லை**
**துயக்குமவ் வினையின் கழிவு மாங்கெய்தா**
**தொல்லையே சூழ்ந்த வாணவத்தின்**
**முயக்கு மற்றொழித லரிதரிதாகும்**

**மூதுயிர் மாயா காரியத்தின்**
**இயக்குற லன்றி யவையுமெய் தாவால்' ...** [112]

எனக் கச்சியப்பமுனிவர் மாயையின் இன்றியமையாமையைக் குறிக்கிறார்.

உயிர்களுக்கு இவ்வுலகத்தில், எல்லாமுமாகி நின்ற மாயையின் யுத்தியைக் கைலாயக் கம்பளிச் சட்டை முனியார்,

**'ஆச்சப்பா மாயை யுத்தி சொல்லவென்றால்**
**அனேகமுண்டு சூட்சுமமாய்ச் சொல்லக் கேளு**
**வாச்சப்பா தேசத்திற் பேதா பேதம்**
**மருவியதோர் கிராமத்தில் கிராம பேதம்**
**ஒச்சப்பா திறங்களிலே திறங்கள் பேதம்**
**ஓகோகோ சனங்களிலே யனேக பேதம்**
**வீச்சப்பா புத்திகளிற் பேதா பேதம்**
**வெகு மோக மாயத்தாற் றோன்றுங் காணே' . . .** [113]

எனக் குறிக்கிறார். இவ்வுலகத்தில் நடைபெறும் செயல்பாடுகளின் வேறுபாடுகளுக்கும், உயிர்களில் காணப்படும் வேறுபாடுகளுக்கும் மாயையே காரணம் என்னும் சட்டை முனியாரின் கூற்றை.

**....'காரணம் மாயை ஆகக் காரியம் காணலாகும்' ....** [114]

என அருணந்தி சிவாசாரியார் ஆமோதிக்கின்றார்.

மாயைக்கு ஏழு குணங்கள் உள்ளதாக சைவ சித்தாந்தம் உரைக்கிறது.

**....'அஞ்ஞானம் பொய் அயர்வே மோகம்**
**பைசா சூனியம் மாற்சரியம் பயம்**
**ஆய வேழ் குணனும் மாயைக்கு அருளினை' . . .** [115]

என இருபாவிருபது இயம்புகின்றது. இவ்வேழ் குணங்களையும்,

| | | |
|---|---|---|
| அஞ்ஞானம் | - | பொருளல்லவற்றைப் பொருள் எனக் கொள்ளுதல் |
| பொய் | - | உண்மைக்கு மாறானவற்றைப் பேசுதல் |
| அயர்வு | – | அறிந்ததை மறந்தும், மயங்கியும் வருந்துதல் |
| பயம் | - | தம் உயிருக்கு ஊறு வரும் எனக்கருதி அச்சம் கொள்ளல் |
| மோகம் | - | எல்லையற்ற வேட்கையினால் துன்புறுதல் |
| பைசாசூன்யம் | – | தனக்குள் எழுந்த தீ வேட்கையை மற்றவர் அறியாமல் ஒளித்தல் |
| மாச்சரியம் | - | பிறரிடத்துப் பகைமை பாராட்டல் [116] |

என மாயையின் ஏழு குணங்களையும் சி.சு. மணி அவர்கள் விளக்குகிறார்.

மாணிக்கவாசகர் திருவாசகத்தில், 'ஆறு கோடி மாயா சத்திகள்' என்னும் சொற்றொடரைக் கையாள்கிறார். 'கோடி' என்பது அநேகம் என்று பொருள்படும். ''ஆறு மாயாசக்திகளாவன; இணை விழைச்சு, வெகுளி, இவறன்மை, மயக்கம், செருக்கு, அழுக்காறு என்ப. இவ்வாறினால் விரியும் வினைகள் அளவிறந்தனவாய்ப் பெருகி நிகழ்தலின் இவை தம்மை ஆறு கோடி மாயா சத்திகள் என்றார். இவ்வுட்பகை ஆறும் ஆணவத்தின் வலியால் அதன் வழி நிற்கும் உயிரின் கட்டோன்றுவன வாயினும், அவை தோன்றுதற்குக் கருவியாய் அவ்வுயிரோடுடன் நின்று உதவுவது மாயையேயாகலின், அவற்றை அதன் மேலேற்றி 'மாயா சத்திகள் என்றருளிச் செய்தார்'[117] என்பது மறைமலையடிகளின் விளக்கமாகும்.

மாயையின் குணங்கள் அனைத்தையும் சித்தர்கள் தம் பாடல்களில் விளக்கி அவற்றைக் களையுமாறு அறிவுறுத்தினர்.

**'அஞ்ஞானம் உட்கொண்டதுவும் ..... .**
**மெய்ஞ்ஞானம் காணாததும் விளையாட்டே '**

என கடேந்திர நாதரும்,

**'பொய்ப் பொருளை விட்டு'. . . .**

என இடைக்காட்டுச் சித்தரும்,

**'பேச்சலது மாய்கையப்பா வொன்றுமில்லை'**

என அகத்தியரும்,

**'பேச்சென்றால் வாய்ச்சமர்த்தாய்ப் பேசிப் பேசிப்**
**பின்னு முன்னும் பாராமல் . .**
**மோசமது போகாதே . . . .**

எனக் கருவூர்ச் சித்தரும்,

**' மருள் புகுந்த சிந்தையால் மயங்குகின்ற'**

என சிவவாக்கியரும்,

**'மோகத்து காதியாமம்மாயை ....**[118]

என வாலைச்சாமிச்சித்தரும் மாயையின் இயல்புகளைத் தம் பாடல்களில் தெளிவுபடுத்தினர். குதம்பைச் சித்தர்,

**'மாய வித்தை பல மாநிலத்தில் செய்கை**
**தீய தொழிலாகுமடி குதம்பாய்**
**தீய தொழிலாகுமடி' .....[119]**

என்றுரைக்கிறார். இவ்வுலகத்தில் மாயையின் செயற்பாடுகள் பலவும் மனிதனுக்குத் தீய வினைகளாகின்றன என்பது அவரது கருத்தாகும். எனவே தான் அகப்பேய் சித்தரும்,

**'மகார மாயையடி அகப்பேய்**
**மலமது சொன்னேனே' [120]**

என்று மாயை உயிர்களுக்கு ஒரு மலமே என்று நிறுவுகிறார்.

**மாயையின் வகைகள்**

உலகத்தின் வித்தாக விளங்கும் மாயை, சுத்தமாயை, அசுத்த மாயை என இரு வகைப்படுகிறது.

**'ஓத்த இரு மாயா கூட்டத்(து) இடைபூட்டி' ....** [121]

என்னும் திருமந்திர மொழி இவண் நினைவு கூரத் தக்கது. அசுத்த மாயையின் வெளிப்பாடான பிரகிருதி மாயையையும் சேர்த்து மூவகைப்படுகிறது. இம்மூமாயைகளையும் திருமூலர், மாமாயை, மாயை, ஓமாயை என்று குறிப்பிடுகின்றார்...[122] மாமாயை என்பது அதன் தூய்மை குறித்து அவ்வாறு சொல்லப்பட்டது. மாமாயை, சுத்தமாயை குடிலை, விந்து, குண்டலி என்பன ஒரு பொருட்கிளவிகள் ஆகும். மாயை என்றவிடத்து, அது அசுத்த மாயையேக் குறிக்கும். ஓமாயை என்பது அசுத்த மாயையிடமிருந்து வெளிப்படும் பிரகிருதி மாயையாகும். இதனை அவ்வியத்தம் என்றும் குறிப்பர்.

**'விந்துவின் மாயை ஆகி மாயையின் அவ்வியத்தம்**
**வந்திடும்' . . . .[123]**

என்னும் சிவஞான சித்தியார் அடிகள், மாயை மூவகைப்படுதலையும், அவை ஒன்றிலிருந்து ஒன்று தோன்றியமையையும் உறுதிப்படுத்துகின்றன. ஓவுதல் என்பதற்கு நீக்குதல், ஒழிதல் என்பது பொருள். முக்குணங்களும் நீக்கி, அதாவது அவை வெளிப்பட்டுத் தோன்றா நிலையில் அவ்வியக்தமாய் நின்ற பிரகிருதி மாயைக்கு, ஓமாயை என்ற பெயரமைந்தது. இவற்றிற்கிடையே உள்ள தொடர்பைத் திருமந்திரம்,

**'மாயை கைத்தாயாக, மாமாயை ஈன்றிட**
**வாய பரசிவன் தந்தையாய் நிற்கவே**

**ஏயும் உயிர் கேவல சகலத் தெய்தி**
**ஆய்தரு சுத்தமும் தான் வந்தடையுமே' ....** [124]

என விளக்குகிறது. உயிர்கள், கேவல சகலத்தின் வழி சுத்தத்தை அடைவதற்கு மாயை நிலைக்களனாய் விளங்கும் உண்மையும் இச்செய்யுள் வழி பெறப்படுகின்றது.

**சுத்தமாயை**

மகாமாயை, மாமாயை, ஊர்த்துவமாயை, குடிலை, விந்து ஆகியவை சுத்தமாயையின் வேறு பெயர்களாகும். இப்பெயர்களே, சுத்தமாயையின் இயல்புகளை விளக்குகின்றன. அனைத்துப் பொருட்களையும், தன்னுள் அடக்கி வியப்புக்குரியதாய் விளங்குவதால் மகாமாயை என்னும் மாமாயை என்றும் வழங்கப்படுகின்றது. ''ஊர்த்துவ' - என்னுஞ்சொல், மேல் எனப் பொருள்படும். சுத்தமாயை அனைத்திற்கும் மேலான வியாபகம் உடைமையின் ஊர்த்துவமாயை எனப் பெயர் பெற்றது. விந்து என்றால் தூய்மை என்று பொருள். ஆணவம், கன்மம் ஆகியவற்றின் கலப்பின்றி தூயதாய் விளங்குவதால் விந்து எனப் பெயர் பெறுகிறது. மயக்கத்தைத் தராதது. இறைவன் ஐந்தொழில் ஆற்றுவதற்கு இடமாய் அமைவது சுத்தமாயையே. ஆணவமலத்தால் மட்டும் பிணைக்கப்பட்ட விஞ்ஞானகலருக்கு இருப்பிடமாவதும் சுத்தமாயையேயாகும்.

சுத்தமாயையின் செயல்பாடு, சொல் உலகம், பொருள் உலகம் என இருவகைப்படும். சொல் உலகமே, வாக்கு எனப்படும். அவை சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என நான்கு வகைப்படும்...[125] மேற்கண்ட வாக்குகள் ஐந்து என்பது சித்தர்களின் கூற்றாகும். வைகரி வாக்கானது, சூக்குமவைகரி, தூல வைகரி என இரண்டாகும்.

**'வாக்காதி ஐந்தடியோ - அகப்பேய்**
**வந்த வகை கேளாய்' . . . . . . . . ..**

என்று அகப்பேய்ச் சித்தரும்,

**'வாக்காதி ஐந்தையும் வாகாய்த் தெரிந்தேனே'**[126]

என்று இடைக்காட்டுச் சித்தரும் மொழிகின்றனர்.

சுத்த மாயையின் மற்றோர் செயல்பாடு பொருளுலகம் ஆகும். இது வடமொழியில், 'அர்த்தப் பிரபஞ்சம் எனப்படும். 'பொருளுலகம் என்னும் சொல்லுக்கு 'பஞ்ச கலைகளும், முப்பத்தாறு தத்துவங்களும், இருநூற்றிருபத்து நான்கு புவனங்களும்

ஆகும்' என்பது கு.வைத்தியநாதன் அவர்கள் அளிக்கும் விளக்கமாகும்....[127] சுத்தமாயை மட்டுமின்றி, அசுத்தமாயை, பிரகிருதி மாயை ஆகிய மூன்று மாயைகளிடமிருந்தும் பொருளுலகம் உண்டாகும். சுத்தமாயையிடமிருந்து தோன்றும் தத்துவங்கள் (உள்பொருட்கள்) ஐந்தாகும். அவை சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை ஆகியன. இவை சிவ தத்துவங்கள் என வழங்கப்பெறுகின்றன. சுத்த மாயையின் செயயற்பாடுகளாதலால் சுத்த தத்துவம் என்றும் வழங்கப் பெறுகிறது.

இறைவனிடம் இச்சை, ஞானம், கிரியை என்னும் மூவகை சத்திகள் உண்டு. இவற்றுள் இச்சாசத்தி எப்பொழுதும் ஒரு நிலையிலேயே நிற்கும். ஞானமும், கிரியையும் தனித்தும், சமமாயும், ஒன்றின் ஒன்று மிகுந்தும், குறைந்தும் செயல்படும். இம் மூன்று சத்திகளும் சிவ தத்துவங்கள் ஐந்தினுள் செயல்படும் நிலைகளாவன:

| | | |
|---|---|---|
| சிவம் | : | இறைவனது ஞான சக்தி மட்டுமே தொழிற்படுவதாகும் |
| சத்தி | : | இறைவனது கிரியா சத்தி மட்டும் செயல்படும் நிலை |
| சதாசிவம் | : | ஞானமும் கிரியையும் ஒத்து செயல்படும் நிலை |
| ஈசுரம் | : | கிரியா சத்தி மேம்பட ஞானம் குறைந்து செயல்படும் நிலை |
| சுத்தவித்தை | : | ஞானசக்தி மேம்பட கிரியா சத்தி குறைந்து செயல்படும் நிலை[128] |

இவற்றை திருமூலர் **'மாயை உடனைந்து சுத்தம்'**[129]**...** என்னுந் தொடரால் குறிக்கிறார்.

**அசுத்த மாயை**

''நித்தியமாய், வியாபகமாய், அருவமாய்ச் சடமாய்ப் பிரளய காலத்திலே ஆன்மாக்களுடைய கன்மங்களுக்கு உறைவிடமாய், ஆன்மாக்களுக்கு சுத்தா சுத்தமும் அசுத்தமும் ஆகிய தனு கரண புவன போகங்கள் தோன்றுதற்கு முதற்காரணமாய், மயக்கஞ் செய்வதாய் இருப்பது' ...[130] என்பது அசுத்த மாயை குறித்த வரையறையாகும். அதோமாயை, மாயை, மோகினி என்னும்பெயர்களைக் கொண்ட அசுத்த மாயையின் இயல்புகளை இப்பெயர்களே விளக்கி நிற்கின்றன. 'அத என்றால் கீழ் எனப்பொருள். அசுத்த மாயை சுத்தமாயையின் வியாப்பியமாதலால் அதோ மாயை எனப்படுகின்றது'...[131] மாயை என்று பொதுவாகக் குறிப்பிடப்படுவது அசுத்தமாயையேயாகும். அது மயக்கத்தைத் தர வல்லதால் 'மோகினி' என்று பெயர் பெறுகிறது.

அசுத்த மாயையின் செயற்பாடுகள் ஒரு புடைப்பரிணாமம் எனப்படும். பரிணாமம் என்ற சொல் இயற்கையினின்றும் திரிந்து நிற்பது - எனப் பொருள்படும் உருத்திரிதல் ஒன்று. பிறிதொன்றாதல் ஒன்று. அசுத்த மாயையின் செயற்பாடுகளாக ஏழு தத்துவங்கள் தோன்றுகின்றன. முதலில் பரிணமமாகிய மாயா தத்துவத்தில் இருந்து கால தத்துவம் தோன்றும். பின் நியதி என்ற தத்துவமும், கலை என்னும் தத்துவமும் தோன்றும். இம் மூன்றும் முறையே மாயையிலிருந்து தோன்றும். பின் கலையிலிருந்து வித்தையும், அராகமும் தோன்றும். இந்த ஐந்து தத்துவங்களைப் பெற்ற உயிர்கள் போகம் நுகரத் தயாராயிருக்கும் நிலையில் புருடன் எனப் பெயர் பெறும். வித்தியா தத்துவங்களின் செயல்பாடுகளை,

**'அக்காலம் மூன்றாய் ஆக்கியும் அளித்தும் போக்கிக்**
**காயமோடு உலகுக்கு எல்லாம் கால சங்கையினைப் பண்ணி'**

என்றும்,

**'நியதி பின் தோன்றி கன்ம நிச்சயம் பண்ணி நிற்கும்'**

என்றும்,

**'. . . . . கலை பின் தோன்றி ஆணவம் ஒதுக்கி சித்தின்**
**செயல்புரி கிரியா சத்தி தெரிவிக்கும்'. . .**

என்றும்,

**'வித்தை உயர் கலையதனில் தோன்றி அறிவினை**
**உதிக்கப் பண்ணும் . . . . . . . . . . . . . . . . . . . . . .**

என்றும்,

**'அராகம் தோன்றி வினை வழி போகத்தின் கண்**
**இச்சையைப் பண்ணி நிற்கும்**

என்றும்,

**. . . . . . . . இச்சா ஞானக்கிரியை முன் மருவி ஆன்மா**
**நிச்சயம் புருடன் ஆகி பொதுமையின் நிற்பன்** [132]

என்றும் சிவஞானசித்தியார் விளக்குகிறது. அருணந்தி சிவாசாரியாரின் மொழிகளை, **'வித்தியா தத்துவங்கள் விதம் விதமாய்' ...** [133] என அழுகணிச் சித்தர் உறுதிப்படுத்துகிறார். வித்தியா தத்துவங்களைத் திருமூலரும் திருமந்திரத்தில் பல பாடல்களில் குறிக்கிறார் .. [134] பிரளயாகலர் வகை உயிர்களுக்கு இருப்பிடமாவது இம் மாயையேயாகும். 'இத்தத்துவங்கள் அனந்த தேவர் வழிவந்த வித்தியேசுவரரால் தோற்றவும், ஒடுக்கவும் படுதலால் வித்தியா தத்துவங்கள் எனப்படும்' [135]

**பிரகிருதி மாயை**

அசுத்தமாயா தத்துவங்கள் ஏழினுள் ஒன்றாகிய கலைத் தத்துவத்திலிருந்து 'பிரகிருதி' தோன்றும். இது மூலப்பிரகிருதி என்றும், 'பிரதானம்' என்றும், 'மான்' என்றும், அவ்வியக்தம் என்றும் வழங்கப்படுகிறது. பிரகிருதி என்ற சொல்லுக்குக் காரணம் என்பது பொருள். 'உயிர்களுக்குரிய குணங்களாகிய சாத்துவிகம், இராசதம், தாமதம் ஆகிய முக்குணங்களையும் சூக்குமமாய் உள்ளடக்கி நிற்கும் எனவே முக்குணங்களும் வெளிப்படாது சூக்குமமாய் அடங்கி நின்று அவற்றிற்குக் காரணமாதல் பற்றிப் பிரகிருதி எனப்பட்டது'..[136] அனுபவிக்கப்படும் உலகத்திற்கு மூல காரணமாக விளங்கினமையின் மூலப்பிரகிருதி ஆயிற்று. உயிருக்கு உதவுவனவாகிய இருபத்து நான்கு தத்துவங்களும், பிரகிருதி மாயையினின்றே தோன்றுவதால் இது 'பிரதானம்' எனக் குறிக்கப்படுகிறது. 'மான்' என்பது 'மகத்து' என்ற வடசொல்லின் திரிபு..[137] மகத்து என்பதற்குப் பெரியது என்று பொருள். இருபத்து நான்கு தத்துவங்களாக விரிவடைவதால் பெரியது என்னும் பொருள் பட 'மான்' என்று பெயர் பெற்றது. 'வியத்தம் என்பது வெளிப்படுதல் ஆகும். அவ்வியத்தம் என்றால் வெளிப்படாதது என்பது பொருள். முக்குணங்களும் வெளிப்படாதிருக்கும் நிலை இதுவாதலால் அவ்வியத்தம் எனப்படுகிறது'...[138]

'பிரகிருதி மாயையின்று தோன்றும் தத்துவங்கள் இருபத்து நான்காகும். அவ்வியத்தமாய் சூக்குமமாய் நின்ற பிரகிருதி மாயையே, முக்குணங்களும் சமமாய் வெளிப்பட்டு வியத்தமாய் நிற்கையில் குணதத்துவம் எனப்படுகிறது. இக்குண தத்துவமே சித்தம் என்னும் அகக் கருவியாகும். இது, உயிரானது யாதொன்றையும் சிந்திப்பதற்குக் கருவியாய் அமையும். முக்குணங்களும் சமமாய் நின்ற இக்குணத் தத்துவத்தினின்று 'புத்தி' என்னும் அந்தக் கரணம் தோன்றும். இது உயிரானது எதையும், இஃது இன்னது என்று நிச்சயம் செய்வதற்குரிய கருவியாகும். புத்தி தத்துவத்தினின்று அகங்காரம் தோன்றும். அகங்காரமே உயிர்களுக்குத் 'தான்' என்னும் தன் முனைப்புக் கருவியாகிறது. பின்னர் அகங்காரத்தினின்று 'மனம்' என்னும் கருவி தோன்றுகிறது. இம் மனமே உலகத்திலுள்ள பொருட்களின் மீது உயிர்கள் பற்றுக் கொள்ளக் காரணமாகிறது. ஆக சித்தம், புத்தி, அகங்காரம், மனம் என அந்தக் கரணங்கள் நான்காயின...[139] இவற்றைக் குதம்பைச் சித்தர், **'அந்தக் கரணம் அடங்க'.....** என்றும், கஞ்சமலைச் சித்தர், **'அந்தக் கரண விலாசம்'...** என்றும், இடைக்காட்டுச் சித்தர், **'அந்தக் கரணமெனச் சொன்னால் . . .** என்றும் தம் பாடல்களில் குறிக்கின்றனர் . . . .[140]

அந்தக் கரணங்களாகிய அகக் கருவிகளின் பின்னர் ஞானேந்திரியங்களும், கன்மேந்திரியங்களும் தோன்றும். அகக்கருவிகளில் ஒன்றான அகங்காரம், சாத்துவிகக்கூறு, இராசதக் கூறு, தாமதக் கூறு என முக்குணங்களின் வழி, மூன்று கூறாய் நிற்கும். இவற்றுள் சாத்துவிகக் கூறுடைய அகங்காரத்தினின்று மனமும் அதிலிருந்து ஞானேந்திரியங்கள் எனப்படும் ஐந்து கருவிகளும் தோன்றுகின்றன..[141] அவை செவி, மெய், கண், வாய், மூக்கு ஆகும். இவை ஐம்பூதங்களின் இடமாய் நின்று அப்பூத இயல்புகளை அறியும்.

மெய் - காற்றிடமாக நின்று ஊற்றின்பத்தைச் செய்யும்
வாய் – நீரிடமாக நின்று சுவையை அறியும்
கண் - நெருப்பிடமாக நின்று உருவைக் காணும்
மூக்கு - மண் இடமாக நின்று நாற்றத்தை அறியும்
செவி - விண் இடமாக நின்று ஓசையை அறியும் . . . .[142]

இவை புறத்தே உள்ள ஓசை, ஊறு, ஒளி, சுவை, மணம் என்னும் புலன்களை உயிரானது அறிதற்குக் கருவிகளாகச் செயல்படுவதால் அறிகருவிகள் என்றும், ஞானேந்திரியங்கள் என்றும் வழங்கப்படுகின்றன. மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவை உறுப்புக்களின் பெயர்களாக இருப்பினும். இவ்வுறுப்புக்கள் ஞானந்திரியங்கள் எனக் கொள்ளப்பட மாட்டா. அவ்வுறுப்புக்களில் நின்று, அவ்வப்புலன்களை அறியும் ஆற்றல்களே ஞானந்திரியங்கள் ஆகும். எடுத்துக்காட்டாக செவி என்னும் உறுப்பு இருந்தும், ஓசையை அறிகின்ற ஆற்றல் அதனிடத்து இல்லையேல் கேட்டல் நிகழ்வதில்லை. எனவே 'இந்திரியம்' என்பது உறுப்பினின்று வேறானது என்பதும், அஃது அவ்வுறுப்பில் தங்கி நின்று அறியும் ஆற்றல் என்பதும் தெளிவாகின்றது. ஞானேந்திரியங்களை,

**'மெய் வாய் கண் மூக்குச் செவியெனும் ஐந்தாட்டை**
**வீறுஞ்சுவையொளி யூறோசை யாம் காட்டை'.....**

என இடைக்காட்டுச் சித்தரும்,

**'ஊறு சுவை யொளி நாற்றம் ஒலியே யென்ன**
**உலகத்தில் . ...[143]**

என காரைச் சித்தரும் தம் பாடல்களில் குறிக்கின்றனர். திருவள்ளுவரும்,

**'சுவையொளி ஊறோசை நாற்றமென்று ஐந்தின்**
**வகை தெரிவான் கட்டே உலகு'...**

என்கிறார். உரையாசிரியர் பரிமேழ்கர் 'தன் மாத்திரைகள் ஐந்தனது கூறுபாட்டையும், ஆராய்வான் அறிவின் கண்ணதே உலகம்' என விளக்கமளிக்கிறார். [144]

சாத்துவிகக் கூறுடைய அகங்காரத்தினின்று மனமும், ஞானேந்திரியங்களும் தோன்றிய பின்னர், இராசத குணக் கூறுடைய அகங்காரத்தினின்று, கன்மேந்திரியங்கள் எனப்படும் தொழிற்கருவிகள் தோன்றுகின்றன. அவை வாய், கால், கை, எருவாய், கருவாய் ஆகியனவாகும். இவை பேசுதல், நடத்தல், இடுதல், (ஏற்றல்) கழித்தல், இன்புறல் ஆகிய செயல்களைக் காரியங்களைச் செய்வதற்கான கருவிகளானதால் கன்மேந்திரியங்கள் எனவும் செயற் பொறிகள் எனவும் பெயர் பெறுகின்றன. ஞானேந்திரியங்களைப் போன்றே கன்மேந்திரியங்களும், வாய், கை, கால் ஆகிய உறுப்புகளில் நின்று அவ்வவற்றிற்குரிய செயல்களைச் செய்யும் ஆற்றல்களேயாகும். 'வான் இடனாய் நின்று சொற்பொறி சொல்விக்கும்.காற்றிடமாய் நின்று செல்லும் பொறி செலுத்தும். நெருப்பிடமாய் நின்று கைப்பொறி இடுதலையும், ஏற்றலையும் செய்யும். நீரிடமாய் நின்று கழித்தல் பொறி கழிவிக்கும். நிலனிடனாய் நின்று கருவாய் பொறி மகிழ்வு விளைவிக்கும்.'... [145] ஐம்பூதங்களை இடமாய்க் கொண்டு கன்மேந்திரியங்கள் தொழிற்படுகின்றன.

**'கொள்ளடா ஞானேந்திரியங்கள் ஐந்து**
**கூடினவை கன்மேந்திரியங்கள் ஐந்து'...** [146]

என காகபுசுண்டர் அறிகருவிகளையும், தொழிற்கருவிகளையும் தம் பாடலில் விளக்குகிறார்.

கன்மேந்திரியங்களை அடுத்து தாமத குணக்கூறுடைய அகங்காரத்தினின்று தன் மாத்திரைகள் தோன்றுகின்றன. அவை ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் ஆகியனவாகும். தன் மாத்திரைகள் நுட்பமானவை. அவை பூத நுட்பங்கள் எனப்படும். தன் மாத்திரை, தத் + மாத்திரை எனப் பகுக்கப்படுகிறது. 'தத் - அது, மாத்திரை - அளவு'. [147] ஆகவே தன் மாத்திரை என்ற சொல்லுக்கு அதனளவில் நிற்பது என்பது பொருளாகும். அதாவது பொறிகளுக்குப் புலனாகாத நுண்ணிய நிலை இதுவாகும். இந்நிலையிலிருந்து காரியமான பூதங்கள் தோற்றம் பெறுகின்றன. பூதங்கள் பருமையானவை. தூலமானவை. தன் மாத்திரைகள் நுண்ணியவை. சூக்குமமானவை. ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் முதலியன முதலில் தம் நிலையில் சூக்குமமாய், பொறிகளுக்குப் புலப்படா நிலையில் தன் மாத்திரைகளாய் நின்று, பின்பு பூதங்களாகப்

பரிணமிக்கும். தன் மாத்திரைகள் காரண நிலை, பூதங்கள் அவற்றின் விளங்கிய காரிய நிலையாகும்.

தன் மாத்திரைகள் ஒவ்வொன்றிலிருந்தும், ஒவ்வொரு பூதம் தோற்றம் பெறுகிறது. ஓசை என்னும் தன் மாத்திரை விண்ணாகவும், ஊறு காற்றாகவும், ஒளி நெருப்பாகவும், சுவை நீராகவும், நாற்றம் நிலமாகவும் உருப்பெறுகின்றன...[148] பஞ்சபூதங்கள் எனப்படும் இவ்வைந்து பூதங்களுக்கும் குணமும் தொழிலுண்டு. 'விண்ணின் குணம் பெருவெளியாய் இருத்தலாகும். அதன் தொழில் இடங்கொடுத்தலாகும். காற்றின் குணம் எங்கும் இயங்குவதாம். அதன் தொழிற் பரந்தவற்றைத் திரட்டுதலாம். தீயின் குணம் சுடுதலாகும். தொழில் ஒன்றுவித்தாலாகும். நீரின் குணம் இடைவிடாது விழுதலாகும். அதன் தொழில் பதம் செய்தலாம். மண்ணின் குணம் வலி தருவதற்கு ஏதுவாகிய கடினமாம். அதன் தொழில் எதனையும் தாங்குதலாகும்' . . .[149]

பூதங்களிலிருந்து விரிந்த செய்ற்பாடுகளே நாம் வாழும் உலகமும், அதன் கண் காணப்படும் எண்ணற்ற பொருட்களுமாகும். பிரகிருதி மாயையினின்று தோன்றிய காரியங்களே இவைகளாகும். இவற்றை,

**'சத்தாதி யைந்தடியோ அகப்பேய்**
**சாத்திர மானதடி**
**மித்தையுமாகுமடி அகப்பேய்**
**மெய்யது சொன்னேனே'....**[150]

என்று அகப்பேய்ச்சித்தர் குறிக்கிறார். மித்தை என்னும் சொல் - மாயை என்று பொருள்படும். ஆக பூதங்கள் ஐந்தும், புலன்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், அந்தக் கரணங்கள் நான்கும் சேர்ந்த இருபத்து நான்கு தத்துவங்கள் ஆன்ம தத்துவங்கள் ஆகும். 'ஆன்ம தத்துவம் என்பதில் ஆன்மா என்பது சகலர்களாகிய ஆன்மாக்களைக் குறிக்கும். பின்னர் அவ்வான்மாக்களுக்குத் தலைவராகிய சீகண்ட ருத்திரரைக் குறிக்கும். மூலப் பிரகிருதியிலிருந்து குணதத்துவம் முதலியவற்றைத் தோற்றி ஒடுக்குபவர் சீகண்ட ருத்திரராதல் பற்றி இவ்விருபத்து நான்கு தத்துவங்களும் ஆன்ம தத்துவம் எனப் பெயர் பெற்றன' ... [151] என்பது அருணை வடிவேலு முதலியார் அவர்களின் விளக்கமாகும். 'இவ்வாறன்றிச் சகல ஆன்மாக்களுக்குச் சிறப்பாக உரியனவாய் நிற்றல் பற்றி இத்தத்துவங்கள் ஆன்ம தத்துவம் எனப்பட்டன என்று கூறுதலும் அமையும்'. . . [152] என்பது ஆ.ஆனந்தராசன் அவர்களின் கருத்தாகும்.

சுத்த தத்துவங்கள் ஐந்தும், வித்தியா தத்துவங்கன் ஏழும், ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்குமாக, தத்துவங்களின் எண்ணிக்கை முப்பத்தாறு என சைவசித்தாந்தம் குறிக்கிறது.... .[153]

**'மூன்று வகைக் கிளையும் முப்பத்தறு வரையும் '**

எனப் பட்டினத்தாரும்

**'ஐயாறும் ஆறும் அகன்று வெறுவெளியில்'...**[154]

எனப் பத்திரகிரியாரும், சைவசித்தாந்தக் கருத்தினை உறுதிப்படுத்துகின்றனர்.

'மாயையிலிருந்து காலம், நியதி, கலை ஆகியனவும், கலையிலிருந்து வித்தை, அராகம், பிரகிருதி முதலியனவும், பிரகிருதியிலிருந்து புத்தியும், புத்தியினின்று அகங்காரமும் அகங்காரத்தினின்று மனம், ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள், தன் மாத்திரைகள் ஆகியனவும், தன் மாத்திரைகளினின்று மகா பூதங்களும் தோன்றுகின்றன என்று, பிற்காலத்தில் அவற்றைச் சைவ சித்தாந்திகள் பட்டியலிட்டுக் கொள்வதற்கான முன்னெடுப்புகள் அத்தனையும், திருமந்திரத்தில் புதைத்து கிடக்கின்றன'...[155] என்பது கரு. ஆறுமுகம் அவர்களின் கூற்றாகும். முத்தி நிலைக்கு முதலாகிய கருவிகள் முப்பத்தாறு தத்துவங்கள் என்றுரைக்கும் திருமூலர் அவை,

**'முப்பதும் ஆறும் படி முத்தி ஏணியாய்**
**ஒப்பிலா ஆனந்தத் துள்ளொளி புக்குச்**
**செப்ப அரிய சிவங்கண்டு தான் தெளிந்து**
**அப்பரிசாக அமர்ந்திருந்தாரே'** ...[156]

என்கிறார் இக்கருத்தினைச் சேக்கிழார் சுவாமிகளும்,

**'நாணனும் அன்பும் முன்பு நளிர் வரை ஏறத்தாமும்**
**பேணு தத்துவங்க ளென்னும் பெருகு சோ பானம் ஏறி**
**ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல ஐயர்**
**நீணிலை மலையை ஏறி நேர்படச் செல்லும் போதில்'...**[157]

என உறுதியுரைக்கிறார். 'முப்பத்தாறு தத்துவங்களைப் படிகளாகக் கொண்டு, கண்டு, கழித்து ஒப்பில்லா ஆனந்தத்து உள்ளொளியாகிய சிவத்தைக் காணுதல்' என்னும் கருத்து சித்தர் நெறியிலும், சைவ சித்தாந்தத்திலும் ஒன்றாகவே வெளிப்பட்டு நின்றமை உணரத்தக்கது.

சைவ சித்தாந்தம் உணர்த்தும் தளைகள் குறித்த மெய்யியல் முடிவுகளை நோக்குங்கால்அவை சித்தர் நெறியில் புதைந்து கிடப்பது தெளிவாகிறது. ஒரு பயணத்திற்குரிய பாதை எப்போதும் நேர்க்கோடாக அமைவதில்லை. குறுகியும்,

வளைந்தும், விரிந்தும், இடைவெளிகள் பல கொண்டும் அமையும். சித்தர்களின் மெய்யியல் சிந்தனைகளும், சைவ சித்தாந்த மெய்யியல் கோட்பாடுகளும், உயிர்களின் முத்தி நிலை என்னும் பயணத்திற்கான பாதைகளே ஆகும்.

## குறிப்புகள்

1. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம் –ப- 101, பா. எண். 107.
2. மேற்படி நூல், ப - 193, பா. எண்- 9
3. உமாபதி சிவாசாரியார் – போற்றிப் பஃறொடை – மு.நூல் – பாடல் எண். 62, திருவருட்பயன் – நூற்பா எண். 12
4. திருமந்திரம் - பா.எ ண் - 343
5. உமாபதி சிவாசாரியார் – சிவப்பிரகாசம் - பாடல் எண்- 32
6. திருமந்திரம் – பாடல் எண் - 1689.
7. திருமந்திரம் – பாடல் எண் 2236
8. அருணந்தி தேவ நாயனார் – இருபாவிருபது (திருவாவடுதுறை, ஆதீன வெளியீடு, 1952) ப.10, பாடல் எண். 4.
9. வாகீச முனிவர் – ஞானாமிர்தம் (திருப்பனந்தாள், ஸ்ரீ காசிமட வெளியீடு - 1988) ப.37, பா.எண்.18
10. உமாபதி சிவாசாரியார்– சிவப்பிரகாசம் - பா.எண்.25
11. திருமந்திரம் எண் – 2192
12. உமாபதி சிவாசாரியார்– சிவப்பிரகாசம் – பா.எண்.20
13. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – மு.நூல் – முதற்பாகம் – ப.32.
14. அறிவொளி. அ.– சித்தர் பாடல்கள்- மூலமும் உரையும், மு.நூல்– இரண்டாம் பாகம், ப.713, பா.எண்.8
15. சுந்தர மூர்த்தி சுவாமிகள் – தேவாரம் (திருவாடுதுறை – ஆதீனவெளியீடு – 1980), ப.182, பா.எண்.6
16. தாயுமானவர் பாடல்கள் - மெய்யப்பன் ச. பதிப்பாசிரியர் (சென்னை - மணிவாசகர் பதிப்பகம் - 1998) ப.289, பா.எண்.28.
17. அருள் நந்தி சிவாசாரியார்– சிவஞான சித்தியார் - பாடல் எண்.175.

18. திருவாசகம் – மு.நூல் – ப.19, 82.

19. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் – முதற்பாகம், ப-62, பா.எண்.2.

20. மேற்படி நூல் - இரண்டாம் பாகம் - ப.57, பா.எண்.69

21. உமாபதி சிவாசாரியார் – போற்றிப் பஃறொடை – பாடல் எண்.10

22. சிதம்பரம் மறைஞான சம்பந்த பண்டாரம் – பதி, பசு, பாசப் பனுவல் (திருவாடுதுறை - ஆதீனவெளியீடு - 1954) ப-93.

23. மாதவச் சிவஞான யோகிகள் – சிவஞான மாபாடியம்-சுப்பிரமணியன் ச.வே. -பதிப்பாசிரியர் (சென்னை - உலகத்தமிழ்க் கல்வி இயக்ககம் - 1986) ப-301.

24. உமாபதி சிவாசாரியார் – திருவருட்பயன் – பா.எண்.25.

25. மேற்படி நூல் – பா.எண்-23.

26. அருணந்தி சிவாசாரியார்– சிவஞான சித்தியார் – பா.எண்.175.

27. திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயானர் – திருக்களிற்றுப் படியார் - பாடல் எண்.93.

28. உமாபதி சிவாசாரியார்– சிவப்பிரகாசம் – பா.எண.88.

29. அருணந்தி தேவ நாயனார் – இருபாவிருபது – (திருவாடுதுறை – ஆதீன வெளியீடு - 1952) ப:49.

30. ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் - இரண்டாம் பாகம் - ப.8.

31. அறிவொளி அ.– சித்தர் பாடல்கள் - மூலமும் உரையும் - மு.நூல் – இரண்டாம் பாகம் , ப.708.

32. உமாபதி சிவாசாரியார் – திருவருட்பயன் – பா.எண்.26

33. அறிவொளி. அ. - சித்தர் பாடல்கள் - மூலமும் உரையும் - மு.நூல் – இரண்டாம்பாகம், பக்கங்கள் - 712, 627, 660, 649, 719.

34. ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் – துகளறு போதம் (திருவாவடுதுறை, ஆதீனவெளியீடு 1952) ப:கஉ – பாடல் எண்.26.

35. சுப்பிரமணியர் ஞானக்கோவை – (சென்னை - தாமரை நூலகம் – 1993) ப.20.

36. கோவேந்தன். த. பதிப்பாசிரியர் - சித்தர் பாடல்கள் (சென்னை – பூம்புகார் பதிப்பகம் – 1976) ப-98, பா.எண்.180.

37. குமரகுருபர சுவாமிகள் – கந்தர் கலி வெண்பா – (சென்னை - அன்னபூரணி பதிப்பகம் - 1988) ப.11.

38. ஸ்ரீ சாமிநாத தேசிகேந்திர சிவயோகியார் – ஸ்ரீ பகவத் கீதா நவநீத வசனம் (சென்னை - பி.நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ் - 1938) ப.206.

39. தமிழ் - தமிழ் அகராதி (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் – 2006) ப.333.

40. திருமந்திரம் – பாடல் எண் - 2547, 2557.

41. சிவப்பிரகாசம் – பாடல் எண் -19.

42. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – இரண்டாம் பாகம் - ப.210.

43. மாதவச் சிவஞான யோகிகள்– சித்தாந்தப் பிரகாசிகை (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு – 1963) ப 2.

44. திருமந்திரம் – எண்.143, 147.

45. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - முதற் பாகம் – ப.77.

46. மேற்படி நூல் - ப.62.

47. சிவஞான சித்தியார் – பாடல் எண்: 99.

48. கணியன் பூங்குன்றனார் - புறநானூற்றுப்பாடல் எண் -192.

49. பரிமேலழகர் – திருக்குறள் உரை - புலியூர்க்கேசிகன் - பதிப்பாசிரியர் (சென்னை - பூம்புகார் பதிப்பகம் – 2004) ப.174.

50. இளங்கோவடிகள் - சிலப்பதிகாரம் – மு.நூல் – ப: 58.

51. Ramachandran, T.N. – Pati – Pasu – Pasam – (Dharmapuram – International Institute of Saiva Siddantha Research – 1988) Pg.34.

52. வைத்திய நாதன் கு. – சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைகள் (திருவிடை மருதூர் – திருவாடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம் – 1995) பக்.16.

53. சிவப்பிரகாசம் – பாடல் எண் -28.

54. சிவஞான சித்தியார் – செ.எண் - 100.

55. அருணை வடிவேலு முதலியார் .சி – முப்பொருள் இயல்பு (சென்னை - சைவ சித்தாந்தப் பெரு மன்றம் – 2005) பக்.38, 39.

56. மேற்படி நூல் – ப.25.

57. சுப்பு ரெட்டியார் . ந – சைவ சமய விளக்கு (சென்னை - பாரி நிலையம் 1984) ப.193.

58. Krishnan .P. – Divine grace and human freedom. Paul Tillich and Saiva – Siddantha – (Chennai – University of Madras, 1993) pg.78.

59. உமாபதி சிவாசாரியார் - சிவப் பிரகாசம் – செ.எண் -28.

60. திருமந்திரம்-மு.நூல். - செ.எண் -2612,
சித்தர் பாடல்கள் - மு.நூல் - இரண்டாம் பாகம் - ப.186.

61. சைவ சமய விளக்கு. – மு.நூல் - ப.197

62. திருக்குறள் – எண்கள் - 282, 194, 319

63. சிவஞான சித்தியார் – மு.நூல் - பா. எண் - 129.

64. சேக்கிழார் - பெரியபுராணம் (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு 1988) ப:172.

65. மாணிக்கவாசகர், – திருவாசகம் - மு.நூல், ப:2.

66. திருமந்திரம் - மு.நூல் - செய்யுள் எண்கள் - 1647, 1657.

67. சித்தர் பாடல்கள் – மு.நூல் - முதற்பாகம் – ப.203.

68. அருணந்தி தேவநாயனார் - இருபாவிருபது - திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு 1952) ப.38.

69. ஞான சம்பந்தன் .அ.சா – திருவாசகம் - சில சிந்தனைகள் (சென்னை கங்கை புத்தக நிலையம் - 2001) பகுதி 5, பக்.114.

70. அ. அறிவொளி - சித்தர் பாடல்கள் - மூலமும் உரையும் - மு.நூல் - இரண்டாம் பாகம், ப.811.

71. அருணை வடிவேலு முதலியார் சி.– முப்பொருள் இயல்பு (சென்னை – சைவ சித்தாந்தப் பெரு மன்றம் – 2005) ப.33.

72. திருஞானசம்பந்தர் தேவாரம் - 2ம் திருமுறை - மு.நூல் - ப.754.

73. திருநாவுக்கரசர் தேவாரம் - 5ம் திருமுறை (சென்னை - தமிழ் நிலையம் 1995) பா.எண். 467.

74. சித்தர் பாடல்கள் – மு.நூல் – முதற்பாகம் - ப.258.

75. அறிவொளி .அ - சித்தர் பாடல்கள் – மு.நூல் - இரண்டாம் பாகம், ப.583.

76. திருவாசகம் - மு.நூல் - ப:1.

77. Devasenapathy. V.A. – Saiva Siddantha, As Empounded in the Sivajnana Siddhiyar and its six commentaries (Madras–University of Madras – 1974). Pg.114.

78. சிவப்பிரகாசம் - மு.நூல் - செய்யுள் எண்.29.

79. பதி பசு பாசப் பனுவல் - மு.நூல் - ப.94.

80. சிதம்பர நாத முனிவர் (உரை) – சிவப்பிரகாசம் - மூலமும் உரையும் (திருவாடுதுறை - ஆதீனவெளியீடு - 1953) ப.58.

81. மேற்படி நூல் – ப.57.

82. சுந்தரமூர்த்தி சுவாமிகள் – தேவாரம் - ஏழாம் திருமுறை (திருவாவடுதுறை ஆதீன வெளியீடு – 1980) ப.72.

83. சிவஞான சித்தியார் - மு.நூல் - செய்யுள் எண் – 112.

84. திருவருட்பயன் – பா.எண்: 53.

85. சித்தர் பாடல்கள் - முதற்பாகம் - மு.நூல் ப: 121.

86. மேற்படி நூல் - இரண்டாம் பாகம் - ப.209, 211.

87. சிவஞான சித்தியார் – மு.நூல் - செய்யுள் எண்.305.

88. மேற்படி நூல் - செ.எண்-307.

89. திருவாசகம் - மு.நூல் - ப.99.

90. அ. அறிவொளி – சித்தர் பாடல்கள்- மு.நூல் - முதற்பாகம்– ப.323.

91. மேற்படி நூல் - இரண்டாம் பாகம் - ப.820.

92. திருமந்திரம் – செ.எண் -2611.

93. இராதா கிருட்டினன் எஸ் - இந்து தருமமும் வாழ்க்கையும் - குமார கோமேதக வேலு - மொ. பெ (சென்னை - பழனியப்பா பிரதர்ஸ் - 1967) ப.121-122, 129-130.

94. Kalghatgi. T.G.- Determinism and Karma Theory – University of Madras – Indian Philosophical Annual 1968), Volume.4, pp.24,25.

95. ஜேம்ஸ் ஆலன் - விதியை வெல்லுதல் – என்.கே. வேலன் - மொ. பெ (சென்னை - கழக வெளியீடு 1969) ப.39-40.

96. மறைமலையடிகள் - திருவாசக விரிவுரை (சென்னை - பூம்புகார் பதிப்பகம் 2003) ப.71.

97. உமாபதி சிவாசாரியார் - சிவப் பிரகாசம் - மு.நூல் - பாடல் எண்.23.

98. ஆனந்தராசன் ஆ. - சிவஞான போத வழித்துணை விளக்கம் (திருநெல்வேலி அருள் நந்தி சிவம் புத்தக நிலையம் – 2007) ப.39.

99. மேற்படி நூல் - ப.73.

100. சித்தர் பாடல்கள் - மு.நூல் - இரண்டாம் பாகம் - ப.8.

101. சிவஞான சித்தியார் – மு.நூல் – பாடல் எண்.34.

102. உமாபதி சிவாசாரியர் - திருவருட்பயன் - மு.நூல் - செ.எண்-30.

103. உமாபதி சிவாசாரியர் - போற்றிப் பஃறொடை – மு.நூல் – கண்ணி எண்.11

104. ஆனந்தராசன். ஆ– சிவஞானபோதம் – வழித்துணை விளக்கம் – மு.நூல் – ப:6.

105. திருமந்திரம் –செ.எண் – 2421.

106. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – மு.நூல்– முதற்பாகம் – ப.76, 94, 126, 229.

107. திருவாசகம் - மு.நூல் - ப.101.

108. திருநாவுக்கரசு சுவாமிகள் - நான்காம் திருமுறை - மு.நூல்– ப.286

109. ஔவையார் - விநாயகரகவல் - மு.நூல் – அடிஎண்-16.

110. ஆனந்தராசன் .ஆ- சிவஞான போதம் வழித்துணை விளக்கம் - மு.நூல் – ப.5.

111. சி.சு.மணி – (உரை) சிவஞான சித்தியார் பரபக்கமும் சுபக்கமும் (திருநெல்வேலி அருள் நந்தி சிவம் அருட்பணி மன்றம் - 1997) ப.211.

112. கச்சியப்ப முனிவர் - தணிகைப் புராணம் (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு 1960) ப.186.

113. சித்தர் பாடல்கள் - மு.நூல் - இரண்டாம் பாகம், ப.37.

114. சிவஞான சித்தியார் – பா.எண்.32.

115. இருபா இருபது – மு.நூல் – ப.9.

116. சி.சு.மணி - உரை – மெய்கண்ட நூல்களுள் ஏழு (திருநெல்வேலி - அருள் நந்தி சிவம் அருட்பணி மன்றம் - 1987) ப.11.

117. மறைமலையடிகள் - திருவாசக விரிவுரை -மு.நூல் - ப.292.

118. அறிவொளி .அ- சித்தர் பாடல்கள் – மூலமும் உரையும் - மு.நூல்-ப.எண்கள் 678, 1084, 972, 1031, 136
சித்தர் பாடல்கள் – மு.நூல் – ப.258.

119. அறிவொளி .அ- சித்தர் பாடல்கள் – மூலமும் உரையும் - மு.நூல்- முதற்பாகம் – ப.408.

120. அறிவொளி .அ- சித்தர் பாடல்கள் – மூலமும் உரையும் - மு.நூல்- இரண்டாம்பாகம்– ப.1044.

121. திருமந்திரம் – பா எண்-492.

122. மேற்படி நூல் – பா.எண்-1045

123. சிவஞான சித்தியார் - மு.நூல். – பா.எண்.39.

124. திருமந்திரம் – பா.எண் - 2268

125. சிவஞான சித்தியார் – மு.நூல். – பா.எண்.44.

126. அறிவொளி .அ– சித்தர் பாடல்கள் - மு.நூல் – இரண்டாம்பாகம் – ப.எண்.1041, 1078.

127. வைத்திய நாதன் கு. – சைவசித்தாந்தக் குறியீட்டுச் சொல்லகராதி (திருவிடைமருதூர் - ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம் – 1995) ப.எண்.68.

128. திருவதிகை மனவாசகங் கடந்தார் - உண்மை விளக்கம் - செ.21.

129. திருமந்திரம் - மு.நூல் – செ.எண்.2267.

130. ஆறுமுகநாவலர் - சைவ சமய வினாவிடை (சென்னை - முல்லை நிலையம் - 2002) ப.38.

131. கோமதி சூரியமூர்த்தி - சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள் விளக்கம் (சென்னை - சைவ சித்தாந்தப் பெருமன்றம் - 2005) ப.85.

132. சிவஞான சித்தியார் – செய்யுள் எண்கள்: 144, 145, 146.

133. அ. அறிவொளி - சித்தர் பாடல்கள் – மு.நூல் – முதற்பாகம் – ப:321.

134. திருமந்திரம், – செ. எண்கள் : 2168 , 2143, 2190, 2191.

135. அருணை வடிவேலு முதலியார் சி. – சித்தாந்த வினா விடை (மயிலாடு துறை - தருமையாதீன வெளியீடு - 1975) ப.308.

136. ஆனந்தராசன் ஆ – (உரை) உண்மை விளக்கம் (திருநெல்வேலி - அருள் நந்தி சிவம் அருட்பணி மன்றம் - 1996) ப.19.

137. சுப்பு ரெட்டியார் ந. – சைவ சித்தாந்தம் - ஓர் அறிமுகம் (சென்னை கழக வெளியீடு - 2001) ப.231.

138. அருணை வடிவேல் முதலியார் சி. – சித்தாந்த வினா விடை - முந்நூல் - ப.292.

139. உண்மை விளக்கம் – மு.நூல் - செ.எண்.16.

140. அறிவொளி அ. – சித்தர் பாடல்கள் - மு.நூல் - முதற்பாகம் - ப.371, இரண்டாம் பாகம் : 717, 1076.

141. சிவஞான சித்தியார் – பா.எண் -150.

142. உண்மை விளக்கம் – மு.நூல்.- செ.எண். 12, 13. சிவஞான சித்தியார் - செ.எண்– 151.

143. அறிவொளி .அ - சித்தர் பாடல்கள் - மு.நூல் - இரண்டாம் பாகம் -ப.738, 1076 .

144. பரிமேலழகர் (உரை) - திருக்குறள் (சென்னை - பூம்புகார் பதிப்பகம் – 1991), ப.23.

145. சிவஞான சித்தியார் – மு.நூல் – செ.எண்.152.

146. அறிவெளி .அ – சித்தர் பாடல்கள் – இரண்டாம் பாகம் – சித்தர் பாடல்கள் – மு.நூல் – ப.576.

147. சுந்தரமூர்த்தி .கு – (உரை) சிவஞான சித்தியார் (திருநெல்வேலி - அருள் நந்தி சிவம் அருட்பணி மன்றம் – 1989) ப.84.

148. சிவஞான சித்தியார் – மு.நூல் – செய்யுள் எண்-155.

149. மேற்படி நூல் – செ.எண்-156.

150. அறிவொளி .அ – சித்தர் பாடல்கள் – மு.நூல் - இரண்டாம் பாகம் – ப.1041.

151. அருணை வடிவேலு முதலியார் சி. – சித்தார்ந்த வினா - விடை முந்நூல் - ப.308.

152. ஆனந்தராசன் ஆ – (உரை) உண்மைவிளக்கம் – மு.நூல் – ப.30.

153. சிவஞான சித்தியார் – செ.எண்.159.

154. ஞானக்கோவை என வழங்கும் – சித்தர் பாடல்கள் – முந்நூல் - முதற்பாகம் ப.68, 109.

155. ஆறுமுகம் கரு - திருமூலரின் மெய்யியலும் சமயமும் - முனைவர் பட்ட ஆய்வேடு (சென்னைப் பல்கலைக் கழகம் 1999) ப.109.

156. திருமந்திரம் - மு.நூல் – செ. எண்.126.

157. சேக்கிழார் – பெரிய புராணம் (திருவாவடுதுறை – ஆதீன வெளியீடு – 1988) ப.94.

# முத்தி நெறி

**வாழ்வியற் பண்புகள்**

முத்திப்பேறு பெற முதல்படி, முறையான உயர்ந்த வாழ்வியல் நெறிகளுடன் இயைந்து நடத்தப்படும் உலக வாழ்வேயாகும். தமிழ் இலக்கிய வானில், வாழ்க்கை அகராதி, வாழ்வுப்பெருநூல் என்று போற்றப்பட்டு, நூற்றாண்டுகள் பல கடந்தும் நிலைத்து, திருக்குறள் ஒளி வீசி வருவதன் காரணம் அது, இனம், மொழி, நாடு, காலம் ஆகிய எல்லைகளைக் கடந்து தனி மனிதனின் முறையான நல்வாழ்விற்கு வழி காட்டி வருதலாலேயாகும். அதைப் போன்று சித்தர்களின் கோட்பாடுகளும் சைவ சித்தாந்தக் கொள்கைகளும் , மனித வாழ்வு மேம்பாடு அடைதலையே மையமாகக்கொண்டவை. எனவே நூற்றாண்டுகள் பல கடந்தும் கருத்திற் கொள்ளக் கூடியனவாய் விளங்குகின்றன.

சித்தர் நெறியிலும், சைவ சித்தாந்த மெய்யியலிலும் அறிவுறுத்தப்படும் 'சிவ மகாமந்திரமான 'சிவாயநம' என்னும் திருவைந்தெழுத்து மந்திரம் மெய்யறிவு மெய்யுணர்வு (Philosophico & Mystical) தொடர்பானது மட்டுமன்று. சமுதாயம், தனி மனித வாழ்வு தொடர்பானதுமாகும். 'நம' என்பதற்கு ஈகம் (தியாகம்) என்றும், 'சிவ' என்பதற்குக் களிப்பு (ஆனந்தம்) என்றும், ''அய'' என்பதற்கு விளைவு என்றும் பொருள் கொள்ளப்படுகிறது.'[1] இங்ஙனம் நமசிவாய என்னும் சொல்லுக்கு, ஈகத்தின் விளைவு களிப்பு எனப் பொருளாகிறது.

ஈகத்தின் முதற்படி, பிற உயிர்களிடத்தே செலுத்தக்கூடிய அன்பு ஆகும். அவ்வன்பில் இறைவன் உறைகின்றான் என்பதும், அவ்வன்பினால் தான் இறைவனை அறிய இயலும் என்பதும் திருமந்திர மொழிகளாகும்.[2]

**'ஈரமும் அன்பும் கொண்டின்னருள் பெற்றேன்'...**[3]

என்பது வடலூர்ச் சித்தர் வாக்கு. இக்கருத்துக்களை,

**'அன்பே உடைய அரனே'...**[4]

என்று சைவத் தோத்திர நூலும்,

**'ஈசனுக்கு அன்பு இல்லார் அடியவர்க்கு அன்பு இல்லார்**
**எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்பு இல்லார்'..** [5]

என்று சைவச் சாத்திர நூலும் உறுதிப்படுத்துகின்றன. அன்பைச் செயலில் காட்டும் விதமாகவே அமைகிறது,

**''யாவர்க்கு மாம் இறைவற்கொரு பச்சிலை**
**யாவர்க்கு மாம் பசு வுக்கொரு வாயுறை**
**யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி**
**யாவர்க்குமாம் பிறர்க் கின்னுரை தானே' ..** [6]

என்னும் பத்தாம் திருமுறைப்பாடல். இப்பாடலில் முதல் அடி இறைவனை அன்பு செய்தல். இரண்டாம் அடி ஆறறிவற்ற உயிர்களை அன்பு செய்தல், மூன்றாம் அடி இட்டுண்டிருத்தல், இவை எதுவும்இயலாத நிலையில் நான்காம் அடி பிறர்க்கு இன்னுரை வழங்குதல், இங்ஙனம் அன்பின் படி நிலைகளை அழகுற விளக்கி அமைகிறது சைவ சித்தாந்தம்.

அன்பின் வழி தோன்றும் உயரிய பண்பே ஈகை என்பதாகும். ஈகையே அறம் என,

**அறம் எனப்படுவது யாது எனக்கேட்பின்**
**மறவாது இது கேள் மன்னுயிர்க்கு எல்லாம்**
**உண்டியும் உடையும் உறையுளும் அல்லது**
**கண்டது இல், ...** [7]

என்றுரைக்கிறது மணிமேகலை. இவ்வுலக வாழ்வும், அதில் தான் பெற்றுள்ள செல்வங்கள் அனைத்தும் நிலையானவை அல்ல என்ற உண்மையை மனிதன் உணரும்போது, மனித நேயம் மலர்கிறது. ஈகைப்பண்பு ஓங்குகிறது. சித்தர்கள் தம் பாடல்களில் நிலையாமையை அறிவுறுத்தி ஈகைப்பண்பை வலியுறுத்தினர்.

**'நீர் மேற் குமிழியிக் காயம் – இது**
**நில்லாது போய்விடும் நீயறி ' ..** [8]

என்னும் கடு வெளிச் சித்தரின் பாடலும்,

**'செங்கோல் செலுத்திய செல்வமும் ஓர் காலம்**
**தங்காது அழியுமடி' ..** [9]

என்னும் குதம்பைச் சித்தரின் பாடலும் நிலையாமையை விளக்கின.

**'ஏழை பனாதிக ளில்லை யென்றாலவர்க்**
**கிருந்தா லன்னங் கொடுக்க வேண்டும்**
**நாளையென்று சொல்லலாகாதே' ..** [10]

என்னும் கொங்கண நாயனாரின் கூற்றும்,

**'தர்ம நெறி முறை தன்னில் நீ கூடு' ...** [11]

என்னும் கல்லுளிச்சித்தரின் கவிதையும் ஈகைப்பண்பினை வலியுறுத்தின.

வாழ்வியற் பண்புகளில் வெகுளாமையும் ஒன்று. இதன் இன்றியமையாமை கருதியே வள்ளுவர் அறத்துப்பாலில் வெகுளாமையை அமைத்தார் போலும். சினத்தை பாம்பாக ஒப்புமைப்படுத்திய இடைக்காட்டுச் சித்தர்,

**'சினமென்னும் பாம்பு இறந்தால், தாண்டவக்கோனே யாவுஞ்**
**சித்தியென்றே நினையேடா தாண்டவக்கோனே'...** [12]

என சினம் நீங்கிய நிலையே, சித்தியடையக்கூடிய நிலை என்றுரைக்கின்றார்.

**'உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்**
**உள்ளான் வெகுளி எனின்'** [13]

என்னும் குறள் வழி. இடைக்காடரின் கருத்தைத் தமிழ் மறையும் தெளிவு படுத்துகிறது.

**'சினமுதல் அகற்றி வாழும் செயல் அறமானால்' ..** [14]

என்னும் அருள் நந்தி சிவாசாரியாரின் வாக்கு, சித்தர்களின் கருத்தை எதிரொலிப்பதாகவே அமைகிறது.

புலன்களால் பெறுகின்ற இன்பத்தை நிலையானதென எண்ணி, மனிதன் செய்யும் ஒழுக்கக்கேடுகளுள் பிறன்மனை நயத்தலும் ஒன்று. இச்செயல் தனி மனிதனின் குடும்ப அமைதியையும் சமுதாய ஒழுங்கையும் சீர்குலைக்கும். இறைவனின் அருளையும், பல்வேறு சிறப்புகளையும், ஆற்றலையும் ஒருங்கே பெற்றிருந்தும், இராவணன் பிறன் மனை நயந்தமையால் தானும் தன் சுற்றமும் அழிந்து பட்டமையை இராமாயணம் வழி அறிகிறோம்.

**'கற்பு மங்கையர் மேல் மனம் வையாதே**
**தன் வீடிருக்க அசல் வீடு போகாதே' ..** [15]

என்பது பிறர் மனை நயத்தலைக் கண்டித்த சித்தர்களின் மொழியாகும். பிறன் மனை நயவாமையைப் பத்தாம் திருமுறையும் அறிவுறுத்துகிறது. .[16]

நன்னெறிகளைக் கடைப்பிடித்து வாழும் வாழ்வு, நல்லொழுக்கத்துடன் கூடிய நல்வாழ்வாகிறது. பொய், களவு , கொலை, பொறாமை, கொடுஞ்சொல், வன்கோள், காமம் ஆகியன மனித வாழ்வைச் சீர்குலைத்து அழித்து விடும். இவற்றை விடுத்து, மெய்யான அன்பையும், பத்தியையும் கைக்கொண்டு வாழ வேண்டும் இவ்வகையில்

வாழ்வு சிறக்கும் என்று உயர்ந்த வாழ்வியல் நெறிகளைச் சமுதாயத்தின் முன் வைத்தனர் சித்தர்கள்.

**'கள்ளம் கள் காமம் கொலைகள் கபடங்கள்**
**பள்ளத்தில் தள்ளுமடி குதம்பாய் . . . . .**
**. . .கோபம்,பொறாமை, கொடுஞ்சொல், வன்கோள் இவை**
**பாபத்துக்கு ஏதுவடி குதம்பாய்'..** [17]

என்ற குதம்பைச் சித்தரின் கூற்றும்,

**'பொல்லாக் கொலையும், புலை அவா விட்டு உன்றன்**
**வல்ல பதம் காண...**
**. . . வஞ்சகம், பொய், சூது, கொலை மாரனார் மயக்கமெனும்**
**சஞ்சலத்தை நீங்கி'...** [18]

என்னும் ஞானச் சித்தரின் ஞான மொழியும்,

**'கொலை களவு நீக்கி விட வேணும் - உலகில்**
**கொடியோன் எனும் பேரைப் போக்கிட வேணும்**
**புலைகளைத் தொலைத்து விட வேணும்'. ..** [19]

என்னும் கல்லுளிச் சித்தரின் கவிதையும்,

**'கூடிய பொய்களைச் சொல்லாதே - பொல்லாக்**
**கொலை களவுகள் செய்யாதே'**
**யார்க்கும் வஞ்சனை செய்ய நினையாதே' ..** [20]

என்னும் கொங்கணச் சித்தரின் உரையும், இங்கு ஒப்பு நோக்கத் தக்கவையாகும்.

சித்தர்கள் அறிவுறுத்திய வாழ்வியற் பண்புகளைச் சைவ சித்தாந்தமும் ஒருங்கே வலியுறுத்துகிறது. பத்தாம் திருமுறையின் முதல் தந்திரம் முழுமையும் வாழ்வியல் அறநெறிகளைக் கொண்ட உபதேசப் பகுதியாகவே அமைகிறது. யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, உயிர் நிலையாமை, கொல்லாமை, புலான் மறுத்தல், பிறர்மனை நயவாமை, நல்குரவு, வானச்சிறப்பு, தானச்சிறப்பு அன்புடைமை, நடுவுநிலைமை, கள்ளுண்ணாமை ஆகிய தலைப்புகள், திருக்குறள் உள்ளிட்ட நீதி நூல்களை ஒத்திருந்தபோதும், கருத்துக்களில் இறைவனை முன்னிறுத்தி, ஆன்மீக முத்திரை பதிக்கப்படுகிறது. இங்ஙனம் அறிவுறுத்திய பின், பின்பற்றப்பட வேண்டிய வழி எது என்பதை,

**‘கொலையே களவு கட் காமம் பொய் கூறல்**
**மலைவான பாதக மாம் அவை நீக்கித்**
**தலையாஞ் சிவனடி சார்ந்தின்பஞ் சார்ந்தோர்க்**
**கிலையாம் இவை ஞானா னந்தத் திருத்தலே’** [21]

என்ற பாடலின் வழி திருமந்திரம் முன் வைக்கிறது. அங்ஙனம் பின்பற்றினால் பெறுகின்ற பேற்றினையும் விளக்குகிறது.

இறைவன் சூடும் மலர்கள் எட்டு என்றுரைக்கிறது. சைவத் தோத்திர நூல்.

**‘எட்டு கொலாமவர் சூடு மினமலர் ’ ..** [22]

என்பது அப்பர் அடிகளாரின் அருள் வாக்கு மேலும்,

**‘எட்டு நாண் மலர் கொண்டவன் சேவடி**
**மட்டலர் இடுவார் வினை மாயுமால் ...** [23]

என்கிறார் ‘சிவபெருமானை (அக மலராகிய) எட்டு புட்பங்கள் எனப்படும். கொல்லாமை, அருள், ஐம்பொறி அடக்கல், பொறை, தவம், வாய்மை, அன்பு, அறிவு ஆகியன கொண்டு தியானித்து ஏத்தியும்; தேன் துளிர்க்கும் எட்டு புட்பங்களாகிய (புற மலர்) புன்னை, வெள்ளெருக்கு, செண்பகம், நந்தியாவர்த்தம், நீலோத்பவம் (குவளை) பாதிரி, அலரி, செந்தாமரை ஆகியன கொண்டு அருச்சித்தும்’..[24] என்பது உரையாசிரியர் மேற்கண்ட அடிகளுக்கு அளிக்கும் விளக்கமாகும். சித்தர்களும் , சைவத் தோத்திர நூல்களும் முன் மொழிந்ததை,

**‘ஒழுக்கம்,அன்பு, அருள் ஆசாரம், உபசாரம், உறவு, சீலம்**
**வழுக்கு இலாத் தவம், தானங்கள், வந்தித்தல், வணங்கல், வாய்மை**
**அழுக்கு இலாத்துறவு அடக்கம், அறிவொடு அர்ச்சித்தல் ஆதி**
**இழுக்கு இலா அறங்களானால், இரங்குவான் பணி அறங்கள்’....** [25]

என சைவச் சாத்திர நூல் வழி மொழிவது இவண் ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

**சமூக நல நோக்கு**

சித்தர்கள் துறவிகள். துறவு என்னும் சொல்லுக்கு, ‘பற்றினை விடுதல்’ என்பதே பொய்யாமொழி தரும் விளக்கமாகும்...[26] அங்ஙனமே உலகப் பற்றினைத் துறந்தவர்களாகவே சித்தர்கள் விளங்கின ர். எனினும் அவர்கள் உலகத்தை, மனித சமுதாயத்தைத் துறந்தவர்களல்லர். ‘துறவி மற்ற உயிர்களின் நலனுக்குப் பாடுபடல் வேண்டும். பற்றற்ற போதிலும்’..[27] என்னும் சந்நியாச உபநிடதக் கூற்றுப்படி தனி மனித

வாழ்வும், அதன் வழி சமுதாயமும், மேனிலையுற வேண்டும் என சித்தர்கள் அவாவியமையும் அதற்காகப் பாடுபட்டமையும், அவர்களது பாடல்கள் வழி புலப்படுகின்றன.

சமுதாயம் பிளவுற்று நிற்பதன் முதன்மையான காரணம், சமய சாதிப்பாகுபாடுகளே. இவற்றைத் தீர்க்க அரசாங்கம் பல சட்டங்களை இயற்றி நடைமுறைப் படுத்தியும், இன்னும் இவை சமுதாயத்தில் புரையோடிப்போன புண்களாகவே எஞ்சியிருக்கின்றன. சித்தர்களும், சைவ சித்தாந்திகளும் சட்டத்தை முன்னிறுத்தி சாதி, சமயப்பிரிவுகளைக் களைய முயலவில்லை. இறைவனை முன்னிறுத்தியே அவற்றை அகற்ற முனைந்தனர்.

பெரியாழ்வார், இருடிகேசனை வணங்கும் இறையடியார்களைத் 'தொண்டக் குலத்தில் உள்ளீர்' எனக் கூறி. குல வேறுபாடுகளைத் தவிர்த்து பல்லாண்டு பாட வாருங்கள்' என்று அழைக்கிறார்..[28] பெரியாழ்வாரின் நோக்கில், திருமாலை வழிபடுபவர்கள் அனைவரும் ஒரே குலம், தொண்டர் கூட்டம். அவர்கள் எந்த சாதியைச் சேர்ந்தோராயினும் சரி, என்னும் கருத்து வெளிப்படுகிறது. 'இலிங்கம் அணிந்து சைவ நெறிப்பட்டோர் எவராயினும் அவர்களது சாதி ஏற்றத்தாழ்வுகளை கருத்திற் கொள்ளாது அவர்கள் 'லிங்காயதர்' என்னும் ஒரே குலத்தைச் சார்ந்தவர்களாக ஆகின்றனர்' என்பது பசவர்களின் கருத்து. ..[29]

**'.. அங்கமெலாங் குறைந்தழுகு தொழு நோயராய்**
**ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்**
**கங்கை வார் சடைக்கரந்தார்க் கன்பராகில்**
**அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே' ..**[30]

என்னும் அப்பர் அடிகளாரின் அமுதவாக்கு, இவண் நினைவிற் கொள்ள வேண்டியதொன்றாகும். இவர்கள் அனைவரும், தாம் வணங்கும் கடவுளை ஏற்றுக்கொண்டவர்களை, ஒரே குலம் என்றுரைத்தனர்.

சித்தர்களின் பொதுமைக்கருத்து மேன்மேலும் பரந்து பட்டது. எந்தக் கடவுளை ஏற்றுக்கொண்டவராயினும், கடவுளை மறுக்கும் நாத்திகக் கூட்டத்தாராயினும், எந்த மொழியினராயினும், எந்நாட்டவராயினும், எவ்வினத்தவராயினும் மனித குலம் அனைத்தும் ஒன்றே. உயிர்கள் எனப்படும் சீவக்கூட்டம் என்ற அடிப்படையில் அவை ஒன்றே.

**'சாதி ஒன்றில்லை சமயம் ஒன்றில்லை என்று**
**ஓதி உணர்ந்தறிவாய் குதம்பாய் . . . '**
**. . . ஆண்சாதி பெண் சாதி யாகும் இரு சாதி**
**வீண் சாதி மற்றவெல்லாம்'...**[31]

என்னும் குதம்பைச் சித்தரின் பாடலும்,

**'காணப்பா சாதி குலம் எங்கட்கு இல்லை**
**... தோணாமற் சாமி பேதங்**
**சொல்லுவான் சுருக்கமாய் சுருண்டு போவான்**
**... பிரமத்தில் ஆதிகாலம்**
**வீரமுடன் பிறந்ததடா உயிர்களெல்லாம்'...** [32]

என்னும் காக புசுண்டரின் கவிதையும்,உயிர்கள் அனைத்தும் ஒன்றே என்னும் கருத்தினை அறிவுறுத்துகின்றன. 'ஜீவர்களெல்லாம் ஒரு தன்மையாகிய கடவுள் இயற்கை உண்மை ஏகதேசங்களாகி, கடவுளருட்சத்தியால் பூத காரிய தேகங்களில் வருவிக்கப்பட்டபடியால் இந்த ஜீவர்களெல்லாம் ஒருரிமை இனத்தவர்களேயாகும்.[33] என்பது வள்ளலாரின் கருத்து.

சமயங்கள், சமுதாயத்தில் கடவுளைப் பற்றி அளித்த விளக்கங்களில், மூட நம்பிக்கைகள் மண்டியிருந்தன. பாரெங்கும் பரம்பொருள், பரவியிருக்கும் பொதுவான அடிப்படை உண்மையை மக்கள் அறியவில்லை. இறைவன் சில குறிப்பிட்ட தலங்களிலும், ஆலயங்களிலும் மட்டுமே உறைவதாகவும், இத்தலங்களுக்குச் செல்வதன் மூலம் முத்திப்பேறு கிட்டும் என்னும் அளவில் மக்களிடையே மூட நம்பிக்கைகள் புரையோடியிருந்தன. இத்தகைய நம்பிக்கைகள் தவறானவை என்பதைச் சித்தர்கள் தம் பாடல்களில் சுட்டிக்காட்டினர்.

**'நாட்டிலே தெய்வமென்று நடந்தலையாம லுன்றன்**
**கூட்டினில் நாகை நாதர் குறிப்பறிந்துணர்வாய் நெஞ்சே'**[34]

என்பது கணபதி தாசரின் நெஞ்சறி விளக்கப்பாடல்.

**'காசிக்கோடில் வினை போமோ'**[35]

என்னும் கடுவெளிச் சித்தரின் வினாவும், மக்களின் மூட நம்பிக்கையைத் தகர்க்கும் பொருட்டே எழுந்ததாகும்.

வேதங்களைக் கற்றலும், அவற்றை மனனம்செய்து தினமும் ஓதுதலும், மந்திரங்கள் சொல்லுதலும், சமயங்களால் வரையறுக்கப்பட்ட நோன்புகளையும்,

வேள்விகளையும் மேற்கொள்ளுதலும் இறைவனை உணரும் வழிகளாகும் என்பதும் சமயங்கள் வளர்த்த நம்பிக்கைகளே. மனதில் இறை உணர்வின்றி, அன்பு வழித் தோன்றும் பத்தி உணர்வின்றி, செய்யப்படும் மேற்கண்ட செயல்கள் அனைத்தும் வெற்றுச் செயல்களேயன்றி இறை வழிபாடு அல்ல என்பது சித்தர்களின் கருத்து.

**'நூறு கோடி ஆகமங்கள் நூறு கோடி மந்திரம்**
**நூறு கோடி நாள் இருந்தும் ஓதினால் அது என் பயன்'....**
**....'சாம நாலு வேதமும் சகல சாத்திரங்களும்**
**சேமமாக ஓதிலும் சிவனை நீர் அறிகிலீர்'...** [36]

என சிவவாக்கியர் உறுதிபட உரைக்கிறார்.

இறைவழிபாட்டின் ஓர் அங்கமாக புண்ணிய நதிகள் என்று கருதப்படும் நீர்த்துறைகளிலும், ஆலயங்களில் அமைந்துள்ள நீர் நிலைகளிலும் மூழ்குவதாலும், சில நீர்ச் சடங்குகள் செய்வதாலும் இறை அருளைப் பெற்று விடலாம் என்றொரு மூட நம்பிக்கை சமுதாயத்தில் மலிந்திருந்தது.

**''நீரிலே பிறந்திருந்து நீர் சடங்கு செய்கிறீர்....**
**.....நீரையள்ளி நீரில் விட்டு நீ நினைத்த காரியம்**
**ஆரையுன்னி நீரெலாம் அவத்திலே இறைக்கிறீர்.** [37]

என்னும் சிவவாக்கிய வரிகள் நீர்ச்சடங்குகள் வெற்றுச் சடங்குகளே என்னும் கருத்தினை வலியுறுத்துகின்றன.

ஆன்மீகத்தின் பெயரால் மூட நம்பிக்கைகள் வளர்தலைச் சித்தர்கள் கடுமையாகச் சாடினார். இவை சமயங்களால் உருவாக்கப்பட்டவையேயன்றி, உண்மையான இறை வழிபாட்டு முறைகளல்ல என்பது அவர்களது கருத்து. இக்கருத்து.

**'கங்கை ஆடில் என் காவிரி ஆடில் என் . . .**
**பட்டர் ஆகில் என் சாத்திரம் கேட்கில் என்....**
**....காலை சென்று கலந்து நீர் முழ்கில் என்**
**வேலை தோறும் விதி வழி நிற்கில் என்....**
**....கான நாடு கலந்து திரியில் என்..**
**....நன்று நோற்கில் என்பட்டினியாகில் என்**
**குன்றம் ஏறி இருந்தவம் செய்யில் என்**
**... எங்கும் ஈசன் என்னாதவர்க் கில்லையே'** [38]

என்னும்திருநாவுக்கரசு சுவாமிகளின் திருவாக்கில் ஒளிர்வதைக் காண முடிகிறது.

வாழ்வியல் நன்னெறிகளுடன் கூடிய முறையான நல்வாழ்வும், சமுதாய ஒற்றுமையும், அமைதியும், மனித மனத்துள் இறை உணர்வினைத் துளிர் விடச்செய்யும் தூண்டு கோல்களாக அமைவன. இந்நிலையில் இறைவன் மீது அன்பு வழித் தோன்றும் இறைபத்தி மலர்கிறது.

**பத்தி : இறையுணர்வு**

ஒரு பொருளின் மீது அன்பு என்கின்ற உணர்வு வழித் தோன்றும் பிடிப்பு, நாட்டம், பற்று இவையே பத்தியாக மலர்கிறது. மொழியின் மீது நாம் கொள்கின்ற விருப்பமும், பற்றும், பிடிப்பும் மொழிப்பற்று ஆவது போலத் தாய் நாட்டின் மீது கொள்கின்ற பிடிப்பும், நாட்டமும் நாட்டுப்பற்று ஆவது போல, நாம் சார்ந்திருக்கும் சமயக் கொள்கைகளின் மீது கொள்கின்ற பிடிப்பு, சமயப்பற்று ஆவது போல, இறைவன் மீது நாம் கொள்கின்ற நாட்டமும், பிடிப்பும் இறையுணர்வாக, பத்தியுணர்வாக உருவெடுக்கிறது. இறையுணர்வென்பது இறைவனிடம் முழு நம்பிக்கை கொண்டு, பற்றுக் கொண்டு, நம்மை முழுமையாக இறைவனிடம் ஒப்படைத்தலாகும்.

மிகப் பழங்காலத்தில் மனிதன் தான் செய்ய நினைத்ததைத் தன்னால் செய்ய இயலாமற் போன போதும், எதிர்பாராத நிகழ்வுகள் நிகழ்ந்த போதும், தன்னை விட ஆற்றல் அதிகம் வாய்ந்த ஏதோ ஒரு பொருள் இருக்க வேண்டுமென நம்பி, அவ்வாற்றலை, அச்சம் காரணமாகவே பணிந்து வழிபடத் துவங்கினான். எனவே இறையுணர்வு தோன்ற முதற்காரணமாயிருந்தது மனிதன் கொண்ட அச்சவுணர்வே ஆகும். இந்நிலை பல நூற்றாண்டுகள் கழிந்த பின்னரும் முழுமையாக மாறிவிடவில்லை. தான் செய்யும் காரியம் இடையூறின்றி நடைபெற வேண்டும் என்னும் அச்சமும், துயர நிகழ்வுகள், விரும்பத்தகாத செயல்கள் தவிர்க்கப்பட வேண்டும் என்ற உந்துதலும், நிலையற்ற உலக இன்பங்கள் மீது கொள்கின்ற நாட்டமும், தன்னல உணர்வுமே இறைபத்திக்குப் பெரும்பான்மையாகக் காரணங்களாகின்றன. இந்நிலையைத் திருநாவுக்கரசர்,

> **‘அஞ்சியாகிலும் அன்பு பட்டாகிலும்**
> **நெஞ்சம் வாழி நினை நின்றி’**[39]

என்றுரைக்கின்றார். மனிதனின் அறிவு மிகவும் வளர்ந்து விட்டநிலையிலும், அச்சவுணர்வு காரணமாக பத்தி செலுத்துவது விரும்பத் தக்கது அல்ல. இந்நிலையில் தோன்றும் உணர்வு நீடித்திருப்பதில்லை. மனிதனுடைய தேவைகள் நிறைவேறியதும் இவ்வுணர்வும் மறைந்து விடும். இத்தகைய உணர்வு பத்தியோ, இறையுணர்வோ ஆகாது.

அன்பு என்னும் உணர்வு வழி விளையும் இறை பத்தியே சாலச் சிறந்தது. இறை உணர்வு என்பது உணர்வுபூர்வமாக அனுபவித்தறியும் ஒன்றாகும். பன்னிரு திருமுறைகளை இயற்றிய நாயன்மார்களும், நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தை நல்கிய ஆழ்வார்களும், மற்றும் இறையடியார்களும் அன்பு நெறியில் நின்று இறைவனை அனுபவித்து அறிந்தவர்கள். சைவச் சாத்திர நூல்களை வழங்கிய அருளாளர்களும், சமய எல்லைகளைக் கடந்து நின்ற சித்தர்களும், இறைவனை அன்பு வழி அறிந்து அனுபவித்தவர்கள். இவ் வகையினருக்கு இறை உணர்வும், இறை அனுபவமும் அன்பு வழி நிகழ்கின்றன. ஆகவே, இந்நிலை நீடித்திருப்பது; நிலை பேறுடையது. இவ்வயைான நிலையான இறையுணர்வு மேலோங்கும் போது, தான் என்னும் தன்முனைப்பு சிறிது சிறிதாகக் கரைந்து, இறைவன் என்னும் ஆற்றலை உணர்ந்து அதனுள் அடங்கி விடும். இப்பத்தி உணர்விற்கு, சமயமோ, காலமோ, மொழியோ, இடமோ குறுக்கே நிற்பதில்லை. எனவே தான்,

**'என்னன் (பு) உருக்கி இறைவனை ஏத்துமின்**
**முன்னன் (பு) உருக்கி முதல்வனை நாடுமின்'**[40]

எனத் திருமூலரும்,

**'நின் திருவடிக்கன்பு இல்லாதவன் மண்ணில் ஏன் பிறந்தேன்?**
**கச்சி ஏகம்பனே'**[41]

எனப் பட்டினத்தாரும், அன்பின் வழியே பத்தி உணர்வினை நல்கினர். இக்கருத்தை,

**'அன்புறு சிந்தையராகி அடியவர்...**
**...எந்தை இணையடி யேத்துவார்**
**துன்புறுவாரல்லர்'**[42]

எனத் திருஞான சம்பந்தப் பெருமானும்,

**'அம்மானை அள்ளூறிய**
**அன்பினால் நினைந்தார். அறிந்தார்களே'**[43]

என அப்பர் அடிகளும் வழிமொழிகின்றனர். பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவரான பூதத்தாழ்வார், ஞானமான விளக்கினை ஏற்ற அன்பே தகளியாக அமைந்ததென உரைக்கிறார்.[44] இராமலிங்க சுவாமிகளும் அன்பே அனைத்திற்கும் அடிப்படை என்றுரைத்து அடிய வர்களின் அன்பென்னும் உணர்விற்குள் இறைவன் அகப்படுவான் என உறுதியுரைக்கிறார்.

**‘அன்பெனும் பிடியுள் அகப்படு மலையே**
**அன்பெனும் குடில் புகும் அரசே...**[45]

என்னும் வள்ளலாரின் வரிகள் இவண் நினைவு கூரத் தக்கவை.

அன்புவழித் தோன்றும் இறையுணர்வு இறை வழிபாட்டிற்கு அடித்தளமிடுகின்றது. இத்தகைய இறைவழிபாடு தன்னல நோக்கத்திற்காக எழுவதில்லை. உள்ளத்தூய்மையுடன், கட்டுப்பாடுகளின்றி, இடைவிடாது இறைவனைத் தொழுதேத்தும் பத்தி நெறியானது, மனத்தினைச் செம்மைப்படுத்தித் தன்னிலையுணர்த்தி, உலகப்பற்றினை அறுத்து, நிறைவான நிலைத்த இன்பத்தை அளிக்கவல்ல முத்திப் பேற்றினைக் கூட்டுவிக்கும். ‘‘எந்தக் குறிக்கோளுக்காகப் பத்தி செய்யப்படுகிறதோ, அதைக் கொண்டு பத்தியைப் பாகவத புராணம் மூவகைப்படுத்துகின்றது. சத்துவம், ராஜசம், தாமசம் ஆகிய முக்குணங்கள் உடையவன் மனிதன். மிகச் சாதாரண உணர்வுகளின் வேட்கை நிறைவுக்காக இறைவனை வேண்டிச் செய்யப்படும் பத்தி, ‘தாமச பத்தி’ எனப்படும். உலகியல் வாழ்வை முதன்மையாக்கிப் பொருளும், புகழும் வேண்டிச் செய்யப்படுவது ‘ராஜசபத்தி’. ஆன்மாவைப் பற்றியுள்ள வினைகளைச் சுட்டெரித்து, ஆன்மவிடுதலை பெற்று இறையின்பத்தில் மூழ்க வேண்டிச் செய்வதைச் ‘சத்துவபத்தி’ என்பர். உலகியல் அனுபவமும், தொடர்ந்து பயிலும் பத்தி நெறியும் உயிர்களைச் சத்துவ பத்தி நிலைக்குக் கொண்டு செல்லும். சத்துவ குணத்தோடு செய்யப்படும் பத்தியே, பத்தி உணர்வின் உச்சநிலை; முதிர்ச்சி நிலை.[46] இவ்வகையான பத்தியே இறை உணர்வு, இறைபத்தி என்றழைக்கப்படுவது. இவ்வகை பத்தி நெறியே முத்திப் பேற்றினைக் கூட்டுவிக்கும். இவ்வுண்மையை

**....‘பத்தி**
**அற்றவர் கதியடையார் தாண்டவக்கோனே’**[47]

என இடைக்காட்டுச் சித்தரும்,

**‘பாரிலுயர்ந்தது பத்தி – அதைப்**
**பற்றின பேர்க்குண்டு மேவரு முத்தி’**[48]

என கடுவெளிச்சித்தரும் உரைக்கின்றனர். சித்தர்களின் மொழியை,

**‘முத்தி நெறி அறியாத மூர்க்கரோடு முயல்வேனைப்**
**பத்தி நெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்’**[49]

என்று மணிவாசகப் பெருமானும் உறுதிப்படுத்துகின்றார். இவ்வாறு உயிர்களின் அன்பு வழித்தோன்றும் பத்தி உணர்வே, இறைவழிபாட்டின் அடித்தளமாகிறது.

**வழிபாடு**

வழிபாடு என்னுஞ் சொல், வணங்குதல், பின்பற்றுதல் (வழி – படுதல்) என்ற பொருளில் ஆளப்படுகிறது. உயிர்களின் மீது எல்லையற்ற கருணை கொண்டு, அவற்றை உய்விக்கவே எஞ்ஞான்றும் இயங்கும் இறைவனை, வணங்குதல் நம் முதற் கடமையாகிறது. உயிர்களைப் பற்றியுள்ள மும்மலங்களை அறவே அகற்றி, அவற்றிற்கு முத்தி நிலையை நல்கும் ஆற்றலுடைய இறைவனை வணங்குதல் அவசியமுமாகிறது. உயிருக்கான உடல் மற்றும் உலகியல் வாழ்விற்குத் தேவையான அனைத்தையும் அளித்துக் காத்து வரும் இறைவனை நன்றியறிதலோடு தொழுதல் முறையுமாகிறது. இந்நிலை நோக்கும் போது இறைவழிபாடு இயற்றுதலென்பது சுவாசித்தலைப் போல, மனித வாழ்வில் இன்றியமையாத செயல்களில் முதலிடம் வகிப்பது என்னும் உண்மை பெறப்படுகிறது. பட்டினத்தார்,

**'கல்லாப் பிழையும் கருதாப்பிழையும் கசிந்துருகி**
**நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் நின் அஞ்செழுத்தைச்**
**சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப் பிழையும்**
**எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி ஏகம்பனே!'** [50]

என்னும் பாடலில் இறைவழிபாடு இயற்றாமலிருத்தல் தவறு என்ற கருத்தைத் தெளிவுபடுத்துகிறார். இக்கருத்தை அருள் நந்தி சிவாசாரியாரும்,

**'மானுடப்பிறவி தானும் வகுத்தது மன வாக்காயம்**
**ஆனிடத்தைந்தும் ஆடும் அரன் பணிக்காக அன்றோ'** [51]

என உறுதிப்படுத்துகின்றார். மனிதப்பிறவி பெற்றதன் நோக்கமே மானிட அறிவு கொண்டு, இறையருளை உணர்ந்து வழிபட்டு முத்தி நிலையை எய்துதல் வேண்டும் என்பதற்கேயாகும் என்ற கருத்தினை ,

**அற்ப சுகம் மறந்தே, அறிவை அறிவால் அறிந்து**
**கெர்ப்பத்தில் வீழ்ந்து கொண்ட கோளறுப்பது எக்காலம்** [52]

எனப் பத்திரகிரியார் தம் ஞானப் புலம்பலில் உறுதிப்படுத்துகிறார்.

உலகில் உள்ள சமயங்கள் அனைத்துமே, மனிதன் வீடுபேறு எய்துதல் வேண்டும் என்ற அடிப்படை நோக்கத்தைக்கொண்டே செயல்படுகின்றன. இதற்காக மேற்கொள்ளப்படும் முயற்சியின் படி நிலைகளே இறைவழிபாடாக அமைகிறது. அனைத்துச் சமயங்களும் உலக வாழ்வு நிலையற்றது. முத்தி நிலையில் இறையின்பமே

நிலைபேறு உடையது. மனிதப் பிறவியின் இலக்கு முத்தியடைதலே; அதற்குரிய வழியே இறைவழிபாடாகும், என்னும் அடிப்படைக் கொள்கைகளில் வேறுபடவில்லை. இவ்வுண்மைகள் அனைவருக்கும் பொதுவானவை. இவற்றைச் சமயங்கள், பல்வேறு விளக்கங்களுடன் பல்வேறு முறைகளில் சமுதாயத்தின் முன் வைத்தன. இவ்விளக்கங்களில், செயல்பாட்டு முறைகளில், மக்கள் கருத்தூன்றியதால் வழிபடு முறைகள் பல்கிப் பெருகின. மக்கள் இனக்கலப்பும், நாகரிகமும், பண்பாடும் உலகின் பல்வேறு இடங்களில், பல்வேறு வகையில் மாறுபட்டு விளங்கும் இவ்வறிவியல் யுகத்திலும், இறைவழிபாடு என்னும் கொள்கை, கருத்து மாறவில்லை; மறையவுமில்லை. இறை மறுப்பாளர்கள் விழுக்காடு மிகக் குறைவே. மனிதர்களின் சிந்தனைகளும், உள்ளத்து உணர்வுகளும், மனப்பக்குவமும் அனைவருக்கும் ஒரே அளவினதாய், ஒரே தன்மையுடைத்தாய் இருப்பதில்லை. அவரவர் தாம் சார்ந்துள்ள சமயம் வகுத்த முறைகளில், இறை வழிபாடு நடத்தினர். அதனால் வழிபடு முறைகள் வேறுபட்டன.

வழிபாட்டு நெறிகளை, சரியை , கிரியை, யோகம், ஞானம் என சைவ சித்தாந்தம் குறிக்கின்றது. இந்நான்கு நெறிகளுக்கும் உள்ளீடாக அமைவது அன்பு நெறி ஒன்றே. இந்நால் வகை நெறிகளில் நின்று , இறைவனை வழிபடுவோரைப் பத்தாம் திருமுறை,

> **'பத்தர் சரிதை படுவோர், கிரியை யோர்**
> **அத்தகு தொண்ட ரருள் வேடத்தாகுவோர்**
> **சுத்த இயமாதி சாதகர் தூயோகர்**
> **சித்தர் சிவஞானஞ் சென்றெய்து வோர்களே'**[53]

என வகைப்படுத்துகிறது.

> **'சரியை கிரியை தவ யோக ஞானம்**
> **தெரிய அமைத்த சிவ சித்தன் '..**[54]

என்னும் அடிகளில் சித்தர்கள், திருமுறை வாசகங்களுக்கு உடன்பட்டு நின்றமை புலனாகின்றது.

சரியை, கிரியை ஆகிய இவ்விரு நெறிகளும் புற வழிபாட்டு நெறிகளாகும். யோகமும், ஞானமும் புற வழிபாடுகளைக் கடந்த நிலைகளாகும். யோகம் என்ற சொல்லுக்கு பொதுவாக ஒருமுகப்படுத்துதல், ஒருங்கிணைத்தல் என்று பொருள் கொள்ளப்படுகிறது. யோக நெறி அனைத்து சமயத்தார்க்கும் பொதுவான நெறியாகும். 'யோகம் என்பது புறப்பார்வை கடந்து அகப்பார்வை பெறுதலாகும்'. யோகம் என்பது ஒரு முகச் சிந்தனை; மிக உச்ச கட்டத்தை அடைந்த விட்ட நிலை; இங்கு விழிப்பு நிலை

உணர்வு மிகவும் தூய்மையுற்று விளங்குகிறது. பல்வேறு கட்டுப்பாடுகளுக்குட்பட்ட ஆத்மாவுக்குள்ளேயே பரமாத்மாவை உணரும் முயற்சி இது. யாவற்றிலிருந்தும் விட்டு விலகி நிற்கும் நிலை என்பதே இந்த முயற்சியின் செயல் முறை. இது ஒரு திட்பம் நிறைந்த ஒரு முக நோக்கு'...[55] இந்நெறி இறைவனை கருத்துப்படிவ நிலையில் (Concenptual Image) வைத்துச் செயல்படுகிறது.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நெறிகளையும், வேறுபடுத்திக் கருதாமல், ஒரு பயணத்திற்கான ஒரு முடிவிற்கான படிநிலைகளாகக் கொள்ளுதல் வேண்டும். இவ்வுண்மையை ,

**'ஞான யோகக் கிரியா சரியை நான்கும்**
**நாதன் தன் பணி'..**[56]

எனச் சைவ சித்தாந்தம் தெளிவுபடுத்துகின்றது.

**'சரியை...கடந்திடவும் வேணும்...**
**...கிரியையைப் பார்த்தறிய வேணும்...**
**...யோகந் தெரிந்திட வேணும்...**
**...ஞான நிலை தெரியவே வேணும்'..**[57]

என்னும் கல்லுளிச் சித்தர் பாடல் இந்நான்கு நெறிகளின் வழி நிற்றலை உறுதிப்படுத்துகிறது. கைலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனார் , இந்நான்கு நெறிகளையும்,

**'பாடுகின்றேன் சரியையென்ன? தேவி தீட்சை**
**பரிவாகக் கிரியையென்ன? தேவி பூசை**
**பாடுகிறேன் யோகமென் மாசற்ற அமுதம்**
**பாங்கான ஞானமென்ன? மௌனத் தந்தம்'.....**[58]

என வகைப்படுத்துகிறார். தீட்சை என்பது பாசமாகிய தளைகளை அறுத்து ஞானத்தைக் கொடுத்தலாகும். மனம் ஒன்றி இறை உணர்வுடன் செய்யப்படும் வழிபாடு பூசை ஆகும். 'அட்டாங்க யோக நிலைகளில் நின்று யோக தேகம்பெற்று குண்டலினி ஆற்றல் மூலம் சகஸ்ராரத்தை அடையும்போது அமுதம் பெறப்படுகிறது. இந்த முறையில் யோகி காயசித்தி அடைகிறான். இந்த அமுதத்தைப் பருகியவன் சாவா நிலை பெறுகிறான். அவனது உடல் பேரின்ப நிலையை அடைகிறது.'[59] ஆகவே இந்நெறி மாசற்ற அமுதம் என சட்டை முனி நாயனாரால் குறிக்கப்படுகிறது. மௌனத் தந்தம் என்பது, அனைத்தும் ஒடுங்கி இறைவனுடன் இணைகின்ற நிலையாகும். இங்ஙனம் சித்தர்களும், சைவ சித்தாந்தம் உரைத்த வழிபடு நெறிகளுக்கு உடன்பட்டு நின்றமை புலனாகின்றது.

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நெறிகளை, முறையே தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம் , சக மார்க்கம் , சன் மார்க்கம் எனவும் இந்நான்கு நெறிகளும் சாலோகம், சாமீபம், சாரூபம் சாயுச்சியம் என்னும் முத்தி நிலைகளை முறையே நல்க வல்லன என்றும் சைவ - சித்தாந்தம் இயம்புகிறது.

**'சரியை கிரியா யோகத் தன்மையோர்க்குச்**
**சாலோக சாமீப சாரூபங்கள்'..**[60]

என்பது உமாபதி சிவாசாரியாரின் கூற்று. இக்கூற்றினை இவ்வாறே.

**'தெளிந்த நற் சரியை தன்னில் சென்று சாலோகம் பெறும்**
**தெளிந்த நற்கிரியை பூசை சேரலாம் சாமீபமே**
**தெளிந்த நல்ல யோகம் தன்னில் சேரலாகும் சாரூபம்**
**தெளிந்த ஞானம் நான்கினும் சேரலாம் சாயுச்யமே'**[61]

என சிவ வாக்கியர் வழி மொழிகிறார்.

**புற வழிபாடு**

புற வழிபாட்டு நெறியில், உருவ வழிபாடு முக்கியத்துவம் பெறுகிறது. இறைவனின் எங்கும் நிறைந்து இயங்கும் அளப்பரிய ஆற்றலையும், வரம்புகளற்ற முடிவற்ற தன்மையையும் உணராத மனிதன், தன்னுடைய எண்ணங்களும், செயல்களும், இயல்புகளும் இறைவனுக்கும் இருப்பதாகக் கற்பனை செய்ததன் விளைவே உருவ வழிபாடாகும். மனிதனின அறிவு, விளக்கம் பெறாத நிலையில் , உருவ வழிபாடு தொடக்கம் பெற்றது. மிகப் பழங்காலந்தொட்டே இம்முறை வழக்கில் இருந்து வருகிறது. 'வேலனுக்கு வெறியாட்டு நிகழ்ந்தமையும், வருணனுக்கு மீன் கொம்பினை நட்டு உருவ வழிபாடு நடத்தியமையும் சங்க இலக்கியங்கள் வழி காணக்கிடைக்கின்றன'.[62]

அச்சவுணர்வும், நன்றியுணர்வும் இறைவழிபாட்டிற்குரிய முதன்மைக் காரணங்களானதால் இறைவன் என வடிவமைக்கப்பட்ட உருவங்களும் இவ்விரு உணர்வுகளின் வெளிப்பாடுகளாகவே அமைந்தன. இறைவன், தன்னிலும் வேறுபட்டவன் என்னும் கருத்து கொண்டமையால் மனிதன், மனித உருவத்தினின்று பல மாறுபட்ட வடிவங்களைக் கற்பனை செய்து, அவற்றை உருவ வழிபாட்டிற்குரியனவாக்கினான். அவ்வுருவங்களுக்கு ஏற்றாற்போல கதைகளும், புராணங்களும், சடங்குகளும், திருவிழாக்களும், பூசை முறைகளும் உருவாக்கப்பட்டன.

அவ்வாறு உருவாக்கப்பட்ட முறைகளிலேயே மக்கள் அவ்வுருவங்களை வழிபட்டனர். உருவ வழிபாடு வளர்ச்சி பெற்றது. எவ்வித வடிவமும், உருவமும் வண்ணமுமற்ற இறைவனைக் கருத்துப்படிவ நிலையில் (conceptual form) எண்ணி, ஐம்புலன்களின் வழி அலையும் மனத்தினைக் கட்டுப்படுத்தி, இறைமையை நோக்கி ஒருமுகப்படுத்துதல் என்பது மனிதனுக்கு அரிதான செயலாகும். பாமர மக்களும் விளங்கிக்கொள்ளும் வகையில், அவரவர் மனநிலைக்கும், பக்குவத்திற்கும் தக்கவாறு ஒரு உருவத்தை வடிவமைத்து, மனதில் நிறுத்தி, சிந்தனையை அதன் மீது ஒரு நிலைப்படுத்துதல் எளிதாகும். உருவ வழிபாடு மக்களிடையே இறை உணர்வையும் இறை நம்பிக்கையையும் வளர்த்தது. ஆலயங்கள், உருவச்சிலைகள், சடங்குகள், பூசைகள், தலயாத்திரைகள் ஆகியவற்றின் வழியே, சமயங்கள் சமய நம்பிக்கையை மக்களிடையே வளர்த்தன.

காலப்போக்கில் உருவ வழிபாட்டு நெறியில் மாற்றம் ஏற்படத் தொடங்கியது. இறை உணர்வைக் காட்டிலும், புற வழிபாட்டுச் சடங்குகளும், பூசனை முறைகளும் முதன்மையும், முக்கியத்துவமும் பெற்றன. இவற்றைக் குறித்த விளக்கங்களில் கருத்தூன்றிய மக்கள், மனதில் இறை உணர்வின்றி, இறை பத்தியின்றி, வெற்றுச் சடங்குகளை மட்டும் செய்து விட்டு, இறை வழிபாடு நிறைவேறியது எனக் கருதினர். குறிப்பிட்ட நேரங்களில், ஆலயங்களிலோ, இல்லங்களிலோ நீர்நிலைக் கரைகளிலோ, சில சடங்குகளையும், வேள்விகளையும் செய்து முடித்தால், தான் நினைத்த காரியம் கைகூடும், தீவினையும், துன்பமும் அகன்று விடும் என்று மக்கள் நம்பினர். இறைவன் மீது பத்தியுணர்வு கொண்டு, உள்ளம் உருகிச் செய்யப்பட வேண்டிய இறை வழிபாடு, ஆரவாரத் தன்மை கொண்ட வெற்றுச் செயல்களாக மாறியது. சமயங்கள் கற்பித்த பூசை முறைகளிலும், வழிபாட்டு முறைகளிலும் வேறுபாடுகள் காணப்பட்டன. சமயப் பிடிப்பு கொண்ட மக்கள் இவ்வேறுபாடுகளில் ஈடுபட்டுத் தமக்குள் உயர்வு தாழ்வு கருதும் நிலை ஏற்பட்டது. இதனால் மக்களிடையே வேற்றுமையுணர்வும், பகை உணர்வும் வளர்ந்தன. புற வழிபாட்டு முறைகள், சமுதாயப் பிரிவினைக்கான காரணங்களுள் ஒன்றானது.

உருவ வழிபாடும், இறைமை குறித்தத் தோத்திரப் பாடல்களும், இறை வழிபாட்டிற்குரிய கருவிகளே என்பதில் ஐயமில்லை. இவை நம் மனதில் தற்காலிகமான அமைதிநிலையை உருவாக்குகின்றன என்பதில் மாற்றுக் கருத்துக்கு இடமில்லை. இக்கருவிகள் மனதை ஒருநிலைப் படுத்தி இறை ஈடுபாடு கொள்ளக் கருவிகளாகச் செயல்பட்டு நம்மைத் தூண்டுகின்றன. இஃது தொடக்க நிலையாகும். இத்துடன்

நின்றுவிடாமல், அடுத்த நிலையில் மனம் ஒன்றி, இறைமையை இடைவிடாது சிந்திக்க முற்பட வேண்டும். இந்நோக்கத்திற்காக ஏற்படுத்தப்பட்டவையே புற வழிபாட்டு முறைகள் என்பதை நினைவிற் கொள்ள வேண்டும்.

சித்தர்கள் உணர்வு வழி நின்று உருவவழிபாடு செய்யும் பத்தர்கள் அல்லர். தனிப்பட்ட இறைவடிவத்தைக் காட்டிலும் இறை இயல்புகளே சித்தர்களது பாடல்களில் நிலைநிறுத்தப்படுகின்றன.

எல்லையற்ற வியாபகத் தன்மை கொண்ட இறைவனைக் குறிப்பிட்ட சில தலங்களில் மட்டுமே உறைவதாக, சில உருவங்களில் மட்டுமே இருப்பதாக நினைத்து, அவ்விடங்களில் அவ்வுருவங்களுக்கு பூசனை மேற்கொள்வதில் சித்தர்களுக்கு உடன்பாடு இல்லை என்பதை அவர்களது பாடல்கள் உணர்த்துகின்றன.

**'நட்ட கல்லைத் தெய்வம் என்று நாலு புட்பம் சாத்தியே**
**சுற்றி வந்து முணமுணென்று சொல்லு மந்திரம் ஏதடா'**
**நட்டகல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்'** [63]

என்னும் சிவவாக்கியரின் கூற்றிலும்,

**'காடு மலை நதி பதி காசி முதலாய்க்**
**கால் கடுக்க ஓடிற் பலன் காணலாகுமோ'**[64]

என்னும் பாம்பாட்டிச் சித்தரின் பாடலிலும், மனதில் இறை உணர்வின்றி மேற்கொள்ளப்படும் புறவழிபாட்டுச் செயல்களாலும், வெற்றுச் சடங்குகளாலும், யாதொரு பயனும் விளைவதில்லை என்ற கருத்து தெளிவாகப் பெறப்படுகிறது. சித்தர்கள் சமயங்களுக்கும், கடவுள் நெறிக்கும் எதிரானவர்கள் அல்லர். நாமங்களையும், வடிவங்களையும் கடந்து நிற்கும் இறைவனை ஒரு வரையறைக்குள் கட்டுப்படுத்தும் செயல் இறைத் தன்மைக்கு இழுக்காகும் என்பதே சித்தர்களின் கொள்கையாகும். இக்கொள்கை,

**'..... ஆயிரம் சேவடியானும்...**
**.... ஆயிரம் தோளுடையானும்...**
**.... ஆயிரம் பேருகந்தானும்....** [65]

என்னும் அப்பர் அடிகளின் அருள் வாக்கிலும்,

**'ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமில்லாற்காயிரம்**
**திரு நாமம் பாடி'**[66]

என்னும் மாணிக்கவாசக சுவாமிகளின் மணிமொழிகளிலும்,

**'எண்ணில் பல்கோடி சேவடி முடிகள்**
**எண்ணில் பல் கோடி திண் தோள்கள்**
**எண்ணில் பல் கோடி திருவுரு நாமம்**
**எண்ணில் பல் கோடி எல்லைக்கு அப்பாலாய்''**
**எண்ணில் பல் கோடி குணத்தர்'**[67]

என்னும் சேந்தனாரின் செந்தமிழ்ப் பாடலிலும் வெளிப்படுகிறது.

சித்தர்களாலும், சைவ சித்தாந்த சாத்திரத் தோத்திர ஆசிரியர்களாலும், ஒருங்கே விளக்கப்பட்ட, 'இறைவனின் எல்லைகளற்று நிறைந்திருக்கும் தன்மை' என்னும் கருத்திற்கு 'ஆங்கிர சம்ஹிதை' என்னும் வட மொழி நூல் அரண் செய்கிறது. 'ரூபமே உனக்குக் கிடையாது, அப்படிப்பட்ட உன்னைப் பல ரூபங்களில் இருப்பதாகக் கற்பனை செய்து சுருக்கி விட்டேன். எவ்விதத்திலும் அறிந்து உணர முடியும் உனக்குப் பல வித ஸ்தோத்திரச் சொற்களால் வரம்பமைத்தேன். எங்கும் விரிந்து பரந்திருக்கும் உன்னைச் சில புண்ணிய ஸ்தலங்களில் இருப்பதாக, அவற்றுக்கு உயர்வு காட்டி, உனது பரந்த தன்மையைக் குறுக்கி விட்டேன். பரம்பொருளே என்னுடைய அறிவின் குறைவால் ஏற்பட்ட இந்த மூன்று பிழைகளையும் மன்னிப்பாயாக. இவ்வாறு பதினெட்டு புராணங்களையும் இயற்றிய வியாசர் இறைஞ்சுவதாக வருகிறது'.[68] எனவே மனதில் சமய நம்பிக்கையை வளர்க்கும் பொருட்டு மனிதனால் கற்பனையுடன் கூடி உருவாக்கப்பட்ட உருவ வடிவங்களையும், பெயர்களையும், சடங்குகளையும் புண்ணியத் தலங்களையும் கடந்து நிற்கும் பரம்பொருளே இறைவன் என்னும் கருத்து தெளிவாகிறது. சமயச் சாத்திரங்கள், இறைவனின் இயல்புகளை முழுமையாக உரைக்க இயலாதனவாகவே உள்ளன. அவை ஒன்றுடன் ஒன்று மாறுபட்டு முரணான கருத்துக்களையே தெரிவிக்கின்றன. இவ்வுண்மை,

**'ஒன்று உரைத்தது ஒன்று உரையாச் சாத்திரங்கள் ஒன்றாக**
**நின்று உரைத்து நிச்சயிக்க மாட்டாவால்'**[69]

எனத் திருக்களிற்றுப் படியாரில் விளக்கப்படுகிறது.

சித்தர்கள், இறைமையை மனிதனினும் வேறுபட்ட ஒரு பொருளாகக், கருத்தாகக் கருதவில்லை. சமய விளக்கங்களாலும், சாத்திரச் சடங்குகளாலும், உருவ வடிவ நிலைகளாலும் முழுமையாக வரையறுக்க இயலாத இறைவன், மனிதனுள் உயிராக

உடலாக உள்ளுறைவதை உணர்ந்திருந்தனர். தம் பாடல்களில் இக்கருத்தினைத் தெளிவாக உணர்த்தினர்.

**'என்னை அறியாமல் எனக்குள்ளே நீ இருக்க'...**
**....ஊனாய் உடல் உயிராய் உள் நிறைந்த கண்ணொளியாய்'[70]**

என்னும் பட்டினத்தார் பாடலும்,

**'என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்தது இல்லையே'...**
**...'ஊரு நாடு காடு ஓடி உழன்று தேடும் ஊமைகள்**
**நேரதாக உம்முளே அறிந்துணர்ந்துநில்லுமே'...[71]**

என்னும் சிவவாக்கியரின் சீரிய மொழிகளும்,

**'மெய் விளக்கு உன்னுள் இருக்க வீழ்குவதேன்'[72]**

என்னும் இடைக் காட்டுச் சித்தரின் வினாவும், இறைவன் மனிதனுள் உறைகின்றான் என்ற கருத்திற்குச் சான்றுகளாகின்றன. இச்சான்றுகளுக்கெல்லாம் மகுடம் வைத்தாற் போல அமைகிறது, உலோகாயதச் சித்தரின் பாடல்.[73]

மனிதனுள் இறைவன் உறைகின்றான் என்னும் சித்தர்களின் கருத்தை சைவ சித்தாந்தம் உறுதிப்படுத்துகிறது. உயிர்களுடன் ஒன்றாய், வேறாய், உடனாய் இறைவன் கலந்திருக்கும் அத்துவிதக் கலப்பினை, சைவ சித்தாந்தம் உரைக்கின்றது.

**'அவனே அறிவாய் நின்றானும் – அவனே காண்**
**ஆணாகிப் பெண்ணாய் அலியாகி நின்றானும்'[74]**

என்னும் திருக்களிற்றுப்படியாரின் வரிகள் இவ்வுண்மையை நிறுவுகின்றன. அப்பர் அடிகள், மனிதர்கள் உருவில் தாயாக, தந்தையாக, சுற்றமாகவும் இருப்பவன் இறைவனே[75] என்று இயம்புகிறார். மணிவாசகப் பெருமானும்,

**'உடலும் எனதுயிரும் புகுந்தொழியா வண்ணம் நிறைந்தான்'[76]**

என்றும் இறைவன் மனிதனுள் நிறைந்திருப்பதை உணர்த்துகின்றார்.

**'அடியாருள்ளத் தன்பு மீதூரக்**
**குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்'**[77]

என்னும் எட்டாம் திருமுறை வாசகம், இறைவனின் பெருங்கருணையினையும் இறைத் தன்மையினையும், சிறப்பினையும் ஒருங்கே உணர்த்துவனவாகும்.

**'கோவில் முழுவதும் கண்டேன் – உயர்**
**கோபுரம் ஏறிக் கண்டேன்**
**தேவாதி தேவனையான் – தோழி**
**தேடியும் கண்டிலனே**
**உள்ளத்தில் உள்ளானடி – அது நீ**
**உணர வேண்டுமடி**
**உள்ளத்தில் காண்பாய் எனில் – கோவில்**
**உள்ளேயும் காண்பாயடி'**[78]

என்னும் கவிமணியின் கவிதை ஈண்டு நினைவு கூரத்தக்கதாகும்.

மனிதனுள் இறைவன் உறைவதை உணர்ந்து, உலகிற்கு உணர்த்திய சித்தர்கள், ஆலய வழிபாட்டு முறைகளிலும், சமயங்களின் வழியில் அமைந்த சடங்குகளிலும், தல யாத்திரைகளிலும், தம்மை ஈடுபடுத்திக் கொள்ளவில்லை. தன்னல நோக்கத்துடன், ஆரவாரத் தன்மையுடன் கூடி, உள்ளத்தில் சிறிதும் இறை உணர்வின்றிச் செய்யப்படும் வெற்றுச் சடங்குகளையும், பூசை முறைகளையும் மட்டுமே சித்தர்கள் கடிந்துரைத்தனர். நாயன்மார்கள், ஆழ்வார்கள் உள்ளிட்ட அடியார்கள், இறைவன் மீது அன்பு வழித் தோன்றும் பத்தியுணர்வின் வெளிப்பாடுகளாக மேற்கொண்ட புற வழிபாட்டு முறைகளைச் சித்தர்கள் ஒரு போதும் மறுத்துரைக்கவில்லை என்னும் உண்மையை நினைவிற் கொள்ள வேண்டும்.

சைவ சமய அடியார்களின் பெரும்பான்மையினர், சரியை, கிரியை ஆகிய புறவழிபாட்டு நெறிகளில் இறைவன் மீது பத்தியுணர்வு கொண்டவர்களாகத் திகழ்ந்தனர். இவ்வடியார்கள் மேற்கொண்ட நெறி உள்ளம் ஒன்றிச் செய்யப்பட்ட புற வழிபாட்டு முறைகளாகும். இறைவன் மீது பேரன்பு கொண்டு, தம் மீது இடையறாது பொழிந்த இறைவனது எல்லையற்ற பெருங்கருணையை நினைந்து நினைந்து, உள்ளம் உருகிய பத்தியில், ஆலயங்களைத் தூய்மைப்படுத்தியும், நந்தவனங்கள் அமைத்து, மலர்களைப் பறித்து. மாலை தொடுத்து இறைவற்குச் சாத்தியும், இறைவனின் சீர்மையையும், சிறப்பையும் வாயார வாழ்த்தி வணங்கியும், ஒளிவளர் திருவிளக்குகளை ஏற்றியும், நறும்புகை, திருவமுது, திருமஞ்சனம் முதலிய பூசனைப் பொருட்களைக் கொண்டு

திருமுழுக்கு ஆராதனைகள் செய்தும், சரியை, கிரியை நெறிகளில் நின்றனர். வழிபடுவதற்குரிய வடிவம், வழிபாட்டிற்கான இடம் ஆகியவற்றைத் தூய்மை செய்து, மெய்யன்புடன் அழலோம்பி, மலர்த்தூவி, மந்திரங்கள் ஓதி, நாள்தோறும் இறைவனை வழிபடுதலே இவ்விரு நெறிகளின் உட்கூறுகளாகும்.இந்நெறிகளில் நின்றோர் இத்துடன் அமைந்து விடாமல்,

**. . . 'நடமாடக் கோயில்நம்பர்க் கொன்று ஈயில்**
**படமாடக் கோயிற் பகவற்கதாமே'**[79]

என்னும் திருமூலரின் கூற்றிற்கேற்ப, சிவனடியார்களைக் கண்டு பணிந்து அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகளை, முழு ஈடுபாட்டுடன் செய்து அவற்றைச் சிவபெருமானுக்கு அர்ப்பணித்து வாழ்ந்து வந்தனர். மனமொன்றிச் செய்யப்படும் இவ்வழிபாட்டு முறைகளை இறைவனும் ஏற்றுக் கொண்டமைக்கு அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாறே சான்றாக அமைகிறது.

மனம் ஒன்றிச் செய்யப்பட்ட உருவ வழிபாட்டில் உருகி, ஒன்று பட்டு நின்ற கண்ணப்ப நாயனாருக்கு இறைவன் கண்ணிலிருந்து குருதி வடிகிறதே என்ற எண்ணம் தோன்றியதே தவிர, கற்சிலையாயிற்றே அதிலிருந்து எவ்வாறு குருதி வடியும்? என்னும் அறிவு சார் ஆய்விற்கெல்லாம் அவர் இடங்கொடுக்கவில்லை. அன்பு வழி பெருகிய பத்தியுணர்வின் உச்ச நிலை அது. பல ஆண்டுகளாகச் சாத்திர வழிநின்று பூசனை மேற்கொண்ட சிவகோசரியாரின் வழிபாட்டு முறைகளை விட, ஆகம நெறிக்கு முற்றும் முரணாக பூசை செய்த கண்ணப்ப நாயனாரின் வழிபாட்டு முறைகளை இறைவன் ஏற்றுக் கொண்டருளினார் என்பதும், மிகுந்த பொருட் செலவில் சாத்திரங்களின் வழி நின்று பல்லவ மன்னன் எழுப்பிய கற்கோவில் குடமுழுக்கைத் தவிர்த்து, பூசலார் நாயனார் தம் மனதிற்குள்ளே எழுப்பிய மனக்கோவிலுள் இறைவன் குடியமர்ந்த செய்தியும் சேக்கிழார் நமக்குக் காட்டும் வரலாற்று உண்மைகளாகும்.[80] புற வழிபாட்டுச் செயல்களை விட இறைவன் மீது மனதில் அன்பு வழித் தோன்றும் பத்தியுணர்வே வேண்டப்படுவதும், முதலிடம் பெறுவதுமாகும் என்ற கருத்து தெளிவாகப் பெறப்படுகிறது.

புறவழிபாடுகளில் தொடர்ந்து ஈடுபடும் போது மனிதன் இறை உணர்வில் ஒருமுகப்பட்டுத் தோய முயற்சிகளை மேற்கொள்கிறான். இவ்வாறு இயற்றப்படும் சரியை, கிரியை நெறிகளால் ஆன புற வழிபாட்டு முறைகள், முத்திப் பேறு பெறும் நோக்கத்திற்கானத் தொடக்க நிலைகளாக அமைகின்றன. தொடர்ந்து இவற்றில் ஈடுபடும்

போது மனம் சிறிது சிறிதாக ஒருமுகப்பட்டுப் பக்குவமடைகிறது. ‘தான்’, ‘தனக்கு’ என்னும் தன் முனைப்பு நலிவடைகிறது. இந்நிலையில் உள்ளத்தில் ஊன்றிய இறை உணர்வுடன் இயற்றப்படும் வழிபாட்டு முறைகள் அனைத்தும் தவமாகின்றன. சரியை, கிரியை, யோகம் ஆகிய இம்மூன்றுமே தவமெனப்படுகிறது. ‘தவமெனப்பட்டன இவை யென்பார்; சரியை கிரியா யோகங்களை’[81] என்பது மாதவச் சிவஞான யோகிகளின் கருத்து. இவை மூன்றின் பயனாக ஞானம் கிடைக்கப்பெறும்.

தவஞானம் என்பது தவத்தின் பயனாக எய்தப் பெறும் ஞானம் ஆகும். சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கும் அத்தொடரில் அடங்கும். இவற்றுள் முதல் மூன்று நெறிகளில் முயன்று நின்று தவமியற்றும் உயிர்களுக்கு ஞானம் கிடைக்கப் பெறுகிறது. ஆதலால் சரியை, கிரியை, யோகம் ஆகியவை தவமுயற்சி நிலைகளாகும். இல்வாழ்க்கைக்கு உரிய இயல்புடன் வாழ்வோரை, முயல்வாருள் எல்லாம் தலை’ என்று திருவள்ளுவர் சிறப்பிக்கிறார். முயல்வார் என்னும் சொல்லுக்கு ‘மேலான வாழ்வு பெறத் தவநெறியில் முயற்சி செய்கின்றவர்கள்’ என்று விளக்கம் அளிக்கப்படுகிறது.[82] இத்தவ முயற்சிகள் ஒரு பிறவியில் நிகழக் கூடியதன்று. ‘படி முறையானன்றி, இவ்வொரு பிறவியில் செய்தவத்தான் அமையாது, முற்பிறவிகளிலே செய்து வந்த தவமாகிய சரியை, கிரியை, யோக விசேடத்தால்’[83] என்னும் விளக்கவுரை இங்கு நினைவிற் கொள்ள வேண்டியதொன்றாகும்.

இறைவன் மீது அன்பு வழித் தோன்றும் பத்தியுணர்வு, உயிர்களுக்குத் தோன்றுவதற்குப் புற வழிபாட்டு முறைகள் தேவை என்ற கருத்து தெளிவாகப் பெறப்படுகிறது. ஒரு முகப்பட்ட இறை சிந்தனை கொண்ட மனமும், அதில் தோன்றும் இறை உணர்வும், பத்தியும் புற வழிபாடுகளின் பயன்களாகும். இதனைச் சேக்கிழார்,

**‘முன்பு செய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான**
**அன்பினை எடுத்துக் காட்ட அளவிலா ஆர்வம் பொங்கி**
**மன்பெருங் காதல் கூர ...**
**...என்பு நெக்குருகி உள்ளத்தெழு பெரு வேட்கையோடும்’**[84]

என்று கண்ணப்ப நாயனார் வரலாற்றில் தெளிவுபடுத்துகிறார்.

மனதுள் இறை உணர்வின்றிச் செய்யப்படும் வழிபாட்டுச் செயல்கள், வெற்றுச் சடங்குகளேயன்றி, அவை சரியை, சரியை ஆகிய பத்தியுணர்வுடன் கூடிய வழிபாட்டு

முறைகள் ஆகா. அவற்றால் யாதொரு பயனும் விளைவதில்லை. ஆகவே வெற்றுப்புறச் சடங்குகளைச் சித்தர்கள் வெறுத்துரைத்தது போல,

**'சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்**
**கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்'**

என வினவியும்,

**'கொங்கு தண்குமரித்துறை ஆடில் என்**
**...வேதம் ஓதில் என் வேள்விகள் செய்யில் என்**
**நீதி நூல் பல நித்தம் பயிற்றில் என்**
**ஓதி அங்கமோர் ஆறும் உணரில் என்**
**ஈசனையுள்குவார்க்கு அன்றி இல்லையே''...**[85]

என்றுரைத்தும் வெற்றுச் சடங்குகளுக்கு முக்கியத்துவம் தருதல் கூடாது என்னும் சித்தர்களின் கொள்கையை திருநாவுக்கரசு சுவாமிகள் வழிமொழிகிறார்.

இறைவன் மீது அன்பு வழிப்பட்ட பத்தியுணர்வின் வெளிப்பாடுகளாக அமைவதே சரியை, கிரியை ஆகிய புற வழிபாடுகளாகும். இவை முத்திப் பேறு பெறுவதற்கான தொடக்க நிலைப்படிகள் என்ற கருத்து இவ்விரு நெறிகளின் வழி புலனாகின்றது.

**அக வழிபாடு**

சித்தர்களின் கொள்கையும் சைவ சித்தாந்த மெய்யியலும். இறைவன் மனிதனுள் ஒன்றாக, உடனாக உறைவதை ஒப்புக் கொள்கின்றன. இறைவனை மனத்தால் வழிபடும் நெறியே அகவழிபாடு ஆகும். அக வழிபாட்டு நெறியினைப் பட்டினத்தார்,

**'தெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்கு**
**எட்டாத புட்பம் இறையாத தீர்த்தம் இனி முடிந்து**
**கட்டாத லிங்கம்'**[86]

என்றுரைக்கிறார். புற வழிபாட்டு முறைகளில் ஏற்படக் கூடிய முரண்பாடுகளும், கருத்து வேற்றுமைகளும் அக வழிபாட்டில் எழுவதற்குச் சாத்தியமில்லை. ஏனெனில் இந்நெறி புற உறுப்புகளால், பூசனைப் பொருட்களைக் கொண்டு, குறிப்பிட்ட இடங்களில் செய்யப்படும் செயல்களை உள்ளடக்கியதன்று. அகவழிபாடு என்பது தனிமனித மனத்தின் இறை உணர்வுகளின், இறை அனுபவங்களின் தொகுப்பாகும். இந்நெறியில் சமயங்களோ, அவை அளிக்கும் விளக்கங்களோ, சாத்திரங்களோ, பூசனை முறைகளோ, பொருளாதார ஏற்றத் தாழ்வுகளோ, சாதி, இன, மொழி, நிற வேறுபாடுகளோ இடம்

பெறுவதில்லை. இஃது அனைவருக்கும் பொதுவான நெறியாகும். யோகமும், ஞானமும் அகவழிபாட்டிற்குரிய முறைகளாகும்.

**யோகம்**

யோகம் என்பது மிகப் பழங்காலந் தொட்டு நம்நாட்டில் இருந்து வரும் ஒரு கருத்துப்படிவ நிலையாகும். சாதி, இன, மொழி வேறுபாடுகளைக் கடந்ததோர் தத்துவமாகும். இந்நெறி மன ஆற்றலை வளர்த்து, மனிதனின் உள்ளத்தையும் உடலையும் முழுமையாக மாற்றக் கூடிய ஆற்றல் வாய்ந்ததாகும். உலகப் பற்றுக்களிலிருந்து விலக்கி அனைத்தையும் கடந்த நிலைக்கு, யாவும் சமம் என்னும் நிலைக்கு, மனிதனைச் செலுத்தக் கூடியது யோக நெறியாகும். வீடுபேறு அடைவதற்குச் சாதனமாக யோக நெறியையே சித்தர்கள் கைக்கொண்டனர்.

**'யோகச் சமாதியின் உள்ளே யுளரொளி. . .**
**. . யோகச் சமாதி யுகந்தவர் சித்தரே'**[87]

என்பது திருமந்திர மொழியாகும்.

'யோக தத்துவ உபநிடதம் என்னும் நூல் யோகத்திற்குப் பல வடிவங்கள் உள்ளதாகக் கூறுகிறது. அவற்றுள் மந்திரயோகம், ஹடயோகம், இலயயோகம், இராஜயோகம் ஆகிய நான்கு வகைகளும் முக்கியமானவையாகும். இவை ஒவ்வொன்றிற்கும் தனிப் பயிற்சி முறைகளும் சிறப்பியல்புகளும் உண்டு.'[88] தமிழ்ச் சித்தர்கள் இலய யோக முறையைப் பின்பற்றினர். இலயித்தல் என்ற சொல், ஒன்றுபடுதல், ஐக்கியமாதல், ஒடுங்குதல், இரண்டறக் கலத்தல் என்னும் பொருளில் ஆளப்படுகிறது. இலய யோகத்தின் குறிக்கோள், ஒப்பற்ற இறை நிலையை எய்துவதாகும்.

இலய யோக முறைக்கு எட்டுப் படிநிலைகளைக் கொண்ட அட்டாங்க யோகம் தொடக்க நிலையாக அமைகிறது. அதன் எட்டுப்படி நிலைகளாக இயமம் – தவிர்க்கப் பட வேண்டியவை, நியமம்–கடைப்பிடிக்க வேண்டியவை. ஆசனம் – உடலை இருத்திக் கொள்ளும் முறைகள், பிராணாயாமம் –மூச்சுக் கட்டுப்பாடு, பிரத்தியாகாரம் – புலன் அடக்கம், தாரணை–மனம் ஒரு நிலைப்படுதல், தியானம் – ஆழ்ந்த ஒருமை உணர்வு, சமாதி-முற்றடங்கல் ஆகியன இடம் பெறுகின்றன.

அட்டாங்க யோக நிலைகள், குண்டலினி சத்தியை இயக்குவதற்கான செயல் முறைகளாகவே விளங்குகின்றன. அங்ஙனம் கிளர்ந்து எழுந்த குண்டலினி ஆற்றல், ஆறு ஆதாரங்களைக் கடந்து, அச் சக்தி மையங்களின் ஆற்றலைத் தன்னுள் கிரகித்து, இறுதியாக சகஸ்ராரத்தை அடைகிறது. அங்கு இலய நிலையை அடைந்து இறைவனுடன் ஒன்றி விடுகிறது. இவ்வாறு யோக நெறி, மனிதன் முழுமையாக, இறை நிலையைச் சென்றடைய வழிவகை செய்கிறது.

''ஐம்பொறிகளை புலன் வழிச் செல்லாது தடுத்து, இருவகை மூச்சையும் அடக்கி, முக்கோணம், நாற்கோணம் முதலிய வடிவங்களை உடைய மூலாதாரம் உள்ளிட்ட ஆறு ஆதாரங்களின் முறைமையை அறிந்து, அவற்றிற்குத் தலைவராகிய கடவுளரையும் முறையாக நினைந்து, தலை, நடுமுடிவை எய்தி, அதன் கண் உள்ள தாமரை மொட்டை அலர்வித்து அங்கு விளங்கும் பதி மண்டலத்தினை இளகச் செய்து அதன் கண் உள்ள அமுதத்தை உடல் முழுவதும் நிரப்பிப் பேரொளிப் பிழம்பாகிய இறைவனின் வடிவை இடைவிடாது நினைந்திருப்பதாம். இயமம்,நியமம் உள்ளிட்ட எண்வகை உறுப்புக்களைக் கொண்ட அட்டாங்க யோகத்தை முழுமையாக மேற்கொள்ளல் சகமார்க்கம்''[89] மேற்கண்டவாறு சைவ சித்தாந்தம் காட்டும் யோகநெறி, சித்தர்களின் யோக முறையையே ஒத்துள்ளது.

**'ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண் சுடர்**
**ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்**
**தேனை வழி திறந்து ஏத்துவார்'**[90]

என்னும் சைவத் தோத்திரப் பாடல் வரிகளும், சித்தர்களின் யோக முறையையே வழிமொழிகின்றன.

**ஞானம்**

இறை வழிபாட்டு முறைகளின் இறுதிப் படி நிலை ஞானமாகும். தமிழ்ச்சித்தர்கள், ஆன்ம மெய்யுணர்வையே ஞானம் எனக் கொண்டனர். ஆன்மாவின் உண்மை நிலையை உள்ளுணர்வால் உணர்ந்து கொள்ளும் நிலையே ஞான நிலையாகும். ஆன்மா, ஆழ்ந்த அறிவு கொண்டு தன்னையறியும் போது ஞானம் பிறக்கிறது. அகப்பேய்ச்சித்தர்,

**'தன்னை அறிய வேணும்...**
**...பின்னை அறிவதெல்லாம்**
**பேயறிவாகுமே '**[91]

எனக் குறிக்கிறார் தன்னை அறிந்து கொள்ளும் அறிவே ஞானம் எனில், வீடு பேறு பெறுவதற்கான இன்றியாமைப் படி நிலை, ஞான மாகிய தன்னை அறியும் அறிவைப் பெறுதலாகும்.

**'அறிவை அறிவால் அறிந்தே அறியும் அறிவு தனில்**
**பிறிவு பட நில்லாமல் பிடிப்பது'**[92]

எனப் பத்திரகிரியார் ஞான நிலையை விவரிக்கின்றார். இஃது பரம்பொருளை அறியும் அறிவு. இதனைப் பரஞானம் என்றும், மெய்ஞானம் என்றும் சித்தர்கள் குறித்தனர். இம்மெய் ஞானத்தில் நிலைத்திருப்பதே வீடுபேறாகும். இதனைப் பத்தாம் திருமுறை வாக்கியம்,

**'ஞானத்தின் மிக்க அற நெறி நாட்டிலில்லை**
**ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்'** [93]

என மெய்ப்பிக்கின்றது.

தன்னை அறிதலுக்கான வழிமுறைகளைச் சித்தர்கள் தம் பாடல்களில் விளக்கியுள்ளனர். தன்முனைப் பாகிய தளையால் கட்டுண்டு நிற்கும் ஆன்மா அறியாமையில் அழுந்துகின்றது.

**'அகத்தினுடைய ஆணவத்தால் அறிவிழந்தேன் பூரணமே'** . . .[94]

என்பது பட்டினத்தார் பாடல். பிறவித் தொடரில் உழன்று, ஆன்மா பக்குவப்படும் போது தன்முனைப்பின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முனைகிறது. இந்நிலை தொடரும் தருணத்தில் அறியாமை அகல்கிறது. தன் முனைப்பு அகற்றப்பட்டு, அது தன் உண்மை இயல்பை உணருகிறது. இறையருளால் தன் இயல்பு அறிதலே தன்னையறியும் அறிவாகும். இந்நிலையில் 'தானும்', 'நானும்' ஆன்மாவை விட்டு அகன்று விடுகின்றன.

**'தானும் அழிந்து தனமும் அழிந்து நீடு**
**ஊனும் அழிந்து உயிரும் அழிந்துடன்... மனமும் அழிந்து பின்**
**நானும் அழிந்தமை நானறியேனே '** . . .[95]

என்பது திருமந்திர மொழி. காகபுசுண்டரோ 'நான்' என்ற சொல்லே இல்லை என்கிறார்.

**'நாமென்று சொல்லற்று யோகஞானம் நாட்டுகிறேன்'**[96]

என்னும் வரிகளில் தன் முனைப்பு நீங்கிய நிலையை 'யோகஞானம்' எனக் குறிக்கிறார்.

தன் முனைப்பு முழுமையாக அகன்று, ஆன்மா தன் உண்மை இயல்பினை, இறைமையைத் தன்னுள் உணரும் போது, அந்நிலையில் ஆன்மா, இறைவன் என இரு வேறு பொருட்கள் இல்லை. ஆன்மா இறைவனோடு ஒன்றுபட்டு இறை மயமாகி ஒருங்கிணைந்து விடுகிறது. இந்நிலையை,

**'சீவன் என்னச் சிவன் என்ன வேறில்லை . . .**
**. . . சீவனார் சிவனாரை அறிந்த பின்**
**சீவனார் சிவனாயிட்டிருப்பரே.'**[97]

எனத் திருமந்திரம் தெளிவுபடுத்துகிறது. இந்நிலை அனுபவத்தால் மட்டுமே முழுமையாக உணரக் கூடிய நிலையாகும். விளக்கங்களால் முழுமையாக விளக்கப்பட இயலாத பரிபூரணத்துவ நிலையாகும். ஆன்மாவிற்கும், இறைவனுக்கும் இடையே விளங்கும் இந்த ஒருமைப்பாடு புதிதாகத் தோன்றியதன்று. தன் முனைப்பைச் சார்ந்து நின்றபடியால் அறியாமையால் சூழப்பட்டு இறைமை மறைக்கப்பட்டிருந்தது. உயிர்கள் தொடர்ந்து மேற்கொள்ளும் தவ முயற்சிகளால் தன்முனைப்பு அகன்று விடும் போது, ஆன்மாவில் அதுகாறும் மறைக்கப்பட்டிருந்த இறைமை வெளிப்பட்டு, மீண்டும் ஒருமைப்படுகிறது.

சைவ சித்தாந்தம், ஞான இயல்பினைப் பசுஞானம், பாசஞானம், மெய்ஞ்ஞானம் என வகைப்படுத்துகிறது. உயிர்கள் பெற்றிருக்கும் அறிவு பசுஞானம் என்றும், உயிர்கள் தாம் சார்ந்துள்ள உலகத்துப் பொருட்களால் பெறும் அறிவு பாச ஞானம் என்றும் கொள்ளப்படுகிறது. பசுஞானம், பாசஞானம் ஆகிய இவ்விரண்டின் சேர்க்கை அஞ்ஞானமாகும். பொருட்களின் வெளித் தோற்றங்களையும் தன்மைகளையும் மெய்யெனக் காட்டும் அறியாமையே அஞ்ஞானமாகும்.

மெய்ஞ்ஞானம் என்பது இறைவனை அறியும் அறிவு. அறியாமையாகிய அஞ்ஞானம் அறவே அகன்ற பின்னர். ஆன்மா இறையுணர்வு பெறும் நிலையில், இறையருளால் பெறப்படும் அறிவு, வீடுபேற்றினை நல்கக் கூடியது மெய்ஞ்ஞானம். இதனை,

**'ஞானத்தால் வீடு என்றே நான்மறைகள் புராணம்**
**நல்ல ஆகமம் சொல்ல'**[98]

என்னும் சிவஞான சித்தியாரின் கூற்று மெய்ப்பிக்கின்றது.

‘முப்பொருள் உண்மையை உணர்ந்து. தெளிதற்குரிய சிவஞானத்தைப் பெற்று, அறிவு, அறிவோன், அறியும் பொருள் என வேறுபடுத்தி உணராது. சிவபெருமானோடு இரண்டறக் கலந்து மெய்யன்பினால் வழிபட்டு நிற்கும் நன்னெறி...’[99] என்பது ஞானநெறி என்னும் சொல்லுக்கு சைவச் சாத்திரம் தரும் விளக்கமாகும். சிவஞானத்தைப் பெறும் வழிகளாக,

**‘ஞான நூல் தனை ஓதல், ஓதுவித்தல்**
**நல்பொருளைக் கேட்பித்தல் தான் கேட்டல் நன்றா**
**ஈனம் இலாப் பொருள் அதனைச் சிந்தித்தல் ஐந்தும்**
**இறைவன் அடி அடைவிக்கும் எழில் ஞான பூசை’**[100]

என சிவஞான சித்தியார் இயம்புகின்றது. ஞான வேள்வி எனப்படுவதும் இதுவே.

அழலோம்பி வழிபாடு செய்தல் (கன்ம கேள்வி), ஐம்பொறிகளை அடக்குதல் (தவ வேள்வி), திருவைந்தெழுத்தை எஞ்ஞான்றும் எண்ணுதல் (சபவேள்வி), இறைவனின் திருவடிகளை இடையறாது நினைந்திருத்தல் (தியானவேள்வி) ஆகிய வேள்விகளை விட மிக உயர்ந்தது ஞான வேள்வியாகும். இந்நெறியே வீடு பேறு அளிக்க வல்லது. இக்கருத்தினை,

**‘.... மேலான ஞானத்தால் அரனை**
**அருச்சிப்பர் வீடு எய்த அறிந்தோர் எல்லாம்’**[101]

என அருள் நந்தி சிவாசாரியார் நிறுவுகிறார்.

ஞான வேள்வியில் நான்கு படிநிலைகள் உள்ளன. ஞானத்தில் சரியை: இறை, உயிர், தளை ஆகிய முப்பொருள்களின் இயல்பினைத் தக்க ஆசிரியர் வாயிலாக உள்ளவாறு கேட்டறிதலாகும். ஞானத்தில் கிரியையாவது, மேற்கண்டவாறு கேட்டறிந்த பொருள்களுள், உயிரே இறையை அடைவதற்குரியதென்றும், இதனைத் தடுப்பது தளைகளென்றும், அத்தளைகளைக் களைந்தாலன்றி இறைவனின் திருவடிகளை அடைய இயலாது என்றும் சிந்தித்து உணர்தலாகும். யோகமென்பது மேற்கண்டவாறு உணர்ந்த பின் தளைகளைக் களைய வேண்டும் என்றும், இறைவனைப் சென்றடைய வேண்டும் என்றும் தெளிவுடன் முயற்சித்தலாகும். ஞானத்தில் ஞானம் என்னும் இறுதிப் படிநிலை இறைவனின் திருவருளையன்றி, உயிருக்கு எவ்விதச் செயலும் இல்லை. அறிவும் இல்லை என்ற நிலையில், இறையருளை உணர்ந்து, எஞ்ஞான்றும் அதனுடன்

ஒன்றி நிற்கும் நிலையாகும். இந்நிலையை, 'நிட்டை கிளத்தல்' என சைவச் சாத்திரங்கள் இயம்புகின்றன.

**'கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை**
**கிளத்தல் என ஈர் இரண்டாம் கிளக்கில் ஞானம்**
**வீட்டை அடைந்திடுவர்'**[102]

என அருள் நந்தி சிவாசாரியார் ஞானப்படிநிலைகளை விளக்கியுரைக்கிறார்.

மெய்ஞ்ஞான உணர்வு பெற்ற நிலையிலும், உயிர்கள் முழுத்தூய்மை அடைவதில்லை. உயிர்கள் பலதிறமாதலால், மெய்ஞ்ஞானமும் அவரவர் இயல்புக்கேற்றவாறு பெருகி வரும். அப்படிப் பெருகி வரும் நிலையில் மெய்ஞ்ஞான நிழலைத் தக்க வைத்துக் கொள்ள,

**'தண் நிழலாம் பதி விதி எண்ணும் ஐந்தெழுத்தே'**[103]

என மெய் கண்டார் வழிகாட்டியருள்கிறார். உயிரின் கருத்தெல்லாம். பதிஞானத் துணை கொண்டு, வீடு பேறு எய்தி பேரின்பம் உறுதலேயாதலின், முத்தித் திருவைந்தெழுத்தை அதற்குரிய விதிப்படி தியானித்தலே சீரிய வழி என சைவ சித்தாந்தம் உரைக்கிறது. திருவைந்தெழுத்து சித்தர் நெறியிலும் விளக்கம் பெறுகிறது.

**சிவமகாமந்திரம்**

மந்திரம் என்னும் சொல்லுக்கு மறைமொழி என்றும், மறை பொருளை உள்ளடக்கியது என்றும் பொருள் கொள்ளப்படுகிறது. மந்திரம் உள்ளடக்கிய பொருளை நன்கு அறிந்துணர்ந்து, ஆழ்ந்து சிந்தித்து, மனதினுள் நிலை நிறுத்தி, முறைப்படி உச்சரித்தால் மட்டுமே, அம்மந்திரம் அதற்குரிய பலனளிக்கும்.

முழுமுதற் கடவுளான சிவபெருமானின் திருநாமங்களில் 'நமசிவாய' என்பது சிறப்புடைய திருநாமமாகும். சிவ மகா மந்திரமும் ஆகும்.

**'வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது**
**நாதன் நாமம் நமச்சிவாயவே'**[104]

என்பது ஞான சம்பந்தர் தேவாரம்.

**'படைக்கலமாக உன் நாமத்து**
**எழுத்து ஐஞ்சு என் நாவிற் கொண்டேன்'**[105]

என்பது அப்பர் பெருமானின் அருள்வாக்காகும். இந்நாமத்தைச் சித்தர்களும் தம் பாடல்களில் எடுத்தாண்டு சிவபெருமானைப் போற்றுகின்றனர்.

**'அம்பரத்துள் ஆடுகின்ற அஞ்செழுத்து நீயலோ'**[106]

என வருவது சிவவாக்கியரின் பாடல் வரியாகும்.

'நான்கு வேதத்திலும் இதயம் போல நடுவிலே இருப்பது இந்த மகா மந்திரம் ஆகும். இரண்டாம் வேதமாகிய யஜுர் வேதத்தின் நடுப்பகுதி, சிவபெருமானை வாழ்த்தி வணங்கும் மந்திரப் பகுதியான ஸ்ரீருத்திரம் என்பது, அதில் நம:சிவாய என்று கூறப்பெற்றுள்ளது. இரண்டு எழுத்துகளுக்குப் பின் இரு புள்ளிகள் மேலும் கீழுமாக உள்ளன. வடமொழி மரபுப்படி இப் புள்ளிகளை 'ஹ' என்ற ஓசையில் பாதியளவு ஒலிக்க வேண்டும். (HA) என்று ஒலிக்கும் ஆங்கில எழுத்துக்களில் (A இல்லாது H மட்டும் ஒலிப்பது போன்றது அது). இதைத் தமிழ் வழக்கில் நடுவே 'ச்' என்ற எழுத்தைச் சேர்த்து நமச்சிவாயம் என்போம்[107]. இச்சொல்லைப் பஞ்சாட்சர மந்திரம் என்றும் வழங்குவர்.

மந்திரம் என்பது அதிர்வுகளைக் கொண்ட ஒலி வடிவமாகும். சிவபெருமானே ஒலி வடிவினன் எனபது சைவ சித்தாந்தக் கருத்து.

**'ஓசையொலி யெலாம் ஆனாய் நீயே'**[108]

என்பது அப்பரடிகள் தேவாரம். ஓசை என்பது உள்ளீடுகள் அற்ற ஒரு சப்தத்தை (noise) மட்டுமே உணர்த்தும் சொல்லாகும். ஒலி என்பது பொருளுணர்வு கொண்டு, உள்ளீடுகளைத் தன்னுள் அடக்கித் தனித்த வடிவமாக எழுவதாகும் (Sound).

சிவபெருமானும், சத்தியும் பொருள் அளவில் ஒன்றே. இயங்கும் நிலையில் சத்தி எனவும், நிலைபெற்று விளங்கும் நிலையில் சிவம் எனவும் சைவ சித்தாந்தம் உறுதிபட, முடிந்த முடிவாக உணர்த்துகிறது. இங்ஙனமாயின் 'நமசிவாய' என்னும் திருவைந்தெழுத்து மந்திரத்தின் ஒலி வடிவம் ஆற்றலின் சேர்க்கையாகவே விளங்குகிறது. இம்மந்திரத்தின் ஒவ்வொரு எழுத்தையும் உச்சரிக்கும் போது அவ்வெழுத்துக்குரிய ஒலி-அதிர்வுகள் வெளிப்படுகின்றன. இவ்வதிர்வுகள் அனைத்தும் ஒன்றிணைந்து தோன்றும் ஒலி வடிவமே சிவபெருமானின் வடிவமாகும்.

அண்டங்கள் அனைத்தும் ஒலியிலிருந்தே தோற்றுவிக்கப்பட்டன என்பது சைவ சித்தாந்தக் கொள்கையாகும். **'தோற்றம் துடி அதனில்'**[109] என்றுரைக்கிறது. உண்மை விளக்கம், படைப்பு ஒலியிலிருந்தே ஆக்கம் பெற்றது என்பது இதன் கருத்தாகும்.

**'ஆதியிலே பராபரத்திற் பிறந்த சத்தம் அருவுருவாய்**
**நின்ற பரசிவமுமாகிச்**
**சோதியென்ற சிவனிடமாய்ச் சத்தியாகித் தொல்லுகில்**
**எழு வகையாந் தோற்றமாகி'**[110]

என்னும் சுப்பிரமணியர் ஞானப் பாடல் வரிகளிலும்,

**'செகம் படைத்ததும் அஞ்செழுத்தாம் பின்னும்**
**சீவன் படைத்ததும் அஞ்செழுத்தாம்'**[111]

என்னும் கொங்கணச் சித்தரின் பாடல் வரிகளிலும், உலகமும் உயிர்கள் உள்ளிட்ட உலகத்துப் பொருட்கள் அனைத்தும் ஒலி அதிர்வுகளின்றே தோற்றுவிக்கப்பட்டன என்ற சைவ சித்தாந்தக் கொள்கை மிளிர்வதைத் தெளிவாக உணர முடிகிறது.

இன்றைய அறிவியல் ஆய்வாளர்களும், அண்டத்தின் தோற்றத்தை ஆராயுங்கால், இவ்வண்டம் பேரொலியிலிருந்தே தோன்றியிருக்க வேண்டும் என 'Big Bang Theory' எனப்படும் பெரும் பேரொலிக் கொள்கை என்ற தத்துவத்தை நிறுவியுள்ளனர். இவ்வுண்மையைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, சித்தர்களும், சைவ சித்தாந்த ஆசிரியர்களும் அறிந்திருந்தனர் என்பது பெருவியப்புக்குரிய உண்மையாகும்.

நமசிவாய என்னும் மந்திரத்தில் ஒவ்வொரு எழுத்தும், ஐந்தொழில்களை இயற்றும் சிவபெருமானின் உருவத் திருமேனிகளைக் குறிப்பனவாகும். இவ்வைந்தெழுத்தும் இணைந்த வடிவம், சிவபெருமானின் அருவுருவத் திருமேனியாகிய சதாசிவத்தை உணர்த்துகின்றன. இக்கருத்தை வாலைச்சாமிச் சித்தரின் பாடலொன்று,

**'நவ்வெழுத்தே பிரமனாராகுமதில் நாராணன் மவ்வெழுத்தானேனே**
**சிவ்வெழுத்தே தெய்வருத்திரனாம் இன்னுஞ் செப்புவன் கேளடி ஞானப் பெண்ணே**
**செப்பவே வவ்வு மகேசுரனாம் வட்டஞ் சேர்ந்துபசாரம் – சதாசிவனாம்**
**தப்பிலா ஐந்தெழுத்தாலே சராசரந் தங்கியிருந்தது ஞானப் பெண்ணே!'**[112]

எனத் தெளிவுப்படுத்துகின்றது. வாலைச் சாமிச் சித்தரின் ஞானப் பாடலை,

**'ஆன அஞ்செழுத்துள்ளே ஆதியான மூவரும்'**[113]

என்னும் சிவவாக்கியரின் பாடல்வரி எதிரொலிக்கின்றது. உலக இயக்கத்திற்காகவும், உயிர்கள் உய்யும் பொருட்டும், இறைவன் கொள்ளும் அருவுருவ, உருவத் திருமேனி வடிவங்களையே இம்மந்திரம் உணர்த்தி நிற்பதால், இஃது மூல மந்திரம், மகா-மந்திரம், முதல் மந்திரம் எனப் போற்றப்படுகிறது. ஐந்தெழுத்தின் வடிவமாகவே சிவபெருமான் உள்ளமையால் சேக்கிழார் பெருமான்,

**'முந்தை முதல் மந்திரங்கள் எல்லாம் தோன்றும்**
**முதல் ஆகும் முதல்வனார் அஞ்செழுத்து'**[114]

எனப் போற்றுகிறார்.

'நமசிவாய' என்னும் இச்சொல்லில் சி, வ என்னும் இரு எழுத்துக்களும் முதன்மையானவை. அவை அம்மையப்பராகிய சிவபெருமானையும், அருட்சத்தியையும் குறிப்பதாகும். ஆகவே இவ்விரு எழுத்துக்களையும் முதன்மையாகக் கொண்டு 'சிவாயநம' என்று உச்சரிப்பதும் பொருத்தமுடையதே. இச்சொல்லில் உள்ள ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு சொல்லைக் குறிப்பனவாகும். சி-சிவன் என்பதையும், வ-சிவனின் அருளாற்றலாகிய சத்தியையும், ய-ஆவியையும், ந-மறைப்பாற்றலையும், ம-ஆணவமலத்தையும் உணர்த்தி நிற்கின்றன. இக்கருத்தினை,

**'ஈசன் அருள் ஆவி எழிலார் திரோதம், மலம்**
**ஆசில் எழுத்து அஞ்சின் அடைவாம்'**[115]

என்னும் வரிகள் உணர்த்துகின்றன.

மொழி என்பது ஒலி வடிவம், வரி வடிவம் என இரு வகை வடிவங்களைத் தாங்கி நிற்பது. வரி வடிவிலான எழுத்துக்கள் இணைந்து பொருள் உணர்த்தினால் தான் அது சொல் ஆகும். சொல்லும் பொருளும் இயைந்தே செயல்படும் இயல்புடையன. காலப்போக்கில் மொழியானது மாற்றங்களுக்குட்படும் போது சொற்கள் மாறுபடலாம். ஆனால் பொருள் மாறுபடுவதில்லை.

| | | | | |
|---|---|---|---|---|
| சி | - | சிவன் - சிவம் | - | பதி |
| வ | - | அருள் - சத்தி | | |
| ய | - | ஆவி - உயிர் - பசு | - | பசு |

| | | | | |
|---|---|---|---|---|
| ந | - | திரோதம் மறைப்பாற்றல் (மாயை) | - | பாசம் |
| ம | - | மலம் | - | ஆணவம் |

இங்ஙனம் சைவ சித்தாந்தம் காட்டும் பதி, பசு, பாசம் என்னும் முப் பொருள்களையும் தன்னுள் கொண்டு விளங்குவதே ‘சிவாயநம’ என்னும் மகாமந்திரமாகும். பதி, பசு, பாசம் ஆகிய இம்முப்பொருள்கள் அநாதியானவை என்பது சைவ சித்தாந்த உண்மை. தோற்றமும், ஒடுக்கமுமற்று, தொடர்ந்து என்றும் நிலைபேறுடைய முப்பொருள்களை உணர்த்தும், சிவாயநம என்னும் திருவைந்தெழுத்து மந்திரமும், அது உணர்த்தி நிற்கும் பொருட்களைப் போலவே என்றும் நிலைத்து நிற்கும் தன்மையுடைத்து என்னும் உண்மை தெளிவாகப் பெறப்படுகிறது. இவ்வுண்மையைச் சிவவாக்கியர்,

**‘அஞ்செழுத்தின் அநாதியாய் அமர்ந்து நின்றது’**[116]

என்ற பாடல் அடியில் நிறுவுகின்றார்.

**‘அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்**
**அஞ்செழுத்தே ஆதிபுராணம் அனைத்தும் - அஞ்செழுத்தே**
**ஆனந்த தாண்டவமும் ஆறாறுக்கு அப்பாலாம்**
**மோனந்த மாமுத்தியும்’**[117]

என்னும் உண்மை விளக்கப்பாடல் திருவைந்தெழுத்தின் பெருமையையும், சிறப்பையும் இயம்புகின்றது. முப்பத்தாறு தத்துவ நிலைகளையும் கடந்து, அவற்றிற்கு அப்பாற்பட்டு விளங்கும் முத்திப் பேற்றினை அளிக்கக்கூடியது திருவைந்தெழுத்தாகும். இதனைச் சிவவாக்கியர்,

**‘நமசிவாய அஞ்செழுத்தும் நல்கு மேல் நிலைகளும் . . .**
**. . .நமசிவாயம் அஞ்செழுத்திலே தெளிந்து தேவர் ஆகலாம்**
**சிவாயம் அஞ்செழுத்திலே தெளிந்து வானம் ஆளலாம்’**[118]

என உறுதிப்படுத்துகின்றார். இவ்வுண்மையைத் திருநாவுக்கரசு சுவாமிகள்,

**‘.. . . மனத்தடைத்துச்**
**சித்தம் ஒருக்கிச் சிவாய நமவென்று இருக்கினல்லால். . .**
**. . அத்தன் அருள் பெறலாமோ’**[119]

என நிறுவுகின்றார்.

சிவத்தைக் குறிக்கும் 'சி' கரத்தை முன் வைத்து சிவாய நம என்று திருவைந்தெழுத்தை மனத்துள் நிறுத்தி, ஒருமுகப்பட்டு தியானித்து வரும் போது, இறையருள் வெளிப்பட்டு, அத்திருவருளானது உயிர்களிடத்தே உள்ள ஆணவ மலச் சார்பினை அறவே அகற்றும். இதன் விளைவாக உயிர்கள் அறியாமையில் அழுந்தி நின்ற, இரவு போன்ற கேவல நிலையும், உலகியல் வாழ்வில் இணைந்து நின்ற மாயா, கன்மங்களுடனான, சகல நிலையும் நீங்கப் பெற்று, நிலைத்த பேரின்பப் பெரு நிலையாகிய சுத்த நிலையை அடையும். இந்நிலையே, ஆன்மா சிவமாம் தன்மை பெறும் பெருநிலையாகும். மானுடப் பிறவியின் இறுதி நிலையாகும். இக்கருத்திற்கு,

**'அண்ணல் முதலா அழகார் எழுத்து ஐந்தும்**
**எண்ணில் இராப்பகல் அற்ற இன்பத்தே - நண்ணி**
**அருள் ஆனது சிவத்தே ஆக்கும் அணுவை**
**இருள் ஆனது தீர இன்று'**[120]

என்னும் உண்மை விளக்கப்பாடல் சான்றாய் அமைகிறது. இக்கருத்தினை,

**... 'ஓம் நமசிவாயமே உணர்ந்து, மெய் உணர்ந்த பின்**
**ஓம் நமசிவாயமே உட்கலந்து நிற்குமே'**[121]

என்னும் வரிகளில் சிவவாக்கியரும் ஆமோதிக்கின்றார்.

முத்தித் திருவைந்தெழுத்தான 'சிவாய சிவ' என்பது 'சிவாயவசி' என சிவவாக்கியரால் குறிக்கப்படுகின்றது.

**'சிவாய வசி என்னவும் செபிக்க இச்சகம் எலாம்**
**சிவாயவசி என்னவும் செபிக்க யாவும் சித்தியாம்...**
**...சிவாயவசி என்பதே இருதலைத் தீ ஆகுமே'**[122]

என்னும் பாடலில் 'சிவாய வசி' என்னும் மந்திரம் முத்திப் பேற்றினைக் கூட்டுவிக்கும் என்னும் கருத்து தெளிவாகப் பெறப்படுகிறது. திருவைந்தெழுத்தின் பொருள் விளக்கத்தையும், பெருமையும், சிறப்பையும், ஓதும் முறைமையையும் அதன் பலன்களையும், சித்தர்களும், சித்தாந்த ஆசிரியர்களும் ஒருங்கே அறிவுறுத்தியிருப்பது தெளிவு.

### முத்திப்பேறு

முத்திப்பேறு என்பது பிறவாப் பெருநிலை; இறைவனோடு இரண்டறக் கலந்து ஒன்றும் இறுதிநிலை; மானுடப் பிறவியின் இலக்கு, இந்நிலையே என்பதை அனைத்துச்

சமயங்களும் ஒப்புக் கொள்கின்றன. தத்தம் கொள்கைகளையும் விளக்கங்களையும் கொண்டு, இந்நிலையை எய்த, அவை வழிகாட்டி அமைகின்றன.

**சித்தர் நெறியில் முத்திப் பேறு**

சித்தர்கள் தன் முனைப்பு அகலப் பெற்று, தன்னை யறிந்து, மனத்துள்ளே இறைவனை உணர்ந்து, இறையருளைப் பற்றி நின்று மெய்ஞ்ஞானத்தால் இறைவனோடு கலந்து ஒருமை நிலையடைவதையே, இறைமயமாதலையே வீடுபேறு என விளக்கினர்.

**'உன் மனமொடுங்கியே யுன் உள்ளொளி கண்டாற் பின்னைச்**
**சென்மமுமில்லை; அந்தச் சிவத்துளே சேர்வாய்'**[123]

என்னும் கணபதி தாசரின் நெஞ்சறி விளக்கப் பாடலும்,

**'மோட்சம் வேண்டார்கள்**
**முத்தியும் வேண்டார்கள்**
**தீட்சை வேண்டார்கள்**
**சின்மயமானவர்கள்'**[124]

என்னும் அகப்பேய்ச் சித்தரின் பாடலும், இறைமயமாதலே வீடுபேறு என்னும் சித்தர்களின் கொள்கைக்குச் சான்றுகளாகின்றன.

சித்தர் பாடல்களில் 'வீடுபேறு' என்பது 'வெளி' என்னும் சொல்லால் குறிக்கப்படுகிறது. 'வெட்டவெளி, உயர்வெளி, அம்பரவெளி, காலக்கடுவெளி, சரசமான வெளி, தூவெளி, ஏகவெளி, பரவெளி'[125] என்னும் சொற்கள் காணக்கிடைக்கின்றன. 'வெளி' என்பது அனைத்தையும் தன்னுள் அடக்கியது. அதற்கு எல்லைகளோ, வரம்புகளோ வரையறுக்க இயலாது. ஐம்பூதங்களும், அவற்றின் செயல்பாடுகளும் அறவே அகன்ற நிலையே 'வெளி' என்பது. தான் என்ற நினைவும், தன்னுணர்வும் அற்று, இறையுணர்வில் ஒடுங்கி விடும் நிலையே வெளியாகும். இந்நிலையை

**'அட்டாங்க யோகமும் ஆதாரம் ஆறும் அவத்தை ஐந்தும்**
**விட்டேறிப் போன வெளி'**[126]

என்று பட்டினத்தாரும்,

**'பிறப்பும் இறப்பும் அற்றுப் பேச்சும் அற்று மூச்சும் அற்று**
**மறப்பும் நினைப்பும் அற்று மாண்டிருப்பது'**[127]

என்று பத்திரகிரியாரும் விளக்கியுரைக்கின்றனர். ‘வெளி’ என்பது கால எல்லைகளையும் கடந்த நிலையாகும். தோற்றமும், முடிவும் அற்ற அநாதிப் பொருளான ஆன்மா, பிறவித் தொடரிலிருந்து விடுபட்டு, கால, இட, எல்லைகளைக் கடந்து நிலைத்து நிற்கும் நிலையே வெளியாகும்.

வெட்ட வெளியைச் சித்தர்கள் ‘சூனியம்’ என்னும் சொல்லால் குறிக்கின்றனர். சூனியம் என்னும் சொல்லுக்கு ‘ஒன்றுமில்லாமை’ என்ற பொருள் கொள்ளப்படுவதில்லை. தான் என்னும் தன்முனைப்பு, மனம், கரணம், உணர்வுகள் ஆகிய எல்லாவற்றிலிருந்தும் விடுபட்டு, ஆன்மா தனித்து நிற்கும் நிலையாதலால், ‘சூனியம்’ எனக் கொள்ளப்படுகிறது. இந்நிலையை மேலும்,

**‘விண்ணேது வெளியேது வொளியங்கேது?...**
**....ஒண்ணிரண்டேது சமரசந்தானேது**
**உற்றுப்பார் வெட்டவெளி யொன்றுமில்லை**
**எண்ணேது நினைவேதிங் கறிவு மேது**
**ஏகமாய்க் கலந்துத்தி யிடத்தைக் காணே’**[128]

என்று சட்டைமுனி நாயனார் விவரித்துரைக்கிறார். காட்சிகளாலும், கருத்துக்களாலும் முழுமையாக விளக்க முடியாத அரியதோர் அனுபவ நிலை இது. ஆன்மா தன்னுள் உறையும் இறையை, இறை ஞானத்தால் அறியும் போது இறையருளால், ஆன்மா இறையுடன் இணையும் இந்நிலையை, இவ்வனுபவத்தைச் சொற்களால் விவரிக்க இயலாது என சிவவாக்கியர்,

**‘ஐயன் வந்து என்னுளம் புகுந்து கோயில் கொண்ட பின்**
**வையகத்தில் மாந்தர் முன்னம் வாய் திறப்பது இல்லையே’**[129]

என்றுரைக்கிறார். இந்நிலையை,

**‘மோன நிலையில் முத்தி உண்டாம்’**[145]

என்று இடைக்காட்டுச் சித்தரும் வழிமொழிகிறார்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு வகை வழிபாட்டு முறைகளில், ஞானநெறி ஒன்றே உயிர்களை இறைவனோடு இணையச் செய்யும் வீடுபேற்று நிலையைக் கூட்டுவிக்கும் என்பது சித்தர்களின் கொள்கையாகும்.

**'சரியை ஆகாதே – அகப்பேய்**
**சாலோகங் கண்டாயே**
**கிரியை செய்தாலும்**
**கிட்டுவது ஒன்றுமில்லை**
**யோகம் ஆகாதே – அகப்பேய்**
**உள்ளது கண்டக்கால்**
**தேக ஞானமடி**
**தேடாது சொன்னேனே'**[131]

என்னும் அகப்பேய்ச் சித்தரின் பாடல் இக்கருத்திற்குச் சான்றாய் அமைகிறது. உயிர்கள் ஞான நெறியில் நின்று, இறைவனருளால், இறையோடு இரண்டறக் கலந்து நிற்கும் நிலை ஏற்படும் வரை பல பிறவிகள் எடுக்க நேரிடும் என்னும் கருத்தை,

**'தாங்கி நின்ற சரியையிலே நின்று சடம் வீழில்**
**தப்பாது கிரியையுள் ளே சாரப் பண்ணும்**
**வாங்கி நின்ற கிரியை விட்டு விழுந்த தானால்**
**மகத்தான உடலெடுத்து யோகம் பண்ணும்**
**ஓங்கி நின்ற கிரியை விட்டு விழுந்த தானால்**
**உத்தமனே உயர்ந்து நின்ற ஞானத் தோற்றும்**
**பாங்கில் நின்ற அச்சென்மம் மவுன முத்தி**
**பரிவாக வாய்த்தவர்கள் அறிந்து கொள்ளே'**[132]

என்னும் சட்டை முனி நாயனாரின் பாடல் அறிவுறுத்துகிறது.

**சைவ சித்தாந்தம் காட்டும் முத்திப் பேறு**

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு நிலைகளிலான இறைவழிபாட்டின் பயன்களை, சைவ சித்தாந்தம் முறையே சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என இயம்புகின்றது. சரியை நெறியில் நின்று வழிபாடு செய்தவர்கள் சிவலோகம் அடைந்து இன்பங்களை அனுபவிப்பர். இஃது சாலோகம் ஆகும். கிரியை முறையில் வழிபடுபவர்கள், சிவலோக இன்பங்களைப் பெறுவதுடன், சிவபெருமானுக்கு அருகில் இருக்கும் பேறு பெறுவர். சாமீபம் என்பது இந்நிலையே ஆகும். யோக நெறியாளர்கள், சிவ பெருமானின் திருமேனிகளுள் ஒன்றைப் பெற்று சிவபோக அனுபவங்களுடன் இருப்பர். இந்நிலை 'சாரூபம்' என்பது. ஞான நெறி பயின்றோர், சிவபெருமானின் திருவடியில் இரண்டறக் கலந்து, நிலைத்த பேரின்ப நிலையை எய்துவர். இந்நிலை சாயுச்சிய நிலையாகும்.

சைவ சித்தாந்த மெய்யியலில், முத்திநிலைகள், பதமுத்தி, பரமுத்தி, சீவன் முத்தி என வகைப்படுத்தப்படுகின்றன. பதமுத்தி என்பது சாலோக, சாமீப, சாரூப நிலைகளாகும். இதனை சிவஞான சித்தியார்,

**....ஞானத்தால் எய்தும் முத்தி**
**முடிவு என்பர், மூன்றினுக்கும் முத்தி பதம் என்பர்.**[133]

என இயம்புகிறது. பதமுத்தி நிலைகளில் நிற்கும் உயிர்கள்,

**. . .'ஆதி அருள் பெற்றவர்கள் நித்த உருவத்தைப்**
**பெற்றிருக்கை முத்தி எனில் பெறும் பதமே: இதுவும்**
**இனாது நிலை இது தானும்'. . .**[134]

என்னும் அருணந்தி சிவாசிரியாரின் கூற்றுப்படி, உடலோடு இயைந்த நிலையில், மீண்டும் பிறவிக்கு வருவதற்கான வாய்ப்புகள் உண்டு. உடல் உளதாகும் வரை வினைகளும் உண்டு. ஆணவ மலத் தொடர்பும் உண்டு. தளைகளை அகற்றுவதற்கான வழியே பிறவியாகும். தளைகள் உள்ளவரை பிறவிகளும், உடலும் உண்டு. உடலோடு இயைந்திருக்கும் நிலை இறுதி நிலையாகாது.

பரமுத்தி என்பது, உயிர்கள் மீண்டும் பிறவிக்கு வாராப் பெருநிலையாகும். இந்நிலை தளைகள் அனைத்தும் நீங்கி, உயிர்கள் இறைவனுடன் இரண்டறக் கலந்து நிற்கும் சாயுச்சிய நிலையாகும். இதுவே இறுதி நிலையாகும்.

இறை, உயிர், தளை ஆகிய இம்மூன்று பொருட்களும் அநாதியானவை. எவ்விதக் குறைபாடுகளுமின்றி தத்தம் இயல்புகளில், முழு நிறைவில் என்றும் உள்ளவை. சகல நிலையில், உயிர்களை, உலக மாயையில் மயங்கச் செய்து. அவற்றைக் கட்டுப்படுத்தி, பதியை உயிர்களிடமிருந்து மறைத்து வந்த ஆணவ மலம், முத்தி நிலையில் பதியை உயிர்களுக்குக் காட்டி நிற்கிறது. இவ்வுண்மைக்கு, மனவாசகங்கடந்தார்.

**'சுத்த அனுபோகத்தைத் துய்த்தல் அணு; மெத்தவே**
**இன்பம் கொடுத்தல் இறை; இத்தை விளைவித்தல் மலம்'**[135]

எனச் சான்றளிக்கிறார். இத்தை என்னும் சொல், பேரின்ப நுகர்ச்சி எனப் பொருள் கொள்ளப்படுகிறது.

முத்தி நிலையில் மும்மலங்களும் இல்லை எனக் கொள்வது சைவ சித்தாந்த சற்காரிய வாதக் கொள்கைக்கு முரண்பாடானதாகும். அவை தத்தம் நிலைகளில் என்றும் உள்ளவை. முத்தி நிலையில் உயிர்களுக்கு இறையருளைக் காட்டித் தாம் மறைந்து, உயிர்களிடமிருந்து அகன்று நிற்கின்றன. முத்தி நிலை இருபடிநிலைகளில் நிகழ்கிறது.

முதல்படி நிலையில், ஆன்மாவானது தன்முனைப்பு நீங்கப்பெற்று, நல்வினைகளின் விளைவான இன்பத்தையும் தீவினைகளின் விளைவான துன்பத்தையும், விருப்பு வெறுப்பின்றி ஒன்றாகக் கருதும் நிலையில், அவற்றால் ஏற்படும் கன்மம் துண்டிக்கப்பட்டு இரு வினை ஒப்பு நிகழ்கிறது. இந்நிலையில் தன்முனைப்பின் ஆற்றல், ஆன்ம அறிவை மயக்க இயலாமல், வலிமை குன்றி இருக்கின்ற சமயத்தில் மலபரிபாகமும் நிகழ்கிறது. ஆன்மா இறையருளை விழைந்து நிற்கிறது. இறைமை என்றுமே உயிர்களிடத்தில் பதிந்தவொன்றாகும். ஆன்ம விடுதலையின் ஒவ்வொரு படிநிலையின் போதும் இறையருள் உயிர்களுடன் கலந்தே நிற்கிறது. அந்நிலையில் அது திரோதன சத்தியாக மறைந்து நின்று. உயிரானது உலக போகங்களை அனுபவித்து தன்முனைப்பின் ஆற்றலை அகற்ற உறுதுணை புரிந்து செயல்படுகிறது. தன்முனைப்பு பரிபாகம் ஆகும் பொருட்டு அதற்கு அனுகூலமாக நின்ற திரோதன சத்தி, இரு–வினை ஒப்பும், மலபரிபாகமும் நிகழ்ந்து விட்ட நிலையில், சிற்சத்தியாகி ஆன்மாவில் பதிகிறது. இந்நிகழ்வு சத்திநிபாதம் எனக் குறிக்கப் பெறுகிறது. இந்நிலையே அருள்நிலை எனப்படும் துரிய நிலையாகும். இந்நிலையை, இருள் நீங்கி சூரிய உதயத்திற்கு முன் உள்ள ஒளி நிலை (Dawn stage) க்கு ஒப்பிடலாம்.

இரண்டாவது படிநிலையில், மலங்கள் ஆன்மாவிலிருந்து முழுமையாக அகன்று விட்ட நிலையில் இறைவனின் திருவருட்சத்தியை முழுவதுமாக உயிர்கள் சார்ந்து நிற்கும் நிலை நிகழ்கிறது. இப்பேரின்ப நிலை, இன்புறு நிலை என்றும் துரியாதீத நிலை என்றும் குறிக்கப்பெறுகிறது. இது சூரிய ஒளி முழுவதும் வெளிப்பட்டு, இருள் முழுவதுமாக அகன்ற (Sun Rise) நிலையைப் போன்றது.

முத்தி நிலையில், இறைவனோடு உயிர் இணைந்து நிற்கையில், சிவமும், உயிரும், தம்முள் வேற்றுமையின்றிக் கலந்து நிற்கும். இறையும் உயிரும் வெவ்வேறு தன்மைகள் கொண்ட இரு வேறு பொருட்கள் ஆயினும், அவை வேறு அறக் கலந்து நிற்கின்றன. இக்கருத்தினைத் திருவருட்பயன்,

**'ஒன்றாலும் ஒன்றாது; இரண்டாலும் ஓசை எழாது**
**என்றால் ஒன்று அன்று இரண்டும் இல்'**[136]

என விளக்குகிறது. இறைவனும், ஆன்மாவும் ஒரே இயல்புகளைக் கொண்ட பொருட்களாக இருக்குமானால், அவை ஒன்றாக வேண்டிய தேவை இல்லை. முத்தி நிலையில் அவையிரண்டும் வேறு வேறு ஆக நின்றால், உயிருக்கு வீடுபேறும், நிலைத்த பேரின்பமும் கிடைப்பதில்லை. அவையிரண்டும் வேறு அற நிற்பதால் ஒரு பொருளாகவும் ஆவதில்லை. இரு தனித்தனி பொருட்களாகவும் இல்லை. இக் கோட்பாட்டினைத் திருவுந்தியார்,

**'அவன் இவன் ஆனது அவனருளால் அல்லது**
**இவன் அவன் ஆகான் என்று உந்தீபற**
**என்றும் இவனே என்று உந்தீ பற'**[137]

எனத் தெளிவுபடுத்துகிறது. முத்தி நிலையில் ஆன்மா இறையுடன் ஒன்றுபட்ட போதிலும் இறைவனுக்குரிய எண் குணங்களும், இறைவன் இயற்றும் ஐந்தொழில்களும் உயிர்களுக்கு உரித்தாவதில்லை. இறையருளால் பெறப்படும் பேரின்ப நுகர்ச்சி மட்டுமே உயிர்களுக்கு உரித்தாகுகிறது. இக்கருத்தினை,

**'... அவனிதனில்**
**தோன்று மரப் புல்லூரி தொல் உலகில் அம்மரமாய்**
**ஈன்றிடுமோ சொல்லாய் இது'**[13] 8

என எளியதோர் உவமை கொண்டு திருக்களிற்றுப்படியார் நிறுவுகிறது.

முத்தி நிலையில் இறைவனும், உயிரும் பிரிப்பின்றிக் கலந்து நிற்கும், அத்துவிதக் கலப்பை 'நாவும் தேனும் என்னும் மிக எளிய உவமையால் நா.பாஸ்கரன் அவர்கள் விளக்குகிறார். 'தேனும் நாக்கும் ஒன்றே என்றால் அவை பிரிந்து கூட வேண்டியதில்லை. அவை இரண்டும் சேராது வேறு வேறாக இருக்குமெனில், நாவானது தேனின் சுவையைச் சுவைக்க இயலாது. ஆனால் நாவில் தேன் சேரும் போது சுவை தெரிகிறது. அதுபோல இறைவனும், உயிரும், கலப்பால் பிரிக்கக் கூடாத ஒன்றாயும், பொருள் தன்மையால் வேறாகவும் இருக்கும்'[139]

பரமுத்தி நிலையில், சிவமும், ஆன்மாவும் சிறிதும் பிரிப்பின்றி, ஒன்றாய்க் கலந்து நிற்கையில், காண்பவனாகிய ஆன்மாவும் சிவம். காட்சிப் பொருளும் சிவம். காட்சியாகிய சிவ ஞானமும் சிவமே, என்னும் நிலையில் மூவகைப்பட்ட தன்மையும் வேறாகத்

தோன்றாத பேரின்பப் பெருநிலையாகும். இத்தகைய பரமுத்தி நிலையின் நிலைத்த இன்பத்தின் தன்மையை முழுமையாக விளக்கவும் இயலாது; உணர்ந்து கொள்ளவும் இயலாது.

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நெறிகளில் நின்று தவ முயற்சிகள் மேற்கொண்டதன் விளைவாகக் கிடைக்கப்பெற்ற இறையருளால், பதிஞானத்தால் உயிர்கள் இவ்வுலகில் பிறவியெடுத்த நிலையிலேயே பரமுத்தி எய்தப் பெறுவர். உடலுடன், உலகத்தில் இருக்கும் நிலையிலேயே பெறும் பரமுத்தியே சீவன் முத்தியாகும். சீவன் முத்தி நிலையில் உள்ள உயிர்கள், உடலுடன் இருக்கும் நிலையிலும் அதனைப் பற்றிய உணர்வு இன்றி, இறை ஞானத்தில் இடைவிடாது பதிந்து நிற்பர். இந்நிலையை,

**'சித்தாந்தத்தே சிவன் தன் திருக்கடைக்கண் சேர்த்தி**
**செனனம் ஒன்றிலே சீவன் முத்தராக**
**வைத்து ஆண்டு மலம் கழுவி ஞான வாரி**
**மடுத்து ஆனந்தம் பொழிந்து வரும் பிறப்பை அறுத்து**
**முத்தாந்தப் பாத மலர்க்கீழ் வைப்பன்'...**[140]

என சிவஞான சித்தியார் உரைக்கிறது.

சீவன் முத்தர்கள் தவ நிலையில் விளங்கும் உயிர்களாவர். உயிர் பிறவிக்கு வந்து உடலைப் பெற்றவுடன் புலன்களின் இயக்கம் நடைபெறுகிறது. இதன் காரணமாக வினைகள் நிகழ்கின்றன. சீவன் முத்தர்களின் தவ முயற்சிகளால், இருவினை ஒப்பு நிகழ்ந்து விட்டமையால். இருவினைகள் விளைவிக்கும் இன்ப துன்பங்கள் அகன்று விடுகின்றன. மலபரிபாகம் ஏற்பட்டு விட்டமையால், ஆணவமலமும் வலிமை குன்றி நலிந்து நிற்கும் நிலை ஏற்படுகிறது. இவர்களது வினைகள் நீங்கும் முறையை உமாபதி சிவாசாரியார்,

**'ஏன்ற வினை உடலோடு ஏகும்; இடையேறும் வினை**
**தோன்றில் அருளே சுடும்'**[141]

என்னும் வரிகளில் தெளிவுபடுத்துகிறார். ஏன்ற வினை என்னும் சொல் உடலை ஏற்றுக் கொண்டதால் ஏற்படும் வினை – பிராரத்தம். இவ்வினை அவர்களது உடல் நீங்கும் போது நீங்கி விடும். அவர்களுக்கு நிகழக் கூடிய பரமுத்தி நிலைக்கும். அவர்களது தேகத்தின் முடிவுக்கும், இடையில் ஏதேனும் (ஆகாமியம்) நிகழுமாயின். அவ்வினையை

இறையருளே அகற்றிவிடும். சீவன் முத்தர்கள் செய்யும் செயல்கள் இறையருளால் நிகழ்வனவேயன்றி, அவை அவர்களுடைய செயல்கள் ஆகா. எனவே அவற்றின் விளைவுகள் அவர்களைச் சாராது என்ற கருத்து பெறப்படுகிறது. சீவன் முத்தர்களின் நிலையைத் திருவருட்பயன்,

**'உள்ளும் புறம்பும் ஒரு தன்மைக் காட்சியர்'**[142]

என இயம்புகின்றது. எல்லாம் சிவ மயமாகக் காணும் நிலைத்த ஞான நிலையினை எய்தப் பெற்றோரே 'சீவன் முத்தர்கள்' என்ற கருத்து தெளிவாகின்றது.

சீவன் முத்தர்களின் சிறப்பியல்புகளை, மெய்கண்டார்,

**'செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா**
**அம்மலம் கழீஇ, அன்பரொடு மரீஇ**
**மால் அற நேயம் மலிந்து அவர் வேடமும்**
**ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே'**[143]

என்னும் அடிகளில் விளக்குகிறார். காட்சிப் பொருட்கள் அனைத்தையும், சிவமாகவே எண்ணுவது, சீவன் முத்தர்களின் மெய்ஞ்ஞான நிலையாகும். அம்மையே அப்பா என்னும் திருஞான சம்பந்தப் பெருமானின் அழைப்பினை ஏற்று, சீர்காழிப்பதியில் சிவபெருமான் காட்சி தந்தமையும், திருப்பெருந்துறை ஆலயத்துள் குரு வடிவேற்று மணிவாசகப் பெருமானை ஆட்கொண்டருளியமையும், திருவருட்துறையில் நம்பியாரூரர் மறையவரை அழைத்தவுடன், சிவபெருமான் காட்சியருளியமையும் நேயம் மலிந்து அவர் வேடமும், ஆலயந்தானும் அரனெனத் தொழுத சீவன் முத்தர்களின் வழிபாட்டிற்கு சிவபெருமான் இணங்கியமை என மெய்கண்டாரின் விளக்கத்திற்கு பன்னிரண்டாம் திருமுறை சான்றுகள் அளிக்கின்றது. சீவன் முத்தர்களின் இறுதி நிலையைச் சிவஞான சித்தியார்,

**......'குறைவு இன்றி**
**கண்ணுதல் தன் நிறைவு அதனில் கலந்து, காயம்**
**கழிந்தக்கால் எங்குமாய்க் கருது அரன் போல் நிற்பன்'**[144]

என, யாண்டும் நிலைபெற்று விளங்கும் இறைவனுடன் கலந்து பரமுத்தி எய்துவர் என விளக்குகிறது. பரமுத்தி நிலையில் இறைவனது திருவருளில் அழுந்தி நிற்கும் சீவன் முத்தர்களை அணைந்தோர் என சைவ சித்தாந்தம் குறிக்கிறது. அணைந்தோர் என்னும்

சொல்லுக்கு 'ஞானம் நிகழ்ந்த செம்மையர், குரு அருள் பெற்றவர்கள்' என்று பொருள் கொள்ளப்படுகிறது.[145]

ஞான நெறி நின்று சீவன் முத்தி நிலையிலுள்ளோரை, 'இவ்வுலகில் ஞான நிட்டை கைவரப் பெற்றோர்க்கு நலம் தீங்குகள் இல்லை. அவர்கள் விரும்பத்தக்கது ஒன்றும் இல்லை. அவர் ஒழுக வேண்டிய சமய ஒழுக்கங்களும் இல்லை. அவர் செயத்தகும் தவமும் இல்லை. அவர்கள் மேற்கொள்ள வேண்டிய நோன்புகளோ, நால்வகை நெறி ஒழுக்கங்களோ எவையும் இல்லை. மனத்தால் எண்ணற்குரிய பாவனைகளும் இல்லை. சிந்தனையும், பந்தங்களும், தவ வேடங்களும், புலன் வழி உணரும் உணர்வுகளும் அவர்களுக்கில்லை. அகக்கருவிகளால் பற்றுதற்குரிய பற்றுக்களும் இல்லை. சிறுவர்கள், பித்துப்பிடித்தோர், பேய் பிடித்தோர் ஆகியோர் தம் இயல்புகளை உடையவராய், களிப்பு மிகுந்து ஆடல் பாடல்களை இயற்றினும் இயற்றுவர்'[146] என சிவஞான சித்தியார் விவரிக்கின்றது. மேற்கண்ட விளக்கம் சித்தர்களுக்கு முழுமையாகப் பொருந்தி அமைகிறது.

சீவன் முத்தி நிலையிலுள்ள ஞானியரின் இயல்பினை,

**'ஓங்கு உணர்வின் உள்ளொடுங்கி உள்ளத்துள் இன்பு ஒடுங்கத்**
**தூங்குவர்; மற்று ஏது உண்டு சொல்'**[147]

எனத் திருவருட்பயன் குறிக்கிறது. தூங்குதல் என்ற சொல் 'சிவனையே நினைத்து, வேறனுபவம் ஏதுமின்றி, சிவமாந்தன்மை பெற்று, பேரானந்த நிட்டை நிலையில் இருத்தல்' எனப் பொருள் கொள்ளப்படுகிறது. இக்கருத்தை,

**'ஆங்காரம் உள்ளடக்கி, ஐம்புலனைச் சுட்டறுத்து**
**தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது'**[148]

என்னும் பத்திரகிரியாரின் பாடல் எதிரொலிக்கின்றது.

**'அஞ்ஞானம் போயிற்று என்று தும்பீபற – பர**
**மானந்தங் கண்டோம் என்று தும்பீபற**
**மெய்ஞ்ஞானம் வாய்த்ததென்று தும்பீபற**
**...தொல்லை வினை நீங்கிற்று என்றே தும்பீபற...**
**...பரமுத்தி நிலை சித்தியென்றே தும்பீபற**[149]

என்னும் இடைக்காட்டுச் சித்தரின் பாடல் வரிகள், சித்தர்கள், பரமுத்தி நிலையை, இவ்வுலகத்திலேயே எய்திய சீவன்முத்தர்கள் என்னும் கருத்தை உறுதிப்படுத்துகிறது.

சைவ சித்தாந்தத் தத்துவக் கூற்றுப்படி, பருவுடல் முடிவில், எங்கும் நிலைத்து விளங்கும் இறைவனுடன் ஒத்து நிற்கும் நிலையைச் சித்தர்கள் எய்துவர் என்ற உண்மை

**'ஒழிந்தேன் பிறவி உறவென்னும் பாசங்**
**கழிந்தேன் கடவுளும் நானும் ஒன்றானேன்'...**[150]

என்னும் திருமந்திர மொழிகளினின்றும்,

**'நாதனுடன் சமமாக நாங்களும் வாழ்வோம்'**[151]

என்னும் பாம்பாட்டிச் சித்தரின் பாடலினின்றும் பெறப்படுகிறது. இங்ஙனம் சைவ சித்தாந்தம் காட்டும் சீவன் முத்தர் என்னும் வகையில் சித்தர்களும் அடங்குவர் என்னும் உண்மை தெள்ளிதின் நிறுவப்படுகிறது.

சித்தர் நெறியும், சைவ சித்தாந்த மெய்யியலும், வாழ்வியற் பண்புகளை அறிவுறுத்தி, முறையான நல் வாழ்விற்கு வழிகாட்டின. சாதிப் பாகுபாடுகளைக் கடிந்துரைத்து அமைதியான சமுதாயம் உருவாக்கம் பெற வழி வகை செய்தன. இவை இயையும்போது மனித மனத்துள் துளிர் விடும், இறைவன் மீது அன்பு வழித்தோன்றும் இறையுணர்வே இறை பத்தியாகும் என்பது இவ்விரு நெறிகளின் ஒருமித்த கருத்தாகும்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நால்வகை வழிபடு முறைகளும் இவ்விரு நெறிகளிலும் குறிக்கப்படுகின்றன. ஞானமே முத்திப் பேற்றிற்கான இறுதிப் படிநிலை என்பதை இவ்விரு நெறிகளும் ஒப்புக் கொள்கின்றன. சாலோக, சாமீப, சாருப, சாயுச்சிய முத்திநிலைகள் சைவ சித்தாந்த மெய்யியலில் விளக்கப்படுகின்றன. சித்தர் நெறியிலும் இவை குறிக்கப்பெறுகின்றன. எனினும், சித்தர்கள் சீவன் முத்தர்களானமையால் சாயுச்சிய முத்தி நிலையென்னும் பிறவாப் பெருநிலையையே முத்திப் பேறு என்று அறிவுறுத்துகின்றனர்.

# குறிப்புகள்

## இயல் - 5

1. Ganapathy T.N. – The philosophy of the Tamil Siddars (New Delhi – Indian Council of Philosophical Research – 1993) Page No :190

2. திருமந்திரம் – எண்கள் : 273, 275.

3. இராமலிங்க அடிகள் - திருவருட்பா (ஊரன் அடிகள் - பதிப்பாசிரியர் - வடலூர் - சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம் - 1982) ப: 289.

4. கபில தேவ நாயனார் - சிவபெருமான் திருவந்தாதி (பதினோராம் திருமுறை. முதல் தொகுதி (சென்னை - தமிழ் நிலையம் - 1995) ப: 508.

5. சிவஞான சித்தியார் - பாடல் எண். 323.

6. திருமந்திரம் – எண் : 252

7. சீத்தலைச் சாத்தனார் - மணிமேகலை - (சாமிநாதையர் உ. வே. முதற்பதிப்பு) 25ம் காதை - அடி எண்கள், 229-231.

8. அறிவொளி அ. – சித்தர் பாடல்கள் மூலமும் உரையும் - மு.நூல் - முதற்பாகம் - ப: 343.

9. மேற்படி நூல் – ப: 384.

10. மேற்படி நூல் –இரண்டாம் பாகம் - ப: 948

11. மேற்படி நூல் – ப: 696

12. மேற்படி நூல் – ப: 1072.

13. திருக்குறள் – எண்: 309.

14. சிவஞானசித்தியார் –பா. எண். 114

15. சித்தர் பாடல்கள் – மூலமும் உரையும் - மு.நூல் - ப. 949, 951.

16. திருமந்திரம்- பாடல் எண்கள் : 201- 203.

17. சித்தர் பாடல்கள் – மூலமும் உரையும் - மு.நூல். - முதற்பாகம் - ப : 378

18. மேற்படி நூல் – இரண்டாம் பாகம் - ப: 625.

19. மேற்படி நூல் – ப 694.

20. மேற்படி நூல் - ப: 950.

21. திருமந்திரம் – எண். 200.

22. திருநாவுக்கரசர் தேவாரம் - நான்காம் திருமுறை - மு.நூல்- பாடல் எண். 184.

23. மேற்படி நூல் – ஐந்தாம் திருமுறை – பாடல் எண். 542.

24. இராமசுப்பிரமணியம். வ.த. – (உரை) திருநாவுக்கரசு சுவாமிகள் - தேவாரம் (சென்னை - தமிழ் நிலையம் - 1995) ப: 344.

25. சிவஞான சித்தியார் – பாடல் எண்:113.

26. பரிமேலழகர் உரை – திருக்குறள் – புலியூர்க்கேசிகன் - பதிப்பாசிரியர் (சென்னை - பூம்புகார் பதிப்பகம்- 1991) ப: 157.

27. சுப்பிரமணியன். என்.எஸ். – Encyclopaedia of the upanisads (New Delhi : Sterling Publishers Pvt Ltd., 1985). P: 494.

28. வையாபுரிப்பிள்ளை.எஸ். – (பதிப்பு) – திவ்யப்பிரபந்தம் (சென்னை எஸ்.ராஜம், 1955) முதலாயிரம், திருப்பல்லாண்டு. 4.

29. Edges Thurston & K.Rangachari – Castes and Tribes of Southern India. Vol. IV (Chennai – Asian Educational Service – 1987). P: 249.

30. திருநாவுக்கரசர் தேவாரம் - ஆறாம் திருமுறை - பாடல் எண். 938

31. சித்தர் பாடல்கள் : மூலமும் உரையும் - மு.நூல் - முதற்பாகம் - ப: 390, 392.

32. சித்தர் பாடல்கள் : – மூலமும் உரையும் - மு.நூல் - இரண்டாம்பாகம் - ப: 565.

33. இராமலிங்க சுவாமிகள் - திருவருட்பா - (சென்னை - அருட்பெருஞ்சோதி அச்சகம்,1942) ஜீவ காருண்ய ஒழுக்கம், மூன்றாம் பிரிவு 1. ப: 39.

34. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் - முதற்பாகம் - ப: 276.

35. மேற்படி நூல் – ப: 223.

36. மேற்படி நூல் – ப: 128, 113.

37. சித்தர் பாடல்கள் - மூலமும், உரையும் -மு.நூல் - முதற்பாகம் - ப: 94, 157.

38. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் - ஐந்தாம் திருமுறை- முந்நூல்,பாடல் எண்: 997,998, 1000, 1001, 1003.

39. திருநாவுக்கரசு சுவாமிகள் –தேவாரம் – ஐந்தாம் திருமுறை- மு.நூல் - ப.31.

40. திருமூலர் – திருமந்திரம் – பா.எண்: 274.

41. ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - முதற்பாகம் - மு.நூல் - ப:37.

42. திருஞான சம்பந்த சுவாமிகள் – தேவாரம் – மு.நூல் – மூன்றாம் திருமுறை – இரண்டாம் தொகுதி – ப.961.

43. திருநாவுக்கரசு சுவாமிகள் – தேவாரம் – ஐந்தாம் திருமுறை - மு.நூல் - ப:105.

44. சுப்பிரமணியன் ச.வே – தமிழ் இலக்கியவரலாறு (சென்னை – மணிவாசகர் பதிப்பகம் – 2000) ப.164.

45. இராமலிங்க அடிகள் – திருவருட்பாத் திரட்டு-ஊரன் அடிகள்– பதிப்பாசிரியர் (வடலூர் – சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம் – 1982)ப.165.

46. நாராயணன் க. – சித்தர் தத்துவம் (சென்னை – தமிழ்ப் புத்தகாலயம் – 1988) ப:115.

47. சித்தர்பாடல்கள் – மு.நூல் - ப: 194.

48. மேற்படி – நூல் - ப:223.

49. திருவாசகம் – மு.நூல் – ப.103.

50. ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – முதற்பாகம் - மு.நூல் - ப:37.

51. அருணந்தி சிவாசாரியார் – சிவஞான சித்தியார் – மு.நூல் - பாடல் எண்: 182.

52. சித்தர் பாடல்கள் – மு.நூல் - முதற்பாகம் - ப.96.

53. திருமந்திரம் – மு.நூல் - செ.எண்: 1446.

54. அறிவொளி அ. – சித்தர் பாடல்கள் : மூலமும் உரையும் - மு.நூல் - இரண்டாம் தொகுதி - ப: 655.

55. கணபதி த.ந. – தமிழ்ச் சித்தர் மரபு (சென்னை – ரவி பப்ளி கேஷன்ஸ் – 2004) ப.120.

56. சிவஞான சித்தியார் – செ. எண்: 326.

57. அறிவொளி அ. – சித்தர் பாடல்கள்,மு.நூல் - இரண்டாம் தொகுதி – ப: 693, 694, 695.

58. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – மு.நூல் - இரண்டாம் பாகம் ப:22.

59. கணபதி த.ந. – தமிழ்ச் சித்தர் மரபு – மு.நூல் - ப:217.

60. உமாபதி சிவாசாரியார் – சிவப்பிரகாசம் - நூற்பா எண்: 10.

61. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – முதற்பாகம் - ப:162.

62. கபிலர் – குறிஞ்சிப்பாட்டு அடி எண்: 5–7. கடியலூர் உருத்திரங்கண்ணனார் – பட்டினப்பாலை அடி எண்: 85 – 88.

63. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – முதற்பாகம் - ப– 169.

64. மேற்படி நூல் – ப.184.

65. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் – நான்காம் திருமுறை – மு.நூல் - ப.8.

66. திருவாசகம் – மு.நூல் - ப.46.

67. சேந்தனார் – திருவிசைப்பா – ஒன்பதாம் திருமுறை – (சென்னை-வர்த்தமானன் பதிப்பகம் –1998) ப.84.

68. மாணிக்கவாசகம். இரா.– நம்நாட்டுச் சித்தர்கள் - மு.நூல் - ப.343.

69. திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனார் – திருக்களிற்றுப்படியார் – பா. எண்: 81.

70. ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – மு.நூல் - முதற்பாகம் ப.83, 85.

71. மேற்படிநூல் – ப.111, 114.

72. மேற்படிநூல் – ப.199.

73. சித்தர் பாடல்கள் – (சென்னை - பூம்புகார் பதிப்பகம் – 1992) ப. 237.

74. திருக்களிற்றுப்படியார் – மு.நூல் - பா.எண். 88.

75. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் – ஆறாம் திருமுறை – மு.நூல் - ப. 220.

76. திருவாசகம் – மு.நூல்- ப.84.

77. மேற்படிநூல் – ப.3.

78. தேசிய விநாயகம் பிள்ளை சி. – மலரும் மாலையும் (சென்னை – பாரி நிலையம் – 1959) ப: 15, 16.

79. திருமந்திரம் – பா.எண். 1857

80. சேக்கிழார் – திருத்தொண்டர் புராணம் – சுருக்கம் – தொகுப்பு : சேக்கிழார் தாசன் – (ஈரோடு – அறக்கட்டளை – 1988) கண்ணப்ப நாயனார் புராணம் – ப: 31. பூசலார் நாயனார் புராணம் – ப. 172.

81. மாதவச் சிவஞான யோகிகள் — சிவஞான மாபாடியம் (சென்னை – உலகத் தமிழ் கல்வி இயக்கம் – 1986) ப.401.

82. இராமலிங்கம் பிள்ளை – நாமக்கல் கவிஞர் – திருக்குறள், மூலமும் தெளிவுரையும் (சென்னை – வர்த்தமானன் பதிப்பகம் – 1999) ப:11.

83. இளவழகனார் – சிவஞான போத ஆராய்ச்சி – (சென்னை – கழகம் – 1979) ப.300.

84. சேக்கிழார் – பெரியபுராணம் (திருவாவடுதுறை – ஆதீன வெளியீடு – 1988) ப.94.

85. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் – ஐந்தாம் திருமுறை- மு.நூல்- ப.79, 131.

86. ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – மு.நூல் - முதற்பாகம், ப.54.

87. திருமந்திரம் – பா.எண்: 1490.

88. கணபதி த.ந. – தமிழ்ச் சித்தர் மரபு – மு.நூல் – ப. 121.

89. சுந்தர மூர்த்தி கு – (உரை) – அருள் நந்தி சிவாசாரியார் அருளிய சிவஞான சித்தியார் (திருநெல்வேலி – அருள் நந்தி சிவம் அருட் பணி மன்றம் – 1989) ப.148.

90. திருஞான சம்பந்த சுவாமிகள் –தேவாரம் – மூன்றாம் திருமுறை (சென்னை – வர்த்தமானன் பதிப்பகம் – 1998) முதல் தொகுதி, ப.208.

91. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – முதற்பாகம் - ப.215.

92. மேற்படி நூல் - ப.107.

93. திருமந்திரம் – பா.எண். 1467.

94. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல்– முதற்பாகம், ப. 84.

95. திருமந்திரம் – பா. எண்: 2951.

96. சித்தர் பாடல்கள் - மு.நூல் – இரண்டாம் பாகம் : ப.43.

97. திருமந்திரம் – பா.எண். 2017.

98. சி. சித்தியார் – மேற்படி நூல் - பாடல் எண். 279.

99. சுந்தர மூர்த்தி.கு - (உரை) - சிவஞானசித்தியார் - மு.நூல் - ப.149.

100. மேற்படி நூல் – பாடல் எண். 275.

101. மேற்படி நூல் – பாடல் எண். 275.

102. மேற்படி நூல் – பாடல் எண். 276.

103. மெய் கண்டார் – சிவஞான போதம்,சூ. எண்: 9.

104. திருஞானசம்பந்தர் தேவாரம் - மூன்றாம் திருமுறை (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம் 1995) ப.396.

105. திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம் - நான்காம் திருமுறை (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு 1982) ப.117.

106. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - முதற்பாகம் - மு.நூல்-ப.145.

107. அறிவொளி.அ.-சிவபுராணம் (சென்னை - வர்த்தமானன் பதிப்பகம்-1999) ப.60.

108. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம், ஆறாம் திருமுறை (திருவாவடுதுறை, ஆதீன வெளியீடு 1982) ஆறாம்திருமுறை - ப.89.

109. மனவாசகங்கடந்தார் - உண்மை விளக்கம் (திருவிடைமருதூர் - சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம் 1995) - ப.140.

110. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - முதற்பாகம் - மு.நூல்-ப.303.

111. மேற்படி நூல் - ப.233.

112. மேற்படி நூல் - ப.256.

113. மேற்படி நூல் - ப.110.

114. சேக்கிழார் - பெரியபுராணம் (திருவாவடுதுறை - ஆதீன வெளியீடு - 1988) ப.264.

115. மனவாசகங்கடந்தார் - உண்மை விளக்கம் (திருவிடைமருதூர் - சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம் -1995) - ப.144.

116. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் - முதற்பாகம் - ப.137.

117. உண்மை விளக்கம் - மு.நூல்- பா.எண்.44.

118. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் - முதற்பாகம் - ப.124, 135.

119. திருநாவுக்கரசுசுவாமிகள் - தேவாரம் - நான்காம் திருமுறை - மு.நூல் -ப.135.

120. மனவாசகங்கடந்தார் - உண்மை விளக்கம் - மு.நூல் -பா.எண்.42.

121. ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் - மு.நூல் - முதற்பாகம் - ப.124.

122. மேற்படி நூல் - ப.172.

123. மேற்படி நூல் - முதற்பாகம் - ப.277, 278.

124. மேற்படிநூல் - முதற்பாகம் - ப.216.

125. வீடு கண்டு விண்டிடின் வெட்டவெளியும் ஆனதே
உச்சிக்கு மேற் சென்று உயர்வெளி கண்டோர்க்கு – ப. 218.
காலக்கடுவெளி நின்று ஆட்டுவிப்போம் – ப. 188.
தண்டு மாறி ஏறி நின்ற சரசமான வெளியிலே – ப.149.
மன்னும் பரவெளியை மனவெளியில் அடைத்து – ப.108.
ஞான அறிவெனும் விழியினாலே அம்பர வெளியைப் பார்த்தே – ப.279.

126. மேற்படி நூல் –முதல் பாகம் - ப.50.

127. மேற்படி நூல் –முதல் பாகம் - ப.108.

128. மேற்படி நூல் – இரண்டாம் பாகம் - ப.7.

129. மேற்படி நூல் – முதற்பாகம் - ப.114.

130. மேற்படி நூல் – முதற்பாகம் -ப.202.

131. மேற்படி நூல் – முதற்பாகம் - ப.209.

132. மேற்படி நூல் – இரண்டாம் பாகம் ப.1.

133. சிவஞான சித்தியார் – பாடல் எண். 270.

134. மேற்படி நூல் – பாடல் எண். 312.

135. உண்மை விளக்கம் – மு.நூல் - பாடல் எண்: 50.

136. திருவருட்பயன் – மு.நூல் - பாடல் எண்: 75.

137. திருவுந்தியார் – மு. நூல் - பாடல் எண்: 40.

138. திருக்களிற்றுப்படியார் – மு.நூல் - பாடல் எண்: 92.

139. பாஸ்கரன் ந – உமாபதி சிவாசாரியாரின் திருவருட்பயன் (சென்னை – பல்கலைக்கழக சைவ சித்தாந்தத் துறை வெளியீடு – 1994) ப.43.

140. மேற்படி நூல் – பாடல் எண்: 268.

141. திருவருட்பயன் – பாடல் எண்: 98.

142. மேற்படி நூல் – பாடல் எண்: 96.

143. மெய்கண்டார் – சிவஞான போதம் – நூற்பா எண்: 12.

144. சிவஞான சித்தியார் – மு.நூல் – பாடல் எண்: 283.

145. மூர்த்தி அ.கி – சைவ சித்தாந்த அகராதி – மு.நூல் - ப.9.

146. சிவஞான சித்தியார் – பாடல் எண்: 284.

147. திருவருட்பயன் – நூற்பா எண்: 91.

148. ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – முதற்பாகம் - ப.94.

149. மேற்படி நூல் – ப.200.

150. திருமந்திரம் – மு.நூல் - பாடல் எண்: 2958.

151. ஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் – முதற்பாகம் – மு.நூல் ப.177.

# முடிவுரை

மெய்யியல் கோட்பாடுகள், வாழ்க்கையோடு இயையும் போது வலுப்பெறுகின்றன. காலங்கடந்தும் நிலைபெறுகின்றன. அவ்வகையில் சித்தர்களின் மெய்யியல் கோட்பாடுகளும் சைவ சித்தாந்த மெய்யியல் கருத்துக்களும், ஆன்மீகத்தை முன்னிறுத்தி அதன் வழி மக்களின் வாழ்வை மேம்படுத்தும் நோக்குடன் எழுந்தமையால் இன்றும் நிலைபேறுடையனவாய் விளங்குகின்றன.

சித்தர் நெறியில் உலக மாந்தர் அனைவருக்கும் பொதுவான, பயன்தரத்தக்க அடிப்படை உண்மைகள் அறிவுறுத்தப்படுகின்றன. மெய்யியல் கொள்கைகளை விட மெய்யுணர்வு நிலை அதிகமாக வலியுறுத்துப்படுகிறது. சமயம் என்னும் அமைப்பு, சமுதாயத்தில் மக்களின் வாழ்வினை முறைப்படுத்தும் நோக்குடன் முகிழ்த்தவொன்றாகும். சைவ சமயம், சமயங்களுள் மிகத் தொன்மையான வரலாற்றினையுடையது. தனிப்பட்ட ஞானிகளால் உருவாக்கப்பட்ட சமயம் போலல்லமல், கால, இட, எல்லைகளைக் கடந்து முதற்பொருளாய் விளங்கும் பரம்பொருளை இறைவனாகக் கொண்டு விளங்கும் சிறப்பு, இச்சமயத்திற்கு உண்டு. இச்சைவ சமயத்தளத்தில் இருந்து உருவாக்கம் பெற்ற அனைத்துச் சமயத் தத்துவ விளக்கங்களையும் தன்னுள் கொண்டு, தனக்கே உரிய தனிச்சிறப்புடன் விளங்குவது சைவ சித்தாந்தமாகும்.

சித்தர்களின் கோட்பாடுகளும், சைவ சித்தாந்தக் கொள்கைகளும் மனிதனின் வாழ்வை நல்வழிப்படுத்தி, அதன் வழி இறை உணர்வினைத் தூண்டி, முத்திப்பேற்றினை நல்குவதையே நோக்கமாகக் கொண்டவை. எனவே இவ்விரு நெறிகளிலும் இறைமை, உயிர், உடல், தளைகள், வாழ்வியற் பண்புகள், இறையுணர்வு வழிபடுமுறைகள், முத்திப்பேறு ஆகிய மெய்யியல் கோட்பாடுகள் விளக்கம் பெறுகின்றன. மானுட மேம்பாடு என்னும் மையக் கருத்தைச் சுற்றியே எழுந்தமையால் இவ்விரு நெறிகளின் கருத்துக்களில் பெருமளவில் வேறுபாடுகள் இல்லை.

இறைவனைச் சிவம் என்று சித்தர் நெறியும், சிவன், பதி என்று சைவ சித்தாந்தமும் குறிக்கிறது. இறைவனின் எண் குணங்களும், ஐந்தொழில்களும் இவ்விரு நெறிகளிலும் விளக்கம் பெறுகின்றன. சித்தர்களைப் பொறுத்த மட்டில் இறைமை, ஒரு கருத்துப் படிவ நிலை. (Conceptual Image) அனைவருக்கும் பொதுவான ஒரு நிலை. எனவே யோக

நெறி, ஞானநெறி ஆகிய பொது அக வழிபாட்டு முறைகளைச் சித்தர்கள் அறிவுறுத்தினர். சைவ சமயம் ஆன்மீக வழி வாழ, விழைவோர்க்கும், ஆன்மீகத்தின் தொடக்க நிலையிலுள்ளோர்க்கும் வழி காட்ட வேண்டிய பொறுப்பினைக் கொண்டு விளங்குகிறது. இந்நிலைகளில் உள்ளோருக்கு இறைவன் என்னும் ஒரு காட்சிப்படிவம் (visual Image) தேவைப்படுகிறது. சைவ சமயம் சிவபெருமானின் அருவ, அரு உருவ, உருவ நிலைகளை முன்னிறுத்துகிறது. புற வழிபாட்.டு முறைகள் சைவ சமயத்தில் இடம் பெறுகின்றன. எனினும் சித்தர்கள் காட்டிய அக வழிபாட்டு நெறிகளை, வழிபடு முறைகளின் இறுதி நிலைகளாக (சரியை, கிரியை, யோகம், ஞானம்) சைவ சித்தாந்தம் ஏற்றுக்கொள்கிறது. மனதில் அன்பு வழித் தோன்றும் இறை உணர்வின்றி இயற்றப்படும் வழிபாட்டு முறைகள், வெற்றுச் செயல்களேயன்றி, முழுமை பெற்ற இறை வழிபாடாகாது என்பது இவ்விரு நெறிகளும் ஒப்புக்கொள்ளுகின்ற உண்மையாகும். சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய முத்தி நிலைகள் சைவ சித்தாந்த மெய்யியலில் காணக்கிடைக்கின்றன. சித்தர்கள் சீவன் முத்தர்களானமையால் சாயுச்சிய முத்தி நிலையை அறிவுறுத்துகின்றனர். சாலோக, சாமீப, சாரூப நிலைகளும் சித்தர் நெறியில் குறிக்கப்படுகின்றன.

இறைவன் ஒன்றே; அவன் கால, இட எல்லைகளைக் கடந்து, என்றும், எங்கும் நிலைபெற்று விளங்கும் தோற்றமும், ஒடுக்கமுமற்ற பரம்பொருள், இதனை உணர்ந்து அன்பு வழித்தோன்றும் இறை உணர்வுடன் வழிபட்டு, பிறவாப்பெருநிலையாகிய முத்தி நிலையை அடைதல் வேண்டும் ஆகிய கோட்பாடுகள் சித்தர் நெறியிலும் சைவ சித்தாந்த மெய்யியலிலும், ஒன்றாகவே காணப்படுகின்றன.

உயிர், உடல், தளைகள் குறித்த வரையறைகளும், விளக்கங்களும், மெய்யியல் கோட்பாடுகளும் சைவச் சாத்திர நூல்களில் மிகுதியாக இடம் பெறுகின்றன. சாத்திர நூல்களின் துணையோடு, தோத்திர நூல்களை நோக்குங்கால், முப்பொருள்களான பதி, பசு, பாசம் குறித்து முழுமையாக விளக்கம் பெற முடிகிறது. உயிர் இயல்புகளையும், நிலைகளையும், அது உடல் பெறும் விதத்தையும், உடல் குறித்த கோட்பாடுகளையும், ஆணவம் கன்மம், மாயை ஆகியவற்றின் தன்மைகளையும், அவை உயிரினைப் பற்றிப் பிணைத்து அதனை அறியாமையில் முழ்க வைத்து, இறைவனை உயிர்கள் அறிய வொண்ணாமல் தடுத்து நிற்கும் போக்கையும் சைவ சித்தாந்தம் தெளிவாக விரித்துரைக்கின்றது. பிறவித் தொடரில் உழலும் உயிர்கள், தொடர்ந்து மேற்கொள்ளும் தவமுயற்சிகளால் அவற்றின் பாசப்பிணைப்பு அகன்று விட, பதி ஞானம் பெற்று

இறைவனின் திருவடி சேருதலே முத்தி நிலை என்று சைவ சித்தாந்தம் அறிவுறுத்துகிறது. பதி ஞானத்திற்குரிய படி நிலைகளாக, தவ முயற்சிகளாக சரியை, கிரியை, யோக நிலைகள் விளக்கப்படுகின்றன.

சித்தர் நெறியில் உயிர், உடல், தளைகள் குறித்த விளக்கங்கள் காணப்படுகின்றன. எனினும் அவை சைவ சித்தாந்த மெய்யியலைப் போல் மெய்யியல் விளக்கங்களின் அடிப்படையில் அமையவில்லை. இவ்வுலகமும், உடலும் நிலையானவை அல்ல; அவற்றின் மீது பற்றுக் கொள்ளல் கூடாது, என்னும் கருத்தினைத் தெளிவுபடுத்துவதற்காகவே அவ்விளக்கங்கள் தரப்பட்டன. அதே சமயம், உடம்பினை இறைவனின் ஆலயமாகவே சித்தர்கள் கருதினர். உடல் பெற்றதன் நோக்கம், அட்டாங்க யோகப் படிநிலைகளில் நின்று வீடுபேறு அடைதலே என்பது அவர்களது முடிவு. மெய் ஞானம் பெற, உயிரும் உடலும் கருவிகளானதால் அவற்றைப் பாதுகாக்க வேண்டிய அவசியம் சித்தர் நெறியில் அறிவுறுத்தப்படுகிறது. இவ்வறிவுறுத்தலின் விளைவே அதற்கான தேடலும், அத்தேடலின் முடிவே சித்த மருத்துவம், யோகம், உடல், மனவளம் குறித்த சித்தர்களின் ஆய்வு உண்மைகளுமாகும். தளைகளின் தன்மைகள் சித்தர் நெறியில் குறிக்கப்படுகின்றன. தளைகளை மனிதன் விலக்க வேண்டியதன் அவசியமே, பெரிதும் வலியுறுத்தப்படுகிறது.

மனித நல் வாழ்விற்கு அவசியமான அன்பு, கருணை, ஈகை, ஒழுக்கம், அடக்கமுடைமை, தவம், வாய்மை, பொறையுடைமை உள்ளிட்ட வாழ்வியற் பண்புகள் சித்தர் நெறியிலும், சைவ சித்தாந்த மெய்யியலிலும் ஒருங்கே வலியுறுத்தப்படுகின்றன. நிலையற்ற பொருட்களிள் மீது கொள்ளும் பற்றினைத் துறந்து, தன்னையறிந்து, நிழல் போல் தொடரும் தளைகளிலிருந்து விடுபட்டு சாயுச்சிய நிலையாகிய பிறவா இறை நிலை எய்த வேண்டும் என்னும் கருத்து சித்தர் நெறியில் நிலைநிறுத்தப்படுகிறது.

சித்தர் நெறியிலும், சைவ சித்தாந்த மெய்யியலிலும் அடிப்படைக் கோட்பாடுகளில், கொள்கைகளில் வேறுபாடுகள் இல்லை. சித்தர்கள் அறிவுறுத்திய அடிப்படை உண்மைகள் உலக மாந்தர் அனைவருக்கும் பொதுவானவை. அவை சைவ சித்தாந்த மெய்யியலில் சைவ சமயச் சான்றோர்களால் விளக்கம் பெறுகின்றன. எனவே அவை சமயச் சார்பு கொண்டு, சமயத்திற்குச் சிறப்பு சேர்க்கும் வண்ணம், சமய நம்பிக்கைகளுக்கு வலுவூட்டும் வண்ணம், பொருள் நிலை விளக்கங்களாக (Interpretations) விளங்குகின்றன. அடிப்படை உண்மைகள் என்றும் எங்கும் மாறாதவை.

சித்தர் நெறியும், சைவ சித்தாந்தமும், ஒரே நோக்கினைக் கொண்டு எழுந்து, ஒரே முடிவை நோக்கி மக்களைச் செலுத்தும் பாதைகள்தான். சித்தர் நெறி என்பது அடிப்படை உண்மைகளைக் கொண்டு அமைக்கப்பட்ட பாதை. அதில் பயணிக்க மனப்பயிற்சியும், பக்குவமும் தேவை. சைவ சித்தாந்தம், தத்துவக் கலைச் சொற்களுடன், (Philosophical Terms) சைவ சமயஞ் சார்ந்த விளக்கங்களின் துணையோடு மக்கள் அனைவரும் பயணிக்கக் கூடிய வகையில் அமைக்கப்பட்டுள்ள பாதையாகும். இவ்விரு நெறிகளையும் ஒப்பிட்டு நோக்கும் போது, சைவ சித்தாந்தக் கோட்பாடுகளே, சித்தர் நெறியில் அறிவுறுத்தப்பட்டுள்ளமை தெள்ளிதின் புலனாகின்றது.

## சைவ சித்தாந்த அடிப்படைக் கருத்துக்கள் அமையப்பெற்ற சித்தர் பாடல்கள்

| | |
|---|---|
| பதி, பசு, பாசம் எனப் பகர்.. (பத்தாம் திருமுறை) | பாசம் உடலாய்ப் பசு அதுவும் தான் உயிராய் .. பட்டினத்தார் |
| பதி, பசு, பாசம் தெரித்தல் - சிவப்பிரகாசம் | பாசத்தை நீக்கிப் பசுவைப் பதியில் விட்டு .. பத்திரகிரியார் |
| **இறை :**<br>அகர உயிர் போல் அறிவாகி எங்கும் நிகரில் இறை நிற்கும் நிறைந்து - திருவருட்பயன் | எங்கும் நிறைந்தே நின்ற<br>ஏக பரவத்து வினை - யோகச் சித்தர்<br>எங்கும் நிறைந்தே இருக்கின்ற<br>சோதி - குதம்பைச் சித்தர் |
| அண்டத்து அண்டத்தின் அப்புறத்து ஆடும் அமுதன் - ஏழாம் திருமுறை | அண்டம் நீ அகண்டம் நீ<br>கண்டம் நீ, .. சிவவாக்கியர் |
| விண்ணகத் தேவரும் நண்ணவும்<br>மாட்டா விழுப்பொருளே - திருவாசகம் | விண்ணிலுள்ள தேவர்கள் அறியொணாத<br>மெய்ப்பொருள் - சிவ வாக்கியர் |
| ஒரு வனாகி நின்றானிவ் வுலகெலாம் -<br>ஐந்தாம் திருமுறை | அங்கும் இங்கும் ஆகி நின்ற<br>ஆதி மூர்த்தி ஒன்றலோ - சிவ வாக்கியர் |
| ஒழியாது நின்ற சிவன் - சிவஞான சித்தியார் | சிவமின்றி வேறே வேண்டாதே<br>கடுவெளிச் சித்தர் |
| எவ்வடிவுகளும் தான் ஆம் எழில் பரை வடிவு அது ஆகி- உண்மை விளக்கம் | எவர் எவர்கள் எப்படிக்கண்டு எந்தப்படி<br>நினைத்தார் அவர்அவர்க்கு அப்படி<br>நின்றான் - பத்திரகிரியார். |

| | |
|---|---|
| அருவும் உருவும் அறிஞர்க்கு அறிவாம் உருவும் உடையான் - திருவருட்பயன் | உருவாகி அருவாகி ஒளியாகி வெளியாகி - குதம்பைச் சித்தர் |
| அருவான் உருவான் அருவுருவும் அல்லான் - - நெஞ்சு விடு தூது | அருவும் உருவும் அருவுருவும் அல்லா ஒருவன் - குரு ஞான சம்பந்த சுவாமிகள் |
| உலகு எலாம் ஆகி வேறு ஆய் உடனுமாய் - சிவஞான சித்தியார் | எவ்வுலகும் எவ்வுயிரும் ஈன்று- புறம்பாய் இருந்து திருவிளையாட்டெய்தியும் பின்னர் அவ்வுலகும் அவ்வுயிரும் ஆகி நின்ற ஆனந்த வெள்ளம் - பாம்பாட்டிச்சித்தர் |
| அனைத்துலகும் ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய் போக்குவாய் - திருவாசகம் | ஐந்து தொழிற்கும் உரியோன் அநாதி - குதம்பைச் சித்தர் |
| எட்டு கொலாம் அவர் ஈறில் பெருங்குணம் - நான்காம் திருமுறை | எண்குணத்தான் எல்லார்க்கும் இறைவன் - வடலூர்ச் சித்தர் |
| யாவையுங் கடந்த இன்பமே - திருவாசகம் | இறைவனென்றதெல்லாம் அகப்பேய் ஆனந்தமானதடி - அகப்பேய் சித்தர் |
| அணுவுள் அவனும், அவனுள் அணுவும் கணு அற நின்று கலப்பது - பத்தாம் திருமுறை | அத்துவிதம் போலும் என்ற ஆத்துமத்தின் உள்ளிருந்து - பத்திரகிரியார் |
| அவனே அறிவாய் நின்றானும் - திருக்களிற்றுப்படியார் | அறிவை அறிவால் அறிந்து - பத்திரகிரியார் |
| படைக்கலமாக உன் நாமத்து எழுத்து ஐஞ்சு என் நாவிற் கொண்டேன் - நான்காம் திருமுறை | அம்பரத்துள் ஆடுகின்ற அஞ்செழுத்து நீயலோ - சிவவாக்கியர் |

**உயிர் :**

| | |
|---|---|
| யோனி எண்பத்து நான்கு நூறாயிரம் என்று எடுத்தே - சிவப்பிரகாசம் | எண்பத்து நான்கு நூறாயிரம் செனனமும் சனித்து - பட்டினத்தார் |
| எழுவகைத் தோற்றம் - சிவப்பிரகாசம் | நாலு வகை யோனி - கிளியே எழுவகை தோற்றத்தாலும் - வேதாந்தச் சித்தர். |
| வினைப்பிறவி என்கின்ற வேதனை - திருவாசகம் | இருவினைக்கீடாய் எடுத்த பொம்மை - பத்திர கிரியார் |

கருமத்து அளவில் தரும் உரு இறைவன்
- சங்கற்ப நிராகரணம்

உயிரையும் உடம்பையும் ஒன்றுவிப்பது
அச்சிவம் - சிவவாக்கியர்

ஒரு மலத்தர் ஆயும் உளர் - திருவருட்பயன்

'ஒரு மலத்தன்' - இடைக்காட்டுச்சித்தர்

திரிமலத்தார் - திருவருட்பயன்

'மும்மலத்தன்' - இடைக்காட்டுச்சித்தர்

மருவு ஆனந்தம் விஞ்ஞானம்
மனோபிராணன் அன்னமயம் ஐங்கோசம்
- சிவஞான சித்தியார்

காணப்பா அன்னமயமாகி நின்று கலந்து
நின்ற பிராண மய கோசமாச்சே ஊனப்பா
விக்ஞான மயமுமாகி உத்தமனே
மனோமயமாங் கோசமாச்சு பூணப்பா
ஆனந்தமாயமுமாகி .... கைலாயக்
கம்பளிச்சட்டை முனி நாயனார்

ஐங்காயக்கோட்டை - ஞானச்சித்தர்

முப்பது முப்பத்தாறு முப்பதும் இடு குரம்பை
- நான்காம் திருமுறை

தொண்ணூற்று தத்துவத்து
உரைத்தனைகள் கொண்டோம்
- மௌனச் சித்தர்

மூன்று முப்பத்து ஆறினோடு
- சிவவாக்கியர்

சகலமும் தத்துவம் காண் - சித்தியார்

தத்துவமானதடி அகப்பேய் சகலமாய்
வந்ததடி - அகப்பேய்ச்சித்தர்

கால் கொடுத்து எலும்பு மூட்டிக் கதிர்
நரம்புயாக்கை யார்த்துச் தோலுடுத்து உதிரம்
அட்டித் தொகு மயிர் மேய்ந்த கூரை நான்காம்
திருமுறை

எலும்புடன் நரம்பு கொண்டு இடையில்
பிணித்துக் கொழுந்தசை வேய்ந்தும்
ஒழுக்கு விழுங்குடிலைச் செழும்பெழு
உதிரச் சிறு புழுக்குரம்பையை -
பட்டினத்தார்

ஊனுலாமுடை கொள் ஆக்கை உடைகலம்
ஆவதென்றும் - நான்காம் திருமுறை

நாற்றமுடைக்குடம் - அது உடைந்தால்
நாயும் நரியும் நமதென்றே தின்றிடும்
- பாம்பாட்டிச் சித்தர்

**தளைகள்**

'முன்னின்று மும்மலம் தீர்த்து'
- போற்றிப் பஃறொடை

மும்மலமுஞ் சேர்த்து முளைத்தெழுந்த -
காயம் – பத்திரகிரியார்

''மலம் தாங்கிய பாசப் பிறப்பு''
- ஏழாம் திருமுறை

ஆணவத்தால் வந்த காயம் – கஞ்ச மலைச்
- சித்தர்

| | |
|---|---|
| 'அறியாமை ஆணவம்' - உண்மை விளக்கம் | அறியாத பாவிக்கு ஞானமேது?<br>- காகபுசுண்டர் |
| என்னது யானெனும் அகந்தை - இருபா விருபது | தானென்ற ஆணவம் - சட்டை முனி நாயனார் 'நான் என்ற கர்வம்' -ஞானச்சித்தர் |
| எண்ணி வரும் மன வாச கன்மத்தால் இயற்றும் இயல்பினதாய் - சிவப்பிரகாசம் | காய மன வாக்கினால் அடைந்த கன்மம்<br>- சிவானந்தச்சித்தர் |
| இருவினை யென்பதென்னை – இருபா இருபது | 'இருவினையாம் மாடுகளை' – இடைக்காட்டுச்சித்தர் |
| வரும் துயரம் - 'ஆகாமியம்' திருவாசகம் | ஆகாமியஞ் சித்திேனாட - சட்டை முனி நாயனார் |
| பண்டு செய்த பழவினை - ஐந்தாம் திருமுறை | ஆகாமிய சஞ்சிதத்தைத் தொல்லை தொலைத்து - மதுரை வாலை சாமிச்சித்தர்<br>சீவரெல்லாஞ் சகச பிராரத்வ வசத்தாகினார்கள் - காக புசுண்டர் |
| செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும் உய்வான் உளன்<br>- திருவருட்பயன் | பழுதிலாத கர்ம கூட்டம் இட்ட எங்கள் பரமனே - சிவவாக்கியர் |
| முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான் பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன் - திருவாசகம் | முன்னை வினையெல்லாம் முழுதும் அறுத்தாண்டி<br>என்னை எனக்கறிய இருவினையும் ஊடறுத்தான் ? - அழுகணிச்சித்தர் |
| 'கனம நெறி திரிவிதம் ' - சிவப்பிரகாசம் | அந்தி நின்ற ஆகாம்ய சஞ்சித பிராரத்வம்<br>- சட்டை முனி நாயனார் |
| தோற்றமும் நிலையும் ஈறும் மாயையின் தொழிலது - சிவஞான சித்தியார் | காணிந்த உலகத்தில் மாயக்கூத்தும் கண் மூக்குச் செவியோடித்திரிந்த கூத்தும் பூணந்த வாசியினால் வறுமைக் கூத்தும் புகழான செனனமொடு மரணக் கூத்தும் ஆணிந்த அ ண்டமெல்லாம் படைத்த கூத்தும் - சட்டை முனி நாயனார் |
| மண்ணினில் மாயை மதித்து வகுத்த மயக்கறுமாகாதே - திருவாசகம் | மண் பிறந்த மாயமும் மயக்கமும்<br>- சிவ வாக்கியர்<br>மாயக்கலவி வந்து மதி மயக்கமானேனடி<br>- அழுகணிச்சித்தர் |

| | |
|---|---|
| காரணம் மாயை ஆகக் காரியம் காணலாகும் - சிவஞான சித்தியார் | ஆச்சப்பா மாயையுத்தி சொல்லவென்றால் அநேகமுண்டு. வாச்சப்பா தேசத்திற்பேதாபேதம் மருவியதோர் கிராமத்தில் கிராம பேதம் ஓச்சப்பா திறங்களிலே திறங்கள் பேதம் ஓகோகோ சனங்களிலே யனேக பேதம் வீச்சப்பா புத்திகளிற் பேதாபேதம் வெகு மோக மாயத்தாற் றோன்றுங் காணே - சட்டை முனி நாயனார் |
| அஞ்ஞானம் பொய் அயர்வே மோகம் பைசா சூனியம் மாற்சரியம் பயம் ஆய வேழ் குணனும் மாயைக்கு அருளினை - இரு பாவிருபது | அஞ்ஞானம் உட்கொண்டதுவும் – கடேந்திர நாதர் பொய்ப்பொருளை விட்டு – இடைக்காட்டுச் சித்தர் மோகத்து காதியாம்மாயை - வாலைச் சாமிச் சித்தர் பேச்சலது மாய்கையப்பா - அகத்தியர் மாய வித்தை பல மாநிலத்தில் செய்கை தீய தொழிலாகுமடி குதம்பாய் - குதம்பைச் சித்தர் |
| நிகழ்ந்திடும் வாக்கும் நான்கு - சிவஞான சித்தியார் (சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி) | வாக்காதி ஐந்தடியோ - அகப்பேய் வந்த வகை கேளாய் – அகப்பேய்ச் சித்தர் வாக்காதி ஐந்தையும் வாகாய்த் தெரிந்தேனே -இடைக்காட்டுச்சித்தர் (சூக்குமை, பைசந்தி, மத்திமை, சூக்கும, வைகரி , தூல வைகரி). |
| தத்துவம் முப்பத்தாறாகும் - சிவஞான சித்தியார் | மூன்று வகைக் கிளையும் முப்பத்தறு வரையும் - பட்டினத்தார் ஐயாறும் ஆறும்அகன்று - பத்திரகிரியார் |
| வாழ்வியற் பண்புகள்: அன்பே உடைய அரனே - பதினோராந் திருமுறை | அன்பெனும் நன்மலர் தூவிப் - பரமானந்தத் தேவின் அடியினை மேவி - கடுவெளிச்சித்தர் |
| சினமுதல் அகற்றி வாமும் செயல் அறமானால் - சிவஞான சித்தியார் | சினமென்னும் பாம்பு இறந்தால் - தாண்டவக்கோனே -இடைக்காட்டுச்சித்தர் |
| கொலையே களவு கட்காமம் பொய் கூறல் மலைவான பாதகமாம் அவை நீக்கி - பத்தாம் திருமுறை | கள்ளம் கள் காமம் கொலைகள் கபடங்கள் பள்ளத்தில் தள்ளுமடி குதம்பாய்-குதம்பைச் சித்தர்.கூடிய பொய்களைச் சொல்லாதே - பொல்லாக் கொலை களவுகள் செய்யாதே - கொங்கணச்சித்தர் |

கங்கை ஆடில் என் காவிரி ஆடில் என்
பட்டர் ஆகில் என் சாத்திரம் கேட்கில் என்
காலை சென்று கலந்து நீர் முழ்கில் என்
கான நாடு கலந்து திரியில் என்
நன்று நோற்கில் என் பட்டினியாகில் என்
குன்றம் ஏறி இருந்தவம் செய்யில் என்
எங்கும் ஈசன் என்னாதவர்க்கில்லையே

சாம நாலு வேதமும் சகல சாத்திரங்களும்
சேமமாக ஓதிலும் சிவனை நீர் அறிகிலீர்
- சிவவாக்கியர்
காசிக்கோடில் வினைபோமோ
கங்கையாடில் கதிதானுண்டாமோ
- கடுவெளிச்சித்தர்

**வழிபடு நெறிகள்:**
முத்தி நெறி அறியாத மூர்க்கரோடு
முயல்வேனைப் பத்தி நெறி அறிவித்துப்
பழவினைகள் பாறும் வண்ணம்

பத்தி அற்றவர் கதியடையார்-
இடைக்காட்டுச்சித்தர்
பாரிலுயர்ந்தது பத்தி - அதைப்
பற்றின பேர்க்குண்டுமே வருமுத்தி
-கடுவெளிச்சித்தர்

ஞான யோகக் கிரியா சரியை நான்கும்
நாதன் தன் பணி - சிவஞானசித்தியார்

சரியை - கடந்திடவும் வேணும்
கிரியைப் பார்த்தறிய வேணும்
யோகந் தெரிந்திட வேணும்
ஞானநிலை தெரியவே வேணும்
- கல்லுளிச்சித்தர்

சரியை கிரியா யோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீக சாரூபங்கள் - சிவப்பிரகாசம்

தெளிந்த - நற்கிரியை தன்னில் சென்று
சாலோகம் பெறும்
தெளிந்த நற்கிரியை பூசை சேரலாம்
சாமீபமே தெளிந்த நல்ல யோகம் தன்னில்
சேரலாகும் சாரூபம்- சிவ வாக்கியர்

தோற்றம் துடி அதனில் - உண்மை விளக்கம்

செகம் படைத்ததும் அஞ்செழுத்தாம்
பின்னும் சீவன் படைத்ததும்
அஞ் செழுத்தாம்-கொங்கணச்சித்தர்.
ஆதியிலே பராபரத்திற்பிறந்த சத்தம்
அருவுருவாய்...
தொல்லுலகில் எழுவகையாந் தோற்றமாகி
சுப்பிரமணியர் ஞானக்கோவை

அண்ணல் முதலா அழகார் எழுத்து ஐந்தும்
எண்ணில் இராப்பகல் அற்ற இன்பத்தே -
நண்ணிஅருள் ஆனது சிவத்தே ஆக்கும்
அணுவை இருள் ஆனது தீர இன்று.

ஓம் நமசிவாயமே உணர்ந்து மெய்
உணர்ந்த பின்
ஓம்நமசிவாயமே உட்கலந்து நிற்குமே
- சிவவாக்கியர்

ஞானத்தால் எய்தும் முத்தி முடிவு என்பர்-
சிவஞான சித்தியார்
ஓங்கு உணர்வின் உள்ளொடுங்கி
உள்ளத்துள் இன்பு ஒடுங்கத்
தூங்குவர்; மற்று ஏது உண்டு சொல்
- திருவருட்பயன்

தேக ஞானமடி - தேடாது சொன்னேனே
-அகப்பேய் சித்தர்
ஆங்காரம் உள்ளடக்கி , ஐம்புலனைச்
சுட்டறுத்து தூங்காமல் தூங்கிச்
சுகம் பெறுவது - பத்திரகிரியார்.

சைவசித்தாந்த மரபில் தோன்றியவர்களே சித்தர்கள் என்பதும், சைவ சித்தாந்த கோட்பாடுகளுக்கும் சித்தர்களின் மெய்யியல் கருத்துக்களுக்கும் இடையே எவ்வித முரண்பாடும் இல்லை என்பதும் இந்த ஆய்வின் மூலமாக தெளிவு. படுத்தப்படுகின்றது.

சித்தர்நெறியினை, அதன் மெய்யியல் கோட்பாடுகளை, பிற சமயக் கருத்துக்களுடன் ஒப்பு நோக்கி ஆய்வு செய்ய இவ்வாய்வேடு ஒரு தூண்டுகோலாக அமைகிறது. மனிதப் பிறவியின் இலக்கான முத்திப்பேற்றினை அடைய மனித சமுதாயத்தை வழி நடத்த வேண்டும் என்னும் உயர்ந்த நோக்கத்துடன் எழுந்தவை, இவ்விரு நெறிகளும் என்பதை உணர்ந்து, இவற்றின் கோட்பாடுகளில் வேறுபாடுகள் இல்லை என்னும் முடிவை ஏற்று, மக்கள் இவற்றின் வழி வாழ்வாங்கு வாழ்ந்து பயன் பெறுவார்களாயின், இவ்வாய்வேடு எழுந்ததன் பயனை அது நிறைவேற்றிக் கொள்கிறது.

# துணை நூற்பட்டியல்


அடியார்க்கு நல்லார் ., (உரையாசிரியர்) — **சிலப்பதிகாரம்** (உரை)
உ.வே.சாமிநாதையர் பதிப்பு, சென்னை, 1927.

அருணாசலம். ப., — **பக்தி இலக்கியம்**
பாரி புத்தகப்பண்ணை, சென்னை, 1983.

அருணாசலம். ப., — **திருமந்திரக் கோட்பாடு**
முல்லை நிலையம், சென்னை, 2002.

அருணாசலம். மு., — **தமிழ் இலக்கிய வரலாறு** (பதினான்காம் நூற்றாண்டு)
காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம். மாயூரம், 1969.

அருணை வடிவேலு முதலியார்.சி ., — **முப்பொருள் இயல்பு**
சைவ சித்தாந்தப் பெருமன்றம், சென்னை, 1994.

அருணை வடிவேலு முதலியார்.சி ., — **சித்தாந்த வினா விடை**
தருமையாதீன வெளியீடு, மயிலாடுதுறை, 1975.

அருள் நந்தி சிவாசாரியார்., — **சிவஞான சித்தியார் சுபக்கம்**
திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர் முகப் பயிற்சி மையம், திருவிடைமருதூர். 1999.

அருள் நந்தி சிவாசாரியார்., — **இருபா இருபஃது**
திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர் முகப் பயிற்சி மையம், திருவிடைமருதூர். 1999.

அறிவொளி.அ. , — **சித்தர் பாடல்கள் - மூலமும் உரையும்**
வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 2007.

அறிவொளி.அ., — **சிவபுராணம் -அனுபவ விளக்கம்**
வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

ஆச்சார்யா, பி.எஸ்., — **திருமந்திரசாரம்**
நர்மதா பதிப்பகம், சென்னை, 2007.

ஆடலரசு. ந.சா., **உண்மை விளக்கம்- விளக்கக் கட்டுரை** தெய்வீக சித்தாந்த இலக்கிய மன்றம், சென்னை, 1987.

ஆறுமுக நாவலர்., **சைவ சமய வினா விடை** முல்லை நிலையம், சென்னை, 2002.

ஆனந்தராசன். ஆ., **சிவஞான போதம்- வழித்துணை விளக்கம்** அருள் நந்தி சிவம் புத்தக நிலையம், திருநெல்வேலி, 2007.

இராதா கிருஷ்ணன்.எஸ்., (மொழிபெயர்ப்பு) **இந்து தருமமும் வாழ்க்கையும்** (மொழிபெயர்ப்பு) பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1967.

இராமசுப்பிரமணியம் வ.த., உரையாசிரியர் **திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்** நான்காம் திருமுறை - உரை, தமிழ் நிலையம், சென்னை, 1995.

இராமலிங்க அடிகள்., **திருவருட்பாத்திரட்டு** சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர், 1982.

இராமலிங்கம் பிள்ளை ., (நாமக்கல் கவிஞர்) **திருக்குறள் மூலமும் தெளிவுரையும்,** வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

இளங்கோவடிகள்., **சிலப்பதிகாரம்,** பூம்புகார் பதிப்பகம், சென்னை, 1996.

இளவழகனார்., **சிவஞான போத ஆராய்ச்சி** கழக வெளியீடு, சென்னை, 1979.

உமாபதி சிவாசாரியார்., **(சித்தாந்த அட்டகம்) – சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சு விடு தூது, உண்மை நெறி விளக்கம், சற்கற்ப நிராகரணம்** திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம், திருவிடை மருதூர், 1995.

ஔவையார்., **விநாயகர் அகவல் – மூலமும், விளக்க உரையும்** திருவாவடுதுறை ஆதீனம் திருவாவடுதுறை, 1998.

கச்சியப்ப முனிவர்., **தணிகைப் புராணம்**
ஆதீன வெளியீடு , திருவாவடு துறை, 1960.

கடியலூர் உருத்திரங்கண்ணனார்., **புறநானூறு**
வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

கணபதி.த.ந. **தமிழ்ச் சித்தர் மரபு**
ரவி பப்ளிகேஷன்ஸ்,சென்னை, 2004.

கணேசலிங்கம். க., **சைவத்தை அறியுங்கள்**
உலக சைவப் பேரவை , சென்னை, 1998.

கந்தசாமி. சோ.ந., **தமிழும் தத்துவமும்**
மணிவாசகர் நூலகம், சென்னை, 1976.

கந்தையா .ந.சி., **சிவன்,**
International linguistic centre.
Sathur, 2000.

கபிலர்., **குறிஞ்சிப்பாட்டு**
வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

கபில தேவ நாயனார்., **சிவபெருமான் திருவந்தாதி,**
தமிழ் நிலையம், சென்னை, 1995.

கலியாண சுந்தரனார்.வி., **சைவத்தின் சமரசம்**
பாரி நிலையம், சென்னை, 1992.

குமரகுருபர சுவாமிகள்., **கந்தர் கலி வெண்பா**
அன்னபூரணி பதிப்பகம் சென்னை, 1988.

கோமதி சூரிய மூர்த்தி., **சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள் விளக்கம்**
சைவ சித்தாந்தப் பெரு மன்றம், சென்னை, 2005.

கோவேந்தன். த ., (பதிப்பாசிரியர்) **சித்தர் பாடல்கள்**
பூம்புகார் பதிப்பகம், சென்னை, 1992.

சதாசிவ பண்டாரத்தார்.டி.வி., **தமிழ் இலக்கிய வரலாறு** (கி.பி.250-611)
அண்ணாமலை பல்கலைக்கழகம்,
சிதம்பரம், 1963.

| | |
|---|---|
| சபாபதி நாவலர் ., | **சமயம்**<br>திருவாவடுதுறை ஆதீன வெளியீடு,<br>திருவாவடுதுறை, 1949. |
| சாமிநாத தேசிகேந்திர சிவயோகியார்., | **ஸ்ரீபகவத் கீதா நவநீத வசனம்**<br>பி.நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ்,<br>சென்னை, 1938. |
| சாமிநாதன் நா.த., | **திருவருள் அடையும் வழி**<br>குமரன் பதிப்பகம்,<br>தஞ்சாவூர், 2003. |
| சிதம்பர நாத முனிவர்.,<br>(உரையாசிரியர்) | **சிவப்பிரகாசம் (மூலமும் - உரையும்)**<br>ஆதீன வெளியீடு,<br>திருவாவடு துறை, 1953. |
| சிதம்பரம் மறை ஞான சம்பந்தப் பண்டாரம்., | **பதி பசு பாசப்பனுவல்**<br>ஆதீன வெளியீடு, திருவாவடுதுறை, 1954. |
| சிதம்பரனார். சாமி., | **அகத்தியர் வரலாறு**<br>இலக்கிய நிலையம், சென்னை, 1974. |
| ›› | **சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம்**<br>இலக்கிய நிலையம், சென்னை, 1974. |
| சிதம்பரனார் துடிசை கிழார்., | **அடங்கன் முறை ஆராய்ச்சி**<br>கரந்தைத் தமிழ்ச்சங்க வெள்ளிவிழா வெளியீடு, 1938. |
| சித்தலிங்கம் டி.பி., | **சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும்**<br>திருவரசு புத்தக நிலையம்,சென்னை, 1998 . |
| சிற்றம்பல நாடிகள்., | **துகளறு போதம்**<br>ஆதீன வெளியீடு, திருவாவடு துறை, 1952. |
| சீத்தலைச் சாத்தனார்., | **மணிமேகலை – நாவலர். ந.மு. வேங்கடசாமி நாட்டார் உரை**<br>கழக வெளியீடு, சென்னை, 1969. |

சுத்தானந்த பாரதியார் யோகி ஸ்ரீ., **சிவஞான தீபம்**
அழகு பதிப்பகம். சென்னை, 2002.

சுந்தரமூர்த்தி .கு., (உரையாசிரியர்) **சிவஞான சித்தியார் உரை**
அருள் நந்தி சிவம் அருட்பணி மன்றம்,
திருநெல்வேலி ,1989.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் ., **தேவாரம் (ஏழாந் திருமுறை)**
ஆதீன வெளியீடு,
திருவாவடு துறை, 1980.

சுந்தரேசம் பிள்ளை . மு., உரையாசிரியர் **திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம் உரை**
ஆதீன வெளியீடு, திருவாவடு துறை, 1983.

சுப்பிரமணிய பிள்ளை . கா., உரையாசிரியர் **திருவாசகம்** - உரை
கழக வெளியீடு ,சென்னை, 1978.

,, **தமிழ் நாட்டு இந்து சமயங்களின் வரலாறு**
தமிழர் சமயப் பாதுகாப்புக் கழகம். மதுரை, 1984.

சுப்பிரமணியன். ச.வே., **தொல்காப்பியம் தெளிவுரை**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை, 2000.

சுப்பிரமணியன். ச.வே., **தமிழ் இலக்கிய வரலாறு**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை, 2000.

சுப்புரெட்டியார் .ந., **அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம்,**
பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 2001.

,, **சைவ சித்தாந்தம் - ஓர் அறிமுகம்**
கழக வெளியீடு , சென்னை, 2001.

,, **சைவ சமய விளக்கு**
பாரி நிலையம்,சென்னை, 1984.

,, **தாயுமானவர்**
கலைஞன் பதிப்பகம், சென்னை, 2001.

செல்வ நாயகம்.வி., **தமிழ் இலக்கிய வரலாறு** ஸ்ரீலங்கா அச்சகம், யாழ்ப்பாணம்.1965.

சேக்கிழாரடிகள்., **பெரியபுராணம் -** ஆதீன வெளியீடு, திருவாவடுதுறை ,1988.

சேந்தனார்., **திருவிசைப்பா (ஒன்பதாம் திருமுறை)** ஸ்ரீகாசி மடம், திருப்பனந்தாள் -1989.

சோமசுந்தரனார். பி.மா., **சிவம் - பரப்பிரமம்** புலவர் வெளியீடு, இராணிப்பேட்டை, 1988 .

ஞானசம்பந்தன் . அ.ச., **திருவாசகம் சில சிந்தனைகள்** கங்கை புத்தக நிலையம், சென்னை, 2002 .

தண்டபாணி தேசிகர் .ச., உரையாசிரியர் **ஸ்ரீபஞ்சாஷர தீபம் - உரை - திருமந்திரம்** ஆதீன வெளியீடு, திருவாவடுதுறை, 1989.

திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனார்., **திருக்களிற்றுப்படியார்** திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப்பயிற்சி மையம். திருவிடை மருதூர், 1995.

திருஞான சம்பந்த சுவாமிகள்., **தேவாரம் (1,2,3 , திருமுறைகள்)** ஆதீன வெளியீடு, திருவாவடுதுறை, 1983.

திருநாவுக்கரசு சுவாமிகள்., **தேவாரம் (4,5,6) திருமுறைகள்** ஆதீன வெளியீடு ,திருவாவடுதுறை, 1982.

திருமூலர்., **திருமந்திரம்** ஆதீன வெளியீடு, திருவாவடுதுறை, 1987.

திருவதிகை மனவாசகங் கடந்தார்., **உண்மை விளக்கம்** சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம், திருவிடைமருதூர், 1995.

திருவள்ளுவர்., **திருக்குறள்**

திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனார்., **திருவுந்தியார்** சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி, மையம்,திருவிடை மருதூர், 1995 .

திருவாலிய முதனார்., **திரு விசைப்பா** ஸ்ரீகாசி மடம், திருப்பனந்தாள், 1989.

தேசிக விநாயகம்பிள்ளை., (கவிமணி) **மலரும் மாலையும்** பாரி நிலையம், சென்னை, 1959.

தேவநாத சுவாமிகள். ஸ்ரீ ., **இந்தியப்பெருஞ்சித்தர்கள் ஆறுபேர்** நர்மதா பதிப்பகம், சென்னை, 2005.

தொல்காப்பியர்., **தொல்காப்பியம்** மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1998.

நக்கீரர்., **திருமுருகாற்றுப்படை** கழக வெளியீடு, சென்னை, 1978.

,, **நெடுநல் வாடை** வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

நச்சினார்க்கனியர்., **நச்சினார்க்கினியம்** ச. பவானந்தம் பிள்ளை, பதிப்பு, 1916.

நம்பியாண்டார் நம்பி., **திருநாவுக்கரசு தேவர் திரு. ஏகாதசமாலை** வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1995.

நாராயண வேலுப்பிள்ளை. எம்., உரையாசிரியர் **பதினோராந்திருமுறை** - உரை தமிழ் நிலையம்,சென்னை, 1995.

நாராயணன். க., **சித்தர் சிவவாக்கியர்** மாரி பதிப்பகம், புதுச்சேரி, 2003.

,, **சித்தர் தத்துவம்** தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1988.

நிரம்ப வழகிய தேசிகர்., உரையாசிரியர் **சிவஞான சித்தியார் சுபக்கம்** - உரை ஆதீன வெளியீடு, திருவாவடு துறை, 1958.

பரிமேலழகர் ., உரையாசிரியர் — **திருக்குறள் - உரை (புலியூர்க் கேசிகன் பதிப்பாசிரியர்)** பூம்புகார் பதிப்பகம், சென்னை, 2004.

பாஸ்கரன் . நா., — **உமாபதி சிவாசாரியாரின் திருவருட்பயன்** பல்கலைக்கழக சைவ சித்தாந்தத்துறை வெளியீடு , சென்னை, 1994.

பாரதிதாசன்., — **பாரதிதாசன் கவிதைகள்** ஸ்ரீஇந்து பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1986.

புருடோத்தம நம்பி., — **திருவிசைப்பா (ஒன்பதாம் திருமுறை)** ஸ்ரீ காசி மடம், திருப்பனந்தாள், 1989.

பெருங்கௌசிகனார்., — **மலைபடுகடாம்** வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

மணி. சி.சு., — **சைவ சித்தாந்தத் தேனமுது** அருள் நந்தி சிவம் அருட்பணி மன்றம், திருநெல்வேலி , 1989.

,, — **சிவஞான சித்தியார் பர பக்கமும் சுபக்கமும்** அருள் நந்தி சிவம் அருட்பணி மன்றம், திருநெல்வேலி, 1997.

,, — **மெய் கண்ட நூல்களுள் ஏழு 1987** அருள் நந்தி சிவம் அருட்பணி மன்றம், திருநெல்வேலி, 1997.

மறைமலையடிகள்., — **சைவ சமயம் -** மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2003.

,, — **தமிழர் மதம்** மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2003.

மாங்குடி மருதனார்., — **மதுரைக்காஞ்சி** வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

மாணிக்கவாசக சுவாமிகள் ., — **திருவாசகம்,** சைவ சித்தாந்தப் பெருமன்றம், சென்னை, 1999 .

மாணிக்கவாசகம். இரா., **நம் நாட்டுச் சித்தர்கள்**
அன்னை அபிராமி அருள், சென்னை, 1978.

மாதவச் சிவஞான யோகிகள்., **சிவஞான மாபாடியம்**
உலகத் தமிழ் கல்வி இயக்ககம்
சென்னை, 1986.

'' **சித்தாந்தப் பிரகாசிகை**
ஆதீன வெளியீடு, திருவாவடுதுறை, 1963.

மாணிக்கனார். அ. , உரையாசிரியர் **புறநானூறு**
வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

மெய்கண்டார்., **சிவஞான போதம்**
திருவாவடுதுறை, ஆதீன வெளியீடு, 1984.

மெய்யப்பன். ச. , பதிப்பாசிரியர் **தாயுமானவர் பாடல்கள்**
மணிவாசகர் பதிப்பகம்,சென்னை, 1998.

ராமநாதன். அரு ., பதிப்பாசிரியர் **சித்தர் பெரிய ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள்**
பிரேமா பிரசுரம்,சென்னை, 1992 .

வாகீசமுனிவர்., **ஞானாமிர்தம்**
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள், 1988.

வெள்ளை வாரணம் தா.ம., **சைவ சித்தாந்த வினாடி வினா**
திருவாவடு துறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம், சிதம்பரம், 2006.

வெள்ளை வாரணன்.க., **பன்னிரு திருமுறை வரலாறு**
அண்ணாமலைப்பல்கலைக்கழகம்,
சிதம்பரம், 1969.

வேங்கடசாமி. சீனி., **சமணமும் தமிழும்**
கழக வெளியீடு, சென்னை, 1954.

வைத்தியநாதன். கு., **சைவ சமய வரலாறு**
திருவாவடு துறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம், திருவிடைமருதூர் - 1995.

” **பன்னிரு திருமுறை வரலாறு**
திருவாவடு துறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம், திருவிடைமருதூர் - 1995.

” **சிவஞான சித்தியார்** - உரை
திருவாவடு துறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம், திருவிடைமருதூர் - 1995.

” **வினாவெண்பா** - உரை
திருவாவடு துறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம், திருவிடைமருதூர் - 1995.

வையாபுரிப்பிள்ளை.எஸ் ., **திவ்யப்பிரபந்தம்,**
எஸ்.ராஜம், சென்னை - 1955.

நூலாசிரியர் பெயர் குறிப்பிடப்படவில்லை **திருஞான சாகரம்**
ஆதீன வெளியீடு, திருவாவடு துறை, 1952.

ஜேம்ஸ் ஆலன் ., வேலன்.என்.கே., மொழி பெயர்ப்பு **விதியை வெல்லுதல்**
கழக வெளியீடு, சென்னை - 1969.

## இதழ்கள், ஆய்வுக்கட்டுரைகள்

கலியாண சுந்தர முதலியார். வி., தலைமை உரை,
சைவ சித்தாந்தம் - மாத இதழ் - மலர் 8- 1935
சைவ சித்தாந்த மகா சமாஜம்,
சென்னை, 1935.

ஆறுமுகம். கரு., **திருமூலரின் மெய்யியலும் சமயமும்** - முனைவர் பட்ட ஆய்வேடு, சென்னைப்பல்கலைக்கழகம், 1999.

மாணிக்க வாசகம்.இரா., **"சித்தர்கள் 'கட்டுரை பெருந்தமிழ்** பல்கலைக்கழக வெளியீடு,சென்னை,1975.

மீனாட்சி சுந்தரனார் தெ. பொ., **'சித்தர்' கலைக் களஞ்சியம்** தமிழ் வளர்ச்சிக்கழகம், சென்னை,1956.

**அகராதிகள்**

தமிழ் - தமிழ் அகராதி வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 2006.

மூர்த்தி அ.கி., **சைவ சித்தாந்த அகராதி** கழக வெளியீடு, சென்னை, 1998.

வைத்தியநாதன் - கு., **சைவ சித்தாந்தக் குறியீட்டுச் சொல்லகராதி** திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம், திருவிடை மருதூர், 1995.

பிங்கல முனிவர்., **பிங்கலந்தை** கழக வெளியீடு, சென்னை, 1968.

**ஆங்கில நூல்கள்**

Devasenapathy V.A., **Saiva Siddantha , as empounded in the Sivajnana, Siddhiyar and its six commentaries.** University of Madras, Madras, 1974.

Edger Thurston & Rangachari.K., **Castes and tribes of Southern India** Vol IV Asian Educational Service, Chennai, 1987.

George Joseph V.S., **Centrality of self in Saiva Siddantha** University of Madras, Chennai. 2005.

Ganapathy T.N., **The Philosophy of the Tamil Siddars** Indian Council of Philosophical Research, New Delhi, 1993.

Jindal S.R., **Nature cure – A way of Life**
Institute of Naturopathy & yogic Science, Bangalore, 1993.

Kalghatgi T.G., **Determinism and Karma Theory**
Indian Philosophical Annual – Volume .4 University of Madras,1968.

Kalidas Nag., **India and the Pacific World**
Book Company Limited, Calcutta, 1941.

Krishnan P., **Divine Grace and Human Freedom Paul Tillich and Saiva Siddantha.**
Dr.S.Radhakrishna Institute for advanced study in Philosophy, University of Madras, Madras, 1993.

" Ed **Facets of Saiva Siddhanta**
Department of Saiva Siddanta, University of Madras, Madras, 2000.

Maraimalaiadigal., **The Saiva Siddantha as Philosophy of Practical Knowledge.**
Kazhagam, Madras, 1966.

Marshall Sir. John., **Mohenjo – Daro and the Indus Civilization,** Part I preface London, 1931.

Narayana Iyer, C.V., **Origin and the early History of Saivaism in South India.**
University of Madras, Madras, 1936.

Nilakanta Sastri. K.A., **A Historical introduction to Saivaism** Article, The cultural Heritage of India Volumes IV, Calcutta, 1956.

Pope G.U., **Thiruvachagam** – Translation – Reprint University of Madras, Madras, 1959.

Radhakrishnan .S., **Recovery of faith**
Harper Collins Indus Republication, 1994.

Raghava Iyengar., Ra., **Tamil Varalaru,**
Annamalai University, 1952.

Ramachandran T.N., **Pati Pasu – Pasam**
International institute for saiva Siddantha Research, Dharmapuram,1988.

Scho. Merus, H.W., **Saiva Siddantha**
Motilal Banarasides Publishers, Delhi, 2000.

Shanmuga Mudaliar., **Siva Agamas and their relationship to vedas**
Sri Kapaleeswarar Temple, Madras, 1972.

Shanmugavelan.A., **Siddar's Science of longevity and Kalpa Medicine of India.**
Sakthi Nilayam, Chennai, 1963.

Srinivasa Iyengar P.T., **The Stone Age in India**
Asian Educational Service, Madras, 1982.

Subramania Aiyar A.V., **The Poetry and the Philosophy of the Tamil Siddars**
S.Mahadevan, Tirunelveli,1957.

Subramanian N.S., **Encyclopaedia of the upanisads**
Sterling Publishers Pvt Ltd., New Delhi, 1985.

William Tyler Olcott., **Sunlore of All ages**
G.P.Putnam's sons New York and
London, 1914.

Yogi Ramachandraka., **The Philosophies and Religions of India**
Wilco Publishing House, Bombay, 1980.